
திருபுவனம்
ஸ்ரீ கம்பஹரேஸ்வரசுவாமி தேவஸ்தானம்
ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன
மகாகும்பாபிஷேக விழா மலர்
6—9—1963
KMM0102

உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத்

திருத்தருமையாதீனத்துக்குச் சோந்தமான

# ஸ்ரீ கம்பஹரேஸ்வரசுவாமி தேவஸ்தானம்

# ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன

# மகாகும்பாபிஷேக விழா மலர்

சோபகிருது ஆவணி 21 ஆம் நாள்

6—9—1963

வெளியீடு எண். 545.



உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமையாதீனத்துக்குச் சொந்தமான

# திருபுவனம் ஸ்ரீ கம்பஹரேஸ்வரசுவாமி திருக்கோயில்

# மகாகும்பாபிஷேக விழா மலர்

திருத்தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

திருவுள்ளப்பாங்கின்வண்ணம்

வெளியிடப்பெற்றது



திருபுவனம் ஸ்ரீ கம்பஹரேஸ்வரசுவாமி தேவஸ்தானம்

6—9—1963

வெளியிடுவோர் :

" நல்லறங்காவலர் "

**கனம். திரு. எம். பக்தவத்சலம் B. A., B. L., அவர்கள்**

இந்துசமய அறநிலய அமைச்சர், சென்னை.



உ

குருபாதம்

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம்

திருபுவனம்

ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி தேவஸ்தானம்

ஸ்ரீ சரபமூர்த்தி

உ

சிவமயம்

# சரபாஞ்சலி

அடைக்கலம் என்று வந்தோர்க்கு அருள்புரியும் அண்ணல் இறைவன் ஒருவனே. உலகங்களெல்லாம் அஞ்சும் அச்சத்தை அவ்வொருவனைத்தவிர வேறுயார் நீக்க முடியும்? அவன் ஈறாய், முதலாய், எல்லாமாய் இருப்பவன். நூறுகோடி பிரமர்கள் அழிந்தாலும், ஆறுகோடி நாரணர் அழிந்தாலும் ஈறிலாதவன் ஈசன் ஒருவனே. உலகிற்கெல்லாம் அந்தமாக, ஆதியாக இருந்து காக்கின்றான் அக்கருணைக் கடவுள். நரசிங்க வடிவாய்த் தோன்றிய நாராயணரின் சின வெறி இரணியனை அழித்தும் அடங்கவில்லை; அதனால் உலகு வெறிக்களமாயிற்று; அவ்வெறியை விலக்க எல்லாம் வல்ல இறைவனை வேண்டிற்று உலகு; சரப வடிவம் எடுத்து வெறியை அடக்கி அமைதி விளைவித்தான் அண்ணல். கம்பம் கெடுத்த கடவுளாய் - நடுக்கம் கெடுத்த நாயகனாய் தெய்வக் கலைக்கோயிலாம் திருபுவனத்தில் காட்சி தருகின்றான். இத்திருக் கோயிலை ஆதீனக் கோயில்கள் பிறவற்றுடன் புரந்தருளிவரும் திருத்தருமையாதீனம் 25 ஆவது குரு மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருப்பணிகள் புரிவித்து 6—9—1963 இல் மகா கும்பாபிஷேகமும் செய்வித்தருள்கின்றார்கள்.

இத் திருநாளில் ஸ்ரீ சரபமூர்த்திக்கு ஆழ்ந்த பக்தியுடன் அஞ்சலி செய்து அப்பெருமான் திருவடி மலர்களில் செலுத்தும் அன்புக் காணிக்கையாக மலர்கின்றது இந்நறுமலர்.





தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

திருக்கயிலாயபரம்பரைத்
திருத்தருமையாதீனம்
25 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக
ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்
அவர்கள்

அருளிய

# வாழ்த்துரை

என்றும், யாவராலும் விரும்பப்படுவது இன்பம். உடல் இன்பம், உயிர் இன்பம் என இன்பம் இரண்டு; உடல் நிலையாதது; உயிர் நிலைத்தது. ஆதலின், உடல் இன்பத்திலும் உயிர் இன்பமே மேலானது; வேண்டத்தக்கது.

உயிர் இன்பம் 'ஆன்ம லாபம்' எனவும் சொல்லப்படும். ஆன்மலாபத்தை அடைவதற்குப் பேரறிவு - மெய்யுணர்வு வேண்டும்; மெய்யுணர்வைத் தர எழுந்தனவே சமயங்கள்.

உலகில் சமயங்கள் பல உள. அனைத்துச் சமயங்களும் மக்களைத் தீயதின் நீக்கி நல்லதிற் செலுத்துவதை நோக்கமாகக் கொண்டவையே. "எச்சமயத்தோர் சொல்லும்-தீதொழிய நன்மை செயல்" என்பது ஔவை அறிவுரை.

உலகாயதமதங்கூட, 'அரசன் ஆணையின்வழி அடங்கி ஒழுக வேண்டும்' எனக் கூறுதல் உளங்கொளத் தக்கது. ஆகவே, நாட்டில் நன்மை வளர்வதற்குச் சமயங்கள் நிலவவேண்டும் என்பது சொல்லாமலே விளங்கும்.

நாட்டின் நலத்தினைக் கூறவந்த திருவள்ளுவ நாயனர்.

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு"

என்று கூறினர்; இதில் மிகுந்த விளைபொருள் உற்பத்தி. குறைவற்ற பொருளாதார நிலை என்ற இரண்டோடு, தக்காரையும் ஒரு நாட்டிற்கு இன்றியமையாதவராகத் திருவள்ளுவர் கூறிய சிறப்பினை ஊன்றி உணர்தல் வேண்டும்.

தீயதை நீக்கி நல்லதைப் போதிப்பவர்களே தக்கார்; தீயதை விடுத்து நல்லதைச் செய்க என்பதே சமயம் என்ருல், நாட்டிற்கு இன்றியமையாதவராகத் திருவள்ளுவரால் குறிப்பிடப்பட்ட தக்காரை, நாம் சமயபோதகர்கள் என்றே கூறலாம். எனவே, நாடு நலம் பெறுவதற்குச் சமய ஆசிரியர்களை நன்கு புரத்தலும், மக்களை அவர்கள் வழியில் நிற்கச் செய்தலும் வேண்டும் என்பது புலனுகும்.

மக்கள் எல்லோருடைய அறிவும் பண்பும் ஒரே வகையானவை அல்ல. அவை பலப்பல வகையாய் உள்ளன; அதனுல் மக்களுக்கு நல்லனவற்றைப் போதிக்கும் சமயம் ஒன்ருய் இருத்தல் இயலாது; பலவாகத்தான் இருக்கமுடியும். சமய உணர்வில் முதிர்ந்து நின்ற பெரியோர்களது முடிபும் இதுவே.

"பந்தமும் பிரிவும் தெரிபொருட்பனுவற் படிவழி சென்றுசென் றேறி"

என்று, ஞானமாகிய மேல்நிலைக்குப் பல சமயங்களும் படிகளாக அமைந்துள்ளமையைக் கூறுகின்றது திருவிசைப்பா. இப்படிகளின் வழியாக உயிர்களின் அறிவை வளர்ப்பதற்கு, அவ்வச்சமயத்தார்க்கு அவ்வச்சமய நூலே உண்மை நூல் எனத் தோன்றுமாறு இறைவனே செய்தருளுகின்ருன் என்பதைக் குமரகுருபர அடிகள்,

"தொன்னூற் பரசமயந் தோறும் அதுஅதுவே
நன்னூல் எனத்தெரிந்து நாட்டுவித்து"

என்று கந்தர் கலிவெண்பாவில் விளக்கினர். இதனுல், உலகில் பழமையாய் உள்ள சமயங்களேயன்றிப் புதியனவாகவும் பல சமயங்கள் தோன்றுதல் இயற்கையே ஆயிற்று. அவ்வகையில் இன்னும் சமயங்கள் தோன்றிக்கொண்டும் இருக்கின்றன எனக் கூறலாம். எத்துணைச் சமயங்கள் முன்னே இருப்பினும், இன்னும் தோன்றினும் ஒவ்வொன்று ஒவ்வொரு நன்மையைத் தந்தே நிற்கும் ஆதலால், அவை அனைத்தும் இறைவன் திருவுள்ளத்திற்கு உவப்பாவனவேயாம். இதனை நாவுக்கரசர்

"விரிவிலா அறிவி னுர்கள் வேறெரு சமயம் செய்தே
எரிவினுற் சொன்னு ரேனும் எம்பிராற்கு ஏற்றதாகும்'

என அருளிச்செய்துள்ளார். இதனுல், நம் சைவ சமயத்தின் பரந்த நிலேயும், சைவ சமயாசாரியர்களது விரிந்த உள்ளப்பான்மையும் நன்கு விளங்கும். இத்தகைய பெருநிலே நம் சமயத்திலும், சமயாசாரியர்களிடத்திலும் எவ்வாறு அமைந்தது? பேரறிவும், பேராற்றலும், பேரருளும் உடைய முழுமுதற் பொருளாகிய இறைவனுடைய திருவருளே முற்றும் பெற்றமையாலேயே இந்நிலே அமையப்பெறுவதாயிற்று. இத்தகைய நம் சமயாசாரியர்களது அருளாணேவழி நின்று, நம் அருட் சமயமாகிய சைவ சமயம் வளர்க்கப் பெறுமாயின் நாடு எவ்வாறு இருக்கும்? இன்னலும் இருளும் இகலும் நீங்கிப் பொன்னும் பொருளும் போகமுங் கொழித்துப் புகழுடன் திகழும் அன்றே!

நம் நாடு அவ்வாறு நம் சமயாசாரியர்கள் வழிநின்று நலம்பெற்று விளங்கிய காலம் ஒன்று உண்டு; அது தமிழ்நாட்டைத் தமிழ்வேந்தர்களே ஆண்டு வந்த காலம். தமிழ்வேந்தர் மூவரும் தொன்றுதொட்டுச் சைவ சமயிகளே.

பண்டைச்சேர மன்னனுகிய செங்குட்டுவன் சிறந்த சிவபத்தியுடையனுய் இருந்தான் என்பதைச் சிலப்பதிகாரம்,

"ஆடகமாடத் தறிதுயி லமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலர்நின் றேத்தத்
தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்
ஆங்கது வாங்கி அணிமணிப் புயத்துத்
தாங்கின னுகித் தகைமையிற் செல்வுழி"

என்னும் அடிகளால் தெரிவிக்கின்றது. அருச்சகர்கள் கொடுத்த திருமாலின் சேடங் களேச் சிவபிரானது திருவடி பதிந்த இடமாயுள்ள தலேயில் வைக்க மறுக்கும் அளவிற்குப் பெருகி இருந்தது செங்குட்டுவனது சிவபத்தி.

சோழ மன்னர்கள் வழிவழிச் சைவராய் என்றும் மாருத நிலேயினே உடையவர்கள் என்பது அனேவரும் அறிந்த உண்மை. இதுபற்றியே நம்பியாண்டார் நம்பிகள் சோழர் குடியினே,

"மைவைத்த கண்டன் நெறியன்றி மற்ருேர் நெறியறியாத் தெய்வக்குடி"

என்று குறிப்பிட்டார்.

பாண்டிய மன்னர்கள் பலரும் மதுரைச் சொக்கநாதனது திருவிளையாடல் களுக்கு உரியவர்களாய் இருந்தார்கள் என்பதும் வெளிப்படை. சங்ககாலப் பாண்டியன் ஒருவனது குடை சிவபெருமானது திருக்கோயிலை வலம் செய்வதற்கு மட்டுமே தாழ்வதாகும் எனப் புறநானூற்றுப் பாடலால் அறியப்படுகின்றது' மாணிக்கவாசகரது உண்மை நிலையை அறியாத பொழுது அவர்காலத்திலிருந்த பாண்டியன் அவரை வேறுவகையில் நடத்தியபோதிலும் அவரது உண்மையறிந்த பின்பு அவரை ஆசிரியராக அடைந்து அருள் நிலை எய்தினன். இதனை அவ்வாசிரியர்,

"நரகொடு சுவர்க்க நானிலம் புகாமல்
பரகதி பாண்டியர்க்கருளினை போற்றி"

என எடுத்து ஓதினர். "மன்னன் எப்படி? மன்னுயிர் அப்படி" என்னும் பழ மொழிக்கு ஏற்ப, இவ்வாறு அக்காலத்தில் சைவ சமயம் அரசர்களது ஆதரவை நிரம்பப் பெற்றிருந்த காரணத்தால் நாட்டுமக்களாலும் நனிமிகப் போற்றப்பெற்று வளர்ந்தது.

நம் பரத கண்டத்தில், சமயங்கள் முற்காலத்தில் தமிழ் மன்னர்கள் ஆதரவில் இருந்தன. ஆனல், நம் நாடு பிற அரசர்களது ஆட்சிக்கு உட்பட்டிருந்தபொழுதும், அந்நிலை நீங்கிச் சுதந்திரம் பெற்ற இப்பொழுதும் சமயங்களுக்கு ஆதரவு சமய நிலையங்களே என்னும் நிலை ஏற்பட்டுவிட்டது.

சமயாசாரியர்கள் காலத்தில் தமிழ்வேந்தர் அனைவரும் அவர்களை வழிபட்டு அவர்கள் நெறியிலே நின்றனர். ஞானசம்பந்தர் ஞானப்பால் உண்ட அற்புத நிகழ்ச்சியைக் கேட்டபொழுது சோழர் குலமகளாராகிய மங்கையர்க்கரசியார்க்குப் பேரன்புதோன்றியதும் என்றும் மாருச் சிவபத்தி அவரிடத்துச் சிறந்து விளங்கியதும் அவர் பிறந்த குலத்தின் பெருந்தன்மையினாலேயாம்.

மங்கையர்க்கரசியார் தாம் கேட்டு அன்பு மீதூரப் பெற்ற ஞானசம்பந்தர் என்னும் நாமமந்திரத்தைப் பாண்டியனும் கேட்டு உய்திபெறுமாறு, 'ஞானசம்பந்தர் வந்தால் தீய இப்பணியே யன்றிப் பிறவியும் தீரும்' என்று செவியறிவுறுத்தார். மீனவன் செவியினூடு மெய்யுணர்வு அளிப்போர் கூறிய ஞானசம்பந்தர் என்னும் நாமமந்திரம் அவனது செவியிற் சென்றபொழுதே வெப்பு நோயினல் கொண்ட அயர்வு நீங்கப்பெற்ருன். மேலும்,

"மன்னிய மறைக்குலத்து மாமறைச் சிறுவர்வந்தால்
அன்னவர் அருளால் இந்நோய் அகலுமேல்அறிவேன்"

என்றும் கூறினன். பின்னரும், வெப்புநோய் நீங்குமாறு புகலிவேந்தர் தமது திருக்கையாலே தீண்டி திருநீறு இடப்பெற்ற பேறுடையவனாய், 'ஞானசம்பந்தர் பாதம் நண்ணிநான் உய்ந்தேன்' என்று சொல்லிப் பெருமகிழ்ச்சியுற்றான். எனவே, வளவர் திருக்குலக் கொழுந்தாகிய மங்கையர்க்கரசியாராலே பாண்டிய மன்னனும், பாண்டிய நாடும் உய்தி பெற்றமை தெளிவாகிறது. இது கருதியே சேக்கிழார், மங்கையர்க்கரசியாரை,

> "வரிசிலைத் தென்ன வன்றான் உய்தற்கு வளவர் கோமான்
> திருவுயிர்த் தருளும் செல்வப் பாண்டிமா தேவியார்"

என்றார். இதனால், சோழ பாண்டிய மன்னர்கள் ஞானசம்பந்தரது அருள் நெறியில் நின்றமை தெளிவு.

பழந்தமிழ் மன்னர்களாகிய பாண்டியர் சோழர் மட்டுமன்று ; தமிழ் நாட்டை ஆண்ட பல்லவ மன்னரும் நம் சைவ சமயாசாரியர்களுக்கு ஆட்பட்டு அவர்வழி யொழுகின்மை அறியத்தக்கது. பல்லவன் முதலில் சமணனாய் அச்சமயத்தையே விரும்பி மேற்கொண்டு சமணர்களையே மேலானவர்களாக மதித்து அவர்வழி ஒழுகியும் வந்தானாயினும், பின்னர்த் திருநாவுக்கரசரது அதி அற்புதச்செயல்களால் சிவநெறியே மெய்ந்நெறி என உண்மை உணர்ந்த பின்னர், அவரையே ஆசாரியராகக் கொண்டு அவர் திருவடியை அடைந்து சைவனாயினன். அதனோடு அமையாது, முன்பு பாடலி புத்திரத்தில் தான் கட்டியிருந்த சமணப்பள்ளியை இடித்து, அக்கற்களைக்கொணர்ந்து திருவதிகையில் தன் பெயரால், 'குணதர ஈச்சரம்' என்னும் சிவாலயத்தையும் கட்டினன். பல்லவன் நம் சமயாசாரியர்களுக்கு ஆட்பட்டமைக்கு இதனினும் சிறந்த வேறு சான்று வேண்டுமோ !

ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் தோன்றித் திருவருள் நெறியை விளக்கிய அக்காலத்தில் தமிழ்நாட்டு வேந்தர் அவர்கள் வழிநின்று சைவத்தைப் பாதுகாத்தது போலவே, அவ்விருவர்க்குப்பின்னர் தோன்றிய சுந்தரமூர்த்தி நாயனார் காலத்திலும் அவ்வாறுதான் தமிழ்வேந்தர் சமயாசாரியர் வழிநின்று அரசு செலுத்தினர்.

சுந்தரர் காலத்தை, 'சைவ சமயத்தின் பொற்காலம்' என்று கூறலாம். ஞானசம்பந்தரும், நாவுக்கரசரும் நாட்டை நல்வழிப்படுத்துதற்குப் புறச்சமயிகளோடு போராடவேண்டியிருந்தது. புறச்சமயிகள் புரியும் இன்னல்களுக்கெல்லாம் உள்ளம் உடையாது ஈடு கொடுக்கவேண்டியும் இருந்தது. இறைவன் திருவருளில் உறைத்து நின்ற உறைப்பினால் அவர்கள் அவ்வாறேநின்று சைவ சமயம் இடையூறின்றி இனிது தழைத்தோங்குவதற்குரிய சூழ்நிலைகள் எல்லாவற்றையும் உண்டாக்கிச் சென்றார்கள். அவ்வழியிலே சைவம் செவ்வனே தழைத்தோங்கியது.

அந்நிலையில்தான் சுந்தரர் திருவவதாரம் செய்தருளி இறைவனால் ஓலை காட்டி ஆட்கொள்ளப்பெற்று, 'மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக' எனப் பணிக்கப் பெற்று, ஞானசம்பந்தர் நாவுக்கரசரது வழியையே பின்பற்றித் தலங்கள் தோறும் சென்று சிவபெருமானை வணங்கித் தேவாரத் திருப்பதிகம் பாடிவந்தார். சேர சோழ பாண்டியர்களாகிய மூவேந்தரும் அவருக்குப் பணிசெய்து நின்றனர். மற்றும் பல்லவனும் அவர்வழி நின்றான்.

சுந்தரர் காலத்தில் சேரநாட்டை ஆண்ட சேரமன்னரே சேரமான்பெருமாள் நாயனார். இவர் மற்றை அரசர்களைப்போன்ற ஓர் அரசர் அல்லர். பிறந்து வளர்ந்த இளமைப் பருவத்திலேயே முன்பிறப்பின் தொடர்பினால் சிவபெருமானிடத்து வைத்த அன்பே வடிவமாய் வளர்ந்தவர். குழந்தைப் பருவம் கடந்து காளைப் பருவம் எய்திய பொழுது, இளவரசராய்ப் பின்னர் நாட்டை ஆள்வதற்கு உரிய அவ்வரசியல் வழியில் இவர் செல்லவில்லை. உலகியல் வாழ்க்கையும், அரசாட்சியும் உயிர்க்கு உறுதிதருவன அல்ல என்றுநினைத்துச் சிவபிரானுக்குச்செய்யும் திருத்தொண்டினையே மேற்கொண்டு செய்துவந்தார்.

மலைநாட்டில் உள்ள திருவஞ்சைக்களத்துத் திருக்கோயிலை அடைந்து விடியலில் எழுந்து தண்ணீரில் முழுகித் திருவெண்ணீற்றை நிறையப்பூசித் திருநந்தன வனத்தை அடைந்து சிவபிரானுக்குப் பூவைத்தரும் செடிகொடிகளுக்கு ஆவனவற்றைத் தம் கையாலே செய்து, பூக்களையும் தாமே பறித்துக் கொடுத்தார். திருக்கோயிலில் திருவலகும் திருமெழுக்கும் தாமே இட்டார். திருமுன்பில் நின்று திருப்பாடல்களைப் பாடினார். ஓர் அரசகுமாரருக்கு இத்தகைய பக்தி அக்காலத்தில் இருந்தது ; இந்நிலை இக்காலத்தில் பக்தர் என்று சொல்லப்படுகிறவர்களிடத்திலும் காணப்படுதல் அரிதேயாகும்.

இந்நிலையில் சேரநாட்டிற்கு அரசன் இல்லாமற்போனமை கருதி அமைச்சர்கள் திருவஞ்சைக்களத்திற்குச் சென்று இவரை அரசுரிமையை ஏற்று அரசாளும்படி வேண்டிய பொழுது இவர், "இன்பம் பெருகும் திருத்தொண்டிற்கு இடையூறாக இவர் மொழிந்தார்" என்று நினைத்து, சிவபிரான்மீது வைத்த அன்பின் நிலைமை வழுவாமை அரசு புரக்கும் அருள் கிடைக்குமாயின் அரசாட்சியை ஏற்கலாம் என்று கருதினார். அப்பொழுது சிவபிரானது திருவருளால், அரசாட்சியோடே இறைவனை வழிபடும் முறைமையும், மக்கள் யாவரும் மற்றைய உயிர்கள் யாவையும் கழறியவற்றை உள்ளவாறு அறியும் அறிவும், அரசர்க்கு உரிய படை, வாகனம் முதலியவையும் தாமாகத் தம்மிடத்து வந்து அடையப்பெற்றார். அதனால், முடிசூடி அரசாட்சியை ஏற்று ஆண்டார். யாவும் யாரும் கழறினவும் அறியும் அறிவைப்பெற்றமையால் கழறிற்றறிவார் என்ற திருப்பெயர் இவருக்கு உளதாயிற்று.

முடிசூட்டு விழாவிலேயே ஒரு நிகழ்ச்சி. கழறிற்றறிவார் முடிசூடிக்கொண்டு முதலில் சிவபிரான் திருக்கோயிலை அடைந்து வணங்கிப் பின்பு எல்லாப் பரிவாரங்களுடனும் யானையின்மேல் பவனிவந்தார். வரும்பொழுது வண்ணான் ஒருவன் உவர் மண் பொதியைச் சுமந்துகொண்டு எதிர்வந்தான். மழையினால் அவ்வுவர்மண் கரைந்து அவன் உடம்பு முழுதும் வழிந்து வெளுத்துக் காணப்பட்டது. அதைக் கண்ட உடன் திருநீறு பூசிய அடியார் என்று நினைத்துச் சேரர் பெருமான் யானையினின்றும் விரைவில் இறங்கிச் சென்று கைகூப்பி வணங்கினார்; வண்ணான் நடுக்கம் உற்றவனாய் 'அடியேனை யார் என்று நினைத்தது? அடியேன் அடிவண்ணான்' என்று தன்னைத் தெரிவித்துக்கொண்டான். சேரர், 'யான் அடிச்சேரன்; அன்பிற்குரிய திருநீற்று வேடத்தை இச்சமயத்தில் எனக்கு நினைப்பூட்டியதே போதும்; மனம் வருந்தாது செல்லுங்கள்' என்று கூறினார். சேரர் பெருமானது திருநீற்றன்பு அளவிடப்படுவதோ!

ஆட்சியை ஏற்ற பின்பும்,

"நீடும் உரிமைப் பேரரசால் நிகழும் பயனும் நிறைதவமும்
தேடும் பொருளும் பெருந்துணையும் தில்லைத் திருச்சிற் றம்பலத்துள்
ஆடும் கழலே'

எனத் தெளிந்து நாள்தோறும் கூத்தப்பெருமானை முறைப்படி வழிபட்டார். வழிபாட்டின் முடிவில் கூத்தப்பெருமானும் தமது திருச்சிலம்போசையை நாள்தோறும் இவருக்குக் கேட்பித்தார் என்றால், இவர் ஒரு தெய்விக அரசர் என்பதில் ஐயம் உண்டோ!

இத்தகைய தெய்வீக மன்னரை இறைவனே சுந்தரரைத் துணையாக அடையுமாறு செய்தான். வழிபாட்டின் முடிவில் நாள்தோறும் கேட்பிக்கும் திருச்சிலம்போசையை ஒருநாள் கூத்தப்பெருமான் சேரமான் பெருமாளுக்குக் கேட்பியாது விட, சேரமான் பெருமாள் நாயனார், 'யான் செய்த பிழையாது! வழிபாடு இறைவற்கு ஏலாதொழிந்தபின், இவ்வுடம்பால் அடையும் பயன் வேறு என்' என்று உடைவாளை எடுத்து மார்பிற்கு நேராக நீட்டினார்; உடனே கூத்தப்பெருமானார் விரைந்து தமது திருச்சிலம்போசையை மிகுதியாகக் கேட்பித்தார். சேரர் மகிழ்ந்து, 'இதுகாறும் இதனைக் கேட்பியாதிருந்தது என்னை?' எனக் கேட்க, இறைவர், 'வன்றொண்டன் தில்லைத் திருச்சிற்றம்பலத்தை அடைந்து நம்மை வணங்கி 'உணர்வொன்றும் பதிகத்தைக் கேட்டிருந்தமையால் இங்கு வரத் தாழ்த்தது' என்று அசரீரியாக அருளிச்செய்தார். எங்கும் நிறைந்து எல்லாவற்றையும் அறியும் இறைவர் இவ்வாறு அருளிச்செய்தது, சேரமான்பெருமாளுக்குச் சுந்தரரை அடைந்து

வணங்கி அவரையே ஞானசாரியராகப் பற்றவேண்டும் என்னும் எண்ணத்தினை உண்டாக்குதற் பொருட்டே என்கின்றார் சேக்கிழார்.

"மன்றி னிடைநம் கூத்தாடல் வந்து வணங்கி வன்றொண்டன்
ஒன்றும் உணர்வால் நமைப்போற்றி உரைசேர் பதிகம் பாடுதலால்
நின்று கேட்டு வரத்தாழ்த்தோம் என்றார் அவரை நினைப்பிப்பார்"

என்பதே அப்பகுதி. யாவும் யாருங் கழறினவற்றை அறியும் ஆற்றலும், திருச்சிலம் போசையை நேரே கேட்கும் பேறும் உடைய தெய்வப் பேரரசர் ஒருவரைச் சுந்தரரிடத்துச் சென்று அவரை வணங்கி அவரது திருவடிகளையே துணையாகப் பற்றுமாறு இறைவன் செய்தருளினன் என்றால், அத்தகைய நம் சமயாசாரியர்களது பெருமையை எவ்வளவினது என்று நாம் அளவிட்டுரைக்க முடியுமோ?

இறைவர் அருளிய வண்ணமே சேரமான் பெருமாள் நாயனர் சிறிது காலத்திற்குப் பின் தாமே தம் நாட்டினின்றும் புறப்பட்டுச் சென்று திருவாரூரை அடைந்து சுந்தரரை வணங்கி அவரது நண்பராகப் பெற்றார். அதனால், கழறிற்றறிவார் பல தலங்களை அவருடனே சென்று வணங்கினர். சோழநாட்டிலன்றிப் பாண்டிநாட்டுத் தலங்களை வணங்கும் பேறும் சுந்தரரது தோழமையாற் சேரர் பெருமானுக்குக் கிடைத்தது.

பாண்டிநாட்டின் தலைநகரமாகிய மதுரையம்பதியில் வன்றொண்டர் சேரர் பெருமானுடன் எழுந்தருளியபொழுது மதுரையில் அரசாண்டிருந்த பாண்டியர், திருஞானசம்பந்தரால் தீண்டித் திருநீறிடப்பெற்ற நெடுமாறரும் வளவர்கோன் பாவையராகிய மங்கையர்க்கரசியாரும் ஆகிய அவ்விருவரது வழித்தோன்றலார். அவர், வன்றொண்டரைச் சேரர் பெருமானுடன் நன்கு வரவேற்றார்; அவ்வமையம் அப்பாண்டியரது மகளாரை முன்பே மணம் புரிந்துகொண்ட சோழர்குலத் தோன்றலாரும் மதுரையிலே யிருந்தார். அவர் மங்கையர்க்கரசியார்தம் தந்தையாரது வழித்தோன்றியவரே. அவரும் சுந்தரரை வரவேற்கும் பணியை மேற்கொண்டார். எனவே, மதுரையில் சுந்தரரைச் சேரர், சோழர், பாண்டியர் என்னும் மூவேந்தரும் ஒருங்கு கூடிப் போற்றிப் பணிந்த அரிய பெரிய ஒருநிலை அப்பொழுது வாய்த்தமையை அறிகின்றோம். சுந்தரர் மூவேந்தர்களுடன் ஆலவாய்ப் பெருமானை வணங்கித் திருப்பதிகம் அருளிச்செய்தார். பாண்டியருடைய சிறந்த உபசரிப்பைப் பெற்றுச் சுந்தரர் பலநாள் மதுரையில் மூவேந்தரும் வணங்க விற்றிருந்தார்.

மதுரையேயன்றித் திருப்பூவணம், திருஏடகம், திருப்பரங்குன்றம் முதலிய தலங்களைச் சுந்தரர் சேரர் பெருமானுடன் வணங்கிச் சென்றபொழுது பாண்டியரும், அவரது மருகராகிய சோழரும் அவரை விட்டு நீங்க மனமில்லாதவர்களாய் உடன்

சென்றூர்கள். சுந்தரர் திருப்பரங்குன்றத்துப் பெருமானை வணங்கி, "கோத்திட்டையும் கோவலூரும்" என்னும் திருப்பதிகத்தை அருளிச்செய்தார். அத்திருப்பதிகத்துள் சிவபிரானுக்குத் திருத்தொண்டு செய்யும் அருமைப்பாட்டினை விளக்க, "அடிகேள் உமக்கு ஆட்செய அஞ்சுதுமே" என்பதைப் பாடல்தோறும் வைத்துப் பாடியருளினுர். அதைக்கேட்ட மூவேந்தரும் திருத்தொண்டின் அருமையை அறிந்து அச்சமும், அன்புங்கொண்டு ஆரூரரைப் பணிந்தார்கள். அரசர்க்குச் சொல்லின் அனைவர்க்கும் சொல்லியதாம் என்னும் திருவுள்ளத்தினாலேயே வன்றொண்டர் இதனை முடியுடை மூவேந்தர் முன்னிலையில் அவர் கேட்கும்படி பாடினுர். இதனை அவரே அத்திருப்பதிகத்தின் இறுதித் திருப்பாடலில் அருளியுள்ளார்.

"அடிகேள்உமக் காட்செய அஞ்சுதுமென்று
அமரர்பெரு மானைஆ ரூரன்அஞ்சி
முடியால்உல காண்டமூ வேந்தர்முன்னே
மொழிந்தாறும்ஓர் நான்கும்ஓர் ஒன்றினையும்
படியாஇவை கற்றுவல் லவ்வடியார்
பரங்குன்ற மேயபர மன்னடிக்கே
குடியாகிவா னேர்க்கும்ஓர் கோவுமாகிக்
குலவேந்தராய் விண்முழு தாள்பவரே'

என்பதே அத்திருப்பாட்டு. இதில், "முடியால் உலகாண்ட மூவேந்தர் முன்னே மொழிந்த" என்றதனுல், தமிழ்நாட்டில் முடியுடை வேந்தர்களாய் விளங்கிய பேரரசர் மூவரும் சுந்தரர் அருண்மொழியைக்கேட்டு அதன்வழி நிற்கும் ஆர்வம் உடையவராய் இருந்தனர் என்பது தெள்ளத் தெளிய விளங்குகின்றது. எனவே, தமிழ்நாடு முழுவதற்கும் ஒரு தனிப் பெருந்தலைவராய் நம் சமயாசாரியர் ஒருகாலத்தில் விளங்கினர் என்றுல், அந்தக் காலத்தைச் சைவ சமயத்தின் பொற்காலம் என்று கூறுவதற்குத் தடையாதுளது! வேந்தர் கேட்கப்பாடிய திருப்பதிகத்திற்குப் பயனும் விண்ணிற்கும் மண்ணிற்கும் வேந்தராய் விளங்குதலாகவே அருளிச்செய்யப்பெற்ற நயம் அறிந்து மகிழ்தற்குரியது.

சேரர் முதலிய மூவேந்தர் மட்டுமன்று; தொண்டைநாட்டிற்குத் தலைமை பூண்ட பல்லவரும் சுந்தரரை வணங்கி நின்றமை பெறப்படுகின்றது. அறுபான் மும்மை நாயன்மார்களில் கழற்சிங்க நாயனுர் என்பவர் ஒருவர்; இவர் பல்லவ மன்னரே. நாயன்மார்களுள் ஒருவராகத் திருத்தொண்டத்தொகையில் சுந்தரரால் பாடியருளப்பெற்ற இவரைச் சிறந்த சிவபத்தியுடையவர் என்று நாம் சொல்லத் தேவையில்லை. சேரமான் பெருமாள் நாயனுரைத் திருத்தொண்டத்தொகையுள் வைத்துப் பாடியருளியது போலவே இவரையும் சுந்தரர் திருத்தொண்டத்தொகையுள்

வைத்துப் பாடியிருத்தலால், இவரும் சேரமானைப் போன்ற பேரன்பரே என்பதில் ஐயம் இல்லை.

இவர் தமிழ்நாட்டுத் தலங்களைத் தம் தேவியுடனும், பரிவாரங்களுடனும் சென்று வழிபட்டார். திருவாரூரில் சென்று இறைவனை வணங்கும்பொழுது, பூத் தொடுக்கும் மண்டபத்திற் கிடந்த பூவொன்றை இவர் தேவி எடுத்து மோந்தது குற்றம் என்று அவள் மூக்கினைச் செருத்துணையார் கொய்த பொழுது, 'பூவை எடுத்த கையை அன்றோ முதலில் தறிக்க வேண்டும்' என்று சொல்லி அவ்வாறே அவள் கையைத் தரித்தார் இவர். இவரைச் சுந்தரர், "கடல்சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான்" என நிகழ்காலத்தில் கூறியருளினமையால் இவர் சுந்தரர் காலத்தில் இருந்தவரே எனத் துணிவர் ஆராய்ச்சியாளர். "மடித்தாடும் அடிமைக்கண்" என்னும் தில்லைத் திருப்பதிகத்துள் சுந்தரர் "மண்ணுலகம் காவல் பூண்ட - உரிமையாற் பல்லவர்க்குத் திறைகொடா மன்னவரை மறுக்கம் செய்யும் பெருமையார் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்ற மன்றே" எனக் குறித்த பல்லவரும் இவரே என்பர். இவ்வரசர் சிறந்த சிவபத்தராயும், சுந்தரர் காலத்தில் வாழ்ந்தவ ராயும் இருந்து, பல தலங்களுக்கும் சென்று திருவாரூருக்கும் சென்றிருந்தனர் என்றால், இவரும் சுந்தரரை வணங்கி அவர் வழியில் நின்றனர் என்று கொள்வதில் தவறில்லை யன்றோ !

இவ்வாறு மூவேந்தருடன் பல்லவரும் கூட நான்கு பேரரசர்களும் சுந்தரர் காலத்தில் அவரையே தங்கட்கு ஞானசிரியராகக் கொண்டு அவர் காட்டிய வழியிலே சென்றனர் என்றால், ஏனைய சிற்றரசர்களும், குடிமக்கள் பலரும் தமிழ் நாட்டில் சுந்தரமூர்த்தி நாயனர் வழியே நின்றனர் என்பது தானே விளங்குவதாகும். ஆகவே, ஆலாலசுந்தரர் அவர் காலத்தில் தமிழ்நாடு முழுவதற்கும் தனிப்பெரும் ஞானத் தலைவராய் விளங்கினமை புலனாகும்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என்னும் மூவர் முதலிகளை பாண்டியன், பல்லவன், சேரன் என்னும் மூவரும் ஞானசாரியர்களாகக் கொண்டனர். பாண்டியர்களுள் ஒருவன் மாணிக்கவாசகரை ஆசாரியராகப் பெற்றான். சுந்தரரைத் தமிழ்நாட்டு அரசர் அனைவருமே போற்றினர். சுந்தரர் திருமுனைப்பாடிநாட்டில் திருவவதாரம் செய்தபொழுதே அந்நாட்டு அரசராகிய நரசிங்கமுனையரையரால் மகன்மை முறைகொண்டு போற்றப்பெற்று, மன்னவர் திருவும் வைதிகத் திருவும் பொங்க விளங்கினர். திருக்கயிலையை அடையும் பொழுதும் அரசன் பரிமேல்வர நெடுநல் யானை எருத்தத்து அமர்ந்து சென்று அடைந்தார்.

இங்ஙனம் சமயாசாரியர்கள் காலத்தில் பேரரசர்களும் சிற்றரசர்களும் நம் சமயாசாரியரைப் போற்றி அவர்வழி நின்ற காரணத்தாலேயே தமிழ்நாட்டில்

சைவம் தழைத்தது. இவ்வாறு பண்டைத் தமிழகத்தில் சைவசமயம் மேலோங்கி யிருந்த நிலையை வரலாற்றில் நாம் காண்கிறோம். இந்நிலை மீண்டும் உண்டாக செந்தமிழ்ச் சொக்கர் திருவருள் துணைசெய்வதாகுக.

அரசர்கள் சமயாசாரியர்கள் வழியில் நின்றனர் என்றால் வெறும் கொள்கை யளவில் அல்லது சொல்லளவில் அன்று ; செயலில் சிறந்து நின்றனர். சமயா சாரியர்கள் நெறி யாது ? ஆலய வழிபாடே அவர்களது நெறி ; ஆலயங்களே சைவத்தின் உயிர்நாடி. அதனால், அரசராய் இருந்த நாயன்மார்களது வரலாற்றில் எல்லாம் அவர்கள் ஆங்காங்குச் சிவாலயங்களை அமைத்தமையும், சிவாலயங்களில் நித்திய நைமித்திக பூசைகளும் விழாக்களும் செவ்வனே நடைபெறச் செய்தமையுமே சிறப்பாகக் காண்கின்றோம். இன்னும் சிவாலயங்களில் தொண்டு புரியும் அடியாராய் உள்ளவர்கட்கு வேண்டுவனவற்றை அவர்கள் செய்துவந்தமையையும் அறிகின்றோம். பிற்கால அரசர்களது கல்வெட்டுக்களில் காணப்படுவதும் இதுவே. சமயாசாரியர் களது வாக்கிலும், வாழ்க்கையிலும் சிவாலயப் பணியே சிறந்து நிற்றல் தெளிவு.

சமயாசாரியர்களது தோத்திரங்களும், அவர்களது அருள் வாழ்க்கைகளும் சைவ சமயத்திற்கு இலக்கியங்கள். அவ்விலக்கியங்களின் தன்மையை இனிது எடுத்து விளக்கும் இலக்கணங்களே சித்தாந்த சாத்திரங்கள். இத்தோத்திர சாத்திரங்களின் முடிவு என்ன ? சிவாலயங்களையும் சிவபத்தர்களது திருவேடத்தையும் சிவன் எனவே கண்டு வணங்குதல்தான். இறைவனது செந்தாமரை மலர்போலும் திருவடிகளை அடைய ஒட்டாமல் தடுக்கின்ற மலங்களை அறவே கழுவிப் போக்கி அத்திருவடி இன்பத்தை அடையச் செய்யும் ஞானச் செய்திகள் என்று சிவஞானபோதம் இறுதியில் கூறி முடிக்கின்றது.

"செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே"

என்பது சிவஞான போதத்தின் பன்னிரண்டாம் சூத்திரம். இதனால், சைவ சமயா சாரியர் சந்தானசாரியர்கள் நமக்குக் காட்டிச் சென்றது ஆலய வழிபாட்டினையே. நம் தமிழகத்து அரசர்களும், பிற பெருமக்களும் அவ்வாலயத் திருப்பணியையே செய்துவந்தார்கள். அதனால், அனேக அழகிய அரிய பெரிய திருக்கோயில்களை நாம் தமிழகத்தில் காணமுடிகிறது அத்தகைய சிறந்த சிவாலயங்களுள் திருபுவனம் திருக்கோயில் ஒன்று. இத்திருக்கோயில் மூன்றாங் குலோத்துங்க சோழமன்னரால் எழுப்பப்பெற்றது. திரிபுவனச்சக்கரவர்த்தி என்னும் அம்மன்னன் சிறப்புப்பெயரால்

திரிபுவனேஸ்வரம் என்ற பெயரோடு விளங்குவது. சிறந்த சிற்பங்களுடன் தமிழ் மக்களின் பக்திப் பெருக்கிற்கு எடுத்துக்காட்டாக இலங்குவது.

நமது ஆதீன தேவஸ்தானங்களுள் ஒன்ருய் இலங்கும் இத்திருக்கோயில் பெரும் பொருட் செலவில் திருப்பணிகள் செய்விக்கப்பெற்று மகாகும்பாபிஷேகம் நிகழ்த்தப்பெற்றது. இதன் நினைவாக வெளிவரும் இம் மலர் தெய்வமணம் பரப்பும் திருமலராக விரிந்துள்ளது.

சைவ உலகம் நுகர்ந்து இன்புறுக !



# கும்பாபிஷேக வாழ்த்துச் செய்தி

உ

Ref No............ செந்திலாண்டவன் துணை Encl............

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ( தஞ்சாவூர் ஜில்லா )

அருள்நந்தித் தம்பிரான் அவர்கள்

திருப்பனந்தாள் தேதி....................196

சோழமன்னர்கள் யாவரும் சைவ சமயத்தை ஓங்கச் செய்தவர்கள். வான ளாவிய கற்றளிகள் பல அமைத்துப் புகழ் எய்தியவர்கள். சிவபாதசேகரன் எனப் பெற்ற முதலாம் இராசராசன் அமைத்த தஞ்சைப் பெருவுடையார் கோயிலும், பண்டித சோழன் எனப்பெற்ற முதலாம் இராசேந்திரன் அமைத்த கங்கைகொண்ட சோழேச்சரமும், இராஜகம்பீரன் எனப்பெற்ற இரண்டாம் இராசராசன் அமைத்த தாராசுரத்து ராசராசேச்சரமும், மூன்றாங் குலோத்துங்கன் திருபுவனத்தில் அமைத்த கம்பஹரேசுவரர் திருக்கோயிலும் சோழர்தம் கோயிற் பணிக்கு எடுத்துக்காட்டுக் களாம். இக்கோயில்கள் சோழர் காலத்திய சிற்ப ஓவியக் கலைகளின் மாட்சியை நன்கு காட்டி அவற்றுக்குரிய கலைஞானக் கூடங்களெனத் திகழ்கின்றன. இவற்றுள் திருபுவனத் திருக்கோயில் சிவபரத்துவத்தை நிலைநாட்டும் சரபமூர்த்தியின் திருக் கோயிலைத் தன்னகத்துக்கொண்டு இலங்குகிறது. தருமபுரஆதீனத்தின் பரிபாலனத்தி லுள்ள 27 தேவஸ்தானங்களில் இதுவும் ஒன்று. ஆதீன பரிபாலனத்திலுள்ள கோயில் களின் சிறப்புக்கு இக்கோயில் எடுத்துக்காட்டாகும். இதனைச் சீரும் திருவும் பொலியத் திருப்பணி செய்து மகாகும்பாபிஷேகம் செய்வித்தருளும் ஸ்ரீலஸ்ரீ கைலைக் குருமகாசன்னிதானம் அவர்களுடைய பொன்னார் திருவடி மிகுசைவத்துறை விளங்கப் பூத பரம்பரை பொலிய வாழ்வதாகுக.

'அஞ்வதியாதொன்றுமில்லை, அஞ்சவருவதுமில்லை' என்று அப்பர் அருளிய வாறு ஆன்மாக்களின் கம்பத்தை (நடுக்கத்தை) நீக்குபவர் இக்கோயில் இறைவன். இக்கோயில் கும்பாபிஷேகம் 6—9—63உ நடைபெறுவது; மன்பதைகள் நடுக்கம் தவிர்த்த பெருமானைத் தரிசித்து உய்வனவாகுக.

இக்கும்பாபிஷேகத்தை முன்னிட்டு வெளியிடப்பெறும் இம்மலரினை வெளி யிடுபவர் நல்லறங்காவலர் கனம் பக்தவத்ஸலம் அவர்கள் சிவபக்திச்செல்வம் வாய்ந்த நல்லமைச்சராவர்.. அவர்களுக்குச் செந்திலாண்டவன் திருவருள் மல்குவதாக.

தருமபுர ஆதீனம் வாழ்க

மெய்யடியார்கள் வாழ்க

வாழ்க இவ்வுலமெல்லாம்

எம்கே. சிவ சிவ

உ

TELEGRAMS: AADHEENAM MADURAI. TELEPHONE: MADURAI - 2793.

HIS HOLINESS THIRUVARUL THAVAYOGA

*Sri-la-Sri Somasundara Sri Gnanasambanda Desika Paramachariya Swamigal*

MADURAI AADHEENAM

70, South Avani Moola Street,
MADURAI 1—10—63.
(S. INDIA)

திருபுவனம் மகாகும்பாபிஷேக வைபவத்தில் கலந்துகொள்ளும்படிக் கூட்டி வைத்த திருவருளுக்கு நன்றியும் வணக்கமும் உரித்தாகுக. கும்பாபிஷேகம் எந்தெந்த முறையில் எவ்வளவு பக்தி சிரத்தையுடன் நடந்தேறியது என்பது குறித்து அதில் பங்குபற்றிய எல்லோரையும் பாராட்டுகின்றோம்.

கோவில்நிர்வாகங்களில் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீகயிலைக்குருமகாசந்நிதானம் அவர்கள் மற்றவர்க்கெல்லாம் ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றார்கள் என்பதை யாரும் மறுக்கமுடியாது. அவர்களது அருளாட்சிக்குட்பட்ட எல்லாக் கோவில்களும் மக்களிடையே பக்தியையும் பண்பாட்டையும் வளர்த்து எல்லோரையும் திருவருள் பெற்று உய்யுமாறு செய்ய எல்லாம்வல்ல அங்கயற்கண்ணி பங்கனும் ஆலவாய் அண்ணல் அருள்பாலிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கின்றனம்.

T. P. Visvanatha Pillai
1—10—63.
Asst Manager.

" நல்லறங்காவலர் "

## கனம். திரு. எம். பக்தவத்சலம் B. A., B. L., அவர்கள்

( இந்துசமய அறநிலய அமைச்சர், சென்னை. )

திருபுவனம் கம்பஹரேஸ்வரசுவாமி கோயில், மூன்றும் குலோத்துங்கன் என்னும் சோழப் பேரரசனுற் கட்டப்பெற்றதாகும்.

மூன்றும் குலோத்துங்கன் ( கி. பி. 1778 - 1216 ) என்னும் சோழ வேந்தனுக்கு உரிய பல சிறப்புப் பெயர்களுள் " திரிபுவன வீரதேவன் " என்பதும் ஒன்று

மூன்றும் குலோத்துங்க சோழன், தன் ஆட்சிக் காலத்தின் தொடக்கத்தில், பாண்டியநாடு - ஈழநாடு - கொங்குநாடு என்னும் மூன்று நாட்டின் அரசர்களோடும் போர் நிகழ்த்தி, அவர்களைத் தோல்வியுறச் செய்து வெற்றி கொண்ட சிறப்பின் அறிகுறியாகவே, " திரிபுவன வீரதேவன் " என்னும் சிறப்புப் பெயர் சூட்டிக் கொண்டான்.

திரிபுவன வீரதேவனுல் அமைக்கப் பெற்ற " திரிபுவன வீரபுரம் " என்பதே, இந்நாளில் " திரு புவனம் " என மருவி வழங்கிவருகின்றது.

திருபுவனத்திலுள்ள சுவாமிக்குக் கம்பஹரேசுவரசுவாமி என்பது பெயர். அதனைத் தமிழில் " நடுக்கம் தீர்த்த நாயகர் " என வ்ழங்குவர். கம்பம் - நடுக்கம் ; ஹரன் - தீர்ப்பவன் ; ஹரன்ஈஸ்வரன் - ஹரேஸ்வரன்.

இங்கு எழுந்தருளி விளங்கும் சிவபெருமான், பாண்டியமன்னன் ஒருவனுக்கு, அவனைத் தொடர்ந்து பெரிதும் துன்புறுத்திவந்த பிரமஹத்தி தோஷத்தினுல் ஏற்பட்ட நடுக்கத்தைத் தீர்த்து அருள்புரிந்தார் என்பது வரலாறு.

இங்கேயுள்ள சரபேசர் ஆலயமும் சரபமூர்த்தியின் திருவுருவமும் மிகவும் பிரசித்தி பெற்றவையாகும். சரபம் ( சிம்புள் ) என்பது சிங்கத்தை வெல்லும் வலிமையுடையதாய் விளங்கிய ஒருவகைப் பண்டைய விலங்கு என்பர்.

முன் ஒரு காலத்தில் இரணியன் ( இரணியம் - பொன் ; செம்பொற் பெயர் அசுரன். ) என்னும் அசுரனைக் கொன்று அவன் குருதியைக் குடித்ததனுல், வீராவேசம் மிகவும் கொண்டு உலகை நடுங்குவித்த நரசிங்கப் பெருமாள் ( ' நரகேசரி ' ) ஆகிய திருமாலைச் சிவபெருமான், சரப உருவம் ( ' சிம்புட்சொருபம் ' ) கொண்டு அமைதியுறச் செய்தார் என்பது புராணகதை.

கும்பாபிஷேக

இப்புராணக் கதையினைத் தமது திருப்புகழில், அருணகிரிநாத சுவாமிகள் பின்வருமாறு அழகுறக் குறிப்பிட்டுப் பாடியருள்கின்றார்.

“ நஞ்சைக் கண்டத் திடுபவர், ஆறொடு
திங்கட் பிஞ்சு அக்கு அரவு அணிவேணியர்
நம்பர்ச் செம்பொற் பெயர் அசுரேசனை—உகிராலே
நந்தக் கொந்திச் சொரிகுடல் சோர்வர
நந்திக் கம்பத் தெழுநர கேசரி
நஞ்சக் குண்டைக் கொருவழி ஏடுதன—மிகநாடி
வெஞ்சச் சிம்புட் சொருபம் அதானவர்.........”

திருபுவனம் கோயில் மிகவும் அழகான அரிய சிற்ப வேலைப்பாடுகள் அமைந்தது. இறைவனது கருவறை விமானம் முதலியன, இராஜராஜ சோழன் (கி. பி. 985 - 1014) கட்டிய தஞ்சைப் பெரியகோயிலையும், இராஜேந்திர சோழன் (கி. பி. 1014 - 1044) கட்டிய கங்கைகொண்ட சோழபுரம் கோயிலையும் போன்ற அமைப்பைக்கொண்டு. மிகவும் சிறப்புடன் திகழ்கின்றன.

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் தமது மேற்பார்வையின்கீழ் உள்ள இக்கோயிலுக்குத் திருப்பணிகள் பல செய்து பழுது பார்த்து அழகுறப் புதுப்பித்து, 6—9—63 அன்று கும்பாபிஷேக விழா நிகழ்த்த இருப்பது, மிகவும் பாராட்டி மகிழ்தற்குரியது.

நமது இந்திய தேசத்திற்குச் சீனர் படையெடுப்பு முதலியனவற்றால் நேர்ந்துள்ள நடுக்கம் தீர்த்து, நலங்களைப் பெருக்கி அருள்புரிந்தருளும்வண்ணம் ‘நடுக்கம் தீர்த்த நாதர்’ ஆகிய திருபுவனம் கம்பஹரேஸ்வரசுவாமியின் திருவருளை நாம் நம் மனமொழி மெய்களினால் அன்புடன் வழிபட்டு உய்வோமாக!



வாழ்த்துச் செய்தி

*Dr. K. Rangaswamy,* M. B., B. S.,
D. T. M. & H. (LIVER)., Z. M. R., (VIENNA).
MAYURA CLINIC.

PHONE NO, 107
CHIDAMBARAM.

Date 10—9—63.

கயிலை கண்ட கயிலாய பரம்பரை தவச் செம்மலே! தங்கள் பொன்னார் திருவடிகளை என்றும் போற்றி வணங்குகிறேன்.

வாரி வழங்க வள்ளல் தமிழரசர்கள் இல்லாக் குறையை அருளரசராகிய தாங்கள் செய்யும் திருப்பணிகளும், குடமுழுக்கு விழாக்களும் நீக்கிவிட்டன. தங்கள் அருளாட்சியில் தென் தமிழ் செழிக்கின்றது. சிவாலயங்கள் தெய்வ ஒளியைப் பரப்பு கின்றன. வடமொழி வானளாவ உயர்கின்றது. சைவப் புலவர்கள் பேராதரவு பெறுகின்றனர். கலைகள் சிறந்து வளர்கின்றன.

இவ்வாறு அருளொளியைப்பெருக்கும் தாங்கள் அண்மையில் திருபுவனத்தில் நடத்திய பெருமுழுக்கை அடியவர்கள் கண்குளிர மனங்குளிரக் கண்டு இறைவன் திருவருளைப் பெற்றார்கள். கும்பாபிஷேகத்திற்கு மூன்று நாட்கள் முன்பிருந்தே நடந்த சைவப் பேரவையின் சொற்பொழிவுகளைக் கேட்டு பக்தர்கள் திருவருள் நம்பிக் கையைப் பெற்றார்கள். திருமுறைப் பாராயணங்கள் ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கின. யாகசாலையின் அமைப்பும் அதில் நிகழ்ந்த வேத வேள்விகள் அடிய வர்களைப் பக்தி வெள்ளத்தில் ஆழ்த்தின.

அன்று இரவு கயிலைக் குருமகாசந்நிதானம் திருக்கோயிலுள் பவனிவந்ததும், மேடையில் எழுந்தருளி அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பலவும் எல்லோரையும் மெய் சிலிர்க்கச்செய்தன. பன்னிரு திருமுறைகளினின்றும், ஒவ்வொருபாடலை பல ஓதுவா மூர்த்திகளைக்கொண்டும் ஓதச்செய்தது எல்லோரும் வியந்து போற்றும்வண்ணம் அமைந்தது. மறுநாள் வெள்ளிக்கிழமை அதிகாலையில் தேவர்களும், மன்னவர்களும் மகிழ்ந்து வணங்க குடமுழுக்கு மிகச் சிறப்புடன் நடந்தேறியது.

திருவருள் இருந்தால் எச்செயலையும் செம்மையாகச் செய்யலாம் என்ற தங்களின் உறுதிப்படி எல்லாம் இன்புறமுடிந்தது. உயிர்கள் அனைத்தும் அகத் தூய்மையும், புறத்தூய்மையும் பெற்றன.

இவ்வாறு பல நற்பணிகளைச்செய்து அருள் ஒளியைப் பெருக்கும் தாங்கள் தருமை ஆதீனத்துக் குருமணியாக பல்லாண்டுகள் இருந்து சிவநெறியை வளர்த்து நல்வாழ்வு வாழ்க என கந்தப்பெருமானின் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறேன்.

இப்படிக்கு,
தங்கள் அன்பு மறவாத
K. Rangaswamy

உ
சிவமயம்

# பொருளடக்கம்


பக்க
எண்

## வாழ்த்துரை

திருத்தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் VII

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் XIX

மதுரை ஆதீனம் 291 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் XX

நல்லறங்காவலர், கனம். திரு. எம். பக்தவத்சலம் B. A., B. L., XXI

Dr. Sri. Rangaswamy Pillai, M. B., B. S., XXIII

## 1. வேதம்

வேதாந்தவித்தகர், டாக்டர்.
திரு. T. M. P. மகாதேவன் M. A., Ph., D., — வேதத்தில் சிவபரத்துவம் 1

## 2. உபநிடதம்

சுகப்பிரம்மம். பிர்மஸ்ரீ. இராமசாமி சாஸ்திரிகள் — உபநிடதங்களில் சிவபரத்துவம் 9

## 3. இதிகாசம்

சேங்காலிபுரம். பிர்மஸ்ரீ. அனந்தராம தீட்சிதர் — இராமாயணத்தில் சிவபரத்துவம் 15

## 4. புராணம்

ஸ்ரீவத்ஸ. வெ. சோமதேவ சர்மா — சிவபுராணச் சிறப்பு 24

## 5. ஆகமம்

சிவஸ்ரீ. தி. சந்திரசேகர சிவாசாரியார் — கும்பாபிஷேகம் 116

பக்க
எண்

சிவாகமவித்துவான்.
சிவஸ்ரீ. S. சுவாமிநாத சிவாசாரியார் — ஆலய வழிபாட்டின் தத்துவம் 122

6. திருமுறை

தருமையாதீனப்புலவர். வித்துவான்.
திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை — ஞானசம்பந்தர் தேவார அரிய சொல்லாட்சிகள் 35

வித்துவான்.
திரு. கோ. சுப்பிரமணியப் பிள்ளை M. A., B. L., — ஏறார்ந்த செல்வன் 43

தருமையாதீனப்புலவர். பாலகவி. வயிநாகரம்.
திரு. வே. இராமநாதன் செட்டியார் — தாண்டக வேந்தர் திருவாக்கில் சாத்திர நுட்பங்கள் 49

செஞ்சொற்கொண்டல்.
வித்துவான். திரு. சொ. சிங்காரவேலன் M. A., — அப்பர் தேவாரம் – சரித்திரக் குறிப்புக்கள் 54

வித்துவான். திருமதி. ப. நீலா — ஆட்டுகின்றான் – ஆடுகின்றோம் 61

தருமையாதீனப்புலவர். வித்துவான்.
திரு. இராம. கோவிந்தசாமிப் பிள்ளை — பதினொராந் திருமுறையிற் பழந்தமிழ் 64

திரு. அ. ச. ஞானசம்பந்தம் M. A., — பெரியபுராணக் காப்பிய அமைதி 69

சைவ இலக்கியப் பேரறிஞர்.
டாக்டர். திரு. மா. இராசமாணிக்கனார் M. A., L. T., M. O. L., Ph., D., — சேக்கிழாரும் கல்வெட்டுக்களும் 76

7. சைவசித்தாந்தம்

வித்துவான். திரு. க. வெள்ளைவாரணனார் — சைவசித்தாந்த வளர்ச்சி 89

டாக்டர்.
திரு. வ. ஆ. தேவசேனாபதி M. A., Ph., D., — மெய்கண்டார்அருள்நெறி 93

பக்க எண்

தருமையாதீனப்புலவர்.
வித்துவான். திரு. சி.அருணைவடிவேலுமுதலியார்— சிவஞானசித்தியார் பரபக்கக் குறிப்பு 96

8. திரிபுவனச் சிறப்பு

வேதாந்தசிரோமணி.
பிர்மஸ்ரீ. K. இராஜகோபால சாஸ்திரி — சரபமூர்த்தி 80

திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் M. A., I. A. S. — திரிபுவனச் சிற்பங்கள் 103

கோவைக்கிழார்.
திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் — திருபுவனமும் சோழ பாண்டியத் தொடர்பும் 106

கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர்.
வித்துவான். திரு. வை. சுந்தரேச வாண்டையார்— திரிபுவன வரலாற்றுச் சிறப்பும் கல்வெட்டுச் செய்திகளும் 110

Sri N. RAMAKRISHNA — THIRUBHUVANAM Text & Photos 141

9. பிற இலக்கியங்கள்

ஸ்ரீ. ய. மஹாலிங்க சாஸ்திரி M. A., B. L,, — ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரின் இலக்கிய வளம் 27

திருக்குறள்வேள்.
திரு. G. வரதராசப் பிள்ளை B. A., — தாயுமானவரும் சைவசித்தாந்தமும் 119

பைந்தமிழ்ச்செல்வர். திரு. ச. சிவகுமாரன் M.A.,— சமயமும் இலக்கியமும் 128

வித்துவான்.
திரு. செ. வேங்கடராமச் செட்டியார் — தணிகைப் புராணத்தில் கோவை இலக்கியம் 132

10. கவிதை

திருமதி. சௌந்தரா கைலாசம் — யாரின் குற்றம் ? 8

பக்க
எண்

## 11. தருமையாதீனம்

திருநெறிச்செம்மல்.
வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் — தருமையாதீனப் பண்டாரசாத்திரங்கள் 136

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் ஆட்சி நலங்கள் 148

திருத்தருமையாதீன ஆலயங்கள் 163

## 12. பிற்சேர்க்கை

மகாகும்பாபிஷேகப் பத்திரிகை 177

மகாகும்பாபிஷேக நிகழ்ச்சிகள் 181

பன்னிருதிருமுறை மாநாட்டு வாழ்த்துரை 190

பன்னிருதிருமுறை மாநாடு 197

பத்திரிகைச் செய்திகள் 208



உ

சிவமயம்

# நன்றியுரை

திருபுவனம் ஸ்ரீ கம்பஹரேசுவரசுவாமி தேவஸ்தானம் மகாகும்பாபிஷேகம் பற்றிய செய்திகள் படங்கள் முதலியவற்றை முன்னும் பின்னும் வெளியிட்டுதவிய நம் நாட்டுப் பத்திரிகையாளர்களின் ஒத்துழைப்புப் பெரிதும் பாராட்டற்குரியதாகும். இம் மலர்களில் சேர்த்துள்ள படங்கள் பலவற்றைத்தந்துதவிய பாண்டிச்சேரி புதைபொருளாராய்ச்சி இலாகா திரு. பட்டாபிராமன் அவர்களுக்கும், மாயூரம் திரு. N. இராமகிருஷ்ணன் அவர்களுக்கும் நன்றி.

வாழ்த்துரைகள் வழங்கிய மதுரை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருவடிகட்கும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் திருவடிகட்கும் நன்றியும் வணக்கமும் உரியன. வாழ்த்துரை நல்கிய சென்னைராஜ்ய அறநிலய அமைச்சர், நல்லறங் காவலர், கனம். திரு. M. பக்தவத்சலம் B. A., B. L., அவர்கட்கும். மலரைப் பல்வகை மணமும் உடையதாகக் கருத்தோவியங்கள் வழங்கிச் சிறக்கச் செய்த கட்டுரையாளர்கட்கும் செந்தமிழ்ச்சொக்கர் திருவருளும் குருவருளும் என்றும் பெருகுக.

வாழ்க உலகெலாம்.


A.G. MOORTHY

காசினி யெங்கும்
காண்பதற் கரிய
பேசும் பெண்கோடி
பேரெழிற் காட்சி.



யோகமும் போகமும்
ஒருங்கருள் இறைவற்குப்
போகசக்தியாய்ப்
பொருந்திய புனிதை





இச்சையின்
எவரையும்
ஈர்த்தருள்
செய்யும்

பிச்சை
யேற்றருள்
பெருமான்
வடிவம்



தரணியைநலிந்த
இரணிய வதச்செயல்

நிலைவிளங்கு வாயில்
கலை விளங்கு படிகள்



சிற்பத்தூண் திகழ் தற்பரன் அகநிலை

பல்வகை நிலைகளில் பாவை யொருத்தி

கண்கவர் சிற்பக்

கற்றூண்





நன்முத் திக்காம் நல்வழி இதுவேனும்
சின்முத் த்ரைக்கைத் தேன்முகக் கடவுள்



தூணிலும் உள்ளான் தூயவன் என்றசொல்
வீணிற் போகாது விளங்கிய மடங்கல்

திருத்தேர்க்கோயிலில்





மகனை அரிந்து படைத்த சிறுத்தொண்டர்
மகனை முறைசெய்த மநுநீதிச்சோழர் சிற்பங்களும்
காமதேனு வரலாறும்



வரிவர்க்க சிற்பங்கள்

மனுநீதிச்சோழன் வரலாற்றில்



கன்றையிழந்த பசுவின் துயரம்



தனித்திரு மகனைத் தன்தேர்க் காலிடும்
மனுச்சோழனும் அவன் மாண்புறு மனைவியும்



பெருமகனாகிய பெயர்மனுச்சோழன்
ஒருமகன் மேல்தேர் ஓட்டும் அக்காட்சி.

படிக்கட்டுச்சிற்பம்



யாளி

இருநிலைக்காட்சி இருவகைத்தோற்றம்



யானையும், காளையும்



இரணியவதம்



யாளியும், யானையும்



யானை கருவுயிர்த்தல்

கருப்பக்கிரஹத்தின் அடிப்புறத்தில்



யானை மறவரும். யாளி மறவரும்

இராமாயணச்சிற்பங்கள்



இராமன் இலக்குவன் சீதை இம்முவரும்
இராமேச்சுரத்தில் இறைவனை வழிபடல்

இராமாயணச்சிற்பங்கள்



மாயமான்வதமும், சீதையைச் சிறையெடுக்கும் இராவணனும்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# வேதத்தில் சிவபரத்துவம்

" வேதாந்தவித்தகர் "

டாக்டர். திரு. டி. எம். பி. மஹாதேவன் M. A., Ph. D.,

சிவதத்துவத்துக்கு மூலம் என்று சொல்லக்கூடிய ஒரு கடவுளைப் பற்றிய கருத்து ரிக்வேதத்திலே காணக்கிடக்கிறது. வேதம் குறிப்பிடும் தெய்வங்களுக்குள் ஒருவரான ருத்ரரே பின்னர் சிவன் என்று வணங்கப்பட்ட, இன்னும் வணங்கப்படுகிற, தெய்வத்தின் மூலம் ஆவார். 'பயங்கரமான' என்ற பொருளைத் தருகிற 'ருத்ர' என்ற சொல் ரிக்வேத மந்த்ரங்களில் பெரும்பாலும் ஓர் அடைமொழியாக ஆளப்படுகிறது. பல இடங்களில் 'அக்னி' என்ற தெய்வத்திற்கு அடைமொழியாக அது குறிப்பிடப்படுகிறது. ஆயினும், ஒரு தனிப்பட்ட தெய்வமாக மூன்று முழு வேத மந்த்ரங்களில் ருத்ரர் புகழப்படுகிறார். மற்றும் ஒரு வேத மந்த்ரத்தின் பகுதியிலும், இன்னொன்றில் ஸோமன் என்ற தேவதையோடு சேர்த்தும் உயர்வாகப் பேசப்படுகிறார். ஏதோ ஒரு சில மந்த்ரங்களிலேதான் ருத்ரர் குறிப்பிடப்படுகிறார் என்ற காரணத்தைக் கொண்டு ரிக்வேதத்தில் ஓர் இரண்டாந்தரமான இடத்தில் வைக்கப்பட்டிருக்கும் அவர் ஒரு 'குட்டித் தேவதை' யென்றே சில சமயங்களில் வாதிக்கப்படுவது உண்டு. ஆனால் இது சரியான காரணம் என்று ஒப்புக்கொண்டு விடுவதற்கில்லை. ஏனெனில், ஒரு தெய்வத்துக்குள்ள அந்தஸ்துக்கும், அவரை உயர்த்திப் பாடப்பெறும் பாடல்களின் தொகைக்கும் விகிதாசாரம் ஒன்றுமில்லை. எவ்வளவுக்கெவ்வளவு பாடல்கள் மிகுதியாக இருக்கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு அந்தப் பாடல்களைப்பெற்ற தெய்வங்கள் பெரியன என்று நியதியாகக் கூறமுடியாது. ருத்ரரைப் போற்றும் மந்த்ரங்களுள் அடங்கிய பொருளை நோக்குங்கால், ரிக்வேதத்தில் கூறப்படும் மற்ற எந்தச் சிறப்பான தெய்வத்துக்கும் ஈடானதொரு பெருமை அவருக்கிருந்ததை அறியலாம். இம் மந்த்ரங்களில் அவருக்கு மிக உயர்ந்த புகழுரைகள் சொல்லப்படுகின்றன. ஒரு தலையாய முழுமுதற் சக்தியாகவே அவர் இங்கு உயர்த்திப்பேசப்படுகிறார். பிற்காலத்தில் ஒரு சக்தி வாய்ந்த சைவசமயத்தினரின் தெய்வமான மகாதேவராக ஆவதற்கு வேண்டிய தகுதிகளெல்லாம் ருத்ரரிடத்துக் காணப்படுகின்றன.

எல்லோரினும் உயர்ந்தவராகவும், வலியவருள் வலியவராகவும் ருத்ரரை ரிக்வேதம் பாடுகிறது. அவர் ஆற்றல்

மிக்கவர்; இப்பரந்த உலகுக்கெல்லாம் தலைவர். ருத்ரரைக்காட்டிலும் வலிமை பொருந்தியதொன்றுமில்லை. அவர் இவ்வுலகுக்குத் தந்தை; அவர் பலம்மிக்கவர்; சிறந்தவர்; அழிவில்லாதவர்; தன் பெருமையைத் தானே வளர்த்துக் கொண்ட தனிப்பெருங்கடவுள்.

ருத்ரருடைய புகழ் பாடும் பாக்களில் அவருடைய தோற்றப் பொலிவு தெளிவாக நம் கண் முன் கொணர்ந்து நிறுத்தப்பட்டிருக்கிறது. அவர் பகலவனைப்போல ஒளி வீசுபவர்; பொன்னைப் போல மின்னுபவர்; அவர் ஜோதி மயமான இறைவர்; செந்தழல்மேனியர்; அவர் உருவம் கண்களைக் கூசச்செய்யும் பிரகாசம் பொருந்தியது; பல்வேறு உருவங்களை எடுப்பவர்; கைகளும், கால்களும் உறுதியான உறுப்புக்களும் உடையவர். அவருடைய தாடை அழகானது. முடி, வளையம் வளையமாக எடுத்துச் செருகப்பட்டிருக்கிறது. அவருடைய நிறம் பழுப்பு; அவர் வலியவர்; விரைவாகச் செல்லக் கூடியவர்; இளமை கொழிப்பவர்; உறுதிப்பாடு உடையவர்; விரைவில் எங்கும் செல்பவர்; உரத்த குரலுடையவர்; அவர் அறிவுடையவர்; முற்றும் உணர்ந்தவர்.

ரிக்வேதம், அவருடைய அணிகலன் களையும், ஆயுதங்களையும், வாகனத்தையும், வர்ணிக்கிறது. அவர் உடல் முழுதும் பொன்னுபரணங்களால் அழகுபடுத்தப்பட்டிருக்கிறார்; பலவகையான வேலைப்பாடமைந்த அழகான சங்கிலியைக் கழுத்திலே அணிந்திருக்கிறார். மிகக் கூரிய ஆயுதங்களை அவர் தரித்திருக்கிறார். வழக்கமாக, ஓர் உறுதியான வில்லையும், விரைவாகச் செல்லக் கூடிய அம்புகளையும் ஏந்திச் செல்கிறார். இடியைத் தன் கையிலே தாங்கி இருக்கிறார். விண்ணிலிருந்து எய்யப்பட்ட அவரது மின்னல்வாளி மண்ணுலகெங்கும் ஊடுருவிப் பாய்கிறது. அவர் ஒரு தேரிலே ஏறிவருகிறார்.

'மருத்துக்கள்' என்ற காற்றுத் தேவதைகளுக்கும் ருத்ரருக்கும் உள்ள உறவு ரிக்வேதத்தில் அடிக்கடி நினைவுபடுத்தப்படுகிறது. ருத்ரர் மருத்துக்களுடைய தந்தை. பெரும்பாலும், ஆற்றல் மிக்க இளம் ருத்ரரின் பிள்ளைச் செல்வங்களாக மருத்துக்கள் போற்றப்படுகிறார்கள். பிருச்னி என்ற பசுவின் பொன்மயமான மடியிலிருந்து அவர்களை ருத்ரர் உண்டாக்கியதாக வேதம் கூறுகிறது. ருத்ரர்கள் என்றும், ருத்ரீயர்களென்றும் அழைக்கப்படுகிற மருத்துக்களெல்லோரும் ஒரே வயதினர். அவர்களுக்குள் முதியவன் என்றும், இளையவன் என்றும் வேற்றுமைகள் கிடையா. அவர்கள் அச்சம் தரக்கூடிய வேகம் உடையவர்கள். எதையும் தூய்மைப்படுத்துபவர்கள். மழை தருகின்றவர்கள். வலி பொருந்தியவர்கள்; துடிப்புடையவர்கள்; செழிப்பை நல்குபவர்கள்.

மருத்துக்களும் ருத்ரரும் இவ்வாறு ரிக்வேதத்தில் சேர்த்துப் பேசப்படுவதைக்கொண்டு ருத்ரர் ஒரு புயற் கடவுள் என்றும், மின்னல் அவரது தனித்தோற்றம் என்றும், மருத்துக்கள் புயல் மேகங்களைத் தாங்கிச்செல்லும் வாயுதேவதைகளென்றும் ஒரு சில அறிஞர்கள் கருதுகிறார்கள். ருத்ரரும் அவருடைய புதல்வர்களும் வானவெளித் தேவதைகளாகக் கூறப்படுகிறார்கள். தெய்வீக விண்ணகத்தின் தனிப்பெரும் வீரராகவும், முற்றும் உணர்ந்த முதற் கடவுளாகவும், ரிக்வேதம் ருத்ரரைச் சித்திரிக்கிறது.

ருத்ரருடைய க்ரூரமான குணத்தையும் வேத மந்த்ரங்கள் புலப்படுத்து

கின்றன. அச்சுறுத்தும் ஆற்றல் மிக்க வனவிலங்கைப்போல, ருத்ரர் எதையும் அழித்துவிடுவார். அவர் ஒரு காளைக்கு ஒப்பானவர். வானுலகில் வளையவரும் சிவந்ததொரு காட்டுப்பன்றியைப் போன்றவர். தம்முடைய சினத்தினுலே, தம்மை வணங்குபவர்களையும், அவர்தம் பெற்ரேரையும், குழந்தைகளையும் குலத் தோன்றல்களையும், மனிதர்களையும், கால் நடைகளையும், குதிரைகளையும் அழிக்கா மலிருக்கும் படியும், அவற்றிற்கு ஒரு வகையிலும் தீங்கு செய்யாமலிருக்கும்படி யும் அவர் இறைஞ்சப்படுகிருர். மனித ரையும் ஆடுமாடுகளையும் கொன்றழிக் கும் அவருடைய அம்புகளையெல்லாம் எடுத்து அப்பால் வைத்து விடும்படி கெஞ்சப்படுகிருர். அவருடைய பகை மையையும் இடியென்ற ஆயுதத்தையும் பக்தர்களிடத்தில் காட்டாது திருப்பிக் கொள்ளும்படியும் அவர் வேண்டப்படு கிருர். தூண்டப்பட்ட சினத்தையுடைய வராய்த் தன்னை அண்டித் துதித்தவரை யும், அவர்களுடைய சந்ததியினரையும் ஆடுமாடுகளையும் அழித்து விடவேண் டாம் என்று அவர் கேட்டுக்கொள்ளப் படுகிருர். 'ஏ ருத்ரரே! எங்களைக் கொல்லவேண்டாம்; எங்களைக் கைவிட்டு விடாதீர்; தங்கட்குக் கோபம் வரும் பொழுது தங்கள் வலையில் விழ்ந்து படாமல் எங்களைக் காப்பீராக! என்று ருத்ரரின் அடியார்கள் வேண்டி நிற்கி ருர்கள். 'மனிதனை அழிப்பவர்' என்று கூட அவர் அழைக்கப்படுகிருர்.

அழிக்கும் தன்மையைக் குறிப்பிடும் பல் வேறு துதிகள் ருத்ரர்பால் பாடப் பெறுவதால் அவர் ஒரு கொடூரமான தெய்வம் என்று ஒரு சிலர் முடிவு கட்டி விடுகிருர்கள். மெக்டனல்ட் என்பார், "வேதத்திற்குப் பிற்காலம் வணங்கப் பட்ட சிவனுடைய கொடூரமான, பயங்கர மான, தூய்மையற்ற, வெறுப்பைத்தூண் டக்கூடிய குணப்பாங்குகளை ஏறக்குறைய அப்படியே கொண்டவராக ருத்ரர் காணப்படுகிருர்" என்று கருதுகிருர். மூர் என்பார், "ருத்ரர் ஒரு கொடுமை நிறைந்த தேவதை; மனிதனுக்கும் அவனது உடைமைகளுக்கும் அழிவை யும் நோயையும் தீங்கையும் வருவிக்கும் அவரது அழிவுச் சக்திகளைத் தம்மேல் விடுக்க வேண்டாம் என்று பக்தன் தன் துதிகளால் அவரைத் தடுக்கவே முயன்று பார்க்கிருன்" என்று கூறுகிருர். "ருத்ர - சிவன், ஓர் அச்சத்தைக் கொடுக் கும் தெய்வம்; இவர்க்கெதிராக அன் போடு விரும்பப்படும் தெய்வமாக விஷ்ணு - நாராயணர் இருக்கிருர்" என்று பந்தர்க்கர் என்பார் நம்புகிருர்.

இத்தகையதொரு கருத்து திருப்தி கரமானதல்ல என்றுதான் குறைந்த பட்சமாகக் கூறமுடியும். ரிக் வேதத் திலேயே ருத்ரருடைய பெருந்தகைமை பல பாக்களில் சிறப்பாகக் கூறப்பட்டிருக் கிறது. தெய்வங்களுள் தலையாய தெய் வம் என்றும், மிகுந்த எழிலுடைய தெய்வம் என்றும் செய்திகள் இருக் கின்றன. நன்மையைச் செய்பவர், காருணிகர், செல்வர் என்று துதிகள் வருகின்றன. தீங்கை நீக்கும் பாங்காக மட்டுமின்றி, செல்வச்செழிப்பை நல்கும் வள்ளலாகவும் அவர் பாவிக்கப்படுவது கண்கூடு. குதிரை, ஆடு மாடுகள், ஆண், பெண் என்ற எல்லா உயிர்களுக் கும் அவர் உயர்வைச் செய்கிருர். பல வழிபாடுகளைச் செய்து மனு எந்த உயர்வை அடைந்தாரோ, அந்த உயர்வை ருத்ரரின் ஆதரவால் அடைய லாம் என்று பக்தன் நம்புகிருன். கருணை காட்டும்படியும், அண்டினவர்களுக்கு இன்பம் பயக்கும்படியும் ருத்ரர் வேண் டிக் கொள்ளப்படுகிருர். அவருடைய

மருத்துவத் திறமை பல பாக்களில் புகழ்ந்துரைக்கப்படுகிறது. அவரிடத்தில் ஆயிரம் சிகிச்சைகள் உண்டு. மிகச் சிறந்த மருந்துகள் அவருடைய கைகளிலேயே இருக்கின்றன. அவரது கை பட்டதும் நோய்கள் மறைகின்றன. வீரர்களைத் தமது மருத்துவத்தினால் அவர் எழச்செய்கிறார். மருத்துவரில் மகா மருத்துவராக அவர் விளங்குகிறார். அவருடைய மருந்தின் பெருமையால் ஒரு நூறு ஆண்டுகள் வாழலாம் என்று அடியார்கள் நம்புகிறார்கள். பகையையும் அவலங்களையும் நோய்களையும் ஓட்டுமாறு வேண்டுகிறார்கள். ருத்ரர் தனக்கு நல்ல உடல் நலத்தைத் தந்தருளியதாக ஒரு கவி - அடியவர் பாடுகிறார். அவர் ஏழைக்கு எளியவர் என்றும் சுலபமாக மகிழ்ச்சியடைபவர் என்றும் தோத்திரங்கள் இருக்கின்றன. கோபத்தை யடைந்திருக்கிற மற்ற கடவுளருக்கும் அடியவருக்கும் இடையே நல்லுறவை ஏற்படுத்திக்கொடுக்கவேண்டுமென ருத்ரர் கோரப்படுகிறார். ஏனைய கடவுளரிடமிருந்து தமக்கு உண்டாகும் தீங்கையும், வருணனுடைய பிடியிலிருந்தும் தம்மைக் காக்கவேண்டுமென்று அடியவர்கள் ருத்ரரைப் பிரார்த்தனை செய்கிறார்கள்.

"துன்பத்தையும் பாவத்தையும் ஓட்டுபவர்" என்பதுதான் 'ருத்ர' என்ற சொல்லிற்குப் பொருள் என்று வேதத்துக்குப் பாடியம் எழுதிய ஸாயணர் சொல்லுகிறார். இது ருத்ரருடைய இயல்புக்கு ஒத்ததொரு விளக்கமாகும். இதில் இன்னும் சுவையான செய்தி என்னவென்றால், 'சிவ' என்ற சொல்லும், மேற்சொன்ன பொருளையே தருமாறு விளக்குவதற்கு இடமளிப்பதேயாகும். "அசுபத்தை, பாவத்தைப் போக்குபவர்" என்பது 'சிவ' என்ற சொல்லுக்குப் பொருள், 'சிவ' என்றாலே 'மங்களகரமான' என்று பொருள்படும். இந்த இலக்கணங்களெல்லாம் ருத்ரரிடத்துப் பொருந்தியிருப்பது ரிக்வேத மந்த்ரங்களில் வெள்ளிடைமலையாகத் தெரிகிறது.

யஜுர்வேதத்தைச் சேர்ந்த வாஜஸனேயி சம்ஹிதையில், ருத்ரரைப் பற்றிய இன்னும் கூடுதலான சில விவரங்கள் தரப்பட்டிருக்கின்றன. அம்பிகை அவருடைய சகோதரியாகச் சொல்லப்படுகிறாள். அவரே த்ரயம்பகர் என்று அழைக்கப்படுகிறார். சதபதப்ராஹ்மணத்தில் 'அம்பிகையோடு கூடின ருத்ரரானதால்' த்ரயம்பகர் என்று அழைக்கப்படுகிறார் என்று சொல்லியிருக்கிறது. அவர் மருத்துவர் மட்டுமல்ல; மனிதனுக்கும் மற்றப் பிராணிகளுக்கும் அவர் மருந்தாகவே ஆகிவிடுகிறார். ஓர் இடத்தில் மூஜவத்மலைக்குப் புறம் போகும்படி அவர் கேட்டுக்கொள்ளப்படுகிறார். தோலை ஆடையாக இவர் உடுத்தியிருப்பதாகச் செய்தி வருகிறது. இங்கு இவர் திருப்பெயர் 'சிவன்' என்றும் கூறப்படுகிறது.

யஜுர்வேதத்தைச் சேர்ந்த சதருத்ரீயத்தில், ருத்ரரைக்குறித்த அழகான நாமதுதி வருகிறது. மிகவும் புகழ் பெற்ற திருநாமங்கள் சில அங்கு கொடுக்கப்பட்டிருக்கின்றன. பவர், சர்வர் (அம்பை எய்பவர்), பசுபதி (கால் நடைகளின், அல்லது உயிர்களின் காவலர்), நீலக்ரீவர் (நீலமான கழுத்துடையவர்), சிதிகண்டர் (வெள்ளையான கழுத்துடையவர்), சம்பு (நன்மைக்கு உறைவிடம்), சங்கரர் (நன்மையைச் செய்பவர்) சிவதரர் (மிகுந்த மங்களகரமானவர்) என்றெல்லாம் பெயர்கள் வருகின்றன. அவருடைய சுபமான குணாதிசயங்களைத்தான் இந்த நாமதுதி

வற்புறுத்துகிறது. அவர் சுமங்களர்; அவருடைய வாழ்விடம் மலைகள்; அவர் மலைகளின் நாயகர் (கிரிசந்தர், கிரித்ரர்) தோலை ஆடையாக உடுத்தியிருக்கிறார். யக்ஞோபவீதம் தரித்திருக்கிறார். அவருடைய மருத்துவ மேதாவிலாசம் நினைவு படுத்தப்படுகிறது. அவர் தெய்வ மருத்துவர்; மரங்கள், கிழங்குகள், காடுகள், நீர்நிலைகள் எல்லாவற்றிற்கும் அவரே காவலர். இதுமட்டுமா? அவரே கள்வர்களின் தலைவர்; ஏமாற்றுபவர்களின் இறைவன்; கொள்ளையர்கோன். அவர் இல்லாத இடமே இல்லை; அவருக்குத் தெரியாதது இல்லை என்பதையே இவை குறிக்கின்றன.

அதர்வ வேதத்தில் வருகிற ஒரு பாடலில், ருத்ரரை எல்லா உயிர்களோடும், பொருள்களோடும் ஒற்றுமைப்படுத்தி, விச்வாகாரமாகப்பாடும் முயற்சியைக் காண்கிறோம். அக்கினிக்குள்ளிருக்கும் ருத்ரருக்கு, நீர்களுக்குள்ளிருக்கும் ருத்ரருக்கு, செடி கொடிகளுக்குள்ளுறையும் ருத்ரருக்கு, இதெல்லாவற்றையும் ஆக்கி அளித்த ருத்ரருக்கு நமஸ்காரம் என்று இந்தப்பாடல் தெரிவிக்கிறது. அதர்வ-வேதத்தின் பல பாடல்களில், பவருக்கும் சர்வருக்கும் தோத்திரங்கள் வருகின்றன. இங்கு இவ்விரு தெய்வங்களும் ருத்ரரைவிட வேறானவர்களாகத் துதிக்கப்படுகிறார்கள். சர்வர் ஒரு சிறந்த வில்லாளியாகவும், பவர் ஒரு அரசனாகவும் இங்கு அழைக்கப்படுகிறார்கள். அதர்வ வேதத்தில் மஹாதேவர், ஈசானர் என்ற பெயர்கள் ருத்ரருடைய பெயர்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவருடைய மருத்துவத்திறமையும், கருங்கற்றைக் குழல்களும் வியந்து பேசப்படுகின்றன. அர்த்தகனைக் கொன்றவரெனவும், கேசியினுடைய தேரை ஒடித்துக் கீழே தள்ளினவரெனவும் அதர்வவேதம் அவரைப் புகழ்கிறது. காயமுற்ற விலங்கைத் துரத்திச் செல்வதுபோல, பதுங்கி மறைந்து அவரை வெல்ல முயலும் எதிரிகளை அவர் துரத்திச் செல்லுகிறார். தன் கையிலுள்ள இடியால் மட்டுமின்றி இருமல் முதலிய கொடிய ரோகங்களாலும் அவர் எதிரிகளைத் தாக்குகிறார். பிளந்த பெருவாயையுடையனவும், ஊளையிடுவனவுமான நாய்களை உடையவர் ருத்ரர். பூதகணங்கள் அவர் ஆணைக்குக் காத்திருக்கின்றன. இவ்வாறு அதர்வ வேதம் ருத்ரருடைய கோபம் முதலிய குணங்களைச் சொன்னாலும், பாவிகளையும், பாவங்களையுமே இவரது கோபம் தாக்கித் தகர்க்கும் என்று வேதம் சொல்வதையும் கருத்தில் வைக்கவேண்டும்.

அக்கினியின் ஓர் உருவமாகக்கருதப் படுகிற ருத்ரருக்குரிய சில சடங்குகளைப் பற்றிய குறிப்புக்கள் ப்ராஹ்மணங்களில் காணப்படுகின்றன; "அக்கினி ஒரு தெய்வம்; கிழை நாட்டவர் அவரை சர்வர் என்று அழைக்கிறார்கள். பாஹிகர்கள் பவர் என்று அழைக்கிறார்கள். பசுபதி, ருத்ரர், அக்கினி இவையெல்லாம் அவரது பெயர்களே", என்று சதபதப்ராஹ்மணம் சொல்லுகிறது. ப்ராஹ்மணங்களில் ருத்ரருடைய பிறப்பைப்பற்றிய வரலாறுகள் தரப்படுகின்றன. அவற்றுள் சதபதப்ராஹ்மணம் தரும் வரலாறு ஓர் எடுத்துக்காட்டாக இருக்கிறது; "ப்ரஜாபதியினிடம் உஷஸ் கருத்தரித்தாள். குமாரன் பிறந்தான். பிறந்த குமாரன் அழுதான். "எதற்காக அழுகிறாய் குழந்தாய்? எவ்வளவோ தவமிருந்து பெற்ற செல்வமல்லவா நீ" என்று ப்ரஜாபதி வருந்திக்கேட்டார். "எனக்கு நீங்கள் பெயரிடவேண்டுமென்று ஆசையாயிருக்கிறது" என்று

பையன் சொன்னுன். அது போலவே, எட்டுப் பெயர்களைப் பெறும்வரையில் அவன் ஆசை அடங்கவில்லை. அந்தப் பெயர்களாவன; ருத்ரர், சர்வர், பசுபதி, உக்ரர், அசனி, பவர், மகாதேவர், ஈசானர். ஒவ்வொரு முறை பெயரிடப் படும்பொழுதும், ஏதேனும் ஒரு இயற் கைச் சக்தியோடு அவர் ஒன்றுபடுத்திப் பேசப்படுகிருர். ருத்ரர் என்ற பெயரி ஞல் அவர் அக்கினியாகிருர்; சர்வர் என்ற பெயரினல் ஜலங்களோடு ஒன் ருகி விடுகிருர்; பசுபதி என்பதினல், தாவரங்களோடு ஒன்ருகி விடுகிருர்; ஆகவே, ப்ராஹ்மணங்களிலும், ருத்ரர் எல்லாப் பொருள்களுக்குள்ளும் உறைப வராக, இவை எல்லாமுமாகக் கருதப் படுகிருர்.

ச்வேதாச்வதர உபநிடதத்திலும் அதர்வசிரஸ் உபநிடதத்திலும், சகல உலகமாகவும் ருத்ரர் வியாபித்திருக்கும் தன்மை இன்னும் தெளிவாக உணர்த்தப் படுகிறது. ஒரே கடவுள் ருத்ரரே; அவருக்கு இரண்டாவது இல்லை; தன் னுடைய ஆற்றலினுல் அவர் உலகங்களை ஆள்கிருர். அவர் எல்லாவற்றையும் படைக்கிருர். அவற்றைக் காத்துப் பின் யுகமுடிவில் தன்னிடத்துத் திரும்ப வாங்கிக்கொள்கிருர். சிவனே எல்லா வற்றையும் தோற்றுவிப்பவர்; பல உருவங்களை எடுப்பவர்; உலகம் யாவற் றிலும் பரந்து நிற்பவர்; இருப்பதுவும் இல்லாததுவும் எல்லாம் அவர் செயலே. அகில உலகமும் எப்பொழுதும் அவரால் காக்கப்பட்டு வருகிறது. அவர் முழு முதற்பொருள்; பொருள் சேர்க்கை களுக்கு அவரே நிமித்த காரணம். சகல தேவதைகளுக்கும் அவர் மூலமும் ஆதியு மாவார்.

ருத்ரர் எல்லாவற்றினும் தொடர்ந்து உள்ளுறைகிருர்; அவர் உருவம் சர்வ வியாபகமானது. அவர் பார்வை எல் லாத் திக்கிலும் இருக்கும்; முகம் எல்லாத் திக்கையும் நோக்கி இருக்கும். கைகள் எல்லாப் பக்கங்களிலும், கால்கள் எல்லாப் பக்கங்களிலும் இயங்கும். எத்தனை திசைகளுண்டோ அத்தனை முகங்கள் அவருக்குண்டு. விண்ணகத் தின் எல்லாப் பகுதிகளையும் அவர் பார்த்துக்கொண்டிருக்கிருர். நீரிலும், நெருப்பிலும், செடியிலும், மரத்திலும் அவர் இருக்கிருர். சகல புவனங்களி லும் அவர் கரந்து பரந்துள்ளார். எல்லா வற்றிற்கும் அவரே தலை; அவரே முகம்; அவரே கழுத்து. இருப்பனவற்றின் இதயங்களில் அவர் வாழ்கிருர். சர்வ வியாபி, செல்வர், மங்களமானவர். அவர் ஆண், அவர் பெண், அவர் இளைஞர், யுவதியும் கூட. முதியவராக அவரே தடியேந்திச் செல்கிருர், பிறந்து, எத் திசைகளையும் அவர் கண்காணிக்கிருர். அவரே கருநீலப்பறவை. செங்கண் படைத்த பச்சைக்கிளி. மின்னல் அவரது குழந்தை. பருவங்களும் கடல் களும் அவரே. தனக்கு ஒரு பிறப் பில்லாமல், எல்லாவற்றிற்கும் அவர் பிறப்பிடமாக அவர் இருக்கிருர்.

ஒரே இறைவன் தன் மாயையால் பலவாக ஆகிருன். மாயையென்பது ப்ரகிருதி. அதை ஆளும் மாயாவி மகேச்வரன். தன்னுடைய ஆத்மசக்தி யான மாயையினுல் உலகங்களைப் படைத்து அவற்றை அவ்விறைவன் ஆள்கிருன். தன்னுடைய சக்தி ரூபங் களினுலே உலகத்தின் ஆட்சியை அவன் நடத்துகிருன். ச்வேதாச்வதர உப நிடதத்தில் மாயை என்ற சொல் அடிக்கடி கையாளப்படுகிறது என்பது கவனிக்கத்தக்கது. எவ்வாறு ஒன்று பலவாகிறது என்பது அவிழ்க்க முடி யாத புதிர். அது அறிவுக்கெட்டாத ஒரு பெருமாயை என்று தான் கூறமுடியும்.

ருத்ரரை எல்லாவற்றிேனடும் ஐக்கியப்படுத்திப் பேசினலும், உண்மையில் பரம்பொருளிடத்து உலகங்களின் நானுவகையான தோற்றங்கள் இல்லை என்பதை உபநிஷத்து எடுத்துரைக்காமலில்லை. இவ்வுலகங்களைக் கடந்து நிற்கும் பரம்பொருள் உருவமில்லாதது; துன்பத்திற்கு அப்பாற்பட்டது. இதை அறிந்து கொள்ளுகிறவர்கள் சாச்வதமான பதவியை அடைகிருர்கள்: மற்றவர்கள் இடர்ப்படுகிருர்கள்; என்று இந்த ச்வேதாச்வதர உபநிஷத்து கூறுகிறது; "புலன்களின் குணங்களை உடைத்தாயிருப்பது போலத் தோன்றினலும் இப்பரம்பொருளுக்குப் புலன்கள் கிடையா"; "காலில்லாத போதும் அவர் விசையுடையவர்; கையில்லாமலிருந்தாலும் அவர் சிக்கெனப்பிடிப்பார்; கண்களில்லாமலே காண்பவர்; செவிகளில்லாமலே கேட்பவர்" "அவயவங்களில்லாதவர்; குற்றமில்லாதவர்; வசையில்லாதவர்"; "இறவாமைக்கு அவர் ஒரு பாலம்; நன்ருகக் கொளுத்தப்பட்ட தீயைப்போல" என்றெல்லாம் ச்வேதாச்வதர உபநிஷத்து, பிருஹதாரண்யக உபநிஷத்தின் பாணியில் பரம்பொருளை,பிரபஞ்சச்சாயையில்லாத நிர்க்குண வஸ்துவாக வர்ணிக்கிறது.

ருத்ரர், சிவர் என்ற பெயர்களைத் தவிர, வேறு பெயர்களையும் ச்வேதாச்வதர உபநிஷத் குறிப்பிடுகிறது. அவை யாவன: (1) ஹரர் (2) ஈசானர் (3) மஹேச்வரர். இன்னென்றும் நாம் இங்குக் கவனிக்கவேண்டும். ச்வேதாச்வதர உபநிஷத்து எந்த ஒரு சமயச் சார்பையும் உடையதல்ல. ஏனெனில், ஒரே கடவுள் சூரியனுகவும், அக்கினி, ஆதித்யர், வாயு, சந்திரன், ப்ரஹ்மா, வருணன், ப்ரஜாபதியாகவும் பலவாருகப் பேசப்படுகிருர். பெயரளவில் வேற்றுமையே யன்றி, பரம்பொருள் ஒன்றே. ச்வேதாச்வதர உபநிஷத்தில் 'ருத்ரர்' என்பது பரம்பொருளையே குறிக்கும்.

கடவுளை உணருவதற்கான வழிகளில், யோகம், ஞானம், பக்தி இவற்றை இந்த உபநிஷத்து மிகவும் வற்புறுத்தி, சிறப்பித்துப் பேசுகிறது. யோகத்தினுடைய பல்வேறு நிலைகளை விரிவாக உபநிஷத்து உபதேசிக்கிறது. தியானத்தாலும், யோகத்தாலும், கொந்தளிக்கின்ற புலன்களைக் கட்டுக்குள் கொண்டு வரவேண்டும். இம்முறையில், மனம் தூய்மைப்படும்பொழுது, கடவுளுணர்வு பிறக்கும். கடந்தும், கரந்தும் நிற்கும் இறைவனின் பான்மை அப்பொழுது தெள்ளத்தெளியத் தெரியும். அத்துவிதியமான, இரண்டற்ற பரம்பொருள் கடவுள்; அதுவே எல்லாவற்றிற்கும் ஆதாரம் என்று உணரும்பொழுது பாசங்கள் தெறித்து விழுகின்றன; துன்பங்கள் விலகுகின்றன. சைவ சமயத்தில் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படும் பதி, பசு, பாசம் என்ற முப்பொருளில் ஒன்ருன பாசம், ச்வேதாச்வதர உபநிஷத்தில் குறிப்பிடப்படுவது இங்கு நோக்கற்பாலது. கடவுளை உணர்வதற்கு இன்றியமையாத சாதனமாகிய அவனது அருளையும் உபநிஷத்து குறிப்பிடுகிறது. பிறவித்தளையிலிருந்து விடுபடுவதற்காக மட்டுமன்றி, இப்பிறப்பிலேயே மேன்மைகளை எய்துவதற்கும் ருத்ரரின் அருள் இன்றியமையாதது என்று உபநிஷத்து அறிவிக்கிறது. "உம்முடைய மங்களகரமான திருமுகத்தினல், ஏ, ருத்ரரே! எம்மை எந்நாளும் காப்பீராக!" என்று உபநிஷத்து பிரார்த்தனை செய்கிறது.

சர்வ உலகங்களாகவும் ருத்ரர் நிற்கும் இந்தப் பான்மையைப்பற்றி, ஒரு

கதை மூலம் அதர்வசிரஸ் உபநிஷத்து விளக்க முற்படுவதைக் காண்கிறோம். ஒரு சமயம் தேவர்களெல்லாம் சுவர்க்கம் சென்று ருத்ரரைப் பார்த்து, "நீர் யாவர்?" என்று வினவ, அதற்கு மறு மொழியாக அவர், "மற்றெதுவும் தோன்றுமுன்னமே நான் ஒருவனே இருந்தேன்; இருக்கிறேன், என்றும் இருப்பேன்; என்னினும் உயர்ந்த மற்றெதுவும் இல்லை" என்று கூறி விண்ணையும் மண்ணையும் அளாவி ஓங்கி நின்றார். "நானே எல்லாமும், நித்யமும் அநித்யமும் நானே; மறைந்ததுவும் தோன்றுவதுவும் நானே; ப்ரஹ்மமும் அப்ரஹ்மமும் நானே" என்றுமுழங்கினர். தேவர்களெல்லோரும் அப்போது ருத்ரரை த்யானம் செய்தார்கள். "நீரே ப்ரஹ்மா; நீரே விஷ்ணு; மஹேச்வரர், உமா, விநாயகர், ஸ்கந்தர், இந்த்ரன், அக்கினி எல்லோரும் நீரே; நீரே எல்லா உலகங்களும்; நீரே விச்வ ரூபர்" என்று தொழுது நின்றனர்.

சுருங்கச் சொல்லுமிடத்து வேதங்களிலேமிகத்தொன்மையானரிக்வேதத்திலேயே ருத்ரரைப்பற்றியதொரு அழகான கருத்து நன்கு உருப்பெற்று இருந்திருக்கிறது. கடுமையானதொரு அசுரவடிவினராக ருத்ரரைச் சித்திரித்துக் கொள்ளவேண்டிய தேவை இல்லை. அவர் பயங்கரமானவர்தான். ஆனல், யாருக்கு? நல்லவருக்கல்ல; தீயவருக்கே அவர் பயங்கரமானவர். அவருடைய கல்யாண குணவரிசைகளும் அருட்சக்தியும் வேதங்களில் சிறக்கக் காணலாம். மற்றைய ஸம்ஹிதைகளும், ப்ராஹ்மணங்களும், உபநிஷத்துக்களும் ருத்ரரைப் பற்றி விரிவாகப் புகழ்ந்துரைக்கின்றன என்பதைப் பார்த்தோம். எல்லா உலகங்களிலும் ஒன்ருய் ஊடுருவி நிற்கும் பரமனுக அவை அவரைப் போற்றுகின்றன. எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட பெருமாளுகவும் அவரை வாழ்த்துகின்றன. பிற்காலத்தில் சைவ சமயங்களில் முழுமுதற் கடவுளாக ஏத்தித் தொழப்படும் 'சிவனே' இங்கு உபநிஷத்துக்கள் பெருமையோடு வழுத்தும் 'ருத்ரரில்' நாம் காண்கிறோம்.



# உபநிடதங்களில் சிவபரத்துவம்

"சுகப்பிரம்மம்"

பிர்மஸ்ரீ. இராமசாமி சாஸ்திரிகள்.

நமது இந்திய நாட்டில் (ஹிந்துமதத்தில்) வைதிக மதத்திற்குள், ஆறு உட்பிரிவுகள் (அகச் சமயங்கள்) உள்ளன. அவையாவன:— சைவம், வைணவம், காணபத்தியம், கௌமாரம், சாக்தம், ஆர்க்கம் என்பன. அந்தந்தக் கடவுளையே பரம் பொருளாகக் கொண்ட இந்தச் சமயங்கள் அந்தந்தத் தெய்வத்தின் பெயராலேயே அமைந்திருக்கின்றன. இவைகளுள் வைணவம் தனித்திருப்பது போலவும், மற்றவை சைவத்திற்கு உட்பட்டது போலவும் வெளிப்படையாகக் காணப்படுகிறது. ஆனல் உபநிடதங்களைப் பார்த்தால் வைணவமும அதுபோன்ற மற்றைச் சமயங்களும் சைவத்திலேயே அடங்கும் என்பது தெரிகிறது. இதனைக் கருதியே சித்தாந்த சாஸ்திரங்களிலும் "அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய்" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதனையே தாயுமான அடிகளும், "இராசாங்கத்தில் அமர்ந்தது வைதிக சைவ சமயம் அழகிது அந்தோ!" என்ருர். உதாரணமாக ருத்ரஹ்ருதய உபநிடதத்தில்,

1. सर्वदेवात्मको रुद्रः सर्वे देवाः शिवात्मकाः ।

ஸர்வதேவாத்மக: ருத்ர: ஸர்வேதேவா: சிவாத்மிகா: 1

எல்லாத் தேவர்களுடைய வடிவமாகவும் சிவனே நிற்கின்ருன்; ஆகவே, எல்லாத் தெய்வங்களும் சிவஸ்வரூபமாகும்.

2. रुद्रस्य दक्षिणे पार्श्वे रविर्ब्रह्मा त्रयोऽग्नयः ।

ருத்ரஸ்ய தக்ஷிணே பார்ச்வே ரவிர்ப்ரம்மா த்ரயோக்நய: 1

ருத்ரனுடைய வலதுபாகத்தில் சூர்யன், ப்ரம்மா அக்னி என்ற மூவரும் இருக்கின்றனர்.

3. वामपार्श्वे उमादेवी विष्णुः सोमोऽपि ते त्रयः ।

வாம பார்ச்வே உமாதேவி விஷ்ணு: சோமோபி தே த்ரய: 1

இடது பாகத்தில் உமாதேவீ, விஷ்ணு, சந்திரன் என்ற மூவரும் இருக்கின்றனர்.

4. या उमा सा स्वयं विष्णुः यो विष्णुः स हि चन्द्रमाः ।

யா உமா ஸா ஸ்வயம் விஷ்ணு: யோ விஷ்ணு: ஸஹி சந்த்ரமா: 1

உமாதேவியே விஷ்ணுவாக இருக்கிருள், விஷ்ணுவே சந்த்ரனுக இருக்கிருன்.

உபநிடதங்களில்

5. उमारुद्रात्मिकाः सर्वाः प्रजाः स्थावरजङ्गमाः ।

உமா ருத்ராத்மிகா: ஸர்வா: ப்ரஜா: ஸ்தாவரஜங்கமா: ।

உலகத்தில் உள்ள தாவர ஜங்கம ரூபமான எல்லாப் பொருள்களும் உமாதேவியினுடையவும் ருத்ரனுடையவும் வடிவங்களாகும்.

6. व्यक्तं सर्वं उमारूपं अव्यक्तं तु महेश्वरम् ।

வ்யக்தம் ஸர்வம் உமாரூபம் அப்யக்தம் து மஹேஸ்வரம் ।

பருப்பொருள்களெல்லாம் உமையாகவும் சூக்குமப்பொருள்களெல்லாம் சிவனாகவும் கூறப்படுகின்றன.

ஆகையால் சிவசத்திவடிவமாகவே எல்லாம் அமைந்துள்ளன. இந்தக் கருத்துத்தான் உபநிடதங்களில் தெளிவாகவும் விரிவாகவும் முடிவாகவும் காணப் படுகிறது.

"या उमा सा स्वयं विष्णुः" என்ற உபநிடதக் கருத்துடன், அப்பர் பெருமான் கூறிய ஐயாற்றுப் பதிகத்தில், "அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே" என்ற சொல் உற்றுநோக்கற்பாலது.

शिव एव सदा ध्येयः सर्वसंसारमोचकः ।

சிவஏவ சதா த்யேய: சர்வசம்சார மோசக: ।

சிவன் ஒருவனே எப்பொழுதும் த்யானம் செய்யப்படவேண்டியவன். எல்லாப் பிறவித் துன்பங்களிலிருந்தும் விடுவிப்பவன், என்று சரப உபநிடதம் கூறுகிறது. மேலும்,

जीवः शिवः शिवो जीवः सजीवः केवलः शिवः ।

ஜீவ: சிவ: சிவோ ஜீவ: ஸஜீவ: கேவல: சிவ: ॥

ஜீவனே சிவனாகவும் சிவனே ஜீவனாகவும் கூறப்படுகிறது.

"சீவனெனச் சிவனென்ன வேறில்லை
சீவனார் சிவனாரை அறிகிலர்
சீவனார் சிவனாரை அறிந்தபின்
சீவனார் சிவனாயிட்டிருப் பரே"

என திருமந்திரம் கூறுகிறது.

ஒவ்வொரு ஜீவனும் சிவனுடன் இயைந்து இருந்தும், சிவனைக் காணாமல் நிற்கின்றது.

ஜீவன் உமி விலகாத நெல்போல் நிற்கிறது. மேலே உள்ள உமி விலகி விட்டால் எவ்வாறு அரிசி வெளிப்படுகிறதோ அதுபோல் ஜீவநிலை விலகி சிவனாக நிற்கிறது. அதைக் காண முயலவேண்டும். அதற்கு வழிகள் சிவபூஜை, த்யானம், நாமஜபம் முதலியவை. அதையே,

पाशवद्धस्तदा जीवः पाशमुक्तः सदाशिवः।

பாசபத்தஸ்ததா ஜீவ: பாசமுக்த: ஸதாசிவ:

பாசத்தால் கட்டுண்டது ஜீவனாகும், பாசத்திலிருந்து விடுபட்டால் அதுவே சிவன்.

" பதி பசுபாசம் எனப் பகர்மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணுகாப் பசு பாசம்
பதியணுகில் பசுபாசம் நில்லாவே "

இவ்வாறு திருமந்திரம்.

ஆகவே இப்படி எல்லாத் தாவரஜங்கம சேதன அசேதன வடிவமான சிவன்,

एष हि देवः प्रदिशो नु सर्वाः पूर्वोहि जातः स उ गर्भे अन्तः
सविजायमानः स जनिष्यमाणः प्रत्यङ्मुखास्तिष्ठति विश्वतो मुखः

ஏஷஹி தேவ: ப்ரதிஸோனுஸர்வா: பூர்வோஹி ஜாத: ஸஉகர்ப்பே அந்த:
ஸவிஜாயமான: ஸஜனிஷ்யமாண: ப்ரத்யங்முகாஸ்திஷ்டதி விஸ்வதோமுக:

ஒவ்வொரு திசைகளாகவும் அமைந்திருக்கிறான். உலகத்தில் உள்ள எல்லா உயிர்களுக்கும் முதலிலேயே தோன்றியவனாக இருக்கின்றான். அவனே ஒவ்வொரு உயிர்களுக்கும் உள்ளே கருவாயும், வெளியே தோன்றின பிறகு ஜீவனாயும் பலதடவை உயிர்ப்பிக்கும் ஜீவர்களாயும் இருந்துகொண்டு எல்லாவற்றையும் அவைகளுக்கு அப்பால் சாக்ஷியாகவும் உலகமே வடிவமாகவும் இருந்து பார்த்துக்கொண்டிருக் கிறான்.

" எங்கணும் பணிவதனங்கள் " என்பது கந்தபுராணம். மேலும்,

यो रुद्रो अग्नौ यो अप्सु य ओषधीषु यो रुद्रो विश्वा भुवना
विवेश तस्मै रुद्राय नमोऽस्तु ॥

யோருத்ரோ அக்னௌ யோஅப்ஸு ய ஓஷதீஷு யோருத்ரோ விஸ்வா புவனாவிவேச தஸ்மை ருத்ராய நமோஸ்து.

அக்னியில் வெப்பமாகவும், தண்ணீரில் தண்மையாகவும் புற்பூண்டுகளினுத் திலும் வளமாகவும் நிறைந்து இருக்கும் ருத்ரனுக்கு வணக்கம் என்று ஸ்வேதாஸ்வதர உபநிடதம் கூறுகிறது. இதனையே திருவாசகத்தில்,

உபநிடதங்களில்

" நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்ருய்த் நிகழ்ந்தாய் போற்றி " என்கிருர்.

यो देवानां प्रथमं पुरस्तात् विश्वाधियो रुद्रः महर्षिः
हिरण्यगर्भं पश्यत जायमानं स नोदेवः शुभया स्मृत्या संयुनक्तु ।

யோதேவானும் ப்ரதமம் புரஸ்தாத் விஸ்வாதி யஃருத்ர:
மஹர்ஷி: ஹிரண்ய கர்ப்பம் பஸ்யத ஜாயமானம்
ஸநோதேவ: சுபயா ஸ்மிருத்யா ஸம்யுநக்து 1

எவன் தேவர்களுக்கெல்லாம் முதல்வனுக இருக்கின்ருனே, உலகத்திற்கு மேற்பட்டவனுகவும் வேதப் பொருள் உணர்ந்த ரிஷி என்றும் அழைக்கப்படுகிருனே, எவனுக்கு பொன் போன்றதான திருமேனியோ, அந்த சிவன் எங்கள் அறிவை மங்களமயமான அவனுடைய த்யானத்திலேயே ஈடுபடுத்திக்கொள்ளட்டும்.

மேலே குறிப்பிட்ட ஸ்வேதாஸ்வதர உபநிடத வாக்யங்களை எடுத்துக் கொண்டுதான் ஹரதத்தசிவாசார்யஸ்வாமிகள் சிவபரத்வம் கூறினுர்.

கஞ்சனூரில் ஸ்ரீ வைஷ்ணவ ப்ராம்மண குடும்பத்தில், வாசுதேவாசார்யர் என்பவருக்கு சுதர்சனுசார்யர் என்ற குமாரர் பிறந்தார். அவர் தம்முடைய எட்டாவது வயதில் திருவீதியில் விளையாடிக்கொண்டிருக்கும் பொழுது அவ்வூர்ப் பசுபதி என்னும் அந்தணரிடம் விபூதி உருத்திராக்கங்களைப் பெற்று அணிந்தார்; அதையறிந்து அவர் தந்தை சினங்கொண்டமையால் சிவாலயத்தை அடைந்து, சிவபெருமானே நேரில்வந்து படிகலிங்கம் உதவப்பெற்று, ஹரதத்த சிவாசார்யர் ஆனுர். இளமையிலேயே கஞ்சனூரில் உள்ள வரதராஜப்பெருமாள் சந்நிதியில் பழுக்கக்காய்ச்சப்பட்ட இரும்பு நாற்காலியில் அமர்ந்துகொண்டு வேத உபநிடதங்களிலிருந்து எடுத்துக்கூறி சைவத்தைச் சித்தாந்தம் செய்தார். அதிலும் குறிப்பாக முன் சொன்ன வாக்யத்திலிருந்து. '' विश्वाधियो रुद्रः '' விஸ்வாதியோ ருத்ர: என்ற பதத்தை எடுத்துக்கொண்டு பரத்வம் கூறினுர்.

விளக்கம் - விஷ்ணுவிற்கு விஸ்வம் என்று பெயர். விஸ்வம் என்ருல் ஸ்தாவர ஜங்கம வடிவமாயுள்ள உலகம். ஆகவே நாராயணன் விஸ்வமானுல் சிவன் விஸ்வாதிகன் ஆகின்ருன் என்ருர். அதாவது உலகத்திற்கும் மேற்பட்டவன்.

" ஆக்கம் அளவு இறுதி இல்லாய் அனைத்து உலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய், அருள் தருவாய், ''

என்ருர் மாணிக்கவாசகர். மேலும் தொடர்ந்து ஹரதத்த சிவாசார்யஸ்வாமிகள் கூறுகின்ருர்,

आवो राजानं अध्वरस्य रुद्र

ஆவோ ராஜானம் அத்வரஸ்ய ருத்ரம்.

என்ற இடத்தை எடுத்துக்கொண்டு விளக்குகிறார். அதாவது பொருள்களில் பெரிது உலகம்; அவ்வாறு வேதங்களில் கூறப்பட்ட சடங்குகளுக்குள் பெரிது வேள்வியாகும். அந்த வேள்வியில் அழைக்கப்படும் விஷ்ணு முதலான எல்லாத் தேவர்களுக்கும் தலைவனாகச் சிவனே விளங்குகிறான் என்றார்.

வேதத்தில் விஷ்ணுவை யக்ஞம் என்றும், வேள்வியே வடிவமானவன் என்றும், சிவனை வேள்விக்கு அரசனென்றும் அழைக்கப்படுவதை நினைவு கூர்ந்தார். இவ்வாறு அவர் சிவபரத்வம் விளக்கினார், இதை ஒத்து பெரியபுராணத்தில் திருஞான சம்பந்தமூர்த்திநாயனார் வரலாற்றில் பொற்கிழிபெற்ற பகுதியில் சேக்கிழார்சுவாமிகள் குறிப்பிடுகிறார்.

" ஆதி மாமறை விதியினால் ஆறுசூழ் வேணி "
நாதனாரை முன்னாகவே புரியும் நல்வேள்வி " என்றார்.

இவ்வாறு வேத உபநிடதங்களால் பரவப்படும் சிவனை. அவன் திருவருளால் தான் புரிந்துகொள்ள முடியும் என்றும், இல்லாத வரையில் நன் முயற்சிகளால் காண முடியாது என்றும் உபநிடதங்கள் கூறுகின்றன.

अणोरणीयान् महतो महीयान् आत्मा गुहायां निहितोऽस्यजन्तोः
तमक्रतुं पश्यत वीतशोकः धातुः प्रसादात् महिमानमीशम् ।

அணோரணீயான் மஹதோமஹியான்
ஆத்மா குஹாயாம் நிஹிதோஸ்ய ஜந்தோர்
தமக்ரதும் பஸ்யத வீதசோக:
தாது: ப்ரஸாதாத் மஹிமானமீசம்.

அணுவுக்கு அணுவாயும், பெரிதிற்குப் பெரிதாயும் உள்ள பரமாத்மா ஜீவனுடைய ஹ்ருதய குகையில் வைக்கப்பட்டிருக்கிறான், அவனைத் திருவருளால்தான் சோகமோகம் விட்டவனாகவும் சங்கல்பங்கள் அற்றவனாகவும் இருந்து பார்க்கமுடியும். அந்தப் ப்ரபுவைப் பார்ப்பதற்கு நம்முடைய தகுதிகளைக் காட்டிலும் அன்பேதான் உயர்ந்தது. அன்புடையவர்களான இடைச்சாதிச் சிறுவர்களும் பார்த்திருக்கிறார்கள் என்று ஸ்ரீ ருத்ரம் கூறுகிறது.

उतैनं गोपा अदृशन् ।
உதைனம் கோபா: அத்ருசன் I

கண்ணப்பநாயனார், ஆனாயநாயனார் உதாரணமாவார்கள்.

இந்தச் சிவதத்துவத்தை குருலிங்க வழிபாடுகளால் புரிந்துகொள்ளமுடியும் என்கின்றது உபநிடதம்,

लिङ्गे सर्वं समुत्पन्नं लयः तत्रैव चोच्यते
सृष्टिसंहार मेवोक्तं लिङ्ग नामास्य चोच्यते ॥

லிங்கே ஸர்வம் சமுத்பன்னம் லய: தத்ரைவ சோச்யதே
ச்ருஷ்டி ஸம்ஹார மேவோக்தம் லிங்கம் நாமாஸ்ய சோச்யதே.

1142

உபநிடதங்களில் சிவபரத்துவம்

லிங்கத்திலிருந்தே எல்லாம் ஏற்பட்டிருக்கின்றன. எல்லாம் லிங்கத்திலேயே அடங்குகின்றன. படைப்பு முதலிய முத்தொழிலும் அதற்குள்ளேயே அடங்குவதால் லிங்கம் என்று பெயர்.

உதாரணமாக, சேக்கிழார் சுவாமிகளும் சாக்கியநாயனுர் புராணத்தில்,

" காணுத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
நீணுக மணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம் " என்று கூறுகிருர்.

லிங்க வழிபாடு துறவிகளுக்கும்கூட தவிர்க்கமுடியாதது என்று உபநிடதம் கூறுகிறது. அவர்கள் க்ஷணிகலிங்கத்தில் வழிபடவேண்டும்.

लिङ्गं क्षणिकमभ्यर्च्य भक्तिमात्रेण संयुतः
एकाकी वृक्षमूले वा वने वा जनवर्जिते

லிங்கம் க்ஷணிகமப்யர்ச்ய பக்தி மாத்ரேண சம்யுத:
ஏகாகீ வ்ருக்ஷமூலேவா வனேவாஜன வர்ஜிதே

பற்றற்ற துறவிதனிமையில் மரத்தினடியிலோ அல்லது மனித சஞ்சார மில்லாத வனத்திலோ அமர்ந்துகொண்டு பக்தியுடன் க்ஷணிகலிங்கத்தை வழிபட வேண்டும். க்ஷணிகலிங்கமாவது :-

பூஜை நேரத்திற்கு மாத்திரமாகப் பாவிக்கக்கூடியது. மகாநதியில் உள்ள மிருத்திகை (மண்) எடுத்தோ அல்லது அக்ஷதை, விபூதி இவைகளில் சிவனைப் பாவித்தோ பூஜிப்பது க்ஷணிகலிங்கார்ச்சனமாகும்.

இவ்வாறு சிவபூஜையாலும், அதுவேபோல் குருபக்தியாலும் சிவனை அறிந்து கொள்ளலாம், அடையலாம்.

यस्यदेवे पराभक्तिः यथादेवे तथा गुरौ
तस्यैते कथिताह्यर्थाः प्रकाशन्ते महात्मनः ।

யஸ்ய தேவபராபக்தி : யதாதேவேததாகுரௌ
தஸ்யைதே கதிதாஹ்யர்த்தா : ப்ரகாசந்தே மஹாத்மன

என்று ஸ்வேதாஸ்வதர உபநிடதம் கூறி முடிக்கிறது.

எவனுக்குக் குருவினிடத்திலும், ஈஸ்வரனுக்குச் சமமான பக்தி யிருக்கிறதோ, அந்த மஹாத்மாவான சிடனுக்கு எல்லா அறிவும் அனுபவமும் தானகவே வரும்.

ஆகவே நாமும் குருலிங்க சங்கம வழிபாட்டால் எல்லா அருட்செல்வங்களையும் பெறுவோமாக. " உணர்வின் நேர்பெறவரும் சிவயோகத்தை ஒழிவின்றி உருவின் கண் அணையும் ஐம்பொறியளவினும் எளிவர அருளினை " என்ருர் சேக்கிழார் சுவாமிகள்.

# இராமாயணத்தில் சிவபரத்துவம்

சேங்காலிபுரம், பிர்ம்மஸ்ரீ. அனந்தராம தீட்சிதர்

ஸ்ரீ சிவன் என்ருல் மங்களத்தை அளிக்கும் தெய்வம் என்பது பொருள். ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அவதாரமாகிய ஸ்ரீ ராமனின் சரிதத்தைக் கூறவந்த ஸ்ரீ வால்மீகி முனிவர் ஸ்ரீ பரமசிவனைப் பற்றிப் பல இடங்களில் கூறியுள்ளார். அக்ஞானம் விலகி ஞானம் ஏற்பட ஸ்ரீ பரமசிவனின் அருள்தான் தேவை. ज्ञानमिच्छेत् महेश्वरात् । (ஞானமிச்சேத் மஹேச்வராத்) என்று சாஸ்திரம் கூறியுள்ளது. ஸ்ரீ சிவன் ம்ருத்யுஞ்ஜயன், ஆனதால் யமபயத்தையும் பிறப்பு இறப்புக்களின் பயத்தையும் போக்க அவனே வல்லவன். உலகிலுள்ள யாவருமே துக்கமில்லாது மங்களத்தையே விரும்புகிருர்கள். ஆகவே முனிவர்களும் ஆங்காங்கு ம்ருத்யுஞ்ஜயஞன ஸ்ரீ பரமேச்வரனைப்பற்றிக் கூறி உபாசிக்கின்றர். ஸ்ரீ ஸ்காந்தம் முதலிய புராணங்களில் ஸ்ரீ சீதாராமனே, ஸ்ரீ பரமேச்வரனின் அம்சம் என்று கூறியுள்ளது. ஆகவே தினந் தோறும் மாலையில் ப்ரதோஷகாலத்தில் ஸ்ரீ சிவனையே தர்சனம் செய்ய வேண்டு மென்றும், பிறகுதான் ஸ்ரீ விஷ்ணுவைத் தர்சனம் செய்யவேண்டும் என்றும் கூறிய முனிவர்கள், ஸ்ரீ நரசிம்மஸ்வாமியையும், ஸ்ரீ ராமனையும் ப்ரதோஷ காலத்தில் தர்சனம் செய்யலாம்.

नप्रदोषे हरिं पश्येत् नृसिंहं राघवं विना ।

நப்ரதோஷே ஹரிம்பச்யேத் ந்ருஸிம்மம்ராகவம் விநா ।

என்று கூறியுள்ளார்கள். இதிலிருந்து ஸ்ரீ பரமேச்வரனும்: ஸ்ரீ ராமனும், ஒன்ருகவே தோன்றுகிறது.

ஸ்ரீ விச்வாமித்ர முனிவர் ஸ்ரீ ராமனையும் ஸ்ரீ லக்ஷ்மணனையும் அழைத்துச் செல்லுமிடத்தில் மனதிற்கெட்டாத தேவஞன ஸ்ரீ பரமேச்வரனை ஸ்ரீ முருகனும் ஸ்ரீ விசாகனும் தொடர்ந்து செல்வதுபோல் இருக்கிறது என,

स्थाणुं देवमिवाचिन्त्यं कुमाराविव पावकी ।

ஸ்தாணும் தேவமிவாசிந்த்யம் குமாராவிவ பாவகீ ।

(பால-ஸ-22-ஸ. 10.)

என்று கூறியுள்ளார். நடுவில் செல்லும் ஜடாதாரியான விச்வாமித்ரரைப் பரமசிவன் போலவும், ஸ்ரீ ராமனையும், ஸ்ரீ லக்ஷ்மணனையும், முருகன், விசாகன் போலவும் வர்ணித் துள்ளதை உணரும்பொழுது பக்தர்களுக்கு ஸ்ரீ பார்வதீகாந்தஞன ஸ்ரீ பரமேச்வர னும் ஸ்ரீ முருகனும், ஸ்ரீ விசாகனும் உள்ளத்தில் காட்சியளிப்பார்கள். அதனுல் சிவபக்தி இல்லாதவர்களுக்கும் இந்தத் தெய்வத்திடத்தில் ஆழ்ந்த பக்தி

உண்டாகும். ஸ்ரீ விச்வாமித்ரர் மேலும் ஸரயூநதியைத் தாண்டுமிடத்தில் ஸரயூ நதியின் வரலாற்றைக் கூறுகிறார்.

कैलासपर्वते राम मनसा निर्मितं सरः ।
वारिसंक्षोभजो राम प्रणामं नियतः कुरु ।
ताभ्यां तु तावुभौ कृत्वा प्रणाममतिधार्मिकौ ॥

கைலாஸ பர்வதே ராம மனஸா நிர்மிதம் ஸர : ।
வாரிஸம் க்ஷோபஜோ ராம ப்ரணாமம் நியத: குரு ।
தாப்யாம்து தாவுபௌக்ருத்வா ப்ரணாம மதிதார்மிகௌ ॥

ஓ ராமா! கைலாச மலையில் ப்ரும்மதேவர் மனதால் ஒரு ஸரஸ்ஸை உண்டு பண்ணினார். அந்த ஸரஸ்ஸிலிருந்து பெருகிவரும் இந்த ஸரயூநதியானது மிகுந்த புண்யத்தை அளிக்கக் கூடியது. ஸ்ரீ சிவனின் வாஸஸ்தானமான கைலாச மலையிலிருந்து ஸரயூநதியும், ஸ்ரீ பரமசிவனின் ஜடையிலிருந்து கங்காநதியும் பெருகி வருவதால் அவைகள் மிக்க புண்ணியமானவைகள். இவ்விரு நதிகளுக்கும் ஒருமைப் பட்ட மனதுடன் நமஸ்காரம் செய், என்று விச்வாமித்திரர், ஸ்ரீ ராமனையும், ஸ்ரீ லக்ஷ்மணனையும் பார்த்துக் கூறினார். தர்மத்தை மிகவும் நம்பின அவ்விருவரும் அந்நதிகளுக்கு நமஸ்காரம் செய்தனர். ஸ்ரீ பரமேச்வரனின் சம்பந்தத்தால்தான் அவ்விரு நதிகளும் பாபத்தைப்போக்கிப் புண்ணியத்தை அளிக்கின்றன என முனிவரின் எண்ணம் வெளியாகிறது.

மேலும்,

द्वात्रिंशच्चसहस्राणि वर्षाणि सुमहायशाः ।
तपोवनं गतो राम स्वर्गं लेभे तपोधनः ॥

த்வாத்ரிம்சச்ச ஸஹஸ்ராணி வர்ஷாணி ஸுமஹாயசா: ।
தபோவநம் கதோ ராம ஸ்வர்கம் லேபேதபோ தந: ॥ பா-ஸ்.42 சு. 4.

பூலோகத்தில் கங்கையை வரவழைக்க வேண்டி அம்சுமான் என்ற அரசன் ப்ரும்மதேவனைக் குறித்து முப்பத்து இரண்டாயிரம் வருஷம் தவம் செய்தான். அவ்விதம் பகீரதன் என்ற அரசனும் கோகர்ண க்ஷேத்திரத்தில் தவம்செய்தான் என்றும் முனிவர் கூறியுள்ளார். நீண்டகாலம் என்றதால் முப்பத்து இரண்டாயிரத்திற்குமேல் பலகாலம் தவன் செய்திருக்கிறான் என வெளியாகிறது, மற்ற தெய்வங்களைக் குறித்துத் தவம் செய்தான் என்று கூறுமிடங்களில் பல ஆயிரம் வருஷங்கள் என்று கூறப்படுவதைப் புராணங்களில் காண்கிறோம் ஆனால்பரமேச்வரனைக்குறித்துத் தவம் செய்ததைக் கூறுமிடத்தில் குறைந்த காலங்களே கூறப்படுவதால் ஸ்ரீ பரமேச்வரன் ஸ்வல்பத்தில் சந்தோஷ மடைகிறான் எனத் தெரியவருகிறது. அதையே பல வருஷங்கள் ப்ரும்ம தேவனைக் குறித்துத் தவம் செய்யும் பகீரதனைப்பார்த்து "உன் விருப்பப்படி கங்கை, ஆகாசத்திலிருந்து நேராக பூமிக்கு வருவதானால், மிக்க கஷ்டம். ஆகவே வேகத்துடன் வரும் அந்த கங்கையைத் தாங்குவதற்கு (தாங்கி விடுவதற்கு)ப்

பரமசிவன் ஒருவனே சக்தியுள்ளவன் சூலபாணியான ; சிவனைத் தவிர வேறு ஒருவரா லும் அந்தக் கங்கையைத் தாங்கமுடியாது, என நான் அறிவேன்.

तां वै धारयितुं शक्तः हरस्तत्र नियुज्यताम् ।
तां वै धारयितुं वीर नान्यं पश्यामि शूलिनः ॥

தாம் வை தாரயிதும் சக்த: ஹரஸ்தத்ர நியுஜ்யதாம் |
தாம் வை தாரயிதும் விர நாந்யம் பச்யாமி சூலின : ||

என்று கூறியுள்ளார்.

அவ்விதமே பகீரதன் ஒருவருஷ காலமே தவம் செய்தான். உடனேயே ஸ்ரீ பரம சிவன் அருள்புரிந்தான்.

अथ संवत्सरे पूर्णे सर्वलोकनमस्कृतः ।
उमापतिः पशुपतिः राजानमिदमब्रवीत् ।
प्रीतस्तेऽहं नरश्रेष्ठ करिष्यामि तवप्रियम् ॥

அதஸம்வத்ஸரே பூர்ணே ஸர்வ லோக நமஸ்க்ருத : |
உமாபதி : பசுபதி : ராஜான மிதமப்ரவீத் |
ப்ரீதஸ்தேஹம் நரச்ரேஷ்ட கரிஷ்யாமிதவப்ப்ரியம் | |

எல்லா உலகங்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவரும் உமாதேவியின் பதியுமான ஸ்ரீ பசுபதியானவர், அந்த பகீரதனைப் பார்த்து "ஓ அரசனே உன் தவத்தால் நான் சந்தோஷமடைந்தேன். நீ விரும்பியதை அளிக்கிறேன்" என்று அன்புடன் கூறுகிறார். இதிலிருந்து பரமசிவனின் கருணை வெளியாகிறது. ஆகவே ஸ்ரீ பரமேச் வரனை आशुतोषी (ஆசுதோஷி) சீக்கிரத்தில் சந்தோஷமடைகிறவன்; சிறிய பொரு ளால் சந்தோஷமடைகிறவன்; என்றெல்லாம் முனிவர்கள் அழைக்கின்றனர்.

மேலும்,

आकाशादपतद्राम शिवे शिवशिरस्युत ।

ஆகாசாதபதத்ராம சிவே சிவ சிரஸ்யுத |

ஓ ராமா, ஆகாசத்திலிருந்து கங்கை கீழே விழும்பொழுது மங்களகரமான பரமசிவன் தலையில் விழுந்தது எனக் கூறியுள்ளார்.

இதனால் பரமசிவனது சிரஸ், ஜடை முதலிய எல்லாம் மங்களத்தை அளிக்கும் என்ற முனிவரின் அபிப்பிராயமும் வெளியாகிறது.

அவ்விதம் விழுந்த கங்கையைத் தேவர்கள் முனிவர்கள் கந்தர்வர்கள் பூமியில் வசிக்கும் மனிதர்கள் முதலிய யாவரும் ஸ்ரீ பரமசிவனின் ஜடையிலிருந்து விழுந்ததால் இது மிக்க பரிசுத்தமானது என அதில் ஸ்நானம் செய்தார்கள்.

இராமாயணத்தில்

तत्र देवर्षिगन्धर्वाः वसुधातलवासिनः ।
भवांगपतितं तोयं पवित्रमिति पस्पृशुः ॥

தத்ர தேவர்ஷிகந்தர்வா: வஸுதாதலவாஸிந: l
பவாங்கபதிதம் தோயம்பவித்ரமிதிபஸ்ப்ருசு: ll

மேலும் ஸ்வர்க்கத்திலிருந்து சாபத்தால் பூமியில் விழ்ந்தவர்களும் இந்த கங்கையில் ஸ்நானம் செய்து பாபம் நீங்கினவர்களாய்ப் பரிசுத்தர்களாகி மீண்டும் ஆகாசத்திற்குச் சென்று தம் தம் லோகத்திற்குச் சென்றார்கள். அந்தச் சுத்தமான கங்கையில் உலகம் முழுவதுமே ஸ்நானம் செய்து கவலை நீங்கி சந்தோஷமாய்க் காணப்பட்டது.

शापात्प्रपतिताये च गगनात् वसुधातलम् ।
कृत्वा तत्राभिषेकं ते बभूवुर्गतकल्मषाः ॥
धूतपापाः पुनस्तेन तोयेनाथ सुभास्वता ।
पुनराकाशमाविश्य स्वांल्लोकान् प्रतिपेदिरे ॥
मुमुदे मुदितो लोकः तेन तोयेन भास्वता ।
कृताभिषेको गंगायां बभूव विगतक्लमः ॥

சாபாத் ப்ரபதிதாயேச ககனாத் வஸுதாதலம் l
க்ருத்வா தத்ராபிஷேகம்தே பபூவுர் கதகல்மஷா: ll
தூதபாபா: புனஸ்தேந தோயேநாத ஸுபாஸ்வதா l
புநராகாசமாவிச்ய ஸ்வாம்லோகான் ப்ரதிபேதிரே ll
முமுதே முதிதோ லோக: தேந தோயேந பாஸ்வதா l
க்ருதாபிஷேகோ கங்காயாம் பபூவ விகத க்லம: ll

என்று கூறியுள்ளார்.

மேலும் விச்வாமித்ர முனிவர் வஸிஷ்டரிடம் தோல்வியுற்று ஜயத்தையும், மேன்மையையும் அடையவேண்டி இமயமலை யடிவாரம் சென்று ஸ்ரீ மகாதேவனின் ப்ரசாதத்தை வேண்டித் தவம் செய்தார். சிறிது காலத்திலேயே வ்ருஷபக்கொடி கொண்ட ஸ்ரீ பரமேச்வரன் மிக்க பலமுள்ள விச்வாமித்ரமுனிவரின் முன் வரங்களை அளிப்பதற்காகத் தோன்றினர். நீ விரும்பும் வரங்களைக் கேள் என்று கூறிய ஸ்ரீ பரமேச்வரனை நோக்கி விச்வாமித்திரர்,

यदि तुष्टो महादेव धनुर्वेदो ममानघ ।
साङ्गोपाङ्गोपनिषदः सरहस्यः प्रदीयताम् ॥
यानिदेवेषु चास्त्राणि दानवेषु महर्षिषु ।
गन्धर्वयक्षरक्षस्सु प्रतिभान्तु ममानघ ॥

तव प्रसादाद्भवतु देवदेव ममेप्सितम् ।
एवमस्त्विति देवेशः वाक्यमुक्त्वा गतस्तदा ॥

யதிதுஷ்டோ மஹாதேவ தநுர்வேதோ மமாநக l
ஸாங்கோபாங்கோபநிஷத: ஸரஹஸ்ய: ப்ரதியதாம் ll
யாநிதேவேஷு சாஸ்த்ராணி தாநவேஷு மஹர்ஷிஷு l
கந்தர்வயக்ஷ ரக்ஷஸ்ஸு ப்ரதிபாந்து மமாநக ll
தவப்ரஸாதாத்பவது தேவதேவ மமேப்ஸிதம் l
ஏவமஸ்த்விதிதேவேச: வாக்யமுக்த்வா கதஸ்ததா ll

ஹே மஹாதேவ! தாங்கள் சந்தோஷம் கொண்டீரானல் அங்கம், உபாங்கம், ரஹஸ்யமான மந்திரங்கள் உட்கருத்துடன் கூடியவைகளுமான தனுர்வேதத்தை (வில்வித்தையை) அளிக்கவேண்டும்.

மேலும் தேவர்கள், அசுரர்கள், மஹரிஷிகள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள் இவர்களிடத்தில் உள்ள அஸ்திரங்களும் எனக்குத் தோன்றவேண்டும் என்றும் வேண்டினர். ஸ்ரீ பரமேச்வரரும் அவ்விதமே ஆகட்டுமெனக் கூறி அருள் புரிந்தார். இதிலிருந்து ஸ்ரீ பரமசிவனைச் சிறிது காலத்திலேயே திருப்தி செய்து வைத்து அருளை அடையலாம் என்பது வெளியாகிறது.

ஸ்ரீ பரமேச்வரனின் அருளால்தான் விசுவாமித்ரர் காயத்ரீமஹாமந்திரத்தைக் கண்டுபிடித்த ப்ரும்மரிஷியுமானர். மேலும் ஸ்ரீ ராமன் காட்டிற்குப் புறப்படும்பொழுது தாயான கௌஸல்யை ஆசிர்வதித்து முடிவில்,

मयार्चिता देवगणाः शिवादयः महर्षयो भूतमहासुरोरगाः ।
अभिप्रयातस्य वनं चिरायते हितानि काङ्क्षन्तु दिशश्च राघव ॥

ஸ்ரீ பரமசிவன் முதலிய பல தேவர்களையும், மஹரிஷிகளையும் பூஜித்திருக்கிறேன். அதன்பயனுக அவர்கள் காட்டில் உனக்கு நன்மைகளை அளிக்கட்டும் என்று கண்ணில் நீர் ததும்பிக் கூறினுள். இதிலிருந்து கௌஸல்யை சிவாராதனம் செய்து வந்திருக்கிருள் என்பதும், காடு முதலிய பயங்கரமான பாதைகளில் செல்கிறவர்களுக்கு ஸ்ரீ பரமேச்வரரே நன்மைகளையும், மங்களங்களையும் அளிக்கவல்லவர் என்பதும் தெளிவாகின்றன. இதனுலேயே ஸ்ரீ பரமேச்வரனின் அம்சாவதாரமான ஸ்ரீ அப்பய்யதீக்ஷிதர் நடுவழியில் செல்லும்பொழுது பயங்களைப் போக்கும் மார்க்கபந்து ஸ்தோத்ரம் என்ற ஒரு ஸ்தோத்திரத்தை எழுதினுர்.

மேலும் ஆரண்யகாண்டத்தில் ஸ்ரீ ராமன், ஸ்ரீ லக்ஷ்மணன், ஸ்ரீ ஸீதை முதலியவர்கள் கோதாவரியில் ஸ்நானம் செய்து ஜபம் செய்துகொண்டு விளங்குவதைக் கண்டு ஸ்ரீ பகவானை ஸ்ரீ பரமேச்வரன் பார்வதியுடனும், நந்தியுடனும் விளங்குவதுபோன்று இருக்கிறது என்று

இராமாயணத்தில்

कृताभिषेकः स रराज रामः सीताद्वितीयः सह लक्ष्मणेन ।
कृताभिषेको गिरिराजपुत्र्या रुद्रः सनन्दी भगवानिवेशः ॥

க்ருதாபிஷேகஸ் ஸரராஜ ராம: ஸிதாத்விதீயஸ் ஸஹலக்ஷ்மணேந ।
க்ருதாபிஷேகோ கிரிராஜபுத்ர்யாருத்ரஸ் ஸநந்தீ பகவாநிவேச: ॥

இந்த ச்லோகத்தைப் படிக்கும் கேட்கும் நமக்கு கைலாசத்திலுள்ள அந்தத் தெய்வங்களைப் பார்ப்பதுபோன்றே தோன்றுகிறது. மேலும் கரனை வதம் செய்வதற்காக ஸ்ரீ ராமன் கவசம் தரித்து வீர ராகவனாக விளங்கும் ரூபத்தைத் தக்ஷனின் யாகத்தை அழிக்க முற்பட்ட பினாகியான ஸ்ரீ ருத்ரனின் ரூபம்போல் விளங்குவதாய்க் கூறியுள்ளார்.

तस्य क्रुद्धस्य रूपं तु रामस्य ददृशे तदा ।
दक्षस्येव क्रतुं हन्तुं उद्यतस्य पिनाकिनः ॥

தஸ்யக் ருத்தஸ்ய ரூபம்து ராமஸ்ய தத்ருசே ததா ।
தக்ஷஸ்யேவ க்ரதும் ஹந்தும் உத்யதஸ்ய பினாகிந: ॥

இன்னும் ஸ்ரீ ராமனது அம்பின் அக்னியால் தாபமடைந்த கரன் திருவெண்காடு என்னும் க்ஷேத்திரத்தில் பரமசிவனால் தபிக்கச்செய்து காலால் உதைக்கப்பட்ட யமன்போல் விழுந்தான் என்று

सपपात खरो भूमौ दह्यमानः शराग्निना ।
रुद्रेणेवविनिर्दग्धः श्वेतारण्ये यथान्तकः ॥

ஸபபாத கரோ பூமௌ தஹ்யமானச்சராக்னினா ।
ருத்ரேணேவவிநிர்தக்த: ச்வேதாரண்யே யதாந்தக: ॥

என்றும் கூறியுள்ளது. இவ்விதம் எங்கும் ஸ்ரீ பரமசிவனையே உவமையாகக் கூறுவதால் ஸ்ரீ வால்மீகி முனிவருக்குள்ள சிவபக்தி வெளியாகிறது.

மற்றும் யுத்தகாண்டத்தில் ஸ்ரீ ராமன் ஸம்மோஹனாஸ்திரத்தை ப்ரயோகம் செய்து பல இராக்ஷஸர்களை அழித்துவிட்டு சுக்ரீவன் முதலியவர்களைப் பார்த்துச் சிறந்த இந்தத் திவ்யாஸ்திரமானது என்னிடத்திலும் முக்கண்ணனான ஸ்ரீ பரமேச்வரனிடத்திலும்தான் உள்ளது.

एतदस्त्रबलं दिव्यं मम वा त्र्यंबकस्य वा ।

ஏததஸ்த்ரபலம் திவ்யம் மமவாத்ர்யம்பகஸ்யவா ।

எனக் கூறியுள்ளார்.

இதனால் ஸ்ரீ ராமனும் ஸ்ரீ பரமேஸ்வரனும் ஒரே மூர்த்தி என்பது தெரிகிறது.

மேலும் இராவண வதம் ஆனதும் ஸ்ரீமானும், வ்ருஷபத்வஜனும், முக்கண்ணனுமான ஸ்ரீ மகாதேவன், ப்ரும்மா முதலியவர்களும் ஸ்ரீ ராமனைக் காண இலங்கைக்கு வந்தார்கள்.

षडर्धनयनः श्रीमान् महादेवो वृषध्वजः ॥

ஷடர்த்த நயன: ஸ்ரீமான் மஹாதேவோ வ்ருஷத்வஜ: ।

ப்ரும்மதேவர் ராவணவதம் ஆகிவிட்டது, தாங்கள் வைகுண்டம் வாருங்கள் என ஸ்ரீ ராமனை அழைத்தார். ஆனால் ஸ்ரீ பரமேஸ்வரரோவெனில், ஸ்ரீ ராமனை அழைத்து உன்னால் ஸத்யஸந்தனாகச் செய்யப்பட்டு ஸ்வர்க்கத்திற்குச் சென்ற உன் தந்தையான தசரதன் விமானத்தில் வீற்றிருக்கிறார். இவரை நீ லக்ஷ்மணனுடன் நமஸ்காரம் செய் என்றார்.

एष राजा विमानस्थः पिता दशरथस्तव ।
काकुत्स्थ मानुषे लोके गुरुस्तव महायशाः ॥
इन्द्रलोकं गतः श्रीमान् त्वया पुत्रेण तारितः ।
लक्ष्मणेन सह भ्रात्रा त्वमेनमभिवादय ॥

ஏஷராஜா விமானஸ்த: பிதா தசரதஸ்தவ ।
காகுத்ஸ்த மானுஷேலோகே குருஸ்தவ மஹாயசா: ॥
இந்த்ரலோகம்கத: ஸ்ரீமாந் த்வயா புத்ரேண தாரித: ।
லக்ஷ்மணேன ஸஹப்ராத்ரா த்வமேன மபிவாதய ॥

ப்ரும்மதேவர் ராவண வதம் ஆனஉடனேயே ஸ்ரீ ராமனை வைகுண்டத்திற்கு வரவேண்டுமென்று அழைத்தார். ஆனால் ஸ்ரீ பரமேச்வரரோவெனில், ஏ ராமா, ராவணனால் எல்லா உலகிற்கும் ஏற்பட்ட பயமானது உன்னாலேயே நீங்கியது. நீ தீனனான பரதனையும் கீர்த்திவாய்ந்த கௌஸல்யையையும், கைகேயியையும், லக்ஷ்மணனின் தாயாரான ஸுமித்ரையையும் பார்த்து ஸமாதானம் செய்து, இராஜ்யத்தையும் அடைந்து அயோத்தியில் வஸித்துக்கொண்டு ஸ்நேகித ஜனங்களைச் சந்தோஷிக்கச் செய்து இக்ஷ்வாகு குலத்தை மேலும் மேலும் வளரச்செய்யவேண்டும். பிறகு அசுவமேதயாகம் செய்து சிறந்த கீர்த்தியை அடைந்து, வேதமறிந்தவர்களுக்கு நிறையப் பொருள்களை வழங்கிவிட்டுத் தேவலோகத்திற்கு வரவேண்டும் என்றார்.

आश्वास्य भरतं दीनं कौसल्यां च यशस्विनीम् ।
कैकेयीं च सुमित्रां च दृष्ट्वा लक्ष्मणमातरम् ॥
प्राप्य राज्यमयोध्यायां नन्दयित्वा सुहृज्जनम् ।
इक्ष्वाकूणां कुलेवंशं स्थापयित्वा महाबले ॥
इष्ट्वा तुरगमेधेन प्राप्य चानुत्तमं यशः ।
ब्राह्मणेभ्यो धनं दत्वा त्रिदिवं गन्तुमर्हसि ॥

இராமாயணத்தில்

ஆச்வாஸ்ய பரதம்தீனம் கௌஸல்யாம் சயசஸ்விநீம் ।
கைகேயிம்ச ஸுமித்ராம்ச த்ருஷ்ட்வா லக்ஷ்மணமாதரம் ॥
ப்ராப்யராஜ்ய மயோத்யாயாம் நந்தயித்வா ஸுஹ்ருஜ்ஜனம் ।
இக்ஷ்வாகூணும் குலேவம்சம் ஸ்தாபயித்வா மஹாபல ॥
இஷ்ட்வாது ரகமேதேன ப்ராப்யசாநுத்தமம் யச: ।
ப்ராம்மணே ப்யோதனம் தத்வா த்ரிதிவம் கந்துமர்ஹஸி ॥

இதிலிருந்து ஸ்ரீ பரமேச்வரனுடைய காருண்யம் வெளியாகிறது, மேலும் ஸ்ரீராமன் காட்டிற்குப் புறப்பட்டுப் போகும்பொழுது தந்தையான தசரதனிடம், இந்த வ்ரதத்தை முடித்துக்கொண்டு, மீண்டும் திருப்பி அயோத்திக்குவந்து, தங்களுக்கு நமஸ்காரம் செய்கிறேன் என்று கூறிவந்தார். அதை ஸத்யமாகச் செய்வதற்கும் ஸ்ரீ பரமேச்வரர், தசரதனைக் காண்பித்து ஸ்ரீராமனை நமஸ்காரம் செய்யும்படி சொன்னார். மேலும் சீதையை அழைத்துக்கொண்டு விமானத்தில் அயோத்திக்கு ஸ்ரீராமன் திரும்பிவரும்பொழுது ஒவ்வோர் இடத்தையும் சீதைக்குக் காண்பித்து, அதன் விபரங்களைக் கூறிவருகிறார். அவ்விதம் சேதுவைத் தாண்டிவந்ததும், இங்குதான், முன்பு நானும் லக்ஷ்மணனும் ஸ்ரீ பரமேச்வரனைப் பூஜை செய்தோம், ஸ்ரீ மஹாதேவனான பரமேச்வரன் அருள்புரிந்தார் என்று சொன்னார்.

अत्र पूर्वं महादेवः प्रसादमकरोत्प्रभुः ।

அத்ரபூர்வம் மஹாதேவ: ப்ரஸாத மகரோத் ப்ரபு: |

ராமேச்வரத்தில்தான் ஸ்ரீராமன் ப்ரதிஷ்டை செய்து பூஜித்த ஸ்ரீ பரமேச்வரர் விளங்குகிறார். இவரையே ஸ்ரீராமநாதன் என அழைக்கிறார்கள். இம்மூர்த்தியைத் தரிசிப்பதற்காகவே ஸேதுயாத்திரை செய்து புத்ரலாபம் முதலிய க்ஷேமங்களை அடைந்து வருகிறார்கள்.

ஸ்ரீராமன் பரத்வாஜாச்ரமத்திற்கு வந்ததும் ஸ்ரீ பரத்வாஜ முனிவரின் ஆக்ஞையின்பேரில் அங்குத் தங்குகிறார். அதுஸமயம் பரதனுக்கு ஹனுமாரிடம் க்ஷேம ஸமாசாரம் சொல்லியனுப்பும்பொழுது ஸ்ரீ மஹாதேவனான ஸ்ரீ பரமேச்வரனின் அருளால், தந்தையான ஸ்ரீ தசரத மகாராஜாவைத் தரிசித்து நமஸ்கரித்தேன். அயோத்திக்கும் ஜயத்துடன் திரும்புகிறேன் என்று கூறும்படி சொன்னார்

महादेवप्रसादाच्च पित्रा मम समागमम् ।
उपयातं च मां सौम्य भरतस्य निवेदय ॥

மஹாதேவ ப்ரஸாதாச்ச பித்ராமம ஸமாகமம் |
உபயாதம் சமாம் ஸௌம்ய பரதஸ்ய நிவேதய | யு-கா-128-9.

ஸ்ரீ வால்மீகி முனிவர் ஸ்ரீ பரமேச்வரனைக் குறிக்குமிடத்திலெல்லாம் ஸ்ரீ மஹாதேவன் என்றே சொல்கிறார். இதையே முனிவர்கள் மஹாதேவ, என்று கூறுவதால்

கோடிப்ரும்மஹத்தி தோஷம் விலகுமென்றும், அகம்யாகமன (கோடிக்கெட்டாச்செயல் களால் ஏற்படும்) பாபங்களும் விலகுமென்றும் கூறியுள்ளார்கள்.

कोटयो ब्रह्महत्यानां अगम्यागमकोटयः ।
सद्यः प्रलयमायान्ति महादेवेतिकीर्तनात् ॥

கோடயோ ப்ரும்மஹத்யானும் அகம்யா கமகோடய : |
ஸத்ய : ப்ரளய மாயாந்தி மஹாதேவேதி கீர்த்தனத் | |

இவ்விதமெல்லாம் ஸ்ரீ வால்மீகி முனிவர் ஸ்ரீமத் ராமாயணத்தில் பல இடங்களில், ஸ்ரீ பரசிவனின் மகிமையைக் கூறுவதோடு ஸ்ரீ ராமனின் சிறந்த குணங்களை வர்ணிக்கு மிடத்திலெல்லாம் ஸ்ரீ பரமேச்வரனையே உவமையாகவும் கூறுகிறுர். இவ்வாறு கூறுவதற்கும் ஸ்ரீ பரமேச்வரனின் கருணை தான் காரணம். ஆகவே,

एकं च बिल्वं सलिलं च किंचित् समर्पणं शंकरमूर्ध्नि भक्त्या ।
अमन्त्रकं वापि समन्त्रकं वा सवंशकोट्या शिवलोकमेति ॥

ஏகம்சபில்வம் ஸலிலம்சகிஞ்சித் ஸமர்ப்பணம் சங்கரமூர்த்னி பக்த்யா i
அமந்த்ரகம் வாபி ஸமந்த்ரகம்வா ஸவம்சகோட்யா சிவயோகமேதி ii

ஒரு பில்வ தளத்தையோ, சிறிது ஜலத்தையோ. ஸ்ரீ பரமேச்வரனுடைய தலையில் மந்திரம் இல்லாமலோ, மந்திரம் சொல்லியோ, அர்ப்பணம் செய்வானேயாகில். அவன்கோடித் தலைமுறை கைலாசத்திற்குச் செல்வான் என்று கூறுகிறுர். இப்படிக் கருணமூர்த்தியாய் விளங்கும் ஸ்ரீ பரமேச்வரனின் அருளுக்குப் பாத்திரர்களாகும்படிக் கோருகிறேன்.



# சிவபுராணச் சிறப்பு

ஸ்ரீவத்ஸ. வெ. சோமதேவ சர்மா

ஆதிகர்த்தா :- கடல்போலக் கரையில்லாதது சிவமஹிமை! அதைவிளக்கச் சிவனையன்றி வேறு எவரால் முடியும்? தன்னையன்றி வேறு ஒருவரும் கூற முடியாமையைக் கண்டார் கைலாஸ நாதர். எண்ணிலடங்கா மஹிமையைப் பக்தர்கள் கருத்திலே எண்ணுவதற்காக ஒரு லக்ஷம் சுலோகங்கள் உள்ள சிவ புராணத்தைச் சிவபெருமானே அருளினார். அது பன்னிரண்டு ஸம்ஹிதா வடிவமானது. அது முற்றிலும் கிடைக்கவில்லை. வேதம் வகுத்த முனிவர் அதை இருபத்துநான்கு ஆயிரம் சுலோகங்களாக அமைத்தார். வேத சாரமான காயத்ரியின் பொருள் சிவனே ஆதலின் காயத்ரியின் அக்ஷரக் கணக்கைக் கொண்டு அங்ஙனம் அமைத்தார் போலும். அவைகளை ஏழு சம்ஹிதையில் அடக்கினார். அதுவே அச்சிடப்பட்டுள்ளது. (1) வித்யேச்வர ஸம்ஹிதை (2) உருத்திர ஸம்ஹிதை (இதனுள் சிருஷ்டி கண்டம், சதீ கண்டம், பார்வதி கண்டம், குமார கண்டம், யுத்த கண்டம் என ஐந்து கண்டங்கள் உள) (3) சதருத்திர ஸம்ஹிதை (4) கோடிருத்திர ஸம்ஹிதை (5) உமா ஸம்ஹிதை (6) கைலாஸ ஸம்ஹிதை (7) வாயவிய ஸம்ஹிதை (இதில் பூர்வ கண்டம், உத்தர கண்டமென இரு பிரிவுகள் உண்டு.)

மறுபெயர்:- சிவபுராணத்தை வாயு புராணம் எனவுங் கூறுவார் உண்டு. கல்கத்தாநகர் ஏஷியாடிக் சங்கம் வாயு புராணம் என்ற பெயரால் சிவபுராணமொன்றை வெளியிட்டது. பம்பாயில் ஸ்ரீ வெங்கடேச ஸ்டீம் அச்சகத்தார் சிவ புராணம் ஒன்றை இரு பாகங்களாகவும், வாயுபுராணம் என்ற பெயரால் மற்றொன்றையும் வெளியிட்டிருக்கிறார்கள். பின்னது பெரும்பாலும் முன்னதையே தழுவியுள்ளது. மிகச் சிறிதளவே இரண்டிலும் மாறுபாடுகாணப்படுகிறது. வேத முனிவர் பதினெண் புராணங்களில் பன்னிரண்டு புராணங்களில் பதினெண் புராணங்களின் பெயர் கூறப்படுகிறது. அதில் ஒன்பது புராணங்களில் சிவ புராணமென்றும், மூன்று புராணங்களில் வாயு புராணமென்றும் உள்ளது. சிவ பெருமானது சிறப்பைக் கூறுவதால் சிவபுராணமென்றும், சிவமஹிமை வாயுவால் வர்ணிக்கப்படுவதால் வாயுபுராணமென்றும் கூறப்படுகிறது.

அருவும் உருவும்:- ஐயனார் முதல் ஐயன் வரை பற்பல தேவ உருவங்களைக் காண்கிறோம். சிவனைத் தவிர எவரும் லிங்க வடிவமாகக் காணப்படவில்லை. சிவன் ஒருவரே லிங்க ஸ்வரூபியாக விளங்குகிறார். அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்தவன் சிவனே. அவனன்றி வேறு ஒன்றும் இல்லாததால் அத்வைதமென்பர். அத்வைதிகளோ ஓர் உருவும் ஓர் நாமமுமில்லாதது பரம்பொருள். உருவெனில் அது கல்பிதமாம். கல்பிதம் அழிந்தே தீரும் எனக் கூறுவார்கள். இதை, சகுண நிர்க்குணமென்றும் கூறுவாருண்டு. பக்தர் பலரும் சிவனை " அருவாய், உருவாய் " எனப் போற்று

கின்றனர். உரு அருவாகாது. அரு உருவாகாது. இந்தச் சிக்கை அறுத்து விளக்குவது சிவபுராணம். சிவபெருமானுக்கு மாத்திரம் லிங்கமிருக்கக் காரணம் என்ன? இதைவிளக்கும்போது அருவாயும் உருவாயும் உள்ளவர் பரமன். மற்றவர் பரமாத்மா அல்லாததால் லிங்கம் அவர்களுக்கு இல்லை. உருமாத்திரமே உண்டு. லிங்கமும் கரசரணம் முதலிய உருவின்றி இருப்பதால் அது அருவாகும். ஸ்தாணு, ஒரு தூண்போல் காணப்படுவதால் உருவுமாகும். வாக்கு உருவில்லாதது. பொருள் உருவுள்ளது. ஆதலால் வாக்கும் பொருளும்போல் இருக்கிறார்கள் சிவனும் சக்தியும் என சிவபுராணம் வர்ணிக்கின்றது.

பிக்ஷைதரும் புராணம் :- வடமொழியிலே காளிதாஸன் பெயரே கவி உலகில் முதலில் கணக்கிடப்படும். அவனியற்றிய சிறந்த ரகுவம்சம், குமார சம்பவம் முதலிய நூல்களிலே சிவ புராண ஸ்லோகங்களைத் தழுவிப் பெரும் பெயர் பெற்றான். ரகுவம்ஸத்தின் மங்களஸ்லோகமே சிவபுராண ஸ்லோகமாகும். சொல்லையும், கருத்தையும், உவமையையும், சிவபுராணத்திலிருந்து பிக்ஷை வாங்கினார் என்பது மிகப் பொருத்தமானது. 'வாகர்த்தா விவ ஸம்பிருக்தௌ' என்ற சிவ புராண சுலோகத்தைத் தனது நூல் நன்கு பூர்த்தி பெறவும் தான் கீர்த்தி பெறவும் முதல் சுலோக முதலடியாக அமைத்துக்கொண்டான் சிவ பக்தன். அதேபோல் குமார சப்பவ நூலிலும் "அஸ்த்யுத்தரஸ்யாம் திசி தேவதாத்மா" என்பதை முதல் சுலோகத்தின் முதல் பாதமாகக் கொண்டான். உமையவளின் தந்தையைப் பற்றிக் கவி கூறுவதெல்லாம் சிவபுராணந் தந்த பிக்ஷையே! பூமியை அளக்கும் சஜங்கோல் இமயம்! கிழக்கு மேற்குக் கடல்களிலும் இடம் பெற்றது இமயம்! என்பது போன்ற பல பாதங்களையும் பதங்களையும் எடுத்தாளுகிறான். பர்த்ருஹரி, பாரவி முதலிய கவிகளும் இங்ஙனமே சிவபுராணத்தையே கவிதைக்குப் புஷ்டியளிக்கும் உணவாகக் கொண்டனர்.

அரிய கதைகள் : வேதமும் புராணமும் பல கதைகளைக் கூறும். கதை உடல்! தர்மம் உயிர்!! காதுக்கினிய கதைகளை வியாஜமாகக்கொண்டு அரிய பெரிய பல தர்மங்களைக் கூறுகிறது சிவ புராணம். சிவனது சித்தம்போல் காரியம் நடக்கும் என்ற தத்துவம்; நாரதர் குரங்காகித் தவித்து ஸ்ரீ புரத்தில் ஸ்ரீ மதியை மணக்க முயன்ற கதை மூலம் வெளியிடப்படுகிறது. பாமர மக்களைப் பரவசப்படுத்தி உள்ளே சிவ தத்துவத்தை உபதேசிக்கின்றது இப் புராணம். நதி தீரத்திலே வஸ்த்ர மிழந்த துர்வாஸருக்கு வஸ்த்ரமளித்ததால் திரௌபதியின் மானம் காக்கப் பட்டது என்ற சுவை நிறைந்த கதை வஸ்த்ரதான மஹிமையை விளக்குகிறது. பார்வதி பரிணயக்கதை, பாதிவிரத்திய பெருமையை எடுத்துக் காட்டுகிறது. அருந்ததி ஆசாரமின்றி சிவபூஜை செய்தமையால் சக்கிலி என்னும் வகுப்பில் பிறந்தாள். அக்னிப் பிரவேசம் செய்வித்து அவளை ஏற்றார் வசிஷ்டர் என்ற கதை சிவாபசாரத்தால் தோன்றும் கஷ்டத்தைக் காட்டுகிறது. அக்னி வடிவமான சிவனுல் சுத்தி என எண்பிக்கிறது. நரசிம்மாவதாரத்தில் தோன்றிய உக்கிரத்தை அடக்க சரபாவதாரம் செய்த கதையை இங்கு விரிவாகக் காணலாம். காணாததைக் கோனத்தில் காணலாம் என்ற பழமொழியை விளக்கும்

கதை இங்கு உள்ளது. நந்திதேவரின் அவதாரம், அவரது பக்தி, அவரது திருமணம் இதன் உத்தரபாகத்தில் கூறப்பட்டுள்ளது. இந்த ஐதிஹ்யங்கள் பல நமது ஆதீன ஆலயங்களில் அமையப் பெற்றுள்ளன.

மிக நுட்பமான தத்துவம் :- ஓங்காரத்தில் ஒடுங்கும் சகல மந்திரங்களும் அந்தப் பிரணவத்தை உடலால் ஜபம் செய்வதே பிரதக்ஷிணம் செய்வதாகும். வலம் வரும்போது ஓங்காரம் எழுவது போல் உடல் வலம் வருகிறது. விரலால் எழுத்து வடிவமாக எழுதுவதைவிடவும், வாக்கால் ஜபிப்பதை விடவும் அங்க மனைத்தாலும் பிரணவமமைப்பது மிகச் சிறந்த பலனைத்தரும். நூற்றெட்டுப் பிரதக்ஷிணம் பிரதி தினமும் செய்தால் ஸகல பாபங்களும் அகலும். ஸர்வ சித்திகளும் உண்டாகும்.

பூஜா என்பதின் பொருள் :- 'பூ' எனில் புவனத்தில் கிடைக்கக்கூடிய போக பாக்கிய ஸித்திகள் 'ஜா' எனில் அவைகளை உண்டுபண்ணுவது எனப் பொருள். பூமியில் சகலவிதமான போக பாக்கியங்களையும் உண்டு பண்ணுவது என்பது பூஜா என்னும் சொல்லிலேயே அமைந்துளது. பூஜையின் பெருமையை அச்சொல்லே கூறுகிறது.

பலி பீடம் :- ஆலயங்களில் சக்கரம் போல் அமைந்த பீடம் துவஜஸ்தம்பத்தருகே இருக்கும். அது சிவமாயை. அங்கே பணிந்து ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்தல் அஹந்தையைப் பலியிடுவதாகும்.

கூடுவிட்டுக் கூடு பாய்தல் :- தன்னுடலைவிட்டுப் பிறர் உடலில் பிரவேசிப்பதைப் புராணங்களில் காண்கிறோம். இங்கு அதற்கேற்ற சிவமந்திரம், அதை ஜபிக்கும் முறை, ஸித்திபெறும் முறை முதலியன வர்ணிக்கப்படுகின்றன.

சிவபெருமானைக் காண்பது எப்படி? கட்டையில் தீ இருக்கின்றது. அது கண்ணுக்குப் புலப்படுவதில்லை. அதைக் கடைந்து எடுத்தால் காணலாம். அதே போல் உலகெலாமுள்ள சிவபிரானை உலக வடிவை மறந்து உள்நோக்கி அறிவால் கடைந்தெடுத்தால் காணலாம். மற்றவைகளில் விட லிங்கத்தில் முயற்சிசெய்தால் விரைவில் காணலாம்.

சிவனருள் பெற :- கருணைக்கடல், அன்பு வடிவன் சிவன். பக்தர்களின் துயர்களை ஏன் அகற்றவில்லை? நாம் அதற்குச் சந்நத்தமாகவில்லை! ஸ்வர்ணத்தை உருக்கும் அக்னி, ஸ்வர்ணத்தின் மேல் மண் மூடியிருந்தால் அதை உருக்காது. பக்தி என்னும் நீரால் அஞ்ஞானம் முதலிய மலங்களை அகற்றினல் உனது உள்ளம் உருகும்; இறைவனருள் பெறுவாய்.

சிவாயநம எனச் சிந்தித்திரு

அபாயமொன்றும் தோன்ருது.

சிவாய நம:



# ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரின் இலக்கியவளம்

ஸ்ரீ. ய. மஹாலிங்க சாஸ்திரி எம். ஏ., பி. எல்.,

ஸர்வக்ஞனை ஸ்ரீ பரமேச்வரனின் அம்சமாக அவதாரம் செய்த ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் பண்டிதராயும் கவியாயும் ரஸிகராகவும் இருந்ததில் ஆச்சர்யம் இல்லை. ஸாதாரணமாகப் பண்டிதர்களுக்குக் கவிதையும் ரஸிகத்தன்மையும் அமைவது சுலபமல்ல. காலபரிணமத்தில் பாண்டித்யத்திற்கே வலுகுறைந்து விட்டது. பின்னே செல்லச்செல்ல மூன்று அம்சங்களும் பொருந்திய பண்டிதர்களை ஆங்காங்கு காணலாம். இத்துடன் வேதாத்யயனத்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமானல் வால்மிகி வியாஸர் வரை பின் செல்லவேண்டும். ஐயாயிரம் வருஷங்களாக இந்த க்ஷீண தசை தேய்பிறைச்சந்திரன் போல் நீடித்துவந்து இப்போது அமாவாசைக்கு இரண்டொருதிதிதான் பாக்கி இருக்கிறது. ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் காலத்தில் அதாவது 16 ஆம் நூற்றாண்டில் பல மஹான்கள் நான்கு யோக்யதைகளும் வாய்ந்த சதுர்முக பிரும்மாக்களாக விளங்கினர்கள்.

அவர்களுக்குள் ஒவ்வொரு அம்சத்திலும் மிக மிக அடர்ந்த பரந்த ஒளி பெற்ற அளவற்ற ஞான நிதியாக ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் நக்ஷத்திரங்களுக்கு மத்தியில் பூர்ண சந்திரன் போல் பிரகாசித்தார். அவர்களுடைய வித்யைகள் நான்கு ஸமுத்திரங்கள். அவரை வித்யேச்வரர் என்று வருணிக்கிறார் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர். அவருடைய வித்யையின் பெருமையால் அந்தக்காலத்தில் தெருவில் விளையாடும் பிள்ளைகள் கூட நுட்பமான சாஸ்திர தத்வங்களை அறிந்தார்கள் என்று கூறுகிறார் அந்த மஹாகவி. திரிமூர்த்திகளுக்குச் சந்தேகம் வந்தால் அவரைக் கேட்டுத் தெளிவார்கள் என்கிறார். ஸரஸ்வதி தேவிக்கு காலோடுதலைவரை ஸகல ஆபரணங்களையும் செய்து ஸ்ரீ தீக்ஷிதர் அலங்கரித்தார் என்றும் கூறுகிறார் அக்கவி அரசன்.

பொதுவாகப் புத்தி தீக்ஷண்யத்தைத் துணையாகக்கொண்டு அப்யஸிக்க வேண்டிய சாஸ்திரங்களுக்கும் கற்பனையில் திளைக்கும் பிரதிபாசக்தியினுல் இயற்றப்படும் காவியங்களுக்கும் ஆச்ரயஸ்தானம் ஒன்ருக இருப்பது ஸாத்யமல்ல. கரிக்கட்டை நெருப்பு வேறு. கற்பூர நெருப்பு வேறு. ஆனல் சித்சக்தியின் மஹிமையால் மஹா மனஸ்விகளிடம் இருவிதச் சிறப்புக்களும் ஒருங்கே காணப்படுகின்றன. இதிலும் நரஸிம்ம தத்வம் என்றும் அர்த்தநாரீச்வர தத்வம் என்றும் இருவகையுண்டு. இடையை ஒன்றுபடும் நிலையாக வைத்துக்கொண்டு மேல்பாதி ஸிம்மமும், கீழ்பாதி நரனும் ஆகிறது நரஸிம்மம். மேலே கண், காது, மூக்கு, முகம், மார்பு, புஜங்கள். கீழே தொடைகள் பாதங்கள். அர்த்தநாரீச்வரதத்வத்தில் மேலிருந்து கீழாக குறுக்கே பிரிக்கையில் எல்லா அவயவங்களும் இருபாகங்களுக்கும் உண்டு. பிரிவின்வகை மிருகமும் மனுஷ்யனுமல்ல. ஆணும் பெண்ணும், தீவிரமும் மிருதுத்தன்மையும், உஷ்ணமும் குளிர்ச்சியும், ஆர்வமும் அடக்கமும், கண்டிப்பும் கருணையும், தாண்டவமும் லாஸ்யமும், வீர்யமும் வசீகரமும், சாஸ்திரமும் ஸங்கீதமும், புத்தியும்

பிரதிபையும், பலமும் தெளிவும், முறுக்கும் தளர்ச்சியும், பராக்ரமமும் பணிவும், சூரியனும் சந்திரனும், பழமையும் புதுமையும், சித்தும் ஆனந்தமும், இணைபிரியாத இரட்டை. கலக்குமிடம் புலனாகாது. உண்மையில் இரண்டும் ஒன்றே. ஒன்றில்லாமல் மற்றொன்று ஒருபோதும் தனியே நிற்காது. இல்லையேல் பூர்ணத்வம் கிடையாது. இத்தகைய சிவசக்தியோகத்தை ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரின் வித்யாவிச்வரூப தர்சனத்தில் காண்கிறோம். வியந்து பரவசமாகிறோம்.

பெரிய சாஸ்திரகாரர்களும் மஹாகவிகளும் தத்வத்தை விவேசனம்செய்வதில் தான் ஈடுபடுகிறார்கள். தத்வம் என்பது இருட்டைப் போக்கடிக்கும் வெளிச்சம். சாஸ்திரக்காரர்களுக்கு அது ஸூர்யனைப்போல் உக்ரமான வெளிச்சமாகவும் கவிகளுக்குச் சந்திரனைப்போல் ஆனந்தகரமான வெளிச்சமாகவும் இருக்கிறது. இருவரும் உண்மையைக் கண்டறிந்து வெளியிடும் ஆர்வத்தில் உலக வாழ்க்கையை மறந்தவர்கள். தனக்கென்று எதையும் தேடிக்கொள்ள அவா இல்லாதவர்கள். தாழ்மையையே சீலமாகக் கொண்டவர்கள். அவர்கள் சந்தனக்கட்டைபோல் தேயத் தேய மணத்தை உலகத்திற்கு வீசுபவர்கள். புண்ணிய புருஷர்கள். கீர்த்திவாய்ந்தவர்கள். தேவர்களாலும் போற்றத்தக்கவர்கள். அவர்களை ஸம்ஸாரபந்தங்கள் அதிகம் பாதிக்கமாட்டா. தனக்கு ஆகவேண்டியதைப்பற்றிச் சிந்தனையற்றவர்கள். அற்பமான விஷயங்களில் சிக்கிக்கொள்ளாமல் அப்பாற்பட்டவைகளை அறிவு உணர்ச்சிகளின் வழியே நுகரமுற்பட்டவர்கள். உலகத்தவரின் எதிர்ப்பையோ ஏளனத்தையோ கண்டு தளர்ச்சி அடையாதவர்கள். இடையூறுகளால் மேலும் திடசித்தமுடையவர்களாக முன்னேறுக்குபவர்கள். அந்தராத்மாவின் பிரேரணையால் ஒரு லக்ஷ்யத்தை மேற்கொண்டவர்கள். அவர்கள் ஸத்வகுணத்தின் மேலிட்டால் ரிஷிதுல்யர்கள் ஆவார்கள். அறிவும் உணர்ச்சியும் ஸத்வகுணத்தின் இறக்கைகளின்மேல் ஏறிப்பறந்து செல்லும்போது சித்தாகவும் ஆனந்தமாகவும் மாறிவிடுகின்றன. இந்த நிலைமையை அடைந்த மஹான்கள் ஒரே சமயத்தில் சாஸ்திரகாரர்களாகவும் மஹாகவிகளாகவும் இருப்பதைக் காண்கிறோம். ஸ்ரீ சங்கர பகவத்பாதர் அவர்களும், ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரும் இந்த வகையைச் சேர்ந்தவர்கள்.

அவர்கள் சாஸ்திரதிருஷ்டியினாலும் கவிதையின் உணர்ச்சி வேகத்தினாலும் பரம்பொருள் ஒன்றையே தேடினவர்கள். தத்வத்தின் ஒளியையும் ஆனந்தத்தின் வெள்ளத்தையும் அனுபவத்தில் கண்டவர்கள். அவர்களுக்கு இறுதி உண்மைக்கும் ஆனந்தத்தின் கடைசி உச்சநிலைக்கும் வேறுபடாத அளவுகளைக் கடந்த, எங்கும் நிறைந்த, யாவற்றையும் தன்னுள்ளேயே அடக்கிய, மனோவாக்குக்களுக்கு எட்டாத, சக்திமயமான, ஆற்றலும் கவர்ச்சியும் ஒருங்கே நிரம்பிநிற்கும் நிலையான பரதத்வத்தைப் பற்றியே தவிர வேறு எதைப்பற்றியும் பேசத்தெரியாது. அவர்களின் அனுபவ கோசரமானது அந்த வஸ்துதான்.

இந்த நிலையிலிருந்து பேசுபவர்கள்தான் வேதாந்திகளாயும் கவிகளாயும் இருதோற்றத்தில் காட்சி அளிக்கிறார்கள். அவர்கள் நாடிச்செல்லாத ஒன்றுக்கும் ஆகாததென்று ஒதுக்கித்தள்ளிய மண்ணுலக வாழ்க்கைத் தத்துவங்களைப்பற்றிப் பேசும் இயல்பு அவர்களுக்கு எப்படிவரும்? அதைப்பற்றிப் பேசும் கவிகள் கீர்த்திக்காகவும்,

உத்தம அரசர்களிடம் ஸன்மானங்கள் பெறுவதற்கும், மக்களுக்கு நல்வழிகளைப் புலப்படுத்துவதற்கும், மங்களங்களை ஆக்குவிப்பதற்கும், படிப்போர்களை மகிழ்விப்பதற்கும் கவிதைகளை இயற்றிவருகிறார்கள். இதிலும் பல கவிகள் ஏமாற்றமடைகிறார்கள். சிலர் மனோரத ஸித்தியை அடைகிறார்கள். தெய்விக திருஷ்டி உடையவர்களான ஸ்ரீ சங்கர பகவத்பாதர் அவர்கள், ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள், இவர்களைப்போன்ற புஷ்பதந்தன், குலசேகர ஆழ்வார், லீலாசுகர் முதலியவர்கள் ஆண்டவன் பெருமையைத்தான் தங்கள் கவிதைகளில் பாடுகிறார்கள். அவர்களுக்குக் கவிதையே யோக மார்க்கமாகிறது என்கிறார் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர்.

अनायतप्राणमसंयताक्षमब्रह्मचर्यानशनादिखेदम् ।
चित्तं महेशे निभृतं निधातुं सिद्धः कवीनां कवितेव योगः ॥
प्रशंसन्तो नराभासान् प्रलपन्तोऽन्यथाऽन्यथा ।
कथं तरन्तु कवयः कामपारस्यवादिनः ॥
यत्सन्दर्भे यदुल्लेखे यद्व्यङ्ग्ये निभृतं मनः ।
समाधेरपि तज्ज्यायः शंकरो यदि वर्ण्यते ॥

கவிதை என்ற யோகத்தினால் சித்தத்தைப் பரமேச்வரனிடத்தில் நிலைநிறுத்தவல்லவர்களான கவிகள் யோகிகளைப்போல் காயக்லேசம் செய்யாமலேயே யோகஸமாதியின் பலத்தை அடைகின்றனர். கவிதைக்கு உரிய ஸந்தர்ப்பத்தைத் தேடும்போதும், கற்பனைகளை உருவாக்கும் போதும் வ்யங்க்யார்த்தங்களை உட்புகுத்தும் போதும், ஆழ்ந்த ஸமாதி நிலையில் இருந்துகொண்டு மனமானது பரமேச்வரனிடம் ஈடுபடுகிறது. ஸாமான்ய கவிகளோ என்றால் தங்கள் கவிதையை யோகமாக்கிக்கொள்ளாமல் கேவலம் போகத்திற்காக மட்டரகமான மனுஷ்யர்களைத் துதி செய்து வாயில் வந்தபடியெல்லாம் பிதற்றுகிறார்கள். சிருங்காரத்தையே பரமபுருஷார்த்தமாகக்கொண்டு மிகுந்த ஈடுபாட்டுடன் வர்ணனைகளில் இறங்குகிறார்கள். ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் போன்ற மஹான்கள் தங்கள் அறிவுக்கு உகந்ததான தெய்விகக் கவிதைகளைத்தான் புனைந்திருக்கிறார்கள். அவைகள் வேதாந்தமும் வழிபாடும் ததும்பி நிற்கும் ஆனந்தப் பொழிவுகள். ஸ்ரீ சங்கரருடைய ஸ்தோத்திர காவியங்கள் பிரஸித்தமானவை. ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரின் ஸ்தோத்திர காவியங்கள் இவையாவன :-

(1) शिखरिणीमाला (2) ब्रह्मतर्कस्तवः
(3) पञ्चरत्नस्तुतिः (4) रामायणतात्पर्यसङ्ग्रहः ।
(5) भारततात्पर्य सङ्ग्रहः (6) शिवमहिमकलिकास्तुतिः

இந்த ஆறு கிரந்தங்களும் சிவபாரம்யத்தைப் போதிக்கின்றன.

சிவமஹிமகளிகாஸ்துதி மீமாம்ஸா நியாயங்களை உதாஹரித்து சிவஸ்தோத்திரம் செய்வதால் அதை ஒரு சிறிய மீமாம்ஸாக்ரந்தம் என்றும் சொல்லலாம். முதல்

ஐந்துக்கும் ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களே வ்யாக்யானம் செய்திருக்கிருர்கள். சிவமஹிம களிகாஸ்துதிக்கு அவர்களுடைய வ்யாக்யானம் கிடைக்காததால் மன்னார்குடி ராஜு சாஸ்திரிகள் அவர்கள் ஒரு நூதன வ்யாக்யானம் இயற்றி இருக்கிருர்கள். இந்த புஸ்தகம் மட்டும் இதுவரை பிரசுரத்திற்கு வராதது வருந்தத்தக்கது. மேற்கண்ட கிரந்தங்களிலிருந்து சில ச்லோகங்களை உதாஹரிப்போம்.

श्रीकान्त द्रुहिणोपमन्युतपन स्कन्देन्द्रनन्द्यादयः
प्राचीना गुरवोऽपि यस्य करुणालेशाद्गता गौरवम् ।
तं सर्वादिगुरुं मनोज्ञवपुषं मन्दस्मितालङ्कृतं
चिन्मुद्राकृतमुद्रपाणिकमलं चित्ते शिवं कुर्महे ॥

பிரும்மா, விஷ்ணு, ஸ்கந்தர், நந்தி முதலிய குருக்களுக்கெல்லாம் ஆதிகுருவான வர். மந்தஹாஸமுகத்துடன் சின்முத்திரையைத் தரித்திருப்பவர். ஸுந்தர வடிவுடைய சிவனைச் சித்தத்தில் வைத்துத் தியானம் செய்கிறேன். — சிகரிணிமாலா.

आकर्ण कृष्टधनुराहित मोहनास्त्र-
मारान्निरीक्ष्य मदनं कुपितस्य किञ्चित् ।
शम्भोः समाधिसमये विकसत्कृशानु-
ज्वालाकलापजटिलं निटिलं स्मरामः ॥

பரமேச்வரன் ஸமாதிநிலையில் இருக்கும்போது அதைக் கலைத்துவிட மன்மதன் எதிரில் வில்லை வளைத்து அதில் மோஹனாஸ்திரத்தைத் தொடுத்து அடிக்கப்போகும் சமயத்தில் சமாதிக்குப் பங்கம் ஏற்பட்டதினுல் சிறிது கோபங்கொண்ட பரமேச்வர னின் நெற்றியிலிருந்து பளிரென்று விசின நெருப்புஜ்வாலையினுல் அவன் ஸம்ஹரிக்கப் பட்டான். அந்த அவஸ்த்தையை மனக்கண்ணின்முன்கொண்டுவந்து அக்னிஜ்வாலை களைக் கக்கும் நெற்றிக்கண்ணை வழிபடுவோமாக. — சிகரிணிமாலையின் வ்யாக்யானம்.

अपारं विज्ञातुं गिरिश महिमानं तव परं
विधातुं भक्तिं वा तव चरणयोर्नित्यमचलाम् ।
प्रसादं लब्धुं वा वरद तव पूजाभिरधिकं
जगत्येकः शक्तो जयति वनमाली स भगवान् ॥

பரமேச்வரனுடைய பெருமைகளை அறியவும், திடமான பக்தியை அவரிடம் செலுத் தவும், அவரைப் பூஜித்துத் தக்கவரங்களைப்பெறவும் கேவல மனிதர்களுக்கு யோக்யதை கிடையாது. தேவர்களுக்கும் கிடையாது. நாராயணன் ஒருவனுக்கே அவ்விஷ யத்தில் பூர்ண தகுதி உண்டு. — சிகரிணிமாலா

गुणातीतोऽपि त्वं सगुण इव मायाशबलितः
परिष्कुर्वन् साम्ब वपुरसितकण्ठं त्रिनयनम् ।
अभिख्याभिः ख्यातः शिवभवमुखाभिर्विजयसे
नियन्ता लोकानां स हरिहरपङ्केरुहभुवाम् ॥

நிர்குணபிரும்மமான பரமேச்வரர் மாயையின் உதவிகொண்டு ஸகுணனுகி, பக்தர்களுக்குப் பாதி உருவத்தில் உமையைத் தரித்தவராய், நீலகண்டனுய், த்ரிநேத்ரனுய். சிவ பவ என்ற நாமாக்களினுல் அழைக்கப்பட்டவராய், காட்சி அளிக்கிருர். அவர் செய்யும் கார்யம் திருமூர்த்திகள் அடங்கலாக ஸர்வலோகங்களையும் தன் ஆக்ஞையால் நடத்திவைப்பதே. — சிகரிணீமாலா.

भ्रमाल्लोभान्मोहान्मतदुरभिमानादपि मुधा
नयन्त्यायुर्नाशं शिव तव पादाम्भोजविमुखाः ।
वयं तावत्सर्वे सहसुतकलत्रादिभिरिमे
भवामस्ते दासा इति मतिरियं मेऽस्तु सुदृढा ॥

ஹேபரமேச்வரா ! உன் சரணசேவை செய்வதில் சிரத்தை இல்லாத பலர் மதிமயக்கத்தாலும் பேராசையினுலும் அக்ஞானத்தினுலும் தன் மதப்பற்றினுல் பிற மதங்களைத் தூஷிப்பதனுலும் தங்கள் வாழ்நாட்களை வீணுக்கி நாசம் செய்கிருர்கள். எனக்கு அத்தகைய விக்னங்கள் இல்லாமல் பிள்ளைபெண்டாட்டி முதலிய ஸர்வகுடும்ப ஜனங்களுடன் நான் உமக்கு நித்யதாஸன் என்ற திட நம்பிக்கை என்னைவிட்டு ஒரு காலமும் அகலவேண்டாம். — சிகரிணீமாலா.

ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் இயற்றிய,

(1) दुर्गाचन्द्रकलास्तुतिः (2) आदित्यस्तोत्ररत्नम्
(3) अपीतकुचाम्बास्तवः (4) निग्रहाष्टकम्

என்ற நான்கு ஸ்தோத்ரங்களில் தாரித்ரியம் சத்ருபயம் ம்ருத்யுபயம் பற்பல கஷ்ட நிலைமைகள் தைவீகமான விபத்துக்கள் இவைகளினுல் பிடிக்கப்பட்ட மனுஷ்யன் தேவி மஹாத்மியம், தேவி பாகவதம் முதலிய புராணக்ரந்தங்களின் பாராயணத்தினுல் அநிஷ்ட நிவர்த்தியை அடைகிருன் என்ற பெரியோர்களின் உறுதிமொழியை ஆதாரமாகக்கொண்டு தேவியின் பல சரித்திரங்களைச் சுருக்கிச் சொல்லித் துதி செய்வது, வரன்களைவேண்டிக்கொள்வது இவை அடங்கியது முதலாவதான துர்க்காசந்திர கலாஸ்துதி. ஆதித்யஸ்தோத்திரரத்னத்தில் ஸூர்யனுடைய மண்டலம், ரதம், ரதசரம், குதிரைகள் இவைகளைப்பற்றிய தத்வங்களும், ஸூர்யோபாஸகர்களான தேவதைகளைப்பற்றியும், ஸூர்யகிரணங்களின் மஹிமையும், ஸூர்யமண்டலத்தில் அந்தர்யாமியாக இருக்கும் பரமேச்வரனின் மஹிமையும், ஸூர்யோபாஸனையினுல் உண்டாகும் நன்மைகளும் ச்ருதிஸ்ம்ருதி புராணங்களில் கூறியுள்ளபடி வருணிக்கப்படுகின்றன. அபீத குசாம்பாஸ்தவமானது திருவண்ணுமலையில் எழுதப்பட்டது.

இது ஒரு அஷ்டகம். ஒருசமயம் ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் அந்த க்ஷேத்திரத்திற்குப் போயிருந்தபொழுது ஜ்வரத்தினுல் பிடிக்கப்பட்டார்கள். இந்த ஸ்துதியினுல் ஜ்வர நிவர்த்தி ஏற்பட்டது.

निर्निद्रकोकनद कोमलकान्तमम्ब
नित्यं सुधानिकरवर्षि पदं त्वदीयम् ।
मूर्च्छाकर ज्वररुजा मम तापितस्य
मूर्ध्नि क्षणं सकृदपीतकुचे निधेहि ॥

மலர்ந்த தாமரைப் புஷ்பம் போல் மிருதுவான அழகான எப்போதும் அமிர்த தாரைகளைப் பெருகவிடும் உன் பாதத்தை என்னை பிரக்ஞை இழக்கும்படிச் செய்கிற இந்த ஜ்வரவேகத்தால் மிகுந்த தாபத்தை அடைந்திருக்கும் என் சிரஸில் ஒருதரம் ஒரு கணம் வைப்பாயாக. ஹே அபீதகுசே! உன்னை வேண்டிக்கொள்கிறேன்.

निग्रहाष्टकम् - இது சைவ வைஷ்ணவ சண்டை முற்றிப்போனபோது ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களுக்கு சத்ருக்களால் பிராணபயம் ஏற்பட்ட சமயத்தில் நடுநிசியில் நடுக்காட்டில் ஆயுதம் தாங்கிய பல கொலையாளிகள் தன்னைச் சூழ்ந்துகொண்டு இருக்கும் நிலைமையில் பகவானிடம் செய்த முறையீடு.

मार्गे सहायं भगवन्तमेव विश्वस्य विश्वाधिकनिर्गतोऽस्मि ।
शास्त्रं प्रमाणं यदि सा विपत्स्यात् तस्यैव मन्दो मयि यां चिकीर्षेत् ॥

மார்க்கஸஹாயன் என்ற என் குலதெய்வத்தை நம்பி நான் என் எதிரியின் சூழ்ச்சியை அறிந்தும் வெளியே புறப்பட்டு வந்துவிட்டேன். சாஸ்திரத்தில் உள்ளபடி சிவபாரம்யத்தை எடுத்துக் காட்டினேன். அது உண்மையானுல் எனக்கு என் எதிரி செய்ய நினைக்கும் தீங்கு அவன் தலைக்கே வரட்டும். இந்த ஸ்துதியின் கடைசிச்லோகம் பாடப்பட்டவுடன் எதிரியின்பேரில் இடி விழுந்து சிரஸ்வெடித்ததாகப் பரம்பரைக் கதையில் சொல்லப்படுகிறது. ஆனுல் ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் கருணையால் அனுக்ரஹாஷ்டகத்தினுல் பகவானைத் துதிசெய்து எதிரியை மறுபடி உயிர்ப்பித்ததாயும் கதை இருக்கிறது. உண்மையில் முதலில் விரோதியாக இருந்த தாதாசாரியார் என்ற விஜயநகர மன்னரின் குரு பின்பு ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் விதித்த பிராயச்சித்தத்தை அங்கீகரித்து சிவத்வேஷத்திற்குப் பரிஹாரம் தேடிக்கொண்டார் என்பதும் ஐதிஹ்யம். ஸ்ரீ தீக்ஷிதருக்கு சிவபக்திபோல் விஷ்ணுபக்தியும் குறைவில்லாமல் உண்டு. சிவத்வேஷத்தைக்கண்டுதான் அவர்கள் வெகுண்டு எழுந்தார்கள். விஜயநகர ராஜ்யத்தின் மேற்பார்வையாளராக இருந்த ராமராயன் 16 ஆவது நூற்ருண்டின் மத்தியில் சிதம்பரத்தில் கிரிமிகண்ட சோழன் காலம் முதல் அடைபட்டுக்கிடந்த கோவிந்தராஜ ஸந்நிதியைத் திறந்துவைத்தபோது ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் இரு ஸந்நிதிகளுக்கும் மத்தியில் நின்றுகொண்டு சிவனையும் விஷ்ணுவையும் மாறி மாறி வர்ணித்து हरि हरस्तुति என்று ஒரு துதியை இயற்றினுர். இதனுல் தனக்குப் பேதபுத்தி இல்லை

என்பதை விளக்கினர். தன் குலதெய்வமான விரிஞ்சிபுரம் மார்க்கபந்து ஈச்வரனைத் துதிக்கும் இரண்டு பாடல்கள் ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் இயற்றினர்.

(1) श्री मार्गबन्धु पञ्चरत्नम्
(2) श्री मार्गसहायलिङ्गस्तुतिः

இந்தப் பாட்டுக்கள் மிகவும் சிராவ்யமாக இருக்கும்.

मानसोल्लास என்ற சிறு காவியம் வைராக்ய நிலையிலிருந்து எழுதப்பட்டது. இதில் ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் தன் மனதை சிவபக்தியில் ஈடுபடும்படி நயமான வார்த்தைகளினலும் யுக்திகளினலும் தூண்டுகிருர்.

अतिस्थेमस्फीतानपि शिखरिणः पश्य चलितान्
कियन्तं वा कालं किसलयमृदु स्थास्यति वपुः ।
असारेऽस्मिन् पूजामयि हृदय शम्भोर्न कुरुषे
कदेहक्के लभ्यं कथय जड तन्त्रोपकरणम् ॥

பெரிய மலைகள் எல்லாம் மறைந்துவிடுகின்றன. ஹே மனமே! துளிர்போன்று மிருதுவான இந்தச் சரீரம் எவ்வளவு காலம் நிற்கப்போகிறது? அதற்கு உபசாரம் செய்கிருயே ஒழிய பரமேச்வரனுக்குப் பணிவிடை செய்வதில் உனக்குப் பிரவ்ருத்தியே இல்லையே! ஹே ஜடமே! மறுபடியும் ஈச்வர பூஜைக்கு ஸாதனமான கரசரணுதியவயவங்களும் வாக்கும் புத்தியும் ஸாமக்ரிகளும் இப்போது கிடைத்திருப்பதுபோல் உனக்கு எங்கு கிடைக்கப்போகிறது?

ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களின் ஸ்தோத்ர காவியங்களில் பிரஸித்திபெற்றவை वरदराजस्तवமும் आत्मार्पणस्तुतिயும். ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் காஞ்சிபுரத்திற்கு ஸமீபத்தில் அடையப்பலம் வேலூர் முதலிய இடங்களில் வசித்து வந்ததால் காஞ்சிபுரத்திலும் அவர்கள் வசித்திருக்கக்கூடும். அவருடைய பாட்டனுரான ஆசார்ய தீக்ஷிதரே वरदराजवसन्तोत्सववर्णना என்ற காவ்யம் எழுதியவர். ஆகையால் அந்த வம்சத்தவர்களுக்குக் காஞ்சிபுரத்தின் தொடர்பு இருந்திருக்கவேண்டும். ஸ்ரீ தீக்ஷிதர் 106 ச்லோகங்களில் வரதராஜஸ்தவம் எழுதியிருக்கிருர். அலங்கார சாஸ்திரத்தில் குவலயாநந்தம் எழுதிய ஸ்ரீ தீக்ஷிதர் பொருள் அணிகள் நிரம்பியதாக வரதராஜஸ்தவத்தை நிர்மாணம் செய்திருக்கிருர். அதற்குத் தானே வ்யாக்யானமும் செய்து ஒவ்வொரு ச்லோகத்தில் உள்ள அலங்காரங்களையும் லக்ஷணங்களுடன் எடுத்துக் காட்டுகிருர். காவ்யம் முழுவதும் வரதராஜப்பெருமாளின் வடிவழகை வருணிப்பதாய் அமைந்திருப்பதால் அழகுக்குக் காலோடுதலைஜ்வலிக்கும் அணிகள் செய்து பூட்டியது பொருத்தமாகும். இந்தக் காவியத்தை ரஸிக்கும்போது வரதராஜனின் ஸௌந்தர்யம் மேலானதா அல்லது ஸ்ரீ அப்பய்யதீக்ஷிதரின் அணிகலன்களின் அழகு மேலானதா

என்று நிர்ணயிக்கமுடியாது. வருணனைக் கவிதையில் தன்னிகர் அற்ற சமத்காரங்களை वरदराजस्तव த்தில் நிரூபித்த ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் ஆத்மார்ப்பண ஸ்துதியில் உள்ளத்தை உருக்கி ஆறுகப் பெருகவிடுகிறார். ஆத்மார்ப்பணம் என்பது நவவித பக்தியில் இறுதியான பரிபக்குவ நிலை. ஆத்மார்ப்பணத்தைவிட மேலான ஸ்தோத்திர க்ரந்தம் இருக்கமுடியாது. இது முக்தியையே பலமாக அபேக்ஷிக்கிறது. நான் என்ற அகம்பாவனை முற்றிலும் அற்றுப்போன பக்தனின் பக்குவநிலையை இது வெளியிடுகிறது. இந்த நிலையை அடைவது வெகு அரிது. பகவானுக்கு பூஜை நைவேத்யங்களினுல் பணிவிடை செய்வதற்கும் ஆத்மார்ப்பணத்திற்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள தாரதம்யம் இருக்கிறது. ஆத்மார்ப்பணம் செய்கிறவனுக்கு ஒருவிதப் பற்றும் கிடையாது. அவன் வேண்டுவது நித்யாநந்தம். ஜனன மரணக் கிலேசத்திலிருந்து விடுபடுவது ஒன்றே அவனுடைய லக்ஷ்யம். ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் ஒருசமயம் தன்னுடைய பரிபக்குவ நிலையையே பரிசோதித்து அறிந்துகொள்ளும் பொருட்டு ஊமத்தச் சாற்றை உட்கொண்டுவிட்டு சிஷ்யர்களிடம் நான் பிரக்ஞை தப்பியபோது ஏதாவது பிதற்றினுல் அதைக் குறித்துவையுங்கள் என்று ஆக்ஞாபித்தார். அவர் உன்மத்த நிலையில் பிதற்றினதுதான் இந்த आत्मार्पणस्तुति. இதற்கு उन्मत्तपञ्चाशत् என்ற காரணப் பெயரும் உண்டு இவர் வெளி வ்யவஹாரங்களில் எவ்வளவு ஈடுபட்டிருந்தாலும் அந்தக்கரணத்தில் சூழ்ந்து பதிந்து இருந்தது அவருடைய சிவபக்தியும் முக்தியில் ஆர்வமும்தான் என்பதற்கு இந்த ஸ்துதி ஸாக்ஷியம் கூறுகிறது.



திருவருள் ஆற்றல் உலகத்தை வாழ்விக்கிறது. உலகம் இயங்குவது திருவருளால். அருளின்றேல் யாதொரு பொருளும் அசைவதில்லை. அருளிருந்தால் அணுவளவான பொருளும் அண்ட சராசரங்களாய்விடும்.

* * *

ஞானசாரியனே பெருமான் திருவருளை வாரி வழங்கி ஆட்கொள்கிறான். ஆகவே குருவருளும் உயிர்க்கு உற்ற துணையாகிறது. திருவருளும் குருவருளும் உயிரைச் சிவாநந்தக் கடலில் திளைக்கச் செய்கின்றன.

— கயிலைக் குருமணி.

# ஞானசம்பந்தர் தேவார அரிய சொல்லாட்சிகள்

" தருமையாதீனப்புலவர் "

வித்துவான். திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை

சைவத் திருமுறைகள் பன்னிரண்ட னுள் முதல் ஏழு திருமுறைகளே முதற் கண் நம்பியாண்டார் நம்பிகளால் முறை செய்யப்பட்டன. அவ்வேழனுள் முதல் மூன்று திருமுறைகள் திருஞான சம்பந்தர் பாடியருளிய திருப்பதிகங்க ளாகும். ஞானசம்பந்தர் வரலாறு காண் போர், அவர் பாடியன 16000 திருப் பதிகம் என்று அறிகுவர். ஆயினும் திரு முறை வகுக்கப்பட்ட காலத்தில் 384 திருப்பதிகங்களே கிடைத்தன. எஞ்சி யவை சிதலைவாய்ப்பட்டு இறந்தன,

இப்பொழுது நமக்குக் கிடைத்திருக் கும் திருப்பதிகங்களும் இயல், இசை, நாடகம் என்ற முக்கூற்றுத் தமிழினுள் இசைத் தமிழ்வகையைச் சேர்ந்தவை. இவற்றை இசைக்கும் முறை பண்முறை என்பர். இவை இயற்றமிழ் வகையின் வேறுபட்டனவாயினும், அவற்றுட் காணப்படும் யாப்புச் செறிவும் அணி நலங்களும் நிறைந்து இலக்கியப் பெரு மாண்பு பெற்றுப் பிறங்குகின்றன.

இசைப்பாட்டுக்களின் இயல்பு கூற வந்த சான்றோர், அவை, மெல்லிய இனிய எளிய செஞ்சொற்களால் இயன்று இசைக்கேற்ற அமைதியுடைய வாய் இருத்தல்வேண்டும் என்பர். இசை வாணரின் நலம் குறிக்கவந்த நக்கீரர், அவர்களை "மென்மொழி மேவலர்" என்று நவில்கின்றார். இசைப்பாக்களை அமைக்கும் புலவன், "இமிழ்கடல் வரைப்பில் தமிழகம் அறியத், தமிழ் முழுதறிந்த தன்மையன்" என்றும் "மாற்றோர் செய்த வசைமொழியறிந்து நாத்தொலைவில்லா நன்னூற் புலவன்" என்றும் இளங்கோவடிகள் எடுத்துரைக் கின்றார்.

இத்துணை ஏற்றம்பெற்ற இசைப் புலவர்கள், வேத்தியல் பொதுவியல் என்ற உலகியலோடு நின்றொழியாது தெய்வத்திருவருள் வாய்ப்பும், அத் திருவருள் ஞானம் உலகமக்களிடையே நன்கு பரவவேண்டும் என்ற திருவுள்ள மும் அதற்குரிய செயலும் உடைய வராயின் அவரது பெருமை அளப்பரி தாகும். அந்நெறியே நோக்கின், ஞான சம்பந்தர் முதலிய பெருமக்கள் பிறப் பாலும் திருவருள் சிறப்பாலும் தமிழறிஞர் சூழலில் உச்சிமேல்வைத்துத் தெய்வமெனப் போற்றி வழிபடப்படும் தகுதியும் சால்பும் உடையவர் என்பது இனிது விளங்கும். ஆயிரம் ஆண்டு கட்கு முன்பே இப்பெருமக்களைத் தெய்வ மெனக்கொண்டு நன்மக்கள் பேணி வழிபட்ட திறத்தைச் சைவப் பதினோராந் திருமுறை எடுத்துக்காட்டுகிறது. ஞான சம்பந்தர் பெற்ற ஞான வகைகளைச் சேக்கிழார் பெருமான், "சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம், பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம், உவமையிலாக் கலை ஞானம், உணர்வரிய மெய்ஞ்ஞானம்" என வகுத்துக் காட்டுவர். அதனால் ஞானசம்பந்தர் திருவுருவத்தை

"ஞானத்தின் திருவுரு" எனப் புகழ்ந் தோதுகின்றார். அவரது இசைப் பெருமை, "தேனக்கமலர்க் கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும் கானத் தின் எழுபிறப்பு" என இனிமை விளங்க இசைக்கின்றார்.

பல்வேறு வண்ணமும் வடிவு முடைய மலர்களைக்கொண்டு மாலை தொடுப்பவர்போலக் கவிஞரும் பல்வகை அசையும் சீரும் ஓசையுமுடைய சொற் களைக்கொண்டுபாக்களைப் புனைவர். தான் தொடுக்கும் தொடையலின் உருவமைப் புக்கேற்ற மலர்களைத் தேர்ந்து ஆய்ந்து கொள்வதுடன் பொருந்துமாறு நோக்கிச் சிலவற்றைக் குறைத்தும், சில வற்றை இணைத்தும் தன்கைவன்மை தோன்றத் தொடுப்பான். அவ் வண்ணமே கவிபுனைவோரும் தாம் தொடுக்கும் பாட்டின் அமைப்புக்கும் இசைக்கட்டுக்கும் ஏற்றசொற்களைத்திரித் தும் குறைத்தும் புதியன சமைத்தும் பாப் புனைவது மரபு. அதனை இலக்கண நூலோர் செய்யுள் விகாரம் என்பர். இந்நெறிமையால்தான், அரிய சொல் லாட்சிகளும் புதிய சொற்புணர்ப்புக் களும் கவிகளில் இடம் பெறுகின்றன. இது முத்தமிழ்த்துறை மூன்றுக்கும் ஓரொப்ப அமைந்த உயர்ந்த நெறி யாகும்.

இயற்றமிழ்க் கவிகளினும் இசைப் பாட்டுக்கள் யாப்பியற் கூறுகளோடு பண்ணுக்கும் தாளத்துக்கும் ஒப்ப அமைய வேண்டுதலால், மேலேகுறித்த செய்யுட் செய்வினைகள் இசைப் பாட்டுக் களில் பெருகக் காணப்படுவது இயல்பு. அவ்வகையில் ஞானசம்பந்தர் முதலிய திருவருட்பெருந்தகைகளின் இசைப் பாட்டுக்களில் அரிய சொல்லாட்சிகளும் சொற்புணர்ப்புக்களும் சிறந்த வகையில் காணப்படுகின்றன.

ஞானசம்பந்தர் அருளிய முதல் திருப்பதிகத்தில் திருமாலும் பிரமனும் சிவபரம்பொருளின் திருவடியையும் திருமுடியையும் காண முயன்ற வரலாறு குறிக்கப்படுகிறது. அவருள் திருமால் திருவடி காணமுயன்ற செயலை, "தாணுதல்செய்து இறைகாணியமால்" என்று ஞானசம்பந்தர் பாடுகின்றார். தாள் நுதல் செய்தலாவது சிவனுடைய திருவடிகளை நோக்கி முகத்தையும் கண் களையும் ஒருநெறிப்படுத்தி அவற்றைக் கண்டடைய முயலும் செய்கை குறித்து நிற்பது. இஃது ஓர் அரிய சொல்லாட்சி யாகும் அங்ஙனம் அடிமுடி காண முயன்றார்க்கு எட்டாத அளவில் அவை நீண்டுயர்ந்த நிலையை "நீணுதல் செய்தொழிய" என்று ஞான சம்பந்தர் உரைக்கின்றார். நீளுதல் என்பது இயல்பு. அதனை நீணுதல் என மாறியிருப்பது இச்சான்றோர்களின் சால்பு வழக்கு. இவ்வாறே நாவரசரும், நீளுதலை நீணுதலாக்கி, "நீணுலகெலாம் ஆளக்கொடுத்தவன்" (116-4) என வழங்குகின்றார்.

இனி, ஞானசம்பந்தர் அருளிய தேவாரப் பாட்டுக்களில் காணப்படும் அரிய சொற்புணர்ப்புக்கள் பலவற்றை யும் தொகுத்துரைக்கின், இக்கட்டுரை ஒரு நூல் வடிவிற் பெருகுதற்கு அஞ்சி. சிலவற்றை அகரவரிசையில் வைத்துப் பின்கண்ட நெறியில் உரைக்கின்றோம்.

அகலியா வினை: "உகலியாழ் கடல் ஓங்குபாருளிர், அகலியாவினை அல்லல் போயறும்" (ஞான. 161-1) என்பது திருக்கரவீரத் திருப்பதிகம். இதன்கண் உகளி எனவரற்குரியது உகலியெனவந்தது. அகலாவினைகளால் விளையும் அல்லல் நீங்கும் என்ற கருத் தில் 'அகலியாவினை அல்லல் போயறும்"

என்று அருளுகின்றார். இறைவன் திருவருளாலல்லது பிறவாற்றால் நீங்காத அருமைபற்றி வினைகள் அருவினை எனப்படுவது இயல்பு. இங்கே ஞானசம்பந்தர் அருவினையை ''அகலியா வினை'' என்று குறிக்கின்றார்.

அணி : இச்சொல் அணிமையிடத்தைக் குறிக்கும் இயல்பிற்று; தொல்காப்பியரும் ''இனி அணி யென்னும் காலமும் இடனும் வினையெஞ்சுகிளவியும் சுட்டும் அன்ன'' (உயிர்மயங். 34) என்ற நூற்பாவில் எடுத்துரைப்பர். இவ்வரிய சொல்லை இப்பொருளிலேயே ஞானசம்பந்தர், ''கணியார்மதி செஞ்சடையான் தன் அணியார்ந்தவருக்கருள் என்னும்'' எனப் பாடுகின்றார்.

அன்றி : அன்மை, இன்மையென்ற சொல்லினத்துள் அன்மை என்பதன் அடியாக அல்லன், அல்லள், அல்லர், அன்று, அல்ல என்ற சொற்கள் தோன்றி வருதல் போல அன்றி இன்றி என வினையெச்சங்கள் தோன்றுவது இயல்பு. இவற்றை முற்றுவினை வாய்பாட்டில் அன்றினர் என்றும், பெயரெச்ச வாய்பாட்டில் அன்றிய என்றும், அரிய முறையில் ஞானசம்பந்தர் நவில்கின்றார். ''அன்றி நின்ற அரக்கர்கோனை அருவரைக்கீழ் அடர்த்தாய்'' (52-8) என்றும், ''அன்றியுரை சொல்ல'' (95-10) என்றும் வினையெச்சவாய்பாட்டில் வழங்கியதுபோல, ''அன்றிய அமணர்கள்'' (113-10) என்று பெயரெச்சமாகவும், ''அன்றினர் அரியென வருபவர்'' (124-6) எனவினைப்பெயராகவும் வழங்குகின்றார்.

அலரிட்டு ஏத்தல் : இறைவனை மலரிட்டு வழிபடுமிடத்து அவற்றை முட்டாது இடல்வேண்டும் என்பது விதி. இவ்வாறு திருமால் வழிபட்டபோது மலர் ஒன்று முட்டுப்படவே, அவர் தமது கண்ணையிடந்து இட்டு வழிபட்டார் என்ற வரலாற்றை உட்கொண்டு, ''அலகினால் வீசி நீர்கொண்டு அடிமேல் அலரிட்டு முட்டாது உலகினர் ஏத்த நின்றான் உறையும் இடம் ஒற்றியூரே'' (315-5) என்று ஞானசம்பந்தர் பாடினர். முட்டாது அலரிடும் முறைமையை வற்புறுத்தற்கே மாணிக்கவாசகப் பெருமான், ''தவமேபுரிந்திலன் தண்மலர் இட்டு முட்டாது இறைஞ்சேன்'' (திருச்சத. 5) என்றும், ''பரந்து பல்லாய்மலர் இட்டு முட்டாது அடியே இறைஞ்சி; இரந்தவெல்லாம் பெறலாம்'' (திருச்சத. 6) என்றும் பாடுகின்றார். முட்டுதல், குறைபடுதல்.

ஆகமம் வகுத்தவன் : திருஞானசம்பந்தரின் வரலாறு கூறப்புகுந்த சேக்கிழார், அப்பெருமானது தோற்றத்தால் வேதநெறி தழைத்தோங்கிற்று; சைவத்துறை விளக்கமுற்றது என்ற கருத்து விளங்க, ''வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க'' என்றார். சண்டேசுவரர் வரலாற்றில் ''வேதப்பயனும் சைவம்'' என்று சேக்கிழார் உரைப்பதால், வேத நெறியினும் சைவத்துறைமிக்கு நிற்பது விளங்கும். இங்ஙனம் சைவம் மிகுதற்குக் காரணம் இறைவன் அதற்கென வகுத்தளித்த ஆகமச் செல்வமாகும். அது பற்றியே ஞானசம்பந்தர் இறைவனை, ''ஆகம செல்வன்'' (313-10) என்றும், ''ஆகமம் வகுத்தவன்'' என்றும் குறிக்கின்றார்.

ஆணி : ''உழுவார் உலகத்தார்க்கு ஆணி'' (குறள் - 1032) என்று திருவள்ளுவர் உரைக்கின்றார். இதன்கண் உழுவாரை ஆணி என்றதற்கு விளக்கம் கூறவந்த பரிமேலழகர், ''கலங்காமல்

நிறுத்தற்கண் ஆணி போறலின் ஆணி என்றார்" எனவுரைப்பர். அக்கருத்தே விளங்க, ஞானசம்பந்தர், "வேனு நற்புரத் தானுவின்கழல், பேணுகின்ற வர் ஆணி பொத்தவரே" (368 - 2) என்று இசைக்கின்றார்.

ஆணை கூறல்: மக்களிடையே நிக ழும் உரையாட்டுக்களில் சில உண்மை யை வற்புறுத்தற்கு "ஆணையாகக் கூறுகிறேன்' என்றாற்போல ஆணை கூறல் அரிய வழக்கு. அதன் அருமை கண்ட ஞானசம்பந்தர், "சிவனுறை திருவெண்காட்டின் மேற்சொல்லிய அருந்தமிழ் பத்தும் வல்லவர், அல்ல லோடு அருவினை அறுதல் ஆணையே" (273-11) என்றும் திருவேதிகுடிப் பதிகத்தில் "இமையோர் அந்த உல கெய்தி அரசாளுமதுவே சரதம் ஆணை நமதே" (336-11) என்றும், கோளறு பதிகத்தில் "அடியார்கள் வானில் அரசாள்வர் ஆணை நமதே" (221-11) என்றும், திருநனிபள்ளியில் இருந்து பாடுங்கால், "நடுவிருள் ஆடும் எந்தை நனிபள்ளியுள்க வினைகெடுதல் ஆணை நமதே" என்றும் பாடியருள்கின்றார். இவ்வாறு "ஆணை நமதே" என்று ஞானசம்பந்தர் அறுதியிட்டுரைக்கும் வாய்மையைக் கண்ட நம்பியாண்டார் நம்பிகள், வியப்பு மீதூர்ந்து "முதல்வன் திருவடியை அத்திக்கும் பத்தர் எதிர் "ஆணை நமது" என்னவலான்" (ஆளு. பிள், திருத்தொகை 44-5) என்று பாராட்டுகின்றார். பிரான்மலைக் கல் கல்வெட்டொன்று. "பட்டமுடையார் ஆணை நமது என்ற பெருமாள்" (S. I. I. Vol. VIII. No. 442) என்று ஒருவர் பெயர் தாங்கியிருப்பதைக் காட்டுகிறது.

ஆழியர்: ஆழி யென்னும் சொல் கடற்கரை என்ற பொருளில் வருவது. "ஊழி பெயரினும் தாம் பெயரார் சான் றாண்மைக்கு ஆழி எனப்படுவார்" (குறள். 989) என்பதன் உரையில் ஆழி என்றதற்குக் கடற்கரை என்று பொருள் சொல்லி "சான்றாண்மைக்கு ஆழி எனப் படுவார்" என்பதனை விளக்கத் தொடங்கி "சான்றாண்மையது பெருமை தோன்ற அதனைக் கடலாக்கியும், அதனைத் தாங் கிக்கொண்டு நிற்றலின் அஃது உடை யாரைக் கரையாக்கியும் கூறினார்: 'பெருங்கடற்கு ஆழியனையன் மாதோ" (புறம். 330) என்றார் பிறரும்' என்று பரிமேலழகர் கூறினர். அப்பொருளே விளங்க ஞானசம்பந்தர், திருவீழிமிழலைப் பதிகத்துள் "வீழிமிழலையர் வாழியர் தோற்றமும் கேடும் வைப்பார், உயிர் கட்கெல்லாம் ஆழியர் தம்மடி போற்றி யென்பார்கட்கு அணியரே" (267-1) என்று அருளிச் செய்கின்றார்.

இறை: ஒருவர் எழுப்பும் வினுக் கட்கு இறுக்கப்படும் விடையை இறை எனக் குறிப்பர் இலக்கண நூலோர். நேரிய விடையைச் செவ்வன் இறை என்பதும் அவர்கள் வழக்கு. திருக் கண்டியூர் விரட்ட வினுவுரைப்பதிகத்தில் உரை செய்மின், சொல்லுமின், பகரு மின் என்றெல்லாம் உரைப்பவர் "நாவிரித்து அரன் தொல்புகழ் பல பேணுவீர் இறை நல்குமின்" என்றும், "மாந்தர்காள் பேசுமின் இறை" (296-8, 9) என்றும் வழங்குகின்றார்.

உண்பு: உண்ணப்படும் உணவை ஊன் எனவும், உணவு எனவும், உண்டி எனவும் வழங்குவது பெரு வழக்கு. உண்டலாகிய தொழிலை உண்ணுதல், உண்ணல், உண்டல் என்பது இயற்கை. அதனை உண்பு என நிறுத்தி "உண்பு நீங்கி வானவரோடு உலகில் உறைவாரே" (49-11) என்றும்

" மனமுலாம் அடியவர்க்கு அருள்புரிகின்ற வகையலால் பலிதிரிந்து உண்பிலான் மற்றோர் தனம் இலான்" (76-6) என்றும் ஞானசம்பந்தர் வழங்குகின்றார்.

உரிதா நினைவார்: உரித்தென இன்றைய வழக்கில் காணப்படும் சொல் உரிது எனச் சங்க இலக்கியங்களில் அரிதாக வழங்கும். " உரிதினிற் கொண்டாங்குப் பெயர்தல் வேண்டும்" (10) என அகநானூற்றிலும், " உரிதென்வரைத்தன்றி ஒள்ளிழைதந்த பரிசழிபைதல் நோய்" (கலி. 138) எனக் கலித்தொகையிலும் பிற நூல்களிலும் காணலாம். அதன் அருமை கண்ட ஞானசம்பந்தர், " வீழிம்மிழலை உரிதா நினைவார் உயர்வாரே" என உரைக்கின்றார்.

ஊமன் கண்ட கனவு: ஊமையாகிய ஒருவன் நல்லதொரு கனவைக் காணினும் அதனைப் பிறர் நன்கறிய உரைக்க முடியாது. அக்கனவும் பயனின்றி முடியும்; அதனால், பயனின்றிக் கழியும் செயல் வகையைச் சுட்டியுரைக்குமிடத்து, அச்செயல் ஊமைகண்ட கனவாய்க் கழிந்தது என்பது வழக்காயிற்று. " ஊமனார்கண்ட கனா" என்பது பழமொழியுமாகும். இதனை, ஞானசம்பந்தர், " தாமலார் போலவே தக்கனார் வேள்வியை, ஊமனார் தம் கனாவாக்கினான்" (291-3) என்று எடுத்தாள்கின்றார், திருமங்கை மன்னனும் இக்கருத்தையே கொண்டு, " ஊமனார் கண்ட கனவிலும் பழுதாய் ஒழிந்தன கழிந்த அந்நாட்கள்" (பெரிய. 1-1-3) என்று பாடுகின்றார்.

ஏவலம்: ஏ என்பது வில்லிடைத் தொடுக்கப்படும் அம்பைக் குறிப்பதொரு சொல்லாகும். வில்லை வளைத்து அம்பு தொடுக்கும் செயலை, விற்றொழில், என்றும், அத் தொழில்வன்மையை வில்வன்மை என்றும், புலவர் போற்றியுரைப்பர். ஞானசம்பந்தர் வில்வன்மையை ஏவலம் எனக்குறித்து "எண்ணார் தங்கள் மும்மதில் வேவ ஏவலம் காட்டிய எந்தை" (12-6) என இயம்புகின்றார்.

புலங்களைக் கட்டவர்: இதன்கண் வரும் கட்டல் என்ற சொல் களைகளைதல் என்ற பொருளில் வருவது. களைதலைக் கட்டல் என்பது பண்டையோர் வழக்கு. " கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களைகட்டதனோடு நேர்" (குறள் 550) என்றும், " ஏரினும் நன்றால் எருவிடுதல். கட்டபின், நீரினும் நன்றதன் காப்பு" (குறள் 1038) என்றும் திருவள்ளுவர் வழங்குவர். இச் சொல்லின் நலம்கண்ட ஞானசம்பந்தர், ஐம்புலன்களின் சேட்டையாகிய களைகளை நீக்கினவர் என்ற பொருள் " ஐந்து புலன்களைக் கட்டவர்" (4-8) என்று பாடுகின்றார்.

கணையல்: வில்லம்பினைக் கணை என்று கூறுவதும் வழக்கு. கணையைத் தொடுக்கும் செயலைக் கணையல் என அமைத்து, " இலங்கு எயில் மூன்றும் எரியுண்ணக் கணையல் செய்தான் காதல் செய் கோயில் கழுக்குன்றே" (103-4) என்று ஞானசம்பந்தர் பாடுகின்றார்.

குட்டாச்சுனை: குட்டம் என்பது ஆழ்ந்த நீர்நிலை. "நெடுநீர்க் குட்டத்துத் துடும் எனப் பாய்ந்து" (புறம். 243) எனச் சங்கச்சான்றோர் வழங்குவர். அச் சொல்லை நம் ஞானசம்பந்தர் ஆழ்ந்த சுனையென்ற பொருளில், "குட்டச்சுனை" என நிறுத்தி, இசை நயம் வேண்டி, அதனை நீட்டி " முட்டா முதுகரியின் இனம் முதுவேய்களை முனிந்து, குட்டாச் சுனையவை மண்டி

நின்றுடும் கொடுங்குன்றம்" (14-8) என்று பாடியருளுகின்றார்.

கைதல் வேலி: நெய்தல் நிலக் கருப்பொருளில் கைதை (தாழை) ஒன்றாகும். "மருத வேலியின் மாண் புறத் தோன்றும் கைதைவேலி நெய் தலங்கானல்" (சிலப். 6-149-50) எனவும், "கைதைவேலிக் கழிவாய்" (சிலப் கானல்) எனவும் இளங்கோவடிகள் கூறுவர். இக்கைதையைக் கைதல் எனத் திரித்து "எம்மாற்கு இடமாவது கைதல் வேலிக் கழி சூழ்படல் நாகைக் காரோ ணமே" (152-7) என ஞானசம்பந்தர் பாடுவர்.

செதுமதி: இது செதுமொழி, செதுமகவு என்றாற்போல வருவது. செதுமொழி பொல்லாத சொல்லைக் குறிக்கும். "செதுமொழி சீத்தசெவி" (கலி. 68) எனச் சங்கநூல் வழங்கும். செத்த மகவைச் செதுமகவு என்பர். அதுபோலச் செதுமதி என்பது பொல் லாத அறிவு எனப் பொருள்படும் அரிய வழக்காகும். இதனை ஞானசம்பந்தர், "செதுமதிமிகுசமணர்" (21-10) என் றும், "செய்வன தவமலாச் செதுமதி யார்" (261-10) என்றும் வழங்கு கின்றார்.

செந்திசை: செம்மையான இசை என்பது செந்திசை எனவருகிறது. செம் மை யென்னும் பண்புச் சொல் செந்து எனத் திரிந்து, செந்திசை செந்தூர் செந்தில் என வருவது காணலாம் இந்த அரியசொல் வழக்கை மிக நயந்த ஞான சம்பந்தர், "குளிர்வண்டு செந்திசை பாடும் சீர்திகழ் கண்ணார் கோயிலே" 101-2) என்றும், "செந்து சேர்மொழி யாரவர் சேரும் திருக்களர்" (187-11) என்றும், "செந்துவண்டின் இசைபாடல் மல்கும் திகழ் சிக்கல்" (144-4) என்றும் பாடுகின்றார்.

செம்மாந்து: இளிவரலின்றி நிமிர்ந் தோங்கும் உள்ள நிலை செம்மாப்பு எனப்படும். இரத்தல் தொழிலை மேற் கொண்டவிடத்து இச்செம்மாந்த நிலை தோன்றாது, "ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு இரவின் இளிவந் தது இல்" (குறள்.) என்பர் திருவள்ளு வர். சிவபெருமான் ஐயம் ஏற்றவிடத்து இவ்விளிவரல் இன்றிச் செம்மாப்புடன் நின்று அதனை ஏற்றார் என்ற கருத்துப் பட ஞானசம்பந்தர், "செம்மாந்து ஐயம் பெய்க என்று சொல்லிச் செய் தொழில் பேணியோர் செல்வர்" (42-1) என்று இசைக்கின்றார்.

ஞானன்: ஞானமுடையோரை ஞானிகள் என்பதுதான் பெருவழக்கு. ஆனால் ஞானசம்பந்தர், ஞானியை ஞானன் என அமைத்து, ஞானமே வடி வாகிய இறைவனை, "ஆனநல் லருமறை அங்கம் ஓதிய, ஞானனை அடிதொழ நன்மையாகுமே" (278-2) என்று பாடு கின்றார்.

துளங்கில் தமிழ்: துளங்குதல் என்ற வினைப்பெயர் துளக்கம். துளக்கு என வருதல் மரபு. "துளக்கற்ற காட்சி யவர்" (குறள்) எனத் திருவள்ளுவரும் கூறுவர். இது துளங்கு என வினை முத னிலையாய் நின்று. "இனத்தின் தீர்ந்த துளங்கிமில் நல்லேறு" (மலைபடு. 330) எனவருவதுண்டு. இதனையேமுதனிலைத் தொழிற்பெயராக்கி, "துளங்கில் தமிழ் பரவித் தொழுமடியாரவர்" என்றும் "விளங்கும் புகழதனோடு உயர் விண்ணும் உடையாரே" (13-11) என்று பாடுகின்றார்.

தோழம் : இது பேரெண்ணைக் குறிக்கும் ஒரு சொல். இதனை, " ஒத வுலவா ஒருதோழந் தொண்டருளன் " என்று மணிவாசகர் வழங்குகின்றார். பின்வந்தோர் இது ஞானசம்பந்தர் எடுத்தாண்டதோர் அரிய சொல் என் பதை மறந்து தோழன் எனத் திருத்திக் கொண்டனர். பேரெண்ணைக் குறிக்கும் தோழம் என்ற இச் சொல்லை, " உண் ணற்கரிய நஞ்சையுண்டு ஒரு தோழம் தேவர், விண்ணிற் பொலிய அமுதம் அளித்த விடைசேர் கொடியண்ணல் " (74-7) என்று தொகுத்தாளுகின்றார்.

நடுநடுத்து : நடுங்கல் என்ற வினை நடுநடுங்கி என இரட்டைக் கிளவியாதல் பெருவழக்கு. கயிலைமலையின்கீழ் அகப் பட்டுக் கொண்டபோது இராவணன் நடுநடுங்கியதைக் குறிக்கப்புகுந்த ஞான சம்பந்தர், " மலையை எடுத்தலும் மலை மகள் நடுங்க நக்குத் திருவிரலால் ஊன் றலும் நடுநடுத்து அரக்கன், பக்கவாயும் விட்டலறப் பிரிந்தவன் பதிமறைக் காடே " (227-8) என்று பரிந்து பாடு கின்றார்.

நமையல் : இஃது உலக வழக்கில் நமைச்சல் என வழங்கும் ; அரித்தல் என்பது பொருள். வினைகள் துன்பம் செய்யும் திறத்தை நமைத்தல் எனக் குறித்து, " இமையவர் தொழுகழுமலம் அமர் இறைவனதடி பரவுவர் தமை நமையலவினை " (19-10) என்று ஞான சம்பந்தர் பாடுவர். இவ்வாறே நாவுக் கரசரும் திருவாரூர்த் தாண்டகத்துள், " பல்லுருவில் தொழில்பூண்ட பஞ்ச பூதப் பளகீர்......ஆரூர் நல்லுருவில் சிவனடியே அடைவேன் நும்மால் நமைப் புண்ணேன் கமைத்துநீர் நடமின்களே" (திருநா. 241-3) என்று பாடுகின்றார்.

நொடிதல் : இது சொல்லுதல் என்னும் பொருளில்வழங்கும் ஒருசொல். " துணங்கையஞ் செல்விக்கு அணங்கு நொடித்தாங்கு " (பெரும்பாண். 459) என்று சங்கச் சான்றோர் வழங்குவர். இதனை, ஞானசம்பந்தர் பலியேற்கு மிடத்து நிகழும் சொல்லாடலில் தொடுத்து. " வெடியவினை கொடியர் கெட விடுசில்பலி நொடிய மகிழ் அடிகள் இடமாம் " (326-4) என வழங்குவர். மேலும், நொடிதல் என்னும் வினையை நொடிமையெனப் பெயர்ப் படுத்து, அதனையுடைய மகளிரை நொடிமையினார் என்று குறித்து, " உள்வீர்போல நொடி மையினார் திறம், கொள்வீர் அல்குலோர் கோவணம் " (54-3) என்று பாடுவர்.

போணிலா : வானத்தில் முகில் களைப் போழ்ந்து கொண்டு செல்வது திங்கள் என்ற கருத்துத் தோன்ற, " எல்லைநீர் வியன் கொண்மூ இடை நுழையும் மதியம் " (யாப். கா. மேற்.) என்று புலவர் பாடுவர். அக்கருத்தை மேற்கொண்ட ஞானசம்பந்தர், போழ் நிலா என்பதன்கண் ழகரத்தை ளகர மாக்கிப் போள்நிலா எனக்கொண்டு போணிலா என வழங்குகின்றார். " சிகரப் பெருங்கோயில்சூழ் போணிலா நுழையும் பொழில் பூந்தராய் " (260-6) என்று பாடுவது காண்க.

முந்தாய் : இது முந்தை என்னும் சொல்லடியாக வந்தது. முந்தையென் னும் சொல் முன்னிடத்தையும் முன்னுள் ளோரையும் குறிக்கும். " வந்தடி பொருந்திருந்தை நிற்பின் " (புறம். 10) எனச் சான்றோர் வழங்குவது காண்க. அதனால் " முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாக " வுள்ள இறைவனையும் குறிப்பது இயல்பாயிற்று. ஆகவே, இது விளியேற்று முந்தாய் என நிற்கிறது. இதனை ஞானசம்பந்தர் " முந்தாய் எனுமால் முதல்வா எனு மால் " (154-2) என்று பாடுகின்றார்.

விளம்பட்டு : இது விளம்பரம், விளம்பனம், விளம்பிதம் என வரும் சொல்லினத்துக்கு வேராக நிற்கிறது. இவையாவும் உள்ளக் கருத்தைச் சொல் லாலும் மெய்ப்பாட்டாலும் வெளியிடும் நெறியில் தோன்றுகின்றன. இவ்வுண் மை விளங்க, வெளிப்பட்டு எனும் பொரு ளில் விளம்பட்டு என ஞானசம்பந்தர் வழங்குகின்றார். இதனை, "உளம்பட்டு எழுதழல் தூணதன் நடுவே ஒருவுருவம், விளம்பட்டு அருள் செய்தான் இடம் விரிநீர் வியலூரே" (13.9) என்று அவர் பாடுதலால் அறிகின்றோம்.

இவ்வாறு, தமிழ்ச் சொற்களைப் புதுக்கியும், வேறு வடிவில் சமைத்தும், புதியன ஆக்கியும், தமிழின் சொற் செல் வத்தைப் பெருக்கிய காரணமும் புலப்பட நம்பியாரூரர், ஞானசம்பந்தரை, "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம் பந்தர்" என வாயார வாழ்த்தி வழிபடு கின்றார்.



தமிழ் மொழி உடல்; சைவம் உயிர்; தமிழ் மொழி மலர்; சைவம் மணம்; தமிழ் மொழி வீணை; சைவம் இசை. உயிரும், மணமும், நாதமுமாகத் தமிழ் மொழியோடு ஒன்றுபட்டு வளர்ந்துவந்திருக்கிறது நம் சைவ சமயம்; சைவம் இன்றேல் தமிழ் இல்லை. சிவமணமே செந்தமிழை வாழ்விக்கிறது.

* * *

தமிழுக்கும் கடவுளுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. தமிழ் மொழி உடல்; கடவுட்கொள்கை அதன் உயிர். உயிர் இல்லாத உடம்பு சடம், அறிவற்றது, அசைவற்றது, அழகற்றது, ஆற்றலற்றது. இதனை உணர்ந்தே மொழிக்கு முதலாகிய அகரமாக இறைவனைக் கண்டார்கள்.

— கயிலைக் குருமணி.

# ஏறூர்ந்த செல்வன்

வித்துவான். திரு. கோ. சுப்பிரமணியப் பிள்ளை எம். ஏ., பி. எல்.,

" அப்பன் நீ அம்மைநீ
ஐய னும் நீ
அன்புடைய மாமனும்
மாமியும் நீ
ஒப்புடைய மாதரும்
ஒண்பொரு ளும் நீ
ஒருகுலமும் சுற்றமும்
ஓர்ஊ ரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும்
தோற்று வாய் நீ
துணையாய் என்நெஞ்சம்
துறப்பிப் பாய் நீ
இப்பொன் நீ இம்மணி நீ
இம்முத் தும் நீ
இறைவன் நீ ஏறூர்ந்த
செல்வன் நீயே "

இத் தேவாரத் திருப்பாடல் திருநாவுக்கரசர் பாடிய ஓர் அருமையான திருத்தாண்டகம். ஏறு ஊர்ந்த செல்வன் என்றது இடபத்தை ஊர்தியாகக் கொண்ட இறைவனாகிய சிவபெருமானைக் குறித்ததாகும். செல்வன் என்பதற்கு இறைவன் என்று பொருள். வால் வெள்ளேற்றை வாகனமாகக் கொண்ட வாலறிவனே நமக்கு எல்லாப் பொருளுமாவான் என்று அப்பர் இப்பாடலிற் கூறும் திறன் நோக்கியறிதற்பாலதாகும். இப்பாடல் ஏறூர்ந்த செல்வனை நோக்கி விளித்துக் கூறியதாகும்.

அப்பன் என்றது தந்தையை; அம்மை என்றது தாயை. முதலில், 'ஏறூர்ந்த செல்வா! நீயே எனக்குத் தந்தையாவாய்' என்றார். அடுத்து, 'அம்மை நீ' என்றார். 'சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே' என்பது புறநானூறு. கல்வியைக் கொடுத்து அறிவை வளர்ப்பவன் தந்தையாதலால், தந்தையை முதலில் எடுத்துக் கூறினார். தந்தையொடு கல்வி போம் அல்லவா? தன் மகன் சான்றோன் எனக் கேட்டுப் பெரிதும் மகிழ்பவள் தாய். அன்பிற் சிறந்தவள் தாய் ஆதலால் அப்பனுக்கு அடுத்து, 'அம்மை நீ' என்றார். பால் நினைந்து ஊட்டுபவள் தாய். குழந்தையின் உடலையும் உயிரையும் வளர்ப்பவள். ஈன்றுபுறந்தருதல் தாயின்கடன்' என்று கூறுகிறது புறநானூறு. அன்னையும் தந்தையும் முன்னறி தெய்வம் என்பது முறையாயினும், உடலை வளர்ப்பவளைவிட அறிவை வளர்ப்பவன் சிறத்தல் கருதி, அப்பனை முன்கூறி அம்மையைப் பின்கூறினார். தகப்பன் இதத்தைச் செய்வான்; தாயார் பிரியத்தைச் செய்வாள் என்று கூறுவர். அதாவது, தந்தை பிள்ளைக்கு எது நல்லது என்பது கண்டு அதைமட்டும் செய்வான். பிள்ளையின் மனதுப்படி விடமாட்டான். ஆனல் தாயானவள் நல்லது கெட்டதைக்கூடக் கருதாமல், பிள்ளை எதை விரும்புகிறதோ அதையே செய்துகொடுக்க விரும்புவாள். தந்தையின் அன்பிலே அறிவும் பயனும் அளாவி நிற்கும். தாயின் அன்பிலே பேதைமையும் கலந்துநிற்கும். கள்ளை விரும்பும் பிள்ளையைத் தந்தை கடிந்து மதுவை விலக்குவான். தாயோ, கள்ளை

யானாலும் வயிறு நிறைய உண்டிடச் சொல்வாள். அவளுக்கு எதுவானாலும் பிள்ளை வயிறு நிறையஉண்ணவேண்டும் என்ற ஆசை மேலோங்கி நிற்கும். அவள் அன்பு அறிவோடு பட்டதா யிராது. குழந்தை கிணற்றில் விழ வேண்டும் என்று அடம் பண்ணினால், தந்தை பிள்ளையை ஓங்கி அறைந்து கிணற்றுக்கு அப்பால் இழுத்துக் கொண்டுபோய்விடுவான். குழந்தையை அடக்குவதற்கு வன்மையைக் கையாளத் தயங்க மாட்டான். தாயோவெனில், மென்மையாகவே இருப்பாள். பிள்ளை கிணற்றில் விழுந்த பின்னர்த் தானும் விழுந்து பிள்ளையைத் தூக்கிவந்து கரைசேர்ப்பாள். குழந்தைக்கு உண்டி கொடுத்து வளர்ப்பதில் தாயின் மிக்கார் ஒருவரும் இல்லை. அதனால் தாயோடு அறுசுவைபோம் என்பர். இவ்வுலகில் ஒருவனுக்கு அன்னையும் அப்பனுமே முன்னறிதெய்வம். தாயும் ஆனவராய்த் திருச்சிராப்பள்ளியில் இறைவன் திகழ் வதை யாவரும் அறிவர். தந்தை தாயரின் சிறப்பை இராமன் பரதனுக்கு எடுத்துக்கூறியதும் இங்கே நோக்கத் தகும்:-

"பரவு கேள்வியும் பழுதின் ஞானமும்
விரவு சீலமும் வினையின் மேன்மையும்
உரவி லோய்தொழற் குரிய தேவரும்
குரவ ரேயெனப் பெரிது கோடியால்.

அந்த நற்பெருங் குரவர் ஆரெனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினல்
தந்தை தாயரென் றிவர்கள் தாமலால்
எந்தைகூறவேறெவரும்இல்லையால்."

அடுத்து, "ஐயனும் நீ" என்றார் அப்பர். ஐயன் என்பது குரு அல்லது ஆசான்.

"இதவிய லியற்றிய குரவர் யாரினும்
மதவியல் களிற்றினய் மறுவில்
விஞ்சைகள்
பதவிய விருமையும் பயக்கப்பண்பினல்
உதவிய வொருவனே உயரும்
என்பரால்."

என்று வசிட்டன் இராமனிடம் கூறிய தாக இராமாயணத்தில் காண்கின்றோம். குரவர் யாரினும் என்றது, ஐங்குரவருள் ளும் என்றவாறு. ஐங்குரவராவார்: "அரசன், உவாத்தியான், தாய், தந்தை, தம்முன், நிகரில் குரவர் இவர்" என்ற தால் அறிக. இறைவன் குருவடிவில் தோன்றியே சிவஞானத்தைக் கொடுத் தருள்வான் என்பது சைவசித்தாந்தத் தின் உண்மை. "எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்" என்பதும் அறிக. ஆதலால், கடவுளை 'ஐயனும் நீ' என்றார் அப்பர்.

அடுத்து, "அன்புடைய மாமனும் மாமியும் நீ" என்றார். அன்புடைய மாமனும் என்றார். அன்பில்லாத மாம னைத் தவிர்ப்பதற்கு. தாயன்பு தந்தை யன்பு போல மாமன் அன்பு இயல் பாகவே அமைவதொன்றன்று ஆதலின், 'அன்புடைய' என்ற அடை ஈண்டு வேண்டப்படுவதாயிற்று. அப்பன், அம்மை இருவரிடமும் அன்பு சொல்லா மலே பெறப்படும். இல்லையென்று வெளி யில் சொன்னாலும், இயல்பாகவே அன்பு அங்கே ததும்பி நிற்கும். அதைப்பற்றிச் சொல்லத்தேவையில்லை. ஆனல் மாமன் என்றால், அன்புடைய மாமனு? என்ற கேள்வி உடனே எழும். அந்த வினவை உட்கொண்டே அப்பர் 'அன்புடைய' என்ற அடையை நினைவாக மறவாது அமைத்துள்ளார். இதிகாச இலக்கியங் களில் வரும் மாமன் அவ்வளவு சிறப் பாக அமையவில்லை என்பதும் இங்கே அறிதற்பாலது. மாரீசன், சகுனி, கம்சன்

போன்ற மாமன் எல்லாம் உள்ளே பகையாக மாறினமை யாரும் அறிந்ததே. அவர்களைப் போலாது, இங்கு அன்புடைய மாமனையே குறித்தார். அன்பு காட்டாது போனுல் மாமன் உறவு சிறக்காது. அன்பாகிய ஒன்றை வைத்தே மாமன் உறவு உயிர்பெற்று உலவ வேண்டும். தாய் தந்தையர்க்காயின், அவர்கள் தங்கள் அன்பை வெளிப்படுத்தி உலகுக்கு மெய்ப்பிக்கவேண்டியதில்லை. ஆனுல் மாமனுேவெனில், தனக்கு அன்பு இருக்கிறது என்பதை உலகிற்கு அடிக்கடி காட்டிக்கொண்டேயிருக்க வேண்டும். இல்லையேல் அவன் மாமன் என மதிக்கப்படான். பெற்றேர்கள் தங்களுக்குப் பிள்ளைமேல் உள்ள அன்பைப் பிறர் மெச்சுவதற்காக வெளிக்காட்ட விரும்பவும் மாட்டார்கள். மாமன் தன்னிடம் உள்ள அன்பை இல்லாத அளவுக்குப் பெரிதாக்கி வெளியிட விரும்புவான். தான் செய்யும் ஒவ்வொன்றும் அன்பின் அறிகுறி என்று அடுத்தடுத்து அழுத்திக் கூறுவான். தான் பெற்ற பெண்ணுக்காகவே எதையும் செய்கிறவன் மாமன். ஆயினும் தன் பெண்ணின் மாப்பிள்ளைக்கு அன்பு காரணமாய் எல்லாம் செய்வதுபோல் நடிப்பான். பிள்ளைக்கு உண்டி, உடை, உறையுள், மற்றும் உதவியனைத்தையும் செய்து மணமாகும் பருவத்துக்கு ஆளாக்கி விடுகிறவர்கள் பெற்றேர்கள். ஆனுல் அவர்கள் தாம் செய்த உதவியைப் பற்றி எதுவும் உலகிற்கு அறிவிப்பதில்லை. பிறர் மெச்சவேண்டும் என்றும் செய்வதில்லை. இயற்கைப் பாசத்தினுல் உந்தப்பெற்று அவர்கள் அங்ஙனம் செய்கின்றனர். ஆனுல் மகளைக் கட்டிக் கொடுத்த மாமன், மாப்பிள்ளைக்கு ஒரு புத்தாடையோ, அணியோ, பணமோ அல்லது விருந்தோ கொடுத்தால், அதை உலகிற்கு அறிவிக்கவேண்டி, பல பெரியோர்களை வரவழைத்து, நடுமனையில் வைத்துக் கட்டிமேளம் கொட்டி, தான் செய்யும் ஒருசிறு உதவியையும் மிகப் பெரிதாகக் காட்டித் தனது அன்பை ஆர்ப்பாட்டம் செய்துவிடுவான். ஆதலால் மாமன் உறவைவிட அவன் செய்யும் அன்பே பெரிதாகத் தோன்றும். ஆயினும் அவ்வுதவிச் செயல்களை அவன் செய்யும்தோறுமே அவன் அன்பு தோன்றும் அல்லாமல் எப்பொழுதும் இயல்பாகத் தோன்ருது. இதனைக் குறிக்கவே அப்பர் சுவாமிகள் 'அன்புடைய மாமனும்' என்ருர். அன்பு காட்டும் தாயோ தந்தையோ ஒவ்வோர் அமயம் வன்பு காட்டினுலும், அதனுல் அவர்களுக்கு இயல்பாகவுள்ள அன்பு அழிந்துவிடாது; ஐயப்படவும் மாட்டாது. ஆனுல் மாமன் எப்பொழுதும் அன்பு ஒன்றையே காட்டுதல் வேண்டும். எப்பொழுதாவது வன்பு தோன்றுமானுல், மாமன் உறவே மடங்கி முறிந்து மண்ணுகிவிடும். ஆகவே இங்கு அன்பை மாமனுக்கு வற்புறுத்திக் கூறினுர் என்க. அன்புடைய மாமன் என்றதால் தாய்தந்தையர் அன்பிற் குறைந்தவர்கள் என்று பொருளாகாது.

இதில் இன்னென்றும் நாம் கவனிக்கவேண்டும். அப்பன் நீ அம்மை நீ என்றதுபோல், அன்புடைய மாமனும் நீ மாமியும் நீ என்று கூருது, 'அன்புடைய மாமனும் மாமியும் நீ' என்று இணைத்துக் கூறியதில் குறிப்பு ஒன்று உண்டு. அஃதாவது, மாமனும் மாமியும் இணைந்து செயற்பட்டாலன்றி அன்பு தோன்றுவதில்லை. மாமி இல்லாமல் மாமன் அன்பு சிறக்காது: அன்பு இருக்காது என்றே சொல்லலாம். மாமியின் தூண்டுதலைக் கொண்டுதான் மாமனிடம் அன்பு உண்டாகும். மாமியில்

லாத மாமன் மருமகனிடமும், மகளிடமும் அவ்வளவு அன்பாய் இருக்கமாட்டான். ஆகவே, மாமியை வைத்துத்தான் மாமனின் அன்பு மலரவேண்டும். மாமியில்லாத மாமன் இருப்பதும் ஒன்றுதான், இல்லாததும் ஒன்றுதான். மாமன் இல்லாமல் மாமியில்லை. மாமியில்லாமல் மாமன் இல்லை; ஆகவே மாமனும் மாமியும் என்று இணைத்தார். மாமனும் மாமியும் இருந்தால் மட்டும் போதாது. அவர்களுக்கு அன்பும் இருக்க வேண்டும், அவர்களிடையேயும் அன்பு இருக்க வேண்டும். ஆகவே, "அன்புடைய மாமனும் மாமியும் நீ" என்றார். இதனால் இங்குக் கூறப்பட்ட மாமன் பெண்ணைக் கொடுத்த மாமன் என்பதும் நன்கு புலனாகும். வெறும் தாய் மாமனை இங்குக் குறிப்பிடவில்லை. மாமன் மாமியர் உறவு கொடுத்துக் கொடுத்தே உறுதிப்பட வேண்டியிருத்தலின், "அன்புடைய மாமனும் மாமியும் நீ" என்றார் என்றும் கொள்க. கொடை குன்றினால் அன்பும் குன்றியதாகவே கருதப்படுமாதலின், கொடுத்துக் கொடுத்து அன்பை எடுத்துக் காட்டுதல் வேண்டும். "மாமனும் மருகனும் போலும் அன்பின" என்று சீவக சிந்தாமணியில் திருத்தக்க தேவரும் அன்பையே முக்கியமாக வற்புறுத்தினர். அதனை விளக்கவந்த நச்சினார்க்கினியரும். "ஒன்றுக்கொன்று பிற்படின் வருந்துமென்று அன்பு கூறினர்" என்று குறிப்பிட்டுள்ளார்.

அடுத்து, அந்த மாமன் மாமியின் அருமை மகளாய் ஒருவனுக்கு வந்து வாய்த்த வாழ்க்கை துணையான மனைவியை "ஒப்புடைய மாதரும்" என்றார் அப்பர். உயிருக்கு ஒப்பான மாது மனைவியாதலின், ஒப்புடைய மாதரும் என்றார். ஒப்பு என்பதை அழகு எனக் கொண்டு, அழகுள்ள மனைவி என்றும் சொல்லலாம். மற்றும், இலக்கண நூலோர் கூறியாங்குக் கணவனுக்கு ஒத்த இல்லக்கிழத்தியாய் இல்லறம் நடத்திவரும் மனைவி என்றும் கூறலாம். பெற்றோர்களுக்குப்பின், ஒருவனுக்கு மனைவியை விடச் சிறந்தவர்கள் வேறில்லை. "பொற்றொடியோடு எவையும் போம்" என்ற பொன்மொழியையும் நோக்குக. மனையாள் கணவனிடம் செலுத்தும் அன்பு போன்றும் இறைவன் உயிர்களிடத்து அன்பு செலுத்துவான். பத்தித்துறையில் பயின்றுவரும் சில அகப்பொருட்பாடல்களாலும், திருக்கோவையார் போன்ற நூல்களாலும் இதனை அறியலாம். மகவு இல்லாமல் கணவன் மனைவி உறவு சிறக்காது என்பதைக் குறிக்க, "மாதரும் ஒண்பொருளும் நீ" என இணைத்துக் கூறினர்.

"மனைக்கு விளக்கம் மடவாள், மடவாள் தனக்கு மதிசால் புதல்வர்" என்றும், "மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன் நன்கலம் நன்மக்கட் பேறு" என்றும் வரும் ஆன்றோர் வாக்கினை ஒப்ப, அப்பரும், மாதரையடுத்து "ஒண்பொருளும் நீ" என்றார். பொருள் என்பது குழந்தையைக் குறிக்கும். ஒண்பொருள் என்றது அறிவுள்ள குழந்தையை. "பெறுமவற்றுள் யாமறிவதில்லை, அறிவறிந்த, மக்கட்பேறல்ல பிற" என்பது தமிழ்மறை. சேயோடு தான்பெற்ற செல்வம் போம் ஆதலின் மக்களைப் பொருள் என்றார். "தம் பொருள் என்ப தம் மக்கள்" என்று திருக்குறளிலும் வந்துள்ளது. "மயக்குடை மக்களையில்லோர்க்குப் பயக்குறையில்லைத் தாம் வாழுநாளே" என்று புறநானூறு புகல்கின்றது. புத் என்னும் நரகில் கிடக்கவிடாமல் காப்பவன் புத்திரன் என்று வேதம் கூறுகின்றது. குழந்தையால் ஒருவன் அடையும் இன்பமும்

பயன்களும் பலவுள. அவற்றையும் இறைவன் உயிர்களுக்குப் பிள்ளைபோல் முன்னின்று அளிக்கிறான் என்றார்.

பின்னர், "ஒருகுலமும் சுற்றமும் ஓர் ஊரும் நீ" என்றார். குலம் என்பது இனம் அல்லது சாதியைச் சுட்டி நின்றது. ஓர் இனத்தவர்களும் ஒரு சாதியினரும் ஒருவரை யொருவர் இனப் பற்றுக் கொண்டு ஒருகுலமாதல்கருதி ஒன்றுற்ற போது ஒன்றாக நின்று உதவிசெய்வர். சுற்றம் என்றது உற்றார் உறவினர்களை யும் நண்பர்களையும். நண்பர்களிடையே வளரும் அன்புக்கு எல்லையில்லை. அது போலவே ஓர் ஊரினரும், நாட்டினரும், ஊர்ப்பற்று, இடப்பற்று அல்லது நாட்டுப்பற்றுக் கொண்டு ஒன்றுபட்டு ஒருவருக்கொருவர் உதவிநிற்பர். மனித இனம் முழுதையும் மனிதக்குலம் என ஒரு குலமாகக்கொண்டு உதவுவதும் உண்டு. அத்தகைய உதவிகளையும் இறைவன் அவ்வாறே உயிர்களுக்கு அளிக்கவல்லவன் என்பார், "ஒருகுலமும் சுற்றமும் ஓர் ஊரும் நீ" என்றார். "ஒருதோழன்" என்ற மணிவாக்கும் "தோழனுமாய்" என்ற சுந்தரவாக்கும் இங்கே நினைக்கத்தகும்.

உண்ணப்படுவனவற்றைத் துய்ப்பன என்றார். அனுபவிக்கப்படுவன வற்றை உய்ப்பன என்றார். துய்க்கும் பொருள்களும் உய்க்கும் பொருள்களும் உயிர்களுக்கு இன்பம் தருகின்றன. அவ் வின்பங்களையும் இறைவன் அளிக்க வல்லவன் என்றார். போகப் பொருள் களைக் கூறவந்த இடத்து, பொன்னையும் மணியையும் முத்தையும் கூட்டி, அவை யும் அவற்றான் ஆம் இன்பமும் கடவுளே என்றார். இறைவன் என்றது இங்கே கடவுளையும் குறிக்கும், அரசனையும் குறிக் கும். நாட்டை ஆளும் அரசனால் உயிர் கள் அடையும் பயன்களும் பல உள்ளன. அவற்றையும் கடவுளே தரவல்லவன் என்பார் "இறைவன் நீ" என்றார். மற்றும், நீயே கடவுள் என்றும் பொருள் கொள்ளலாம்.

இங்கு நாம் கவனிக்கவேண்டியது ஒன்று உண்டு. அப்பன் நீ அம்மை நீ என்று ஒவ்வொருவரையும் தனித்தனி யாக எடுத்துக்கூறவேண்டுவது என்னை? அப்பன், அம்மை, குரு, மாமன், மாமி, மனைவி, மகன், நண்பன், அரசன் முதலியோர் அவரவர் நிலைக்கு ஏற்ப ஒவ்வொருவிதத்தில் ஒவ்வொரு வேளை யில் உதவுவர். ஆனால் பெருந்துன்பம் வந்தஇடத்து நழுவி ஓடுவர். மேலும் தந்தை அறிவோடு கூடியவற்றைச் செய்யப்பார்ப்பான், அம்மை அன்போடு கூடியவற்றைச் செய்வாள். தந்தை தனக்கு விருப்பமானதைச் செய்வான். தாயார் பிள்ளைக்கு விருப்பமானதைச் செய்வாள். தாய் செய்வதை மனைவி செய்யமாட்டாள். மனைவி செய்வதை மற்றவர்கள் செய்யமுடியாது. இங்ஙனம் ஒவ்வொருத்தர் ஒவ்வொரு திறத்திலே யே உதவி செய்வாராக, ஏறார்ந்த செல்வ னாகிய கடவுள் நலம் தீங்கிலும் நம்மைக் கைவிடாது எல்லாவித உறவினர் செய் வதையும் தானே செய்து, நம்மைவிட்டு நீங்காது உயிருக்குயிராய் உடனாய் நிற் பன் என்பதை அப்பர் அழகாக நமக்கு அறிவுறுத்தியுள்ளார். அதுமட்டுமா?

முடிவாக, "துணையாய் என் நெஞ் சம் துறப்பிப்பாய் நீ" என்றார். இதன் பொருள், 'நீ எனக்கு வாய்த்த உண் மைத் துணையாக நீங்காது நின்று. நான் என் நெஞ்சில் உண்மைத் துணையென இதுவரை நம்பியிருந்த உற்றோர் மற் றோர்களிடத்தும் உறுபொருள்களிடத் தும் வைத்திருந்த பற்றுக்களைப் பொய் யென்று கண்டு களையும்படி செய்து அழி யாத களைகணாய் நின்று அஞ்சேல் என்று

அருள்புரியும் ஆண்டவனுவாய்' என்பதாகும். எனவே, அப்பன் நீ அம்மை நீ என்று ஒவ்வோர் உறவினராகக் கூறி வந்தது அவ்வுறவு முறையார் வந்தவாறும் போமாறும் உணர்ந்து மாயமாம் எனக்கொண்டு துறப்பதற்கேயாகும். சந்தைக் கூட்டமான தந்தை தாய் தாரம் எனும் பந்தம் நீங்காதவர்க்கு உய்ந்து போக்கில்லை என்பதை உணர்வதுவே இப்பாடலின் பயன். எவ்வகைச் சுற்றத்தாரும் எம்மாடு சும்மாடே என விட்டவர் அல்லவா அப்பர் அடிகள்! நமக்கு உண்மையான துணையும் சுற்றமும் பொருளும் மற்றும் எல்லாம் சிவபெருமான் ஒருவனே என்பதைப் பசுமரத்தாணி போல் பதியவைக்கின்றது இப்பாடல். இவ்வாறு பொய்யான உறவுகளைப் போக்கி மெய்யான உறவினை மெய்ப்பிக்கும் இவ்வருமைத் திருத்தாண்டகப் பாடலை ஓதியோதி உள்ளம் நெக்குருகுவதன்றி, அதன் உள்ளடங்கிய பொருளையெல்லாம் 'விள்ளத்தான் முடியுமா? இப்பாடலின் பொருளைத் தொழுது துதிப்பதன்றி எழுதிக் காட்டொணுதே.



மலர்ந்து மனத்தைக் கவர்ந்து மறைகின்ற மலர்கள் — கனிந்து கருத்தைக் கவர்ந்து இனிக்கின்ற பழங்கள் எல்லாம் வளர்ச்சியும் தேய்வும் உடையன என்பதை யாரால் மறுக்க முடியும்? ஆதலால் இவை செயற்கையே. செயற்கைகள் எல்லாம் கருத்தாவை உடையனவே. அந்தக் கருத்தா வளர்ச்சியும் தேய்வும் இல்லாமல் — அதாவது தான் செயற்கையாகிவிடாமல் இருக்கவேண்டும். ஆதலால் அவனுக்கு முதல் இல்லை; முதல் இல்லையாகவே அவனுக்கு முடிவும் இல்லை என்பது தெளிவு. அவனுடைய அருள் விளையாட்டின் ஆக்கமே இந்தக் காடும், மலையும், கடலும், வளமும், வயலுமாகிய எல்லாம்.

— கயிலைக் குருமணி.

# தாண்டக வேந்தர் திருவாக்கில் சாத்திர நுட்பங்கள்

"தருமையாதீனப்புலவர்" பாலகவி, வயிநாகரம்

திரு. வே. இராமநாதன் செட்டியார்

"தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே" என்பது அப்பரடிகள் திருவாக்கு. சித்தாந்த சைவச் செந்தமிழ்ப் பெருமக்களாகிய நமது, இரண்டு கண்களையும் ஒத்துத் திகழ்வன, தோத்திரமும், சாத்திரமும். தோத்திர சாத்திரங்கள், சிவபெருமானது வடிவங்களாய் அமைந்தவை. ஆன்மார்த்த பூசைக்குரிய க்ஷணிகலிங்க வகைகளுள் தோத்திர சாத்திரங்களும் இடம் பெற்றிருப்பதனுல், இது நன்கு விளங்கும்.

தோத்திரங்கள் என்பன தேவாரம் முதல் திருத்தொண்டர் புராணம் இறுதியாகவுள்ள பன்னிரு திருமுறைகளும்; சாத்திரங்கள் என்பன திருவுந்தியார் முதல் சங்கற்ப நிராகரணம் இறுதியாகவுள்ள பதினன்கு மெய்கண்ட நூல்களுமாம். இத்தோத்திர சாத்திரங்களாகிய நூல்கள், பொருள்களை நுவலும் முறை பற்றி இரண்டு வகைகளில் வைத்துப் பேசப்பெறுகின்றனவேனும், அப்பொருள்களை முடித்துக் காட்டுகின்ற முறையில் ஒரு வகையினவாகவே உரைக்கப் பெறும். இக்கருத்துப்பற்றியே

"வேதம் பசுவதன்பால் மெய்யா
கமம் நால்வர்
ஓதும் தமிழதனின் உள்ளுறுநெய் —
போதமிகு
நெய்யின் உறுசுவையாம்
நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம்"

என்று ஆன்றோர் அருளிச் செய்திருக்கின்றனர்.

சொல்வடிவான தோத்திர சாத்திரங்களோடு, அச்சொற்பொருள் வடிவான சிவபரம்பொருள் அநந்நியமாய் ஒன்றியிருப்பதனுலேயே "சொல்லும் பொருளெலாம் ஆனார் தாமே" என்றருளிய நமது ஞானசிரியர், அதனையடுத்துத் "தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே" என்று திருவாய் மலர்ந்தருளுவாராயினர்.

தோத்திர நூல்களெல்லாம் துதிரூபமாயமைந்து, ஆன்மாக்கள் ஆண்டவனது திருவருளை அடைவதற்குத் துணை செய்யும். சாத்திர நூல்கள் விதிரூபமாயிருந்து, அவர்கள் அப்பயனை அடைவதற்கு அநுகூலமாயிருக்கும். இடக்கண்ணும் வலக்கண்ணுமாகிய இரண்டினுலும் பார்க்கப்பெறும் பொருள் ஒன்றேயாதல் போலத் தோத்திர சாத்திரங்களாகிய இரண்டினுலும் சித்திக்கின்ற பயனும் ஒன்ருகவே இருக்கும்.

வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவனுகிய சிவபெருமானுல் அருளிச் செய்யப்பெற்ற முதனூல்கள், வேதசிவாகமங்கள். இவற்றின் முடிந்த முடிபாகிய ஞானபாதப் பொருளுண்மையைத் தோத்திர சாத்திரங்கள் செவ்விதிற் புலப்படுத்திக் கொண்டிருக்கின்றன. தோத்திரங்களாகிய திருமுறைகள், பதிப்

பொருளுக்குத் துதிகூறுதலை முன்னிலைப் படுத்திக்கொண்டு, அப்பதிப்பொருளின் உபகார இயல்புகளையும், அவ்வுபகாரத் தைப் பந்தம் விடு ஆகிய இருநிலைகளி லும் பெற்று வருகின்ற ஆன்மாக்களின் அநுபவ இயல்புகளையும், அவ்வான் மாநுபவம் நிலையில்லாத சிற்றின்பமாக அல்லது துன்பமாக நிகழுவதற்கு ஏதுவாகிய பாச இயல்புகளையும், ஆங்காங்கே வெளிப்படுத்திக் கொண் டிருக்கின்றன. சாத்திரங்களாகிய மெய் கண்ட நூல்கள் பதி, பசு, பாசமென்னும் முப்பொருள்களின் உண்மை இலக்கண மாதியவற்றையும், பசு, பாசத்திலிருந்து விடுபட்டுப் பதியைச் சேருதற்கு மேற் கொள்ள வேண்டிய சாதனத்தையும் அதனல் அடையும் பயனையும் இலக்கண முறையால் தெளிவுபடுத்திக் கொண் டிருக்கின்றன.

தோத்திரங்களாகிய திருமுறைகளை அருளிச்செய்த ஆசிரியர் இருபத்தெழு வருள் இரண்டாமவராக விளங்குபவர் திருநாவுக்கரசு சுவாமிகள். இவரது திருவாக்குகள் நாலாம், ஐந்தாம், ஆறும் திருமுறைகளாக உள்ளன. இத்திரு முறைகளில் சாத்திரக்கருத்துக்கள் திறம் பெற அமைந்து திகழ்ந்து கொண்டிருக் கின்றன.

நான்காந் திருமுறையின் முதல் திருப்பாடல்

" கூற்ருயினவாறு விலக்ககிலிர்
கொடுமைபல செய்தன நானறியேன்
ஏற்ருயடிக்கே இரவும்பகலும்
பிரியாதுவணங்குவன் எப்பொழுதும்
தோற்ருதென் வயிற்றின் அகம்படியே
குடரோடு துடக்கிமுடக்கியிட
ஆற்றேனடியேன் அதிகைக்கெடில
விரட்டானத் துறை அம்மானே "

என்பதாகும்.

ஆன்மாக்கள், முன்னைப் பிறவிகளில் செய்த நல்வினை தீவினைகளுக்கேற்ப இம்மைப் பிறவிகளை எய்துகின்றன என்பதும், பிறந்த பிறகும் அவ்வினை களுக்கேற்பவே இன்ப துன்பப்பயன்களை நுகர்கின்றன என்பதும், எடுத்த பிறவி யில் புசிக்க நின்ற வினைப்பகுதி நுகரப் பெற்று ஒழிந்தபொழுது அவ்வெடுத்த உடல்விட்டு அவை பிரிந்து விடுகின்றன என்பதும், இங்ஙனம் உயிர்கள்தோறும் வெவ்வேறு வகைப்பட நிற்கும் வினைப் போகங்களைக் காலமறிந்து, இடமறிந்து, நியதி வழுவாது ஊட்டுபவன் பரம் பொருள் ஆகிய சிவபெருமானே என்ப தும் சிவஞானப் பெருநூல்களாகிய சாத்திரங்களிற் கண்ட முடிபுகளாகும்.

" பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச்
சாக்கா டென்னும்
ஆறுமுன் கருவுட் பட்ட தவ்விதி
அனுப வத்தால்
ஏறிடும் முன்பு செய்த கன்மமிங்
கிவற்றிற் கேது
தேறுநீ இனிச்செய் கன்மம் மேலுடற்
சேரு மென்றே "

என்ற சிவஞான சித்தித் திருவிருத்தமும்

" செய்வானும் செய்வினையும் சேர்
பயனும் சேர்ப்பானும் உய்வான்
உளனென் றுணர் "

என்ற திருவருட்பயன் திருக்குறளும் இதனைத் தெளிவு செய்வனவாகும்.

வினையின் பயனுக வந்த உடம்பு, அவ்வினையை நுகர்ந்தொழித்த அளவில் ஒழியாது. மேல்வினையை ஈட்டுவதற்கும் ஏதுவாய் இருத்தலின், உயிர்கள் பிறப்பு இறப்பாகிய பெருஞ்சுழலில் இருந்து தப்பி, வினைநீக்கம்பெற்று, வீடு பேறு அடையுமாறு எங்ஙனம் என்பதற்கும்

நமது ஞானசாத்திரம் விடைதருகின்றது. முன்னைப் பிறவிகளில் ஈட்டப்பெற்றுச் சேர்ந்து கிடக்கின்ற பெருவினை "சஞ்சிதம்" எனப்பெறும். அதில் இம்மைப்பிறவியில் நுகர நின்ற பகுதி "பிராரத்தம்" எனப்படும். எடுத்த பிறவியில் புதிதாக ஈட்டப்பெறுவதை "ஆகாமியம்" என்று சொல்லுவர்.

இவற்றுள், சஞ்சிதவினை சிவதீக்ஷையால் ஒழியும். பிராரத்தவினை அனுபவத்தால் நீங்கும். ஆகாமிய வினையை ஏருமல் தடுத்து நிறுத்த வல்லது ஆண்டவனுடைய திருவருள் ஒன்றே. யான் செய்தேன், பிறர் செய்தார், என்னது, யான் என்னும் இக்கோணையை, ஞான எரியால் வெதுப்பி, அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனுகி, இறைபணி நிற்கும் பக்குவான்மாக்களது அறிவு, இச்சை. செயல்கள் சிவ பெருமானது அறிவு. இச்சை, செயல்களுக்குள் அடங்கிச், சுதந்தரமிழந்து நிற்கும். அதனுல் அவர்களது செயல்களெல்லாம், சிவச்செயல்களாக நிற்பதன்றிச், சீவச்செயல்களாக நிற்கமாட்டா. இதனுல், சிவஞானிகளுக்கு ஆகாமியவினை ஏறுவதில்லை.

இனிப், பிராரத்தவினையும் சிவஞானிகளால் நுகரப்பெறுகிற பொழுது, உயிரைச் சென்று தாக்குகின்ற இன்பதுன்பங்களாக நிகழாது. உடலளவில் நின்று ஒழிகின்ற அநுபவமாக மட்டும் கழிந்து விடுகின்றது. இவ்வுண்மையைச், சிவஞானபோதம் பத்தாம் சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்தில் உள்ள 'அவனருளாலல்லது ஒன்றையும் செய்யானுகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியா வாகலான்" என்னும் ஏதுவானும் "அவ்விறைபணியாகிய அடிமைத் திறமுடையார் எவ்வுடம்பினின்று எவ்வினைகளைச்செய்யினும் அவை அவர்க்குப் பந்தமாதல் இல்லை. அவ்வாகாமிய வினையை அவினுபாவமாய் உடன் கொண்டு வருவதாகிய பிராரத்த வினையும் தன்னைக் கூட்டுவிக்கும் முதல்வன் சன்னிதியில் உடல் ஊழாய் ஒழிவதன்றி ஏனையோர்க்குப் போல அவர்க்காதல் இல்லையாகலான் என்க' என்ற பாடியத்தானும் அறியலாம்.

"தீயவை தீய பயத்தலால் தீயவை, தீயினும் அஞ்சப்படும்" என்பது பொதுமறை. கொடுமை செய்யாதவர்களுக்குக் கூற்றினுங்கொடிய துன்பம் வருவதற்கு இடமில்லை. செய்வினைப் பயனைச் செய்வானிடத்தில் சேர்ப்பவனுகிய சிவபெருமான், செய்வான் சிவபோதம் நீங்கிச் சிவபோதனுய் நின்றபொழுது, அப்பயன் அவனுக்கு ஆகுமாறில்லையாகச் செய்தருளுகின்றுன். அப்பரடிகள் திருவாக்கில், அவரனுபவித்த சூலைநோய்த் துன்பம் "கூற்று" எனக் குறிக்கப்பெற்றது. பெருந் துன்பம் செய்கின்ற கூற்றுவனிலும் பெரிதாக அந்நோய், அவரைத் துன்புறுத்தியதென்பதைத் "தோற்றுது என் வயிற்றின் அகம்படியே குடரோடு துடக்கி முடக்கியிட ஆற்றேன்" என்று பின்னரும் அவர் கூறுவார். மிகப்பெரிய இத்துன்பம், முன்பு செய்த கொடுமைகளின் பயனுகவே. வந்திருக்கவேண்டுமென்பதை உறுதியாக அறிந்த அவர், அதனை நமக்கு அறிவிக்கக் "கொடுமை பல செய்தன நானறியேன்" என்றுரைத்தருளினர்.

ஆன்மாக்கள் செய்யும் செயல்களில் அறிந்து செய்வன அறியாது செய்வன (புத்தி பூர்வம் - அபுத்தி பூர்வம்) என இரண்டு வகையுண்டு. அவற்றில், அறிந்து செய்யும் கொடுமைகளுக்குக் கடுமையான தண்டனையையும், அறியாது

செய்யும் கொடுமைகளுக்கு எளிமையான தண்டனையையும் ஆண்டவன் தருவான். சுவாமிகள் அடைந்த சூலைநோய்த் துன்பம், பெரியதிற்பெரியது. அதற்குரிய புத்திபூர்வக் கொடுமைகளை அவர் செய்ததில்லை என்கிறார். அங்ஙனமாயின் அத்துன்பத்திற்குக் காரணமென்னை? காரியத்தைக்கொண்டு காரணத்தை உறுதிசெய்து கொள்ளுதல் வேண்டும். பெருந் துன்பமாகி நிகழுகின்ற காரியம், புத்திபூர்வமான பெருங் கொடுமை என்னும் காரணத்தை முன்னாக உடையது. அதுகொண்டு, இந்தப் பிறவியில் சுவாமிகளால் புத்திபூர்வமாகச் செய்யப்பெறுவனவும் முன்னைப் பிறவிகளில் அவ்வாறு செய்யப்பெற்றனவுமான வினைகள் அவருக்கிருந்தன என்பதையும், அதனாலேயே கூற்றுவன் போன்று இடர் உறுத்தும் துன்பம் அவரை வந்து அடைந்ததென்பதையும் ஊகித்து உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

"ஏற்றாய்" என்பது இடபத்தையுடையாய் என்னும் பொருளோடு, 'என்னை ஏற்றுக்கொண்டாய்' என்னும் பொருளையும் உடையது. "அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும், குன்றே அனையாய் என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ" என்பது மணிவாசகம். இதற்கேற்பவே, நீண்டவரை வில்லியாராகிய திருவதிகைப் பெருமான், வெஞ்சூலை மடுத்தருளி ஆண்டு ஏற்றுக்கொண்ட பிறகு, சுவாமிகள் இரவு பகல் இடையீடின்றிச் சிவ வியாபகத்துள் அடங்கிநின்றார். இதனை "இரவும் பகலும் பிரியாது வணங்குவன் எப்பொழுதும்" என்பது நன்கு புலப்படுத்தும்.

குடரோடு துடக்கி முடக்குவதாகிய சூலை, பிராரத்தத்தால் வந்ததென்பதும், அது உயிருமாய் வருத்தாது உடலூமாய்க் கழிதல் திருவருள் ஒன்றினாலேயே நிகழத் தக்கதென்பதும், அச்சூலை நோயை அநுபவிக்கும்பொழுது உண்டாகின்ற துன்பத்தால் வரும் வெறுப்பினால் ஏறுகின்ற ஆகாமிய வினைக்கு அஞ்சியே அத்துன்பாநுபவநீக்கம் வேண்டிக் "குடரோடு துடக்கி முடக்கியிட ஆற்றேன்" என்று அருளிச் செய்தாரென்பதும் உணரத் தக்கனவாம்.

"ஏற்றாய்" என்று இறைவனை விளித்துச், சேதனாசேதனப் பிரபஞ்சங்கள் அனைத்தும், இறைவனது அடிமைகளாகவும் உடைமைகளாகவும் இருப்பதைப் புலப்படுத்திய ஆசிரியர், சேதனப் பொருள்களாகிய ஆன்மாக்கள் எல்லாம், ஆண்டவனது அடிமைகள் என்பதை வலியுறுத்தத் தன்னை "அடியேன்" என்று குறிப்பாராயினர். அடிமைத்திறம் பூணாத எவருக்கும், ஆண்டவன் விரைவில் துயர்நீக்கி அருள் புரியுமாறு இல்லையென்பதும், இங்கே குறிப்பால் உணரக்கிடக்கிறது.

இத்திருப்பாடலில் "கொடுமை பல செய்தன" என்பதனால் சஞ்சித வினை உண்மையையும், "என் வயிற்றின் அகம்படியே குடரோடு துடக்கி முடக்கியிட" - "கூற்றாயினவாறு" என்பன வற்றால், பிராரத்த ஆகாமிய வினை உண்மைகளையும் "நான்" - "ஆற்றேன்" என்பவற்றால் உயிருண்மை அநுபவ உண்மைகளையும், "அறியேன்" என்பதால், புத்திபூர்வ அபுத்தி பூர்வச் செயல்கள் உண்மைகளையும், "ஏற்றாய்" - "அடியேன்" - "வீரட்டானத் துறை அம்மானே" என்பனவற்றால், ஆண்டானடிமை உண்மை, பதி உண்மைகளையும் "விலக்ககிலீர்" என்பதனால், திருவருள் உண்மையையும் "அடிக்கே

இரவும் பகலும் பிரியாது வணங்குவன் எப்பொழுதும்'' என்பதனுல், வழிபாட்டு உண்மையையும் ''தோற்ருது'' என்பதனுல், வினையநுபவங்களுக்குக் காரண மறிய மாட்டாத ஆன்மாக்களின் சிற்றறிவுண்மையையும் நமது அருளாசிரியர் உணர வைத்துள்ளார். சைவநெறி அல்லவற்றுக்கில்லாத இச்சிறப்பியல்புகளை, இங்ஙனம் இம்முதற்றிருப்பாடலிலேயே அமையுமாறு அருளித் தந்திருக்கிற அப்பர் பெருமானது திருவடி மலர்களை இடையருது சிந்தித்து, அவரது திருவாக்கிலும் மற்றைத் திருமுறைகளிலும் பொதிந்து கிடக்கின்ற சித்தாந்த சைவ நலன்களை நுகர்ந்து, திருவருள் பெற்று உய்வோமாக !

நலம் பெருகுக.



"உப்பிட்டவரை உள்ளளவும் நினை" என்கிறது பாட்டிப் பழமொழி. அப்படியிருக்க நம்முடைய காலத்துக்கு - கருத்துக்கு ஏற்ருற்போலக் கண் முதலிய இந்திரியங்களுக்கு இன்பத்தை அளந்து இறுதி வரையில் கொடுத்துக் கொண்டேயிருக்கிற உபகாரத்தை - உபகாரியை மறக்கலாமோ? உலக இன்பங்களை அனுபவிக்கக் கண்ணுக்குப் பார்வையையும், காதுக்குக் கேட்கும் சக்தியையும், உடம்புக்குத் தன்னளவில் வியாபகமாகிய ஸ்பரிச சக்தியையும் தந்து காக்கின்ற உபகாரியை மறக்கலாமோ?

* * *

அநாதியே ஆற்றுப் பிரவாகம் போல இடையருது வந்துகொண்டிருக்கும் பிறப்பு இறப்புத் துன்பத்தைப் போக்கி நிரதிசயானந்த இன்பத்தை அளிப்பது வீடு. ஆதலால், ஞானிகள் அதனையே விரும்புகிருர்கள். சிற்றின்பம் மதுமயக்கம் போல்வது. பேரின்பம் கடவுளுணர்ச்சியால் எய்துவது. அதற்கு ஒப்பே இல்லை.

— கயிலைக் குருமணி.

# அப்பர் தேவாரம் - சரித்திரக் குறிப்புக்கள்

" செஞ்சொற்கொண்டல் "

வித்துவான். திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ.

கலைகள் செழித்த காலம் :

அப்பர் பெருமான் பல்லவப் பெருமன்னராக விளங்கிய மகேந்திரவர்மர் ( கி. பி. 615 - 630 ) காலத்தே வாழ்ந்த அருளாசிரியர் என்பது ஆராய்ச்சியாளர் கருத்தாகும்.[1] பல்லவப் பெருமன்னராக விளங்கிய இம் முதல் மகேந்திரவர்மர் ஆட்சியின் முற்பகுதியில் சமணமும், பிற்பகுதியில் சைவமும் செல்வாக்குப் பெற்றிருந்தன. குகைகளைக் கோயில்களாக்கியும், பாறைகளைக் கோயில்களாக்கியும் சமயத் தொண்டு புரிந்த பெருமன்னர் இவர். பல்லவர் சாளுக்கியர் போர் இவர் காலத்தில் உச்சநிலையை எய்திற்று. சிற்பம், நாடகம், ஓவியம், இசை, நடனம் முதலிய பல கலைகளும் இப்பேரரசர் காலத்துப் பெருகிச் செழித்தன. அப்பர் பெருமான் இக் காலத்தே வாழ்ந்து அருந்தமிழ்த் தொண்டும், ஆன்மீகத் தொண்டும் புரிந்தார் ; இவர்தம் அருட்பாடல்களில் காணப்பெறும் குறிப்புக்களில் பெரும்பாலன இக்கால வரலாற்றை அறிவதற்குப் பெருந்துணையாகும் ; அவற்றுட் சிலவற்றை எடுத்தாராய்வதே நம் சிந்தனையாகும்.

அப்பர் தேவாரம் காட்டும் அக்காலக் கோயில் வகைகள் :

அப்பர் காலத்தில் தமிழ்நாட்டில் ஏறத்தாழ இருநூறு கோயில்கள் இருந்தன. சங்ககாலத்தையொட்டி இக் கோயில்கள் யாவும் மரம், செங்கல், முதலியவற்றால் இயன்றவையேயாகும். மகேந்திரவர்மருடைய மண்டபப்பட்டுக் கல்வெட்டினால், இவை நிலையானவையாக மாற்றத் தக்க கருங்கற்றளிகளாக இக் காலத்தேயே எடுக்கப் பெற்றன எனலாம். (1) பெருங்கோயில் (2) இளங்கோயில் (3) மணிக்கோயில் (4) கரக்கோயில் (5) ஞாழற்கோயில் ... 

(4) கரக்கோயில் (5) தூங்கானைமாடம்[2] ஆகிய பலவகைப்பட்டிருந்தன அக்காலக் கோயில்கள். அப்பர் பெருமான் தேவாரத்தில் இவ்வகைகள் இனிது தெளிவாகப் பாடப்பட்டிருத்தல் அறியலாம். அப்பர் சுவாமிகள்,

" தோற்றும் கோயிலும் தோன்றிய கோயிலும்  
வேற்றுக் கோயில் பலவுள ; மியச்சூர்க்  
கூற்றம் பாய்ந்த குளிர்புன் சடையரற்கு  
ஏற்றம் கோயில் கண்மீர் இளங்கோயிலே " ( 5-11-1 )

---

[1] பல்லவர் வரலாறு - டாக்டர். மா. இராசமாணிக்கனார் - பக். 90.

[2] தூங்கானைமாடம் - அப்பர் தேவாரம் - 4 - 109 - 1 - 10.  
கரக்கோயில் ,, 5 - 19 - 1 - 10.  
பூங்கோயில் ,, 4 - 19 - 5.

எனப் பாடுவதால், (1) அடிகள் காலத்திற்கு முன்பே நம் நாட்டில் பல கோயில்கள் தோன்றியிருந்தன என்பதும், (2) அடிகள் காலத்தேயே பல்லவமன்னன் திருப்பணிகளால் தோற்றிக்கொண்டிருக்கும் கோயில்கள் பல இருந்தன என்பதும், (3) இவையிரண்டுமல்லாது மிகப் பழங்கோயில்களாக இருந்தன பல என்பதும் அறியலாம். முதலாம் மகேந்திரவர்மர் மாமண்டூர், மகேந்திரவாடி, சிங்கவரம், நாமக்கல் ஆகிய இடங்களில் அமைத்த திருமால் கோயில்களும், சியமங்கலம், பல்லாவரம், வல்லம், தளவானூர், திருக்கழுக்குன்றம், திருச்சிராப்பள்ளி ஆகிய இடங்களில் அமைத்த சிவன் கோயில்களும், மண்டபப்பட்டில் அமைத்த மும்மூர்த்திக் கோயிலும், சித்தன்னவாசலில் அமைத்த சமணர்கோயில்களும் ஆகிய அனைத்தும் சற்றேறக்குறைய அப்பர் சுவாமிகள் காலத்துத் தோன்றிய கோயில்களே ஆகும்.* கோச்செங்கட்சோழன் ( கி. பி. 200 - 250 ) கட்டிய எழுபது கோயில்கள் பற்றியும் அப்பர் சுவாமிகள் அருளியுள்ளார். ஆகவே அப்பர் சுவாமிகள் இவ்விடத்துத் தரும் குறிப்புக் கோயில் வரலாறு பற்றிய தொன்மையும், தோற்றமும் காட்டுவதாகும்.

## அப்பர் அருளிய முதற்றிருப்பதிகம் :

மகேந்திரவர்மர் சமணத்திலிருந்து சைவம் சார்ந்தகாலம் கி. பி. 620 ஆகலாம் என்பர். அதனையொட்டியே அப்பர்பெருமான் சூலைநோயால் ஆட்கொள்ளப் பெற்றுராதல் வேண்டும். ஆதலால் " கூற்றாயினவாறு " எனத் தொடங்கும் அடிகள் முதற்றிருப்பதிகம் கி. பி. 620 க்குச் சற்று முன்னோ பின்னோ தோன்றியிருத்தல் வேண்டும் எனலாம்.

## ஆறு சமயங்களின் நிலை :

இக்காலத்தில் தமிழ் நாட்டில் சைவசமயம் பல கிளைகளாகப் பிரிந்திருந்தது: காளாமுகர், காபாலிகர், பாசுபதர் முதலிய பலவகைப்பட்டவர் தமிழ் நாட்டில் வாழலாயினர்; இவர்களது கொள்கை முதலியவை தமிழருடன் மாறுபட்டனவேனும் காலப்போக்கில் இவர்கள் கொள்கைகள் சைவசமயக் கருத்துக்களுடன் கலக்கவும் தலைப்பட்டுவிட்டன. கி. பி. 3-ஆம் நூற்றாண்டிற்குப்பின் கி. பி. 6-ஆம் நூற்றாண்டிற்கிடையே இக்கலப்பு ஏற்பட்டிருக்கலாம் என்பது ஆராய்ச்சி அறிஞர் கருத்து. கி. பி. 7ம் நூற்றாண்டிலே வாழ்ந்த அப்பர் பெருமான் இவர்களைக் கண்டனர்; தம் தேவாரப் பாக்களில் இவர்கள் நாட்டில், பல சிவதலங்களில் வாழ்ந்து தம் சமய வொழுகலாற்றை மக்களுக்கு உணர்த்திவந்த நிலையைக் கண்டனர் :

" அருமணித் தடம் பூண்முலையரம் பையரோ டருளிப்பாடியர்
உரிமையிற் றொழுவார் உருத்திர பல்கணத்தார்
விரிசடை விரதிகள் அந்தணர் சைவர் பாசுபதர்கபாலிகர்
தெருவினிற் பொலியும் திருவாரூரம்மானே." ( 4-20-3 )

என்று பாடியருளினர்; தமிழ்நாட்டின் உயிர்த்தலமாகிய திருவாரூரில் இந்த மாவிரதியர், அந்தணர், சைவர், பாசுபதர், காபாலிகர் ஆகியோர் தெருக்களில் திகழ்ந்தனர் என்பதை நோக்க, இவ்வகச்சமயிகள் நிலையினை நன்குணரலாகிறது.

---

* பல்லவர் வரலாறு - பக். 96 - 102.

அப்பர் தேவாரம் -

இந்த அகச்சமயங்கள் ஆறுவகைப்பட்டிருந்தன ; அறுவகைச் சமயங்கள் தம் காலத்தே விளங்கியமையை அப்பர் சுவாமிகளும் பல இடங்களில் குறிப்பிடுவதைக் காணலாம் :

'அறுவகைச் சமயம் வைத்தார்' (4-30-5)

'சமயமேலாறுமாகித் தானொரு சயம்புவாகி' (4-45-5)

'ஆறுசமயத் தவரவரைத் தேற்றும் தகையன' (4-100-7)

'வெவ்வேறாய் இருமூன்று சமயமாகிப்புக்கானை' (6-50-7)

'சமயமவை ஆறினுக்குந் தலைவன்தான் காண்' (6-65-7)

'அறுசமயம் ஆகி நின்ற திக்கினை' (6-68-5)

தில்லைப் பொன்னம்பலம் :

சிதம்பரத்தில் கூத்தப்பெருமான் கோலங் கொண்டெழுந்தருளியிருக்கும் தில்லைச் சிற்றம்பலம் தம் காலத்திற்கு முன்னேயே பொன்னால் வேயப்பட்டிருந்தமையை அப்பர்பெருமான் அருளியுள்ளார் ; காலந்தோறும் இதனை அரசர்கள் புதுப்பித்து வந்தார்கள் என்பர் ஆராய்ச்சியாளர் * எனினும், கி. பி. 7-ஆம் நூற்றாண்டிற்கு முன்னமேயே இது பொன்னம்பலமாகப் பொலிந்தது என்பது அறியப்பட வேண்டுவதாகும் ;

" முழுதும் வானுல கத்துள தேவர்கள்
தொழுதும் போற்றியும் தூயசெம் பொன்னினால்
எழுதி மேய்ந்த சிற்றம்பலக் கூத்தனை
இழுதையேன் மறந் தெங்ஙனம் உய்வனே " (5-2-8)

சிறுதெய்வ வழிபாட்டு நிலை :

அப்பர் சுவாமிகள் காலத்தே சிறுதெய்வ வழிபாடுகளும் ஆங்காங்கிருந்தன என்று தெரிகின்றது. காபாலிகர், பாசுபதர் ஆகியோர் பைரவர்க்கும், காளிக்கும் உயிர்ப்பலியிட்டு வழிபட்டமைக்கும், பல சான்றுகள் உள்ளன. காஞ்சிக் கயிலாச நாதர் கோயிற் சிற்பங்களில், பைரவர், பிரமசிரச்சேத மூர்த்தி ஆகியனவும், காஞ்சி, மகாபலிபுரங்களில் துர்க்கை, காளி ஆகியனவும் உள்ளன. இச்சிற்பங்கள் இத்தெய்வங்கள் உயிர்ப்பலிபெறும் நிலையைக் குறிக்கின்றன ; அன்புருவாகிய சிவபிரானையே வழிபடும் அப்பரடிகட்கு இவ்வழிபாடு ஒவ்வாநிலையாகத் தோன்றியிருத்தல்

---

* பிற்காலத்து முதற் பராந்தகன் தில்லைப் பொன்னம்பலத்தைப் புதுப்பித்தான் என்பதும் இங்கு அறியத்தக்கது.

வேண்டும். நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்கு நிற்கும் பொன்னுர் சடைப் புண்ணியனை வழிபடும் சுவாமிகள் இவ்வெறுக்கத்தக்க வழிபாட்டைத் தம் அருள் வாக்கில் உறுதியுடன் மறுத்திருத்தல் பொருத்தமானதே யாகும்.

"சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோ மல்லோம்
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்" (6 - 98 - 5)

"செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்திசெய் மனப் பாறைகட் கேறுமே" (5 - 100 - 2)

பிறவாயாக்கைப் பெருமானாகிய இறைவனையே வழிபடும் அப்பர் சுவாமிகளால் வெறுக்கப்படும் இச்சிறு தெய்வவழிபாடும் கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் இருந்தமைக்கு இது சான்றாகும்.[1]

இசைக்கருவிகள் :

மகேந்திரவர்மர் பரிவாதினி என்ற பெயர்கொண்ட வீணையில் வல்லவர் என்பர்; மகேந்திரர் கண்டறிந்த புதிய பண்கள் எட்டு நரம்புகள் உடைய வீணைக்கும், ஏழு நரம்புகள் உடைய வீணைக்கும் பயன்படும் என்று பேராசிரியர் துப்ரேல் (Prof. Dubreil) கூறுவது இங்கே நினைக்கத்தக்கது. அப்பர் சுவாமிகள் இந்தப் புதிய வீணையிசையை நுகர்ந்திருக்கக்கூடும்; "மாசில் வீணையும்" எனவரும் இடங்கள் அவர்கால இசைக்கருவிகளில் வீணை சிறப்பிடம் பெற்றிருந்ததைக் காட்டுவன எனலாம். தேவார கால இசைக்கருவிகளாக, வீணை, யாழ், குழல், கின்னரி, கொக்கரி, சச்சரி, தக்கை, முழவம், மொந்தை, மிருதங்கம், மத்தளம், தமருகம், துந்துபி, குடமுழா, முரசம், உடுக்கை, தாளம், துடி, கொடுகொட்டி முதலியனவற்றை அறியலாம்.[2] இவற்றை அப்பர்சுவாமிகள் அருள்வாக்குகளில் ஆங்காங்குக் காணலாம்.

கூத்து நிலை :

மகேந்திரவர்மருடைய சித்தன்னவாசல் ஓவியங்கள் இரண்டிலிருந்து அக்கால நடனக்கலை பற்றிய சில குறிப்புக்களை உணரலாம். சிவபெருமான் ஆடிய நாதாந்த நடனம் என்னும் அமைப்பை இங்கு அறியலாம். அப்பர் சுவாமிகள் இறைவன் அருளாடலில் நன்கு ஈடுபட்டுக் களிந்தவர் ஆதலின், அப்பெரியார் தரும் கூத்துப்பற்றிய குறிப்புக்கள் கலையாராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படுவனவாம்:

---

[1] 'செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள' என்ற குமரகுருபரர் (கி. பி. 17ம் நூற்றாண்டு) 'வீணே பலிகவர் தெய்வங்கள்பாற் சென்று மிக்க அன்புபூணேன்' என்ற அபிராமிபட்டர் (கி. பி. 18ம் நூற்றாண்டு) வாக்குகள் இங்கு ஒப்பிடத்தக்கன.

[2] இவ்விசைக் கருவிகள் பலவும் சங்கநூல்களிலும் ஓதப்பட்டுள்ளமை அறியத்தக்கது. இவற்றுட் சில வேறு பெயர்களிலும் அவற்றுட் காணப்பெறும்.

அப்பர் தேவாரம் -

" குடமுழவம் வீணை தாளம் குறுநடைய சிறுபூதம் முழக்கமாக் கூத்தாடுமே" (6-4-5)

" நடமாட வல்லானே ஞானக் கூத்தா" (6-44-5)

" அரங்கிடை நூலறிவாளர் அறியப்படாததொர் கூத்து" (4-2-6)

" ஆடினார் காளிகாண ஆலங்காட்டடிகளாரே" (4-68-8)

பல்லவர்க்கு முற்பட்ட சிவபெருமானுடைய கூத்து வகைகள் சிறப்புடையவை; காளி காணச் சுடுகாட்டில் ஆடும் ஆடல் எல்லோரா முதலிய இடங்களில் காணக்கூடிய தாகும். இத் தாண்டவ நடனம் ஆரியர்க்கு முற்பட்ட கலையமைப்பினது என்பர்.[1] 'அரங்கிடை நூலறிவாளர் அறியப்படாததொர் கூத்து' என்று சுவாமிகள் பாடியிருப் பதும் இங்குக் கூர்ந்துணரத் தக்கது. பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடப் பட்ட இத் தேவாரப் பாக்களிலிருந்து, வரலாற்றாராய்ச்சிக்குப் பயன்படும் வரம்பிலாக் குறிப்புக்கள் பலவற்றை அறியலாம். பல்லவர் காலக் கல்வெட்டுக்கள் முதலியன கூறும் செய்திகட்கு இனிய விளக்கமாக இக்குறிப்புக்கள் பெரிதும் பயன்படுமாற்றை ஆராய்ச்சியாளர் எடுத்து வியந்து பாராட்டுகின்றனர் என்பதும் இங்கு அறியத் தக்கது.

கல்வியிற் கரையிலாத காஞ்சி:

அப்பர்சுவாமிகள் காலத்தில் காஞ்சிபுரம் சிறந்த கலைக்கழகம் உடையதா யிருந்தது; வடமொழிக் கல்லூரி (கடிகை) இருந்தது. அதிலேயே கதம்ப அரசாகிய மரபைத் தோற்றுவித்த மயூரசன்மன் (கி. பி. 345 - 370) கல்வி கற்றான் என்பர். பல சமணசமயப் பேரறிஞர்களுக்கும் வாழ்விடமாக இப்பெரு நகரம் இருந்தது; நாலந்தாப் பல்கலைக்கழகத்திற்குப் பேராசிரியராகச் சென்ற தர்மபாலர் காஞ்சியினர். இவ்வாறே பல நூற்றாண்டுகளாகக் கற்றவர் கூட்டம் பெருகியிருந்த இத் தலத்தை அப்பர் சுவாமிகள்,

" கல்வியைக் கரையிலாத காஞ்சிமாநகர்தன் னுள்ளால்
எல்லியை விளங்க நின்றார் இலங்குமேற் றளியனாரே" (4-43-8)

என்ற பகுதியில் கல்விச்சிறப்பினுற் புகழ்கின்றார். 'கற்றவர் கூட்டத்தினின்று இறுதிப் பகைமையை அறவே நீக்கினான்' என்று வரும் அவந்திசுந்தரி கதாசாரம், கற்றவர் கூட்டம் என்றே காஞ்சியைக் குறிப்பிடுதலும் இங்கே கவனித்தற்குரியது.[2] இவ்வாறே, நாகைக் காரோணத்தையும்,

" கற்றவர் பயிலும் நாகைக் காரோணம்" (4-71-8)

எனக் குறித்தருளுதல் சிந்தித்து மகிழ்தற்குரியது.

---

[1] கலித்தொகை கடவுள் வாழ்த்துப் ('ஆறறியந்தணர்க்கு') பாடல் இங்கு நினைக்கத்தக்கது.

[2] பல்லவர் வரலாறு - பக். 84 - 85.

இவ்வாறு, தம் காலத்தின் சூழ்நிலையை விளக்குமுகத்தாலும், சரித்திர ஆராய்ச்சிக்குரிய பல குறிப்புக்களை எடுத்துரைக்கு முகத்தாலும் அப்பர் தேவாரம் காட்டும் அருஞ் செய்திகள் பல; பல சரித்திரங்களைப்பற்றி ஆங்காங்கு வரும் இடங்கள் பல. அவற்றைப் பின்வரும் நெறியில் குறித்து ஆராயலாம்.

நாயன்மார் சரித்திரக் குறிப்புக்கள் :

தம் காலத்தும் தம் காலத்துக்கு முன்னும் வாழ்ந்த நாயன்மார் சரித்திரக் குறிப்புக்களையும் அப்பர்சுவாமிகள் குறித்துள்ளார். (1) அப்பூதியடிகள், (2) அமர் நீதி நாயனுர் (3) கணம்புல்லர் (4) கண்ணப்பர் (5) கோச்செங்கட்சோழர் (6) சண்டேசுரர் (7) சாக்கியர் (8) நமிநந்தியடிகள் (9) திருஞானசம்பந்தர் - ஆகியோரைப்பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. *

'' அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூவாய் நின்ற சேவடியாய் கோடியையே'' (4-12-10)

'' நாட்கொண்ட தாமரைப் பூந்தடஞ் சூழ்ந்த நல்லூரகத்தே
கீட்கொண்ட கோவணம் காவென்று சொல்லிக் கிறிபடத்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவியொடும் அங்கொர் வாணிகனை
ஆட்கொண்ட வார்த்தை யுரைக்குமன்றேவிவ் வகலிடமே'' (4-97-7)

'' காப்பதோர் வில்லும் அம்பும் கையதோர் இறைச்சிப்பாரம்
தோற்பெருஞ் செருப்புத்தொட்டுத் தூயவாய்க் கலசம் ஆட்டித்
தீப்பெருங் கண்கள் செய்ய குருதிநீர் ஒழுகத் தன்கண்
கோப்பதும் பற்றிக்கொண்டார் குறுக்கை வீரட்டனுரே'' (4-49-7)

'' சிலந்தியும் ஆனைக்காவிற் திருநிழற் பந்தர்செய்து
உலந்தவண் இறந்தபோதே கோச்செங்க ணானுமாகக்
கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர் தங்கள்
குலந்தனிற் பிறப்பித்திட்டார் குறுக்கை வீரட்டனுரே'' (4-49-4)

'' அண்டமார் அமரர் கோமான் ஆதிஎம் அண்ணல்பாதம்
கொண்டவன் குறிப்பினாலே கூப்பினான் தாபரத்தைக்
கண்டவன் தாதைபாய்வான் காலற எறியக்கண்டு
சண்டியார்க் கருள்கள் செய்த தலைவர் ஆப்பாடியாரே'' (4-48-4)

'' மெய்த்தவன்காண் மெய்த்தவத்தில் நிற்பார்க் கெல்லாம்
விருப்பிலா இருப்புமன வினையர்க் கென்றும்
பொய்த்தவன்காண் புத்தன் மறவா தோடி
எறிசல்லி புதுமலர்கள் ஆக்கினான் காண்'' (6-52-8)

---

* திருவருளிலேயே தோய்ந்திருந்த அப்பரடிகள் போன்ற மெய்ச்சான்றோர் நல்லன கண்டவிடத்து எடுத்துக் கூறியருளும் திறமும், அத்தகு விழுமியோரால் பாராட்டப்படும் நாயன்மார்களின் உயர்திறமும் இக்குறிப்புக்களினின்றும் இனிது விளங்கக் கூடியனவாம்.

அப்பர் தேவாரம் - சரித்திரக் குறிப்புக்கள்

"ஆராய்ந் தடித்தொண்டர் ஆணிப்பொன்னூர் அகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி உத்திரம் பாற்படுத்தான்
ஆரூர் நறுமலர் நாதன் அடித்தொண்டன் நம்பிநந்தி
நீரால் திருவிளக்கிட்டமை நீணாடறியுமன்றே" (4-102-2)

"மாயிரு ஞாலமெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கையாளைப் படர்சடை வைப்பர்போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமலவூரற் கம்பொன்
ஆயிரம் கொடுப்பர்போலும் ஆவடுதுறையனாரே" (4-56-1)

இச் சான்றுகளால் நாயன்மார் சரித்திரக் குறிப்புக்களாக அப்பர்சுவாமிகள் அருளியுள்ளமை இனிது விளங்குவதாகும்.

அகச்சான்றுகள் - குறிப்புக்கள் :

இனி, அப்பர் சுவாமிகள் தேவாரத்தில், தம் சரித்திரக் குறிப்புக்களாக அச் சான்றோர் ஓதியருளும் குறிப்புக்களும் பல உள : இவற்றை அகச் சான்றுகள் என்பர். தாம் சமணராயிருந்தமை (4-5-4; 4-39-7; 6-91-8) நஞ்சுண்டமை (4-70-5) நீற்றறை குளிர்ந்து இன்பம் காட்டியமை (5-90-1) படிக்காசு பெற்றமை (5-50-7) சூலம் பொறிக்க வேண்டுகின்றமை (4-109-1) சமணரால் மறைக்கப்பட்ட இலிங்கம் வெளிப்பட்டமை (5-58-1) கல்லே புணையாக மிதந்தமை (4-11-1; 5-72-7) திருமறைக்காட்டில் கதவு திறந்தமை (5-10-1) இறைவன் திருவாய்மூருக்கு வா என்று அருளியமை (5-50-1) முதலிய குறிப்புக்களைச் சுவாமிகளே கூறியருளக் காண்கின்றோம்.

இதுகாறும் கூறியவாற்றால், அப்பர் தேவாரத்தில் வரும் தமிழ்நாட்டுச் சரித்திரக் குறிப்புக்களும், நாயன்மார் சரித்திரக் குறிப்புக்களும், அப்பர் சுவாமிகள் சரித்திரக் குறிப்புக்களும் ஆகியவை இனிது விளங்கும். 'திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறி' ஓங்குக உலகமெல்லாம்!

## பன்னிரு ஜோதிர்லிங்கத் தலங்கள்

ஸௌராஷ்ட்ரே ஸோமநாதம் ச ஸ்ரீசைலே மல்லிகார்ஜுனம்
உஜ்ஜயின்யாம் மஹாகாளம் ஓங்காரம் அமலேச்வரம்
பரல்யாம் வைத்யநாதம் ச டாகின்யாம் பிமசங்கரம்
ஸேதுபந்தே து ராமேசம் நாகேசம் தாருகாவனே
வாராணஸ்யாம் து விச்வேசம் த்ரயம்பகம் கௌதமிதடே
ஹிமாலயே து கேதாரம் குஸ்மேசம் ச சிவாலயே
ஏதானி ஜ்யோதிர்லிங்கானி ஸாயம் ப்ராத: படேன்நர:
ஸப்த ஜன்மக்ருதம் பாபம் ஸ்மரணேன விநச்யதி.

# ஆட்டுகின்ருன் - ஆடுகின்ருேம்

வித்துவான். திருமதி. ப. நீலா

" மணவன் காண்மலே யாள்நெடு
மங்கலக்
கணவன் காண்கலே ஞானிகள்
காதலெண்
குணவன் காண்குரங் காடுதுறை
தனில்
அணவன் காண் அன்பு செய்யு
மடியர்க்கே "

உலக அரங்கில் ஆண்டவனின் திருவுள்ளப்பாங்கின் வண்ணம் நாமெல்லாம் நிற்கிருேம் - நடக்கிருேம் - எழுகிருேம் - இருக்கிருேம். நம்மை இறைவன் வினைகள் என்கிற கயிற்ருல் கட்டி ஆட்டுகின்ருன் - அதற்கேற்ப நாம் ஆடுகின்ருேம்.

அண்ட கோடிகளை ஆட்டிப் படைத்து விளையாடுகின்ற ஆண்டவன் எப்படிப் பட்டவன்? இதோ! நாவுக்கரசர் சொல்லும் நன்மொழிகளைக் கேளுங்கள்.

அவன் மணவாளன், மலைமகளின் மங்கலத்தைக் காத்துவரும் கணவன். கலை ஞானிகளால் காதல் செய்யப்படும் குணவன். அன்பு செய்யும் அடியவர்களுக்கு அணவன் என்று விளக்கம் தருகிருர். தன்வயத்தனுதல், தூய உடம்பினன் ஆதல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், இயற்கை உணர்வினன் ஆதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை, முற்று முணர்தல் என்ற எட்டுக் குணங்களையும் கொண்டவன் ஆண்டவன் என்பதனை வள்ளுவரும் விளக்கிச் சொல்வார்.

' கோளில் பொறியில் குணமிலவே
எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை'.

'எண்குணத்தான்' — என்ற தொடருக்குப் பரிமேலழகர் தரும் விளக்கமே நாம் மேலே சொன்னது.

உள்ளத்தின் உறுதி :

கூட்டுவதும் கூட்டிப் பிரிப்பதுவும்
ஒன்ருென்றை
ஆட்டுவதும் ஆட்டி அடக்குவதும்
— காட்டுவதும்
காட்டி மறைப்பதுவுங் கண்ணுத
லோன் முன்னமைத்த
ஏட்டின் படியென் றிரு.

( சிவபோகசாரம் — 103 )

உலகமெல்லாம் ஆண்டவனின் கட்டளைப்படியே இயங்குகிறது. இதை நன்கு உணர்ந்தவர்கள் நமது சமயச் சான்ருேர்கள். மலையே வந்து விழுந்தாலும் நிலையில் நடுக்கமிருக்கக்கூடாது.

நிலக்கரிக்கு மேலும் மேலும் ஏற்படும் அழுத்தமே பிரகாசத்தைக் கொடுக்கும். படிப்படியாக ஏற்படும் அனுபவங்களே ஒருவனை விளக்கமுறச் செய்யும்.

ஆற்றின் போக்கிலே நீந்துபவனை விட எதிர்த்து நீந்துபவனே 'போற்றுதலுக்குரியவனுகின்ருன்.

ஆட்டுகின்ருன் -

"எதிர்ப்புச் சக்திகள் என்னைப் படுபாதாளத்தில் தள்ளப்பார்த்தன. ஆனல் அவற்றைக் கொண்டே நான் வானளாவ உயர்ந்து விட்டேன்" என்கிருர் ஆங்கில நாட்டு அறிஞர் பெர்ஞட்ஷா.

இவருடைய கருத்தின் விளக்கமாக அமைகின்ருர் அப்பர் பெருமான். எதிர்ப்புச் சக்திகளின் அழுத்தத்தால் புகழ்விளக்கம் பெற்றவர் திருநாவுக்கரசப் பெருந்தகையார். அவர் பெற்ற அனுபவங்களெல்லாம் இனிய தமிழ்ப் பாக்களாக மலர்ந்தன. துளக்கமில் மன ஊக்கமே துன்பங்களைத் துடைத்து வாழ்வை ஒளிபெறச் செய்கிறது.

'Sorrow is the mere rust of the soul. Activity will cleanse and brighten it.' Dr. S. Johnson.

இதற்கெல்லாம் வேண்டுவது உள்ளத்தின் உறுதியே. அதுவே இழுக்கலுடை உழி ஊற்றுக் கோலாகும்.

ஆக்கையாற் பயனேன் :

அழியும் இந்த உடலால் அழியாத அருளைப்பெற அப்பர் பெருமான் வழி கூறுகிருர். தலைமுதல் கால்வரை முழு உருவத்துடன் நம்மைப் படைத்த முக்கண்ணனுக்கு நாம் எப்படி நன்றியைத் தெரிவிப்பது! வழிஉண்டு! அதுவே ஆக்கையின் பயன்.

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச்சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
விழ்த்தவாவினையேன்நெடுங்காலமே"

நெடுங்காலம் சென்ற பிறகு தன் வாழ்க்கையைச் சற்றுத் திரும்பிப் பார்க்கிருர். எப்படியெல்லாம் தன்னை இறைவன் சோதனை செய்தான் என்று எண்ணிப் பாடுகிருர்.

"ஆட்டி ஞன்முனை அமணரோ
டென்றனைப்
பாட்டி ஞன்றன பொன்னடிக்
கின்னிசை
விட்டி ஞன்வினை மெய்யடி
யாரொடும்
கூட்டி ஞன்குரங் காடு
துறையனே."

ஈறிலா இறைவன் என்னை முன் அமணரோடு ஆட்டிஞன். பின் தன்னுடைய பொன்னடிகளை என்னைக் கொண்டு பாட்டிஞன் (பாடுவித்தான்) என்னுடைய வினைகளை நீக்கிஞன். மெய்யடியார் குழாத்தொடு என்னைக் கூட்டிஞன் என்று பலபடக் கூறுகிருர் பெருந்தகை நாவுக்கரசர்.

மட நேஞ்சம் :

வினை தடுத்தாண்ட வேதியனுக்கு நெஞ்சமே! நீ என்ன கைம்மாறு செய்யப் போகிருய் என்று கேட்கிருர் பிறிதோரிடத்தில்.

"பற்றுக பற்றற்ருன் பற்றினை
அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்று வள்ளுவர் பெருமான் கூறுவது கடுப்பப் பற்றை நீக்கிய பரம்பொருளைப் பாடுகிருர் - இதன் மூலம் தனது நன்றியுணர்வை நன்கு புலப்படுத்துகிருர்.

"ஆட்டிஞய் அடி யேன்வினை
யாயின
ஒட்டி ஞயொரு காதி
லிலங்குவெண்

தோட்டி ஞயென்று சோற்றுத்
துறையர்க்கே
நீட்டி நீபணி செய்மட
நெஞ்சமே. ”

இவ்வாறெல்லாம் ஆண்டவனின் திரு விளையாடல்களை நேராக அனுபவித்தவர் அப்பர் பெருமான். ஆகவே அனுபவம் முதிர்ந்த திருநாவுக்கரசப் பெருந்தகை யார் உலகத்தாருக்குக் கூறுகிறுர்.

“ ஆட்டுவித்தால் ஆரொருவர்
ஆடாதாரே
அடக்குவித்தால் ஆரொருவர்
அடங்காதாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர்
ஓடாதாரே
உருகுவித்தால் ஆரொருவர்
உருகாதாரே
பாட்டுவித்தால் ஆரொருவர்
பாடாதாரே
பணிவித்தால் ஆரொருவர்
பணியாதாரே
காட்டுவித்தால் ஆரொருவர்
காணுதாரே
காண்பாரார் கண்ணுதலாய்
காட்டாக்காலே. ”

இதுவே நாவுக்கரசர்மூலம் நாமறிந்தது. அப்பர் பெருமானின் அருள் வாக்கை உணர்ந்து நாம் அமைதியடைவோமாக.



## அஷ்டவீரட்டங்கள்

“ பூமன் சிரங்கண்டி, அந்தகன் கோவல், புரம்அதிகை,
மாமன் பறியல், சலந்தரன் விற்குடி, மா வழுவூர்
காமன் குறுக்கை, யமன் கடவூர், இந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே ”.

1. திருக்கண்டியூர் ... பிரமன் சிரங் கொய்தது.
2. திருக்கோவலூர் ... அந்தகாசுரனைச் சங்கரித்தது.
3. திருஅதிகை ... திரிபுரத்தை எரித்தது.
4. திருப்பறியலூர் ... தக்கன் சிரங் கொய்தது.
5. திருவிற்குடி ... சலந்தராசுரனைச் சங்கரித்தது.
6. வழுவூர் ( வைப்புஸ்தலம் ) ... யானையை உரித்தது.
7. திருக்குறுக்கை ... காமனை எரித்தது.
8. திருக்கடவூர் ... யமனை உதைத்தது.

# பதினொராந் திருமுறையிற் பழந்தமிழ்

" தருமையாதீனப்புலவர் "

வித்துவான். திரு. இராம. கோவிந்தசாமிப் பிள்ளை

பன்னிரண்டு திருமுறைகளுள் பதினொராந் திருமுறையினை யருளியவர் திருவாலவாயுடையாராகிய இறையனர் முதல் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் திருவருள்பெற்ற நம்பியாண்டார் நம்பியிறுதியாவுடைய பன்னிருவராவர். இதனிடைக் காணப் பெறுபவை நாற்பது பிரபந்தங்களாகும், ஒரே பாட்டும் ஒரு நூலாகக் கருதப்படலான்.

ஒன்றுமுதல் பதினொராந் திருமுறை முடியப் பதினொரு திருமுறைகளும், திருமுறைகண்ட சோழனாகிய இராசராச அபய குலசேகரப் பெருமன்னன் காலத்திற்றெகுக்கப் பெற்றுள்ளன. தொகுத்தவர் நம்பியாண்டார் நம்பிகளாவர் என்பது வெள்ளிடையாகும்.

இப்பதினொராந் திருமுறைக்கணுள்ள பிரபந்தங்களை யாத்தவர் கடைச் சங்க காலத்தில் வாழ்ந்த நக்கீரர், கபிலர் கல்லாடர், பரணர் ஆகிய நான்கு புலவர்களும், அதிராவடிகள் இளம் பெருமானடிகள் பட்டணத்துப் பிள்ளையார் ஆகிய பெருந்துறவுற்ற மூன்று புலவர்களும், காரைக்கால் பேயார், சேரமான் பெருமாள், ஐயடிகள் காடவர் கோனாகிய தொண்டர்புலவர் மூவரும் அந்தாதியாக நின்ற திருவாலவாயுடையாரும் நம்பியாண்டார் நம்பியும் ஆய இரு பெரும் புலவரும் ஆகப் பன்னிருவராவர்.

சங்கப் புலவரோடொத்தவர் ஔவையாரும் காரைக்கால் பேயாருமாவர். யாப்பருங்கலவிருத்தியுரையில் ( காரைக்கால் ) பேயார் எனப் பெரும் புலவர் காணப்படுகின்றார். மூவராதியர் தேவாரப் பாடல்களுக்கும் முற்பட்டவை காரைக்கால் அம்மையார் அருளியனவாகிய திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்களும் திருவிரட்டைமணிமாலையும் அற்புதத் திருவந்தாதியும் ஆகும். திருவாலவாய் அப்பர் அருளிய திருமுகப் பாசுரம் முன்னரும், இறவாத இன்ப அன்புவேண்டிய அம்மையார் அருளியவை பின்னரும் அமையப் பெற்றுள்ளன.

திருவாலவாயுடையார் அருளிய திருமுகப் பாசுரத் தொடர்புடைய சுந்தர மூர்த்திகள் தோழர் சேரர்கோ செய்தருளியவையாகிய செந்தமிழ் நூல்கள் அதன் பின்னர் வைப்பு முறையாக வைக்கப்பெற்றுள்ளன.

பழங்காலத்தே தமிழகத்தே அன்பும் அருளுமேயடிப்படையாகக் கொண்ட பண்பாடுடையதாக நாடு நடைபெற்று வந்தது. இறைவனும் அடியவர்களும், மன்னனும் மக்களும் (குடிகளும்) என்பன நன்கறியக் கிடக்கும்.

திருவாலவாயுடையாராகிய தமிழ்ச் சொக்கர் சேரர்பெருமானுக்குப் பாணபத்திரராகிய பெரும்புலவர் பொருட்டுத் திருமுகந்தருகின்றார்; அதுவருமாறு :-

'' மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிறகு
அன்னம் பயில்பொழில் ஆலவாயில்
மன்னிய சிவன் யான் ''

இவ்வடிகளானவை ஒருவருக்கொருவர் நிருபம் வரையும் நிலையில் முகவரி முகவுரையாகவும் தந்தருளியதைத் தெளிவியா நிற்கும். தன்னைப் புகழ்தலும் தகும்புலவோர்க்கு எனலையும் புலப்படுக்கின்றன.

இத்திருமுகம் பெறுபவர் நிலை எங்ஙன முளதெனலை நோக்குவம்.

'' மொழி தருமாற்றம்
பருவக் கொண்மூப்படியெனப்
பாவலர்க்கு
ஒருமையின் உரிமையின் உதவி
யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய
குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன்
காண்க ''

என்பதாப்.

பெறுவோராகிய சேரமான் புலவர் இடத்துப் பருவமழை பொழியும் மேகம் போன்று கைம்மாறு கருதாமல் வரையாது வாரிவழங்கும் வள்ளல் என்பதும், மன்னர் மன்னவன் என்பதும், பழம்பதியாகிய மதுரையினின்றும் நின்னிடத்து அனுப்புதற்குக் காரணமுண்டென்பதும், இதனை நன்காய்ந்து கொள்ளக்கடவை யென்பதும் புலப்படுக்கப்படலை ஆய்தல் வேண்டும்.

இனி, யார்பொருட்டு இத்திருமுகம் வழங்கப்பெறுகின்றது என்பதும், எதன் பொருட்டென்பதும் பற்றிய அடிகள் வருமாறு:-

'' பண்பால் யாழ்பயில் பாணபத்திரன்,
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப்
பதுவே ''

என்பதாம்.

இப்பன்னிருவடிகளையுடைய வகவற் பாத் திருமுகப் பாசுரம் ஒவ்வொருவருக்கும் நந்நான்கடிகளாக அமைக்கப்பெற்றுள்ளது. இவ்வகவற்பா பிறமொழிக் கலப்பில்லாத் தூய செந்தமிழாலாக்கப் பட்டுள்ளது. குழலினும் யாழினும் இனிமைப் பண்பையுடையது தமிழ்மொழி யெனலைத் தெற்றெனத் தெரிக்கின்றது. நன்பாட்டுப் புலவனுய்ச் சங்கமேறி நற்கனகக் கிழிதருமிக் கருளினதும், இடைக்காடனுகிய தமிழ்ப்புலவன் பொருட்டு மதுரையினை விட்டகன்றதும், தன்னைத் தமிழ்ச் சொக்கரெனச் சாற்றுபவர்க்கருள் புரிவதும் ஆகிய வகையினுலன்றே பாணபத்திரர் பொருட்டுத் திருமுகமருளினர்.

இதனுற் பழந்தமிழ்க் காலத்தே யொருவர்க்கொருவர் அறிமுகஞ் செய்து கொள்ளுமாறும், அறிமுகஞ் செய்து வைக்கப் படுமவர்க்கு இன்னவாறு நடத்தல் வேண்டுமென வற்புறுத்தப்படுமாறும் எதிர்முகமாக்கப்படுவார் தம் பெற்றியை முற்றத் தெரிக்குமாறும் தெளிவாக விரித்துரைக்கப் படுகின்றது.

'' காரைக்காற் பேய்ச்சொல் பரவுவார் '' என்னு மந்தாதியின் ஈற்றுப் பாடல் குறிக்கப்பெறும் அம்மையார் கயிலையில் இருந்த கோலங்கண்டு பின்னர் ஆலங்காட்டில் ஆலமுண்டான் கோல நடங்கண்டு கும்பிடுகின்றுர். மூத்த திருப்பதிகமும் இரட்டைமணி மாலையும் வெண்பாவலாகிய அற்புதத்

திருவந்தாதியெனும் பிரபந்தமும் பாடி ஞர்.:இவற்றில் அருளுருவனுகிய ஆண்ட வனை அன்பாற் பணிந்தேத்தின்பேரின்ப நிலை பெறலாம் எனல் பெரிதும் வற் புறுத்தப் பெறுகின்றது.

" அருளே யுலகெலாம்
ஆள்விப்ப தீசன்
அருளே பிறப்பறுப்ப
தாலல் - அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும்
விதியுடையேன் எஞ்ஞான்றும்
எப்பொருளும் ஆவதெனக்கு"

என்னும் இப்பாடலால் இறைவன் அரு ளுருவத் திருமேனியுடையவனுய் உல கினை யாண்டு பிறப்பறுக்கு நிலை வற் புறுத்தப் பெறுகின்றது.

" இடர்களையா ரேனும்
எமக்கிரங்கா ரேனும்
படரு நெறிபணியா
ரேனும் - சுடருருவில்
என்பருக் கோலத்
தெரியாடு மெம்மானுர்க்(கு)
அன்பரு தென்னெஞ்
வர்க்கு"

என்னுஞ் செய்யுளால் அடியவர் அன்பு டைமை யொடு வாழும் பெற்றியறிவுறுக் கப்படுகின்றது.

சிறு காப்பியமாகிய சிற்றிலக்கியங் கள் பிற்காலத்தனவாம். ஐயடிகள் காட வர்கோனுகிய நாயனுர் வெண்பாவாற் திருத்தலங்களைப் பாடினமையின் திரு வெண்பாவெனப் பெயர் போந்தது.

" என்னெஞ்சே யுன்னை யிரந்து
முரைக்கின்றேன்
கன்னஞ்செய் வாயாகிற் காலத்தால் -
வன்னெஞ்சேய்
மாகம்பத்தானை யுரித்தானை
வண்கச்சி
யேகம்பத் தானை யிறைஞ்சு"

எனப் பாடுகின்ருர்.

சேரமான் கருவூரேறிய வொள்வாட் கோப்பெருஞ்சேரலைக் கண்ட ஞான்று நின் உடம்பு பெறுவாயாகெனச் சென்று கண்டு தம் உடம்புபெற்ற நரி வெரூஉத் தலையார் பாடலையுங்காண்போம்.

" எருமையன்ன கருங்கல் லிடைதோ
ருனிற் பரக்கும் யானைய முன்பிற்
கானக நாடனை நீயோ பெரும!
நீயோராகலின் நின்னொன்றுமொழிவல்
அருளும் அன்பு நீங்கி நீங்கா
நிரயங் கொள்பவ ரொடு ஒன்ருது
குழவிகொள்பவரின் ஓம்புமதி [காவல்
அளிதோ தானே பெறலருங்
குரைத்தே"

என்னும் புறப்பாட்டு அருளையும் அன் பையும் அடிப்படையாகக் கொண்டு நாட்டினை யோம்ப வேண்டுமென வேண்டப்படுகின்றது.

செந்தமிழ்ச் சுந்தரர் தோழராகிய சேரமான் பெருமாள் நாயனுர், பொன் வண்ணத்தந்தாதியும் மும்மணிக் கோவையும் ஆதியுலாவாகிய ஞானவுலா வும் பாடியுள்ளனர். அந்தாதியானது கட்டளைக் கலித்துறையினுற் பாடப்பட்டு பொன்வண்ணத்தந்தாதி யெனப் பெயர் புனையப்பட்டுளது.

" சிந்தனை செய்ய மனமமைத் தேன்
செப்பநாவமைத் தேன்
வந்தனை செய்யத் தலையமைத் தேன்
கைதொழவமைத் தேன்

பந்தனை செய்வதற் கன்பமைத்தேன்
மெய்யரும்ப வைத்தேன்
வெந்த வெண் ணீறணி யீசற்கிவை
யான் விதித்தனவே ''

என்ற பாடலானது சிவ சின்னந்தரித்து இறைவனை நிறையன்புகொண்டு வழிபடு நெறியுரைக்கின்றது.

ஆதியுலாவாகிய ஞானவுலா நூற்றுத் தொண்ணூற்றெட்டு கண்ணிகளையும் கற்பனை நயங்களையும் உடையது.

நக்கீரர்; இவர் கைலைபாதி காளத்தி பாதியந்தாதி ஆதியாகத் திருமுருகாற்றுப் படையிறுதியாகப் பத்து நூல்கள் பாடியுள்ளனர். திருமுருகாற்றுப் படையில் முருகு எனும் மொழிக்கு ' மணங்கமழ் தெய்வத்திள நலங்காட்டி'' எனப் பொருள் புலப்படுக்கப்படுகின்றது. இதனைப் பிற்காலத்து நிகண்டாசிரியரும்,முருகென்பதுமணத்தையும், இளமையையும், தெய்வீகத் தன்மையையும், அழகையும்உணர்த்துவதாகும்எனக் கூறியுள்ளனர். பத்துப்பாட்டுள் முதலாவதாகவுள்ள ஆற்றுப் படையினியலுக்கு யாதுகாரணம் பற்றியோ மாறாக ஆறு படைவீடுகள் ஆறுமுகப் பெருமானுக்குரியவென்றும், இவை படைவீடுகளாகவே கொள்ளவேண்டுமென திருப்புகழ் செப்புகின்றது என்றும் கூறிவருகின்றனர். படைவீடு என்பது பகை மேற் சென்றோர் உறைவிடத்தினைக் குறிக்கும். தண்டமிழ்க் கடவுளாகிய முருகப் பெருமான் படைவீடாகக் கொண்டருளிய தலம் செந்திலம்பதியொன்றுமேயாம். பிற எவ்வாறு பொருந்தும். '' பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறிஇச் சென்றுபயனெதிரச் சொன்ன பக்கமும்'' என்பது ஆற்றுப் படையின் இலக்கணம்.

'' முருகாற்றுப்படுத்த வுருகெழு வியனகர் '' எனவும் '' சேவடி படருஞ் செம்மலுள்ளமொடு நலம்புரிகொள்கை புலம்பிரிந்துறையும், செலவு நீ நயந்தனையாயின் '' எனவும் வரும் அடிகள், ஆற்றுப்படுத்தல் வழிப்படுத்தல் எனவே பொருள் கொள்ளக் கிடக்கின்றது. இந் நூலில் '' நாவலொடு பெயரியபொலம்'' ( சாம்பூநதம் ) என வடமொழிக்குப் பொருள் புலப்படுக்கின்றனர். ஈங்கோய் மலையெழுபது மிகவும் கற்பனை நயமுடையது.

காளத்தியப்பனிடம் அன்பு பூண்டொழுகிய கண்ணப்ப தேவர் திருமறம்

நில்லு கண்ணப்ப நில்லுகண்
ணப்பவென்
அன்புடைத் தோன்றல் நில்லுகண்
ணப்பஎன்று
இன்னுரை யிதனெடும் எழிற்சிவ
லிங்கம்
தன்னிடைப் பிறந்த தடமலர்க்
கையில்
அன்னவன் தன்கை யம்பொடும்
அகப்படப்
பிடித்தருளினன் ''

என வரும் அடிகள் எத்துணைச் சிறப்பு வாய்ந்தனவாகும்.

கல்லாடரும் கண்ணப்பர் திருமறம் என்பது ஒன்று இயற்றியுள்ளார். '' திருவேட்டுவர் தந்திருவடி கைதொழக், கருவேட்டுழல் வினைக் காரியங்கெடுமே. '' இவை அதன் ஈற்றடிகளாகும்.

கபிலர், விநாயகப்பெருமானை மூத்த நாயனர் என விளித்து திருஇரட்டை மணிமாலைபாடிள்ளனர். சிவபெருமான். இரட்டைமணிமாலையும் திருவந்தாதியும் இவர் பாடியனவேயாம், பரணரும் திருவந்தாதி பாடியுள்ளனர்.

இளம்பெருமானடிகளும் அதிராவடிகளும், சிவபெருமான் மும்மணிக்கோவையும் மூத்தபிள்ளையார் மும்மணிக் கோவையும் பாடியுள்ளனர். பட்டினத்தடிகள் பாடியனவாக ஐந்துபிரபந்தங்கள் உள்ளன. அவற்றுள்,

" போதும் பெருவிடிற் பச்சிலையுண்டு
புனலுண்டெங்கும்
ஏதும்பெருவிடில் நெஞ்சுண்டன்றே
யினையாகச் செப்பும்
சூதும் பெருமுலைப் பங்கர்தென்
ரேணிபுரேசர் வண்டின்
தாதும் பெருதவடித் தாமரைசென்று
சார்வதற்கே "

என்பதும்,

" நானே பிறந்து பயனடைந்தேன்
அயன்நாரணன் எங்
கோனே யெனத்தில்லை யம்பலத்தே
நின்று கூத்துகந்த
தேனே திருவுள்ள மாகியென்
றீமையெல்லா மறுத்துத்
தானே புகுந்தடியேன் மனத்தேவந்து
சந்திக்கவே "

என்பதும் பிறவும் படித்துப்படித்தின் புறற்பாலனவாகும்.

இனிப் பன்னிரண்டாமவராகிய நம்பியாண்டார் நம்பிகள் திருநாரையூர் விநாயகர் திருவிரட்டைமணிமாலை முதலாக திருநாவுக்கரசர் ஏகாதசமாலை இறுதியாகப் பத்துப் பிரபந்தங்கள் பாடியுள்ளனர், திருஞானசம்பந்தர் மீது இயற்றப்பட்டவை ஆறு பிரபந்தங்களாகும். திருத்தொண்டர் திருவந்தாதியின் கண் ஒரு பாடல்.

" தனமாவது திருநாவுக்கரசின்
சரணமென்ன
மனமார் புனற்பந்தல் வாழ்த்தி
வைத்தாங்கவன் வண்டமிழ்க்கே
இனமாத் தனது பெயரிடப்பெற்றவன்
எங்கள்பிரான்
அனமார் வயற்றிங்கள் ஊரினில்
வேதியன் அப்பூதியே "

இதனை அப்படியே எதுகை நயம்பெற அபிராமிப்பட்டர் பாடிய அபிராமியந்தாதிச் செய்யுள் வருமாறு ;-

" தனந்தரும் கல்விதரும் ஒருநாளுந்
தளர்வறியா
மனந்தரும் தெய்வவடிவுந் தரும்
நெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லனவெல்லாந் தரும்
அன்பர் என்பவர்க்கே
கனந்தரும் பூங் குழலாள் அபிராமி
கடைக்கண்களே "



## சிவதலச் சிறப்பு

" தில்லைவனங் காசி திருவாரூர் மாயூரம்
முல்லைவனங் கூடல் முதுகுன்றம் — நெல்லைகளர்
காஞ்சிகழுக் குன்றமறைக் காடருணை காளத்தி
வாஞ்சியமென் முத்தி வரும். "

— சிவபோகசாரம்

# பெரியபுராணக் காப்பிய அமைதி

திரு. அ. ச. ஞானசம்பந்தம் எம். ஏ.

பெரிய புராணம் காப்பிய இலக்கணம் அமைந்தது.
ஆனால் காப்பியங்களுள் தனிச் சிறப்புடையது.

திருத்தொண்டர் புராணம் ஒரு காப்பியந்தான் என்ற முடிவை இன்று பலரும் ஒப்புக்கொள்ளுகின்றனர். காப்பியத்திற்குள்ள சில இலக்கணங்கள் இதனிடை இல்லை என்பது உண்மையே. ஆனால் அவ்விலக்கணங்கள் முக்கியமானவை அல்ல. திறனாய்வாளர் கருத்திற்கு இசையப் பார்த்தால் இது ஒரு காப்பியந்தான் என்று கூசாமல் கூறலாம். ஆனால் தமிழ் மொழியில் காப்பியம் என்று கூறப் பெறும் ஏனையவற்றோடு இது பெரிதும் மாறுபட்டது. எல்லாவகையாலும் காப்பியம் என்று கூறத்தக்க கம்பராமாயணம் என்ன காரணத்தாலோ ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றாகச் சேர்த்து வழங்கப் பெறவில்லை. ஆனால் காப்பிய இலக்கணம் ஓரளவே அமைந்த மணிமேகலை பெருங் காப்பியங்களுள் ஒன்றாக வழங்கப் பெறுகிறது. இம்முறை கொண்டு பார்த்தால் காப்பியங்களின் இலக்கணம் நாளடைவில் இந்நாட்டில் பெரிதும் மாறிவரும் தன்மைபெற்றது என்று தோன்றும். ஒவ்வொரு நூலையும் எடுத்துக்கொண்டு, அது தோன்றிய காலத்துள்ள இலக்கண வரம்பை அடிப்படையாகக் கொண்டு அந்நூலை அளவிடவேண்டும். பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய சிந்தாமணி காப்பியம் என்பர். அதன் அளவுகோலைக் கொண்டு அளந்தால் 12-ஆம் நூற்றாண்டில் தோன்றிய திருத்தொண்டர் புராணமும். காப்பியந்தான் என்பதில் ஐயமில்லை. ஏன் எனில் சிந்தாமணியைப் பெரிதும் அடியொற்றித் தோன்றியதே யாகும் பெரிய புராணம்.

இத்தனிப் பெரும் காப்பியத்துள் அமைந்த தனிச் சிறப்பைக் காண்போம். இந்நூல் காப்பியம் என்றால் இதன் தலைவர் சுந்தரமூர்த்திகளே ஆவர் அன்றோ ? காப்பியத் தலைவர் நாட்டையும், அவரது ஊரையுந்தானே ஆசிரியர் வருணிக்கவேண்டும்? சுந்தரமூர்த்திகள் பிறந்த நாடு திருமுனைப்பாடி நாடு. அந்நாட்டில் திருநாவலூர் என்ற ஊரில் அவர் தோன்றினர். அந் நாட்டையும் ஊரையும்பற்றிச் சேக்கிழார் கூறுவன இரண்டே பாடல்களாம். இதைவிட்டு விட்டுச் சோழநாடு பேசப் பெறுகிறது 'நாட்டுச் சிறப்பு' என்று பெயர் தாங்கிய நாட்டுப் படலத்தில். திருவாரூர் பேசப்பெறுகிறது 'நகரச் சிறப்பு' என்ற நகரப் படலத்தில். இதன் காரணம் என்ன? சுந்தரமூர்த்திகள் தாம் விரும்பிய பரவையாரை மணந்து, வன்றொண்டராக வாழ்ந்தது திருவாரூரில் ஆனதால் ஆசிரியர் அவ்வூரைஎடுத்துக் கொண்டார் என்று சமாதானம் கூறலாம். அதே சுந்தரர் சங்கிலியாரையும் விரும்பி மணந்து திருவொற்றியூரிலும் வாழ்ந்தாராதலின் அவ்வூரும் பாடப்பட்டிருக்கலாம். அவ்வாறு இல்லையாதலின் அந்தச் சமாதானமும் வாய்ப்புடைய

தாகத் தெரியவில்லை. திருத்தொண்டர் புராணத்திற்கு அடிப்படையாக உள்ளது நாயன்மார்கள் வரலாறு. அந்நூல் எடுத்துக்கொண்ட அறுபத்துமூன்று நாயன்மார்களில் முப்பத்தேழு பேர் சோழ நாட்டினர். முன்னர்க் கூறப் பெற்றபடி இந்நூலை ஒரு தேசிய இலக்கியமாகக் கொண்டால் அனைத்தும் நன்கு விளங்கும். தேசீய இலக்கியமாகிய இந் நூலின் அடிப்படை அடியார்கள் வரலாறு அன்றோ? அவர்களுள் பெரும்பாலோர் வாழ்ந்தது சோணாட்டிலாகும். எனவே ஆசிரியர் சோணாட்டைப் பாட எடுத்துக்கொள்கிறார். மேலும் தம்மை ஆதரித்த சோழனாகிய அநபாயனுடைய நாடும் அதுவாக இருந்தது. அக்கருத்திற்கு வன்மை அளித்தது. இனி அடுத்துக் காணவேண்டியது திருவாரூரை ஏன் பாடினார் என்பது. எவ்வளவு பெரியவராகச் சுந்தரமூர்த்திகள் இருப்பினும், இறைவனாலேயே அவர் தடுத்து ஆட்கொள்ளப் பெற்றிருப்பினும் அவையெல்லாம் அவர் வீடு பெறுவதற்கு மட்டுமே வழிசெய்தன. அவர் திருவாரூரில் தேவாசிரய மண்டபத்தில் அடியார்களைச் சந்திக்காமல் இருந்திருப்பாரேயாயின் திருத்தொண்டத் தொகை தோன்றி இராதன்றோ? அது இல்லையாயின் தமிழ்நாட்டில் தோன்றி நிகழ்ந்த இந்தச் சமயப் புரட்சியை யாரும் அறிய முடிந்திராது அன்றோ? இதனை உலகம் அறியச் செய்த பெருமை திருவாரூரைச் சாரும் ஆதலால் சேக்கிழார் அவ்வூரைப் பாட எடுத்துக் கொள்கிறார். சுந்தரர் வாழ்க்கையிலே பெரிதும் ஈடுபட்டவர் சேக்கிழார். ஆனால் சுந்தரரை இறைவன் தடுத்து ஆட்கொண்டதிலும் இறைவனை அவர் தூது அனுப்பியதிலும் சேக்கிழார் ஈடுபடுவதைக் காட்டிலும் சுந்தரர் திருத்தொண்டத்தொகை பாடியதில் அதிகம் ஈடுபடுகிறார்.

அதனாலன்றோ,

"திருத்தொண்டத் தொகைமுன்
பணித்த திருவாளன்
வாச மலர்மென் கழல்வணங்க
வந்த பிறப்பை வணங்குவாம்!"

என்று அவர் மகிழ்ந்து கூறுகிறார். இராமகதை பாடவந்த கம்பநாடன் நாட்டுச் சிறப்பினைக் கூற எடுத்துக் கொண்டு மருத நிலத்தை அரசனாக உருவகஞ்செய்து மகிழ்கிறான். 'தண்டலை மயில்கள் ஆடத் தாமரை விளக்கந் தாங்க......மருதம் வீற்றிருக்கு மாதோ' என்ற இனிய பாடலை அறியாதார் இலர். அது தசரதன் கொலு வீற்றிருப்பதைச் சூசகமாக முன்னமே அறிவிக்கிறது. எட்டு மங்கையரை மணந்த சீவகன் சரிதங் கூறப் புகுந்த திருத்தக்க தேவர் நாட்டு வளம் கூறுகிறார். "நற்றவஞ் செய்வார்க்கிடம்; தவஞ்செய்வார்க்குமஃதிடம்: நற்பொருள் செய்வார்க்கிடம்; பொருள் செய்வார்க்கு மஃதிடம்' என ஏமாங்கத நாட்டை வருணிக்கிறார்தேவர். எண் மடந்தையரை மணந்தும் சீவகன் இறுதியில் துறவு பூண்டு தவமியற்றப் போய்விடுகிறான் என்பதைக் குறிப்பாக இல்லற நெறி வாழ்வார்க்கும், துறவு நிலை மேற்கொள்வார்க்கும் அதுவே இடம் என்னும் பொருள்பட அவர் கூறியுள்ளார். ஆனால் சேக்கிழார் காப்பியத்தில் வருபவர்கள் இல்லறம் துறவறம் என்னும் இரண்டினும் இருந்து. இரண்டிற்கும் அப்பாற் பட்ட தாய பயனை இங்கேயே துய்த்தனர். எனவே அதற்கு ஏற்ற முறையில் அவர் நாட்டு வளம் கூறுகிறார்.

"மேகமும் களிறும் எங்கும்
வேதமும் கிடையும் எங்கும்
யாகமும் சடங்கும் எங்கும்
இன்பமும் மகிழ்வும் எங்கும்

யோகமும் தவமும் எங்கும்
ஊசலும் மறுகும் எங்கும்
போகமும் பொலிவும் எங்கும்
புண்ணிய முனிவர் எங்கும் ''

'' தொண்டர்தம் இருக்கை எங்கும்......''

என்று பாடுமாற்றுல் பின்னர் வரப்போவதை அறிவிக்கிருர்.

முன்னர் உள்ளதும் மக்கள் மனத்தைக் கவர்ந்ததுமான காப்பியத்தில் சிற்றின்பச் சுவை மிகுதியும், அரசன் பல மனைவியரை மணந்த செய்தியும் அன்ருே காணக் கிடக்கின்றன? தம்முடைய காப்பியத்திலும், ஒரு வேளை மக்கள் அதனை எதிர்பார்ப்பார்களோ என்று ஐயுற்ற ஆசிரியர் முதலிலேயே அதனை மறுக்கிருர். அதனுலேயே 'திருக்கூட்டச் சிறப்பு' என்ற ஒரு பகுதி காணப்படுகிறது. இப்பகுதியில் உள்ள பதினெரு பாடல்களும் தனியே இருப்பவை. இப்பகுதி இன்றியும் நூலின் முழுத்தன்மை குறையாமல் நிலவும். என்ருலும் திருத்தொண்டர் புராணத்தின் உயிர்நாடி இதுதான்.

காப்பியம் என்னும் மரபுக்கேற்ப நாட்டுவளம், நீர்வளம், நகர்வளம் முதலிய கூறப்புகுந்தாலும் தம்முடைய நூலின் பொதுத் தன்மைக்கு ஏற்பவே உள்ள இவருடைய வருணனைகள் அறிந்து மகிழ்தற்குரியன. இதனுல் வருணனைச் சுவையும், குறைவில்லை. காவிரியைப்பற்றிக் கூறவந்த ஆசிரியர், ''அண்ணல் பாகத்தை ஆளுடை நாயகி, உள்நெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது'' என்றும், '' வம்புலா மலர் நீரால் வழிபட்டுச், செம்பொன்வார் கரை எண்ணில் சிவாலயத், தெம்பிரானை இறைஞ்சலின் ஈர்ம்பொன்னி, உம்பர் நாயகர்க் கன்பரும் ஒக்குமால்'' என்றும் பாடுகிருர். ஆறுபூக்கள் தாங்கி வருதலைக் கூறுதல் மரபுதான், ''காமர் மாலை அருகசைய நடந்தாய். வாழி காவேரி'' என்றுதான் இளங்கோவும் பாடுகிருர். அடியார்கள் வரலாறு கூறும் காப்பியம் என்பதைச் சேக்கிழார் தெள்ளத்தெளிய எடுத்தோதுகிருர் கீழ்வரும் பாடல்களில்:

'' ..............அரனுக்கு அன்பர்
ஆலின சிந்தை போல அலர்ந்தன
கதிர்கள் எல்லாம்.''
'' பத்தியின் பால ராகிப் பரமனுக்கு
ஆளாம் அன்பர்
தத்தமில் கூடி ஞர்கள் தலையினுல்
வணங்கு மாபோல்
மொய்த்தநீள் பத்தியின்பால்
முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல
விளைந்தன சாலி எல்லாம்.''

(நாட்டுச் சிறப்பு. 21-22)

முற்றி விளைந்த பயிர்களுக்குச் சேக்கிழார் காட்டும் இவ்வுவமையோடு ஒப்பட்டுப் பார்க்க வேண்டியது தேவர் சிந்தாமணியில் தரும் உவமை. 'கல்வி சேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே' என்ற அவருடைய பாடல் அவர் நூலுக்கு ஏற்றதே. கல்வியால் பெரியவர்கள் சிறந்த அடக்கம் உடையவர்களாக வாழ்வார்கள் என்பது யாவரும் அறிந்த ஒன்று. கல்வியால் பெரியவர்கள் தம் புகழைப் பிறர் பேசக் கேட்டகாலையும், தலைசாய்வர் நாணத்தால் என்று கலித்தொகை கூறுகிறது. 'தம் புகழ் கேட்டார்போல் தலை சாய்த்து மரந்துஞ்ச' என்ற உவமை கலித்தொகையாருடையது. இம்மூன்று உவமைகளும் ஒரு பொருள் கருதியே வந்துள்ளன, பழங்கால நூல், செடி (மரம்) தூங்குவதற்குத் தம்புகழ் பேசக்கேட்ட பெரியவர்களையும், சிந்தாமணி நெற்பயிர் முற்றி விளைந்து

வளைந்திருத்தற்குக் கல்வி சேர் மாந்தரையும் கூறின. ஆனால் சேக்கிழார் அதே பொருளுக்கு உவமை கூறவந்தார். அடியார்கள் ஒருவரை ஒருவர் சந்தித்த பொழுது தலைவணங்கிக் கொள்ளுதலை உவமை கூறுகிறார். இவர் நூல் முழுதும் பக்திச்சுவை மிகுதிப்பட்டிருத்தலுக்கு இது சிறந்த எடுத்துக்காட்டாகும்.

பக்திச்சுவை நனிசொட்டச் சொட்டப் பாடும் இக்காப்பியத்திற்கு ஏற்ற மனநிலை சேக்கிழாரிடம் இருந்தது. ஆனால் இவ்வொரு தகுதி மட்டும் இருந்துவிட்டால் சிறந்த காப்பியம் தோன்றிவிடாது. பல் சுவைகளும் நிறைந்த ஒரு நூலைப் பாட ஒரு சுவையைப்பற்றி மட்டிலும் நிறைந்த அறிவுடையார் ஒருவர் தகுதியுடையார் என்று கூறிவிடல் இயலாது. அவ்வாருயின் சேக்கிழாரிடம் ஏனைய தகுதிகள் இருந்தனவா? நிறைய இருந்தன என்றே கூறல்வேண்டும். உதாரணமாக ஒன்று காண்போம்.

ஒரு நாட்டில் ஒரு தலைவர் தோன்றினார் என்று கூறும்போது, அதற்கு ஏற்ற சூழ்நிலை அங்கு இருந்தது என்று கூற வேண்டியது ஆசிரியர் கடமையாகும். சூழ்நிலைபற்றிப் பாடும்பொழுதே இத்தகைய இடத்தில் இத்தகையவர் தோன்றுதல் இயல்புதான் என்ற எண்ணம் நம் மனத்தில் தோன்ற வேண்டும். உதாரணமாக வாணிக மனப்பான்மையை எடுத்துக் கொள்வோம். 'செய்க பொருளை' என்ற கொள்கையுடையார் இவர்கள். அப்பொருள் செயல் வகையில் ஓரோவழி நடுவு நிலைமை நீங்க வேண்டினும், அஞ்சாது நீங்கவேண்டும், இல்லையெனின் பெரும் பொருளாளர் தோன்றல் இயலாத காரியம். அவர்களைப் பொறுத்தவரையில், 'முடிபு நலமாயின் வழியைப்பற்றிக் கவலைகொள்ள வேண்டாம்' என்பதே கொள்கை. இத்தகைய ஒரு மரபில் காரைக்கால் அம்மையார் தோன்றுகிறார். அவருடைய வாழ்க்கைக்கும், அவர் பிறந்த மரபுக்கும் ஏணி வைத்தாலும் எட்டாது. ஆனால் அம்மையார் பிறந்தது உண்மை. உடனே சேக்கிழார் அதற்குக் காரணம் கற்பிப்பார் போலப் பாடுகிறார். காரைக்கால் வணிகர் ஒரு தனிப்பட்ட இனம் என்பது போலப் பாடுகிறார்.

"மானமிகு தருமத்தின் வழிநின்று
வாய்மையினில்
ஊனமில்சீர்ப் பெருவணிகர்
குடிதுவன்றி ஓங்குபதி"

என்று கூறுவதால் காரைக்கால் அம்மையார் தோன்றத் தகுந்த சூழ்நிலை அங்கே இருந்தது என்பதைத்தான் குறிப்பாக அமைக்கிறார்.

தமிழ்நாட்டில் எத்தனையோ நல்ல ஊர்கள் உண்டு. அவை அனைத்திலும் செம்மை சான்ற ஒழுக்கமுடைய அந்தணர்கள் வாழ்ந்திருக்கலாம். பின்னர் ஞானசம்பந்தர் ஏன் சீர்காழியுள் பிறக்க வேண்டும்? இவ்வினாவை உட்கொண்டவர் போலச் சூழ்நிலை அமைக்கிறார் ஆசிரியர்.

"அப்பதிதான் அந்தணர்தம்
கிடைகள் அரு மறைமுறையே
செப்பும் ஒலி வளர்பூகச்
செழுஞ்சோலை புறஞ்சூழ"

அவ்வூர் இருந்தது என்றும்,

"உளங்கொள்மறை வேதியர்தம்
ஓமதூ மத்திரவும்
கிளர்தரு நீற்றொளியிற்
கெழுமியநன் பகலும்"

அங்குச் சூழ்ந்திருந்தன என்றும் கூறு கிருர். இத்தகைய வருணனை ஏனைய ஆசிரியரும் பாடக்கூடியதே. ஆனல் மக்கள் இந்நிலையில் வாழ்வதுடன் இயற்கையுங்கூட இத்தகைய வாழ்விற்கு ஒத்திருந்தது என்று கூறுகையில் சேக் கிழார் ஒப்பற்ற காப்பியப் புலவர் ஆகி ருர். நிலத்திணைப் பொருள்களும் சீர் காழியில் வேள்வி செய்தனவாம்.

"பரந்தவினை வயற்செய்ய
பங்கயமாம் பொங்குஎரியில்
வரம்பில் வளர் தேமாவின்
கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரம்நீள் இலைக்கடையால்
ஒழுகுதலால் நெடிதவ்வூர்
மரங்களும்ஆ குதிவேட்குந்
தகையவென மணந்துளதால்"

என்று இவ்வாறு அவருடைய கற்பனை ஊற்றெடுக்கிறது.

"பூமாண்ட தீந்தேன் தொடைகீறி
வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப்
பழங்கள் சிந்தும்
ஏமாங் கதநாடு"

என்ற முறையில் வருணனை கூறிய திருத் தக்க தேவர் கவிதையும் இதுவும் ஒப்பு நோக்கற்குரியன. 'வேத வேள்வியை நிலை நாட்ட' வருகிருர் ஒருவர். அவர் பிறந்த நாட்டிற்கு வருணனை கூறவேண் டுமாயின் இதைவிடச் சிறந்தமுறையிற் கூற இயலாதன்ருே? இம்மட்டோடு விட வில்லை ஆசிரியர். நிலத்திணைப்பொருள் களாகிய மரங்களைக் கூறினர். இயங்கு திணைப் பொருள்களில் மக்களைப்பற்றிக் கூறியதை முன்னர்க் கண்டோம். இத் திணையில் சிறிது மக்களை விடத் தாழ்ந்த வண்டைப்பற்றிக் கூறுகிருர்.

"காமர்திருப் பதியதன்கண்
வேதியர்போல் கடிகமழும்
தாமரையும் புல்லிதழும்
தயங்கியநூ லுந்தாங்கித்
தூமருநுண் துகள்அணிந்து
துளிவருகண் ணீர்ததும்பித்
தேமருமென் சுருப்பிசையால்
செழுஞ்சாமம் பாடுமால்"

என்கிருர். வண்டுகள் மகரந்தமாகிய நீற்றை அணிந்து சாமகீதம் இசைக்கின் றனவாம். மரம், வண்டு, மக்கள் என்ற மூவரும் இந்நிலை பெற்று வாழ்ந்தமை யால் ஞானசம்பந்தர் பிறக்க அவ்வூர் ஏற்ற நிலமாக இருந்தது போலும்! இங் ஙனம் கற்பனைசெய்து பாடிவிடலாம். ஆனல் அக்கற்பனை அறிவுக்கும் அநு பவத்திற்கும் பொருத்தம் உடையதாக அமைதல் வேண்டும். கவிதையின் இயல் பறிந்தார் யாரும் இப்பாடல்களைக் குறை கூறல் இயலாது. ஏனைய புலவர்கள் வருணனை கூறுவார்கள். ஆனல் அந்த வருணனை இவ்வாறு பொருள் பொதிந்த கற்பனையாக இராது. கற்பனை என்ற அளவில் அவற்றை அநுபவிக்கலாம். ஆனல்பின்னர் நிகழவிருக்கும் சரித்திரத் திற்கும் இக் கற்பனைக்கும் யாதொரு தொடர்பும் இராது. வருணனை என்ற வுடன் தம்மை மறந்து கற்பனையில் இறங்கிவிடுதல் கவிஞர்களுக்கு இயல்பு. பல சமயங்களில் இவ் வருணனை முன்னுக்குப் பின் முரணுக நிற்கும். கவிச்சக்கரவர்த்தி கம்பனே இப்பிழைக்கு இலக்கு ஆகிவிடுகிருன். கோசல நாட்டைப்பற்றிய வருணனை அவனுல் பேசப்பெறுகிறது. கற்பனை. வருணனை என்று எடுத்துக்கொண்டால் இவை மிகச்சிறந்தவைதாம். "எல்லாரும் எல்லாப்பெருஞ்செல்வமும் எய்தலாலே, இல்லாரு மில்லை உடையார்களுமில்லை மாதோ". "வண்மை யில்லையோர்

வறுமையின்மையால்'' என்று கூறின கவிஞன் சில நூறுகவிகளுக்கு அப்பாற் சென்றதும் இதனை மறந்துவிடுகிறான். இராகவன் காடு செல்லத் துணிந்தவுடன் அந்தணர்கட்குத் 'தானம்' செய்கிறான். பசுக்களைத் தானம் செய்கிறான். ஆனால் தானம் பெறுகின்ற அந்தணர்கள் ஆசை அடங்க வில்லையாம். வாங்கியவர்களே மீட்டும் மீட்டும் வந்து வாங்குகிறார்களாம். அது தெரிந்த இராகவன் அவர்களைக் கடிந்து கொள்ளாமல் அவர்கள் பேராசையைக் கண்டு புன்சிரிப்புக் கொண்டானாம். இக்கருத்துடன்,

"பரித்த செல்வம் ஒழியப் படருநாள்
அருத்தி வேதியர்க்கு
ஆன்குலம் ஈந்துஅவர்
கருத்தின் ஆசைக்களவின்மை
கண்டுஇறை
சிரித்த செய்கை........."

என்று பாடுகிறான். இதற்கும், முன்னர்க் கூறிய வருணனைக்கும் என்ன தொடர்பு? கம்பனைத்தான் கேட்கவேண்டும். இத்தகைய முரண்பாடுகள் ஒன்றும் இன்றிச் செல்கின்றன சேக்கிழாருடையவருணனைகளும் கற்பனைகளும்.

ஏயர்கோன் கலிக்காமர் புராணத்தில் பெரும்பகுதி சுந்தரர் வரலாறே பேசப் பெறுகிறது. சுந்தரர் சங்கிலியாரை மணந்ததும், இறைவனைத் தூது அனுப்பியதும் ஆகிய செய்திகள் வரும் இடம் இச்சரிதமேஆகும். எனவே இப்புராணத் தொடக்கத்தில் வருணனை வேறுவிதமாக உள்ளது. சுந்தரர்காதல் கூறும் பகுதியாகலின் ஊர் பற்றிக் கூறும்பொழுது,

"நஞ்சு சூழ்வன நயனியர்
நளினமெல் அடிச்செம்
பஞ்சு சூழ்வன காளையர் குஞ்சியின்
பரப்பு" (ஏயர். புரா. 20)

ஒரு காப்பியப் புலவன் வருணனையில் புகுந்தால் இரண்டுவித வன்மைகள் அவன்பால் வேண்டும். ஒன்று அவன் கற்பனையுடன் கலந்து வருணனை செய்யும் பகுதி. ஏனையது. அவன் காணும் காட்சியை உள்ளவாறே வருணிப்பதாகும். இவ்விரண்டாவது வருணனையில்தான் கவிஞனுடைய கூர்ந்த அறிவும், அநுபவமும் தெளிவாகப் புலனாகும். நாம் காணும் காட்சியைத்தான் கவிஞனும் காணுகிறான். ஆனால் நாம் கண்டு காணாதவற்றை அவன் கண்டுவிடுகிறான். இங்ஙனம் அவன் காணும் காட்சிகள் பல. அவற்றுள் சிலவற்றை மட்டும் எடுத்துக்கொண்டு ஏனையவற்றைத் தள்ள நேரிடும். எவற்றை எடுப்பது, எவற்றைத் தள்ளுவது என்பதிலும் அவனுடைய வன்மையை நாம் அறிதல் கூடும். சில கவிஞர் உயர்ந்த மக்கள் வாழும் இடத்தை நன்கு அறிந்திருப்பர். அவர்கள் வாழ்க்கையை நன்கு அறிந்து அவர்களுடன் மிகுதியும் பழகி இருப்பர். ஆதலின் அப்பகுதிகள் வரும்பொழுது நன்கு கூறிவிடுவர். ஆனால் எளிய மக்கள் வாழ்க்கையைக் கூறுகையில் இடறி விழுவர். இதற்கு நேர் முரணான நிலையும் உண்டு. சில கவிஞர்களே எல்லாவற்றையும் நன்கு கண்டு பாடக் கூடியவர். ஆனால் இத்தகையோர் கட்குங்கூட ஓர் இடர்ப்பாடு நேர்வதுண்டு. எளிய மக்கள் வாழ்க்கை, சூழ்நிலை இவற்றைப் பாடும் பொழுது வருணனை முதலியவற்றிற்கு என்ன பொருள் அங்குளது என்று அறியாமல் தவிப்பர். அரண்மனையையும், கோவிலையும் கண்ட கண்களுக்குச் சேரியைக் கண்டால் அங்கு ஒன்றும் இல்லாதது போலவே தோன்றும். ஓரோவழி இருப்பது தெரியினும் அதனை உள்ளவாறே பாட மனம் வருவதில்லை. எனவே குடிசை கோபுரமாகவும் சாக்கடை தீர்த்த

மாகவும், காட்சியளிக்கும். இங்ஙனம் எல்லாம் இல்லாமல் சேக்கிழார் காப்பியம் அமைக்கிறார். புகழ்ச்சோழர் உறையூரை வருணித்த அதே புலவர், காஞ்சியை வருணித்த அதே கவிஞர், நந்தனார் சேரியையும் வருணிக்கிறார்.

"கார்ஏறும் கோபுரங்கள்
கதிர்ஏறும் மலர்ச்சோலை
தேர்ஏறும் மணிவீதி
திசைஏறும் வசையிலணி
பார்ஏறும் புகழ்உறந்தைப்
பதியின்வளம் பகர்வரிதால்"

என்று உறையூரையும்,

"தேர்ஒலிக்க மாஒலிக்கத்
திசைஒலிக்கும் புகழ்க்காஞ்சி'

என்று காஞ்சிமா நகரையும் உள்ளவாறு வருணித்த அதே சேக்கிழார், நந்தனாருடைய ஆதனூர்ச் சேரியைக் காண்கிறார்.

"பற்றியபைங் கொடிச்சுரைமேல்
படர்ந்தபழங் கூரைஉடைப்
புற்குரம்பைச் சிற்றில்பல
நிறைந்துளதோர் புலைப்பாடி"

என்று அப் பாடியை நமக்குத் தூரத்தே இருந்து அறிமுகம் செய்துவைத்த கவிஞராம் கலைஞர் இன்னும் அணித்தே அழைத்துச் செல்கிறார். அதோ ஒரு வீட்டின்முன் நாய் குட்டிகள் போட்டிருக்கிறது. மிக இளங்குட்டிகள். அங்கே வந்த இளஞ்சிறுவர்கள் நாய்க்குத் தெரியாமல் அக் குட்டிகளைக் கவர்ந்து கொண்டு, இடுப்பில்கட்டிய இரும்பு மணிகள் ஒலிக்க ஓடுகிறார்கள். தாய் நாயைப் பாருங்கள்! குலைக்கிறது. அக்குரைப்புச் சத்தத்தையும் அவர்கள் மணி ஓசை அமுக்கி விடுகிறது. வேறு என்ன செய்ய முடியும், எளியாரை வலியார் வாட்டும் போது? அடுத்தாற்போல் உள்ள மருத மரந்தான் பவளத்தூணாக இருக்கிறது. அதில் கிழிந்த தோல்தான் மரத்தொட்டில். நிழலில் உறங்குகிறது சேரிக் குழந்தை ஒன்று. பறை முதலிய இசைக் கருவிகள் தொங்குகின்றன எங்கும்! தற்காலத்தில் சேரிக்குச் செல்லும் சமுதாய சேவைத் தொண்டர் கண்டதுண்டா இக் காட்சியினை? அவர் தாம் சேரிக்குப் போவது பெரிய 'தியாகம்' என்று நினைத்துக்கொண்டு போகிறாரே; அவர் எங்கே காணப்போகிறார் இக் காட்சிகளை? ஆனால் சோழப் பேர் அரசின் முதல் அமைச்சர் இவற்றைக் கண்டு இதோ பாடுகிறார் :

"கூர்உகிர்மெல் அடிஅளகின்
குறும்பார்ப்புக் குழுச்சுழலும்
வார்பயின்முன் றிலில்நின்ற
வள்ளுகிர்நாய்த் துள்ளுபறழ்
கார்இரும்பின் சரிசெறிகைக்
கருஞ்சிறார் கவர்ந்தோட
ஆர்சிறுமென் குரைப்பு அடக்கும்
அரைக்கு அசைத்த இருப்புமணி"

"வன்சிறுதோல் மிசைஉழத்தி
மகவுஉறக்கும் நிழல் மருதும்
தன்சினைமென் பெடையோங்கும்
தடங்குழிசிப் புதைநீழல்"

எனவே இயற்கை வருணனை, கற்பனை வருணனை என்ற இரண்டு வகையிலும் தலையாய கவிதை இயற்றும் தக்கார் சேக்கிழார் என்பதும், அவருடைய நூலில் காப்பிய அமைதி நிறைந்து காணப்பெறுகிறது என்பதும் மறுக்க ஒண்ணா உண்மைகளாம்.

# சேக்கிழாரும் கல்வெட்டுக்களும்

"சைவ இலக்கியப் பேரறிஞர்"

டாக்டர். திரு. மா. இராசமாணிக்கனார் M. A., L. T., M. O. L. Ph. D.,

### சேக்கிழார்-சுந்தரர்-நாயன்மார் காலம்

சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தைப் பாடியவர். திருத்தொண்டர் என்பவர் சுந்தரர். அச்சுந்தரர் காடவர்கோன் கழற்சிங்கன் காலத்தவர். கழற்சிங்கன் மூன்றாம் நந்திவர்மன் என்ற பல்லவவேந்தன். அவர் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு (கி. பி. 840 - 865). சுந்தரர் தமது திருத்தொண்டத் தொகையில் தம்காலத்துச் சிவனடியார் பன்னிருவரையும் தமக்கு முற்பட்டவர் ஐம்பதின்மரையும் சேர்த்துப் பாடியுள்ளார். அவர்கள் காலம் ஏறத்தாழ, கி. பி. 350 — 865[1] என்னலாம்[2] சுந்தரரையும் அவரால் பாடப்பட்ட நாயன்மாரையும் பற்றிப் பெருநூல் செய்த சேக்கிழார் காலம் இரண்டாம் குலோத்துங்கன் காலமாகும். (கி. பி. 1133 - 1150)[3]

### காவியத்துக்குரிய மூலங்கள்

சேக்கிழார் தம் காப்பியத் தலைவரான சுந்தரர்க்கு ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகள் பிற்பட்டவர்; காலத்தால் முற்பட்ட கண்ணப்பர்க்கு ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகட்குப் பிற்பட்டவர். எனவே தமக்குப் பலநூறு ஆண்டுகட்கு முற்பட வாழ்ந்த நாயன்மார் அறுபத்து மூவர் வரலாறுகளை அவர் பெரியதோர் புராணமாகப் பாடினார் என்பது இங்கு அறியத்தகும். அவர் அங்ஙனம் பாடற்கமைந்த மூலங்கள் யாவை?

அப்பர், சம்பந்தர், சுந்தரர், மணிவாசகர் பாடிய முதல் எட்டுத் திருமுறைகள், ஒன்பதாந் திருமுறையில் சில பதிகங்கள், திருமூலர் பாடிய திருமந்திரம், காரைக்காலம்மையார் முதலியோர் பாக்கள், திருமுறைகளை வகுத்த நம்பியாண்டார்நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதி, சம்பந்தர்மீது பாடிய ஆறு சிறு நூல்கள், அப்பர் திரு ஏகாதசமாலை ஆகிய நூல்களைக் கொண்ட பதினொராந் திருமுறை ஆகியவையே பெரிய புராணத்திற்கமைந்த மூலங்கள் என்னலாம்.

இந்த மூலங்களைக்கொண்டு மட்டும் சேக்கிழார் நூல் பாடியிருப்பின், நாயன்மார் வரலாறுகளைப் பல விவரங்களோடு கூறியிருத்தல் இயலாது. சுந்தரர் முதலிய நாயன்மார் வாழ்ந்த காலம் பல்லவர் காஞ்சியில் இருந்து தமிழகத்தின் பெரும் பகுதியை ஆண்ட கால

[1] டாக்டர் மா. இராசமாணிக்கனார், பெரியபுராண ஆராய்ச்சி, பக். 43—61.

[2] டி, பக். 79—97.

[3] டி, பக். 13—28.

மாகும் (கி. பி. 300 — 900). பல்லவர் சைவ வைணவ சமயங்களை வளர்த்தவர்; கற்களைக் குடைந்து கோவில்களாக அமைத்தவர்; கற்கோவில்களையும் அமைத்தவர். பல்லவர்க்குப் பின் வந்த சோழப் பேரரசர் வழிவழிச் சைவர். ஆதலால் பாடல்பெற்ற கோவில்களைக் கற்கோவில்களாக மாற்றினர்; நாயன்மார் திருவுருவங்களை அமைவித்தனர்; அவர்கள் வாழ்ந்த ஊர்க்கோவில்களில் அவர்கட்குச் சிறப்புப் பூசைகளும் விழாக்களும் நடைபெற ஏற்பாடு செய்தனர். சில கோவில்களில் திருமுறைகள் ஓதப் பட்டன. முதலாம் இராசராசன் நம்பிகளைக் கொண்டு திருமுறைகளை வகுக்கச் செய்தான். இத்தகைய செயல்களால் கோவிற் சுவர்களில் நாயன்மார் பற்றிப் பல கல்வெட்டுக்கள் எழுந்தன. சில கோவில்களின் கருவறைச் சுவர்களில் நாயன்மார் வாழ்க்கைக் குறிப்புக்கள் சிற்பங்களாகப் பொறிக்கப்பட்டன. தஞ்சைப் பெரிய கோவிலில் சுந்தரர் வரலாறு ஓவியமாக்த் தீட்டப்பட்டது. கங்கைகொண்டசோழபுரத்துக் கோவிலில் சண்டீசப்பதம் உணர்த்தும் சிற்பம் அமைக்கப்பட்டது.

சேக்கிழார் அநபாயன் எனப்பட்ட இரண்டாம் குலோத்துங்கனிடம் முதல் அமைச்சராயிருந்தவர்; அதனால் நாடு முழுமையும் அரசாங்க மரியாதையுடன் சுற்றிப் பார்க்கும் வசதி பெற்றவர்; நாயன்மார் சிலருடைய வழியினரான சிற்றரசரைக் கண்டு அவர் முன்னோர் வரலாறுகளைக் கேட்டறியும் வசதி பெற்றவர். இத்தகைய பல வழிகளிலும் முயன்று அறுபத்துமூவர் பற்றிய வரலாற்றுச் செய்திகளைத் தொகுத்த பின்பே சேக்கிழார் பெரிய புராணம் பாடினர் என்பது ஆராய்ச்சியாற் போந்த உண்மையாகும்.[1]

சேக்கிழார் நாயன்மார் பற்றிய கல்வெட்டுக்களைப் படித்தே பல செய்திகளைப் தம் காவியத்துள் பாடியுள்ளார் என்பதற்குப் பல சான்றுகள் காட்டலாம். இடச்சுருக்கம் கருதி இரண்டு சான்றுகள் மட்டும் இங்குக் காட்டப்பெறும்.

மநுநீதிச் சோழன்

(1) மநுநீதிச் சோழனைப்பற்றிச் சிலப்பதிகாரம் (காதை 20, வரி 53—55)

"வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி யுகுநீர்
நெஞ்சுசுடத் தான்தன்
அரும்பெறற் புதல்வனை ஆழியில்
மடித்தோன்"

என்று கூறியுள்ளது. வேறு நூல்களில் இவ்வேந்தனைப் பற்றிய விவரமான குறிப்புக்கள் இல்லை. அங்ஙனம் இருப்பச் சேக்கிழார் இவனது வரலாற்றை ஏறத்தாழ 35 பாக்களிற் பாடியுள்ளார்; அரசன் கன்றைக் கொன்ற தன்மகனைத் தேருர்ந்து கொல்லும்படி அமைச்சனை ஏவியது - அவன் அது செய்யாது தற்கொலை செய்துகொண்டது - இறைவன் இறந்த பசுக்கன்றையும் அமைச்சனையும் மன்னன் மகனையும் எழுப்பினமை என்னும் செய்திகள் சேக்கிழார்க்கு எங்ஙனம் கிடைத்தன?

சேக்கிழார் காலத்து அநபாயன் தந்தையான விக்கிரம சோழனது

---

[1] இவற்றைத் தெளிவாக அறிய விரும்புவோர் இக்கட்டுரையாசிரியர் எழுதியுள்ள பெரிய புராண ஆராய்ச்சியைக் காணலாம்.

(கி. பி. 1120-1135) 5ஆம் ஆட்சியாண்டில் (கி. பி. 1124 இல்) திருவாரூர்ப் புற்றிடங்கொண்டார் கோவில் இரண்டாம் திருச்சுற்றின் வடபுறச்சுவரில் பெரிய கல்வெட்டு வெட்டப்பட்டது. அது மநுநீதிச்சோழன் வரலாற்றைச் சிவபெருமான் கூறியதாகக் (மேலே கூறப்பட்ட விவரங்களோடு) கூறுகிறது. அதன் ஒரு பகுதியைக் கீழே காண்க.

"மநு தன் புத்ரன் ஏறிவருகிற தேரில் பசுவின் கன்றகப்பட்டு ப்ரமாதப்பட அதின் மாதாவான சுரபி கண்டு துக்கித்து மநுவின் வாசலில் மணியை யெறிய அதுகேட்டு மநு தன் மந்திரி இங்களுட்டு பாலையூருடையான் உபய குலாமலனைப் பார்த்து நீ சென்று இதனை யறிந்து ... ... வாயிற்புறத்து ஒரு பசு மணி எறியா நின்றது என்று சொல்ல, அதுகேட்டு மநு புறப்பட்டு பசுவையும் பட்டுக்கிடந்த ...'படிவினவி தன் புத்ரன் ஏறின தேரிலே பட்டமை அறிந்து, அக்கன்றுக்கு நேராகத் தன் புத்திரன் ப்ரிய வருத்தனைத் தேரிலே ஊர்ந்து குடுக்க வென்று உபயகுலாமலனுக்குச் சொல்ல அவன் சந்தாபத்தோடும் புறப்பட்டுத் தன் செவிகளைத் தரையிலே குடைந்து கொண்டு துக்கிதனுய், மநுதானே புறப்பட்டுத் தன் புத்திரனைத் தானே தேரிலே ஊர்ந்து குடுக்க, அப்போதே நாம் அவனை அநுக்ரகித்து கன்றுக்கும் மந்திரிக்கும் மநுபுத்ரனுக்கும் ஜீவன் குடுக்க, அதுகண்டு மநுசந்தோஷித்துக் கன்றினை எடுத்துக்கொண்டு பசுவுக்குக் காட்டிக்குடு ... ... ஏபிஷேகம்பண்ணி இவனுக்கு உபயகுலாமலன் மகன் சூரியனை மந்திரியாக்கி இவனுக்குத் தன் புத்திரன் மாளிகை ... ... மங்கல ... ... மூரும் குடுத்து மநுவும் உபயகுலாமலனும் தபசினைத் தலைநின்றமையில்...

கயிலாயநாதர் கல்வெட்டு

(2) காஞ்சி - கயிலாசநாதர் கோவிலைக் கட்டிய இராஜசிம்மனைப்பற்றி

"காடவர் கோமான் கச்சிக் கற்றளி
எடுத்து முற்ற
மாடெலாம் சிவனுக் காகப் பெருஞ்
செல்வம் வகுத்தல் செய்வான்"
பூசலார் புராணம்-9.

என்று சேக்கிழார் கூறியுள்ளார். சேக்கிழார் காலம் கி. பி. 1135—50.

முதற்குலோத்துங்க சோழன் காலத்தில் (கி. பி. 1070-1122) இக்கயிலாயநாதர் கோவில் மூடப்பட்டது - அதன் சொத்து விற்கப்பட்டது - அதன் திருவிருப்பும் திருமடைவிளாகமும் பக்கத்தில் உள்ள அனையபதங்காவுடையார் கோவிலுக்குக் கொடுக்கப்பட்டன. கி. பி. 14 ஆம் நூற்றுண்டின்பிற்பாதியில் தான் காஞ்சியைக் கைப்பற்றிய கம்பணவுடையார் காலத்தில் கயிலாசநாதர் கோவில் திறக்கப்பட்டது - அதன் சொத்து மீட்கப்பட்டது என்று கயிலாசநாதர் கோவில் (கம்பணவுடையார் காலத்துக்) கல்வெட்டுக் கூறுகிறது.

எனவே, அநபாயனுக்குப் பாட்டனுன முதற்குலோத்துங்கன் காலத்தில் மூடப்பட்ட கயிலாசநாதர் கோயில் தன் செல்வத்தையும் பொலிவையும் ஏறத்தாழ 250 ஆண்டுகள் இழந்திருந்தது - மூடுபட்டுக் கிடந்தது; சேக்கிழார் காலத்திலும் அதே

[5] A. R. E. 164 of 1894 ; S. I. I. Vol. 5. 456.

நிலையில்தான் இருந்தது. அங்ஙனம் இருந்தும், அவர் மேலே கூறியவாறு இரண்டு வரிகளைப் பாடியுள்ளார். அவர் அங்ஙனம் கூறச்சான்று யாது?

கயிலாசநாதர் கோவில் கி. பி. 685-705க்குள் கட்டப்பட்டது. இரண்டாம் நந்திவர்ம பல்லவனை (கி. பி. 710-775) முறியடித்த சாளுக்கிய மன்னனான இரண்டாம் விக்கிரமாதித்தன் காஞ்சியில் கயிலாசநாதர் கோவிலைப் பார்வையிட்டான்[6] அதன் பெருஞ் செல்வத்தைக் கண்டு வியந்தான்; அச்செல்வத்தை அக்கோவிலுக்கே அளித்து மீண்டான் என்று அவனுடைய கேந்தூர்ப்பட்டயம் கூறுகிறது[7]. இச்செய்தியையே கயிலாசநாதர் கோவிலில் உள்ள அவ்விக்கிரமாதித்தனது கன்னடக் கல்வெட்டு ஒன்றும் கூறுகிறது.[8]

சேக்கிழார் இவ்விரு கல்வெட்டுக்களையும் படித்துணர்ந்த பின்பே, மேலே கூறப்பட்ட இரண்டு வரிகளைப் பாடினார் என்று கோடல் பொருத்தமாகும்.

[6] S. I. I. 1. 86.

[7] Epigraption India, Vol. 9, P. 205.

[8] Epigraphia Indica, Vol. 3, P. 359.



## சப்தவிடங்கஸ்தலங்கள்

" சீரார் திருவாரூர் தென்னாகை நள்ளாறு
காரார் மறைக்காடு காறாயில் — பேரான
ஒத்ததிரு வாய்மூர் உவந்ததிருக் கோளிலி
சத்த விடங்கத் தலம். "

1. திருவாரூர் — வீதிவிடங்கர் — அசபாநடனம்.
2. திருநள்ளாறு — நகவிடங்கர் — உன்மத்தநடனம்.
3. திருநாகைக்காரோணம் — சுந்தரவிடங்கர் — பாராவாரதரங்கநடனம் — வீசிநடனம்.
4. திருக்காறாயில் — ஆதிவிடங்கர் — குக்குடநடனம்.
5. திருக்கோளிலி — அவனிவிடங்கர் — பிருங்கநடனம்.
6. திருவாய்மூர் — நீலவிடங்கர் — கமலநடனம்.
7. திருமறைக்காடு — புவனிவிடங்கர் — ஹம்ஸபாதநடனம்.

# சரபமூர்த்தி

"வேதாந்தசிரோமணி"

பிர்மஸ்ரீ. K. இராஜகோபால சாஸ்திரி

यो घोरं वेषमास्थाय शरभाख्यं महेश्वरः ।
नृसिंहं लोकहन्तारं संजघान महाबलः ॥

என்பது சரபோபநிஷத். ஹிரண்யகசிபு என்ற அசுரனால் துன்ப மடைந்த அவனுடைய மகன் பிரஹ்லாதனைக் காக்க நரசிங்க வடிவுடன் தூணிலிருந்து தோன்றினர் திருமால். அசுரன்பெற்ற வரத்திற்கேற்ப மாலை வேளையில் வாயிற்படியில் தன்தொடைகளில் கிடத்தி நகங்களால் கீறிஇரத்தத்தைப் பருகினர். இரத்தபானத்தால் மதங்கொண்டார்; அசுரனைக்கொல்ல மேற்கொண்ட கோபமும் தணியவில்லை. மதத்தினல் கோபத்துடன் ஹூங்காரம் செய்யும் திருமாலைச் சாந்தப்படுத்த அணுகுவதற்கே அமரர் யாவரும் அஞ்சினர். தேவர்களின் வேண்டுகோளுக்கு இரங்கி சிவபெருமான் சரபரூபத்துடன் தோன்றினர். நரசிங்கத்துடன் பதினெட்டுநாட்கள் போரிட்டார். தேவர்கள் வேண்டியபடி திருமாலைக்கொல்லாமல் தோலை உரித்து ஆடையாக அணிந்தார் என்பது புராண வரலாறு.

சரப பக்ஷியாகச் சிவபெருமான் தோன்றியவுடனேயே சிவனென உணர்ந்த நரசிங்கம் அவருடன் போரிடாமலேயே சிவனுடன் ஐக்யமானர் என்றும் ஒரு புராணம் கூறும்.

இந்த வரலாறு ரிக்வேதத்தில் மிகவும் ஆராய்ந்து அறியும்படி குறிப்பாகக் காட்டப்படுகிறது. शरभाय ऋषिबन्धवे என்ற வாக்கியத்தினல். ஆனல் யஜுர்வேதத்திலோ கொஞ்சம் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

हरिं हरन्तमनुयन्ति देवाः ।
विश्वस्येशानम् ऋषभं मतीनाम् ॥

ஸகலதேவர்களின் புத்தியை பிரேரணை செய்பவரும் ஹரியை அபஹரித்துச் செல்பவரும் உலகத்திற்குத் தலைவனுமாகியசிவபெருமானைத் தேவர்கள்பின்தொடர்ந்து வேண்டினர். இந்த யஜுர்வேத ஆரண்யக மூன்றும் பிரச்னத்திலுள்ள வாக்கியம் புராணத்தில் காணப்படும் வரலாற்றின் ஸாரத்தைக் கூறுகிறது.

அஷ்டோத்தர சதோபநிஷத்துக்களில் சரபோபநிஷத் என்பதும் ஒன்று. அதில் योघोरं என்று தொடங்கி நான்கு மந்திரங்களில் மேற்கூறிய வரலாறு சுருக்கமாகக் கூறப்படுகிறது. மேலும் பிரமனின் சிரங்கொய்தல், பஞ்சகிருத்தியம் செய்தல்,

காலனைக் காலால் உதைத்தல், காமனைக்கண்ணால் எரித்தல், தன்னுடைய கண்ணாகிய தாமரையால் அர்ச்சித்த விஷ்ணுவுக்கு சக்கரமளித்தல், தடங்கலற்ற நிக்ரஹ அனுக் கிரஹ சக்தியைப் பெற்றிருத்தல் முதலிய சிவபரத்வ ஸாதகமான பல ஏதுக்களைக்கூறி அவனுக்கு வணக்கம் கூறுகிறது சரப என்ற பதத்திற்கும் பொருள்உரைக்கப்படுகிறது.

शरा जीवास्तदङ्गेषु भाति नित्यं हरिः स्वयम ।
ब्रह्मैव शरभः साक्षान् मोक्षदोऽयं महामुने ॥

துன்பங்களை அநுபவித்தலின் ஜீவன்கள் சரமெனப்படுவர். திருபுரஸம்ஹார காலத்தில் திருமால் சிவனுக்கு அம்பாக இருந்தமையால் சரம் என்பது அம்பாகிய திருமாலையும் உணர்த்தும். ஸகல ஜீவன்களும், அம்பாகிய மாலும் சிவனிடத்தில் விளங்குகின்றமையால் (भाति - விளங்குகிறது) மோக்ஷமளிக்கும் பரம்பொருளே சரப என்ற சொல்லால் உணர்த்தப்படும்.

வேதம் உபநிஷத் இவைகளில்மட்டுமின்றி புராணங்களில் விரிவாக இந்த வரலாறு சொல்லப்படுகிறது. சரபமூர்த்தியின் திருவுருவம் காஞ்சிப் புராணத்தில்

"நன்னுலிரண்டு திருவடியு நனிநீள்வாலு முகமிரண்டுங்
கொன்னர் சிறகு முருத்திரமுங் கொடுப்பேரார்ப்பு மெதிர்தோற்றிச்
செந்நீர் பருகிச்செருக்கு நர மடங்கலாவி செகுத்துரிகொண்
டொன்னர் குலங்கண் முழுதழிக்கு முடையான் சரபத்திருவுருவம்"

(சிவபுண் · 32)

எனவரும்,

பிர்மாண்ட புராணத்தில் கௌரீமாயூர க்ஷேத்திர மாகாத்மியம் உள்ளது. அதில், 59, 60 ஆவது அத்தியாயங்களில் சரபஸ்வரூபம் கூறப்படுகிறது. கீழே நான்கு கால்கள் மேலே நான்கு கால்கள் ஆக எட்டுக் கால்களும் நான்கு திருக்கரங்களும் உடையவர். (சிலபுராணங்களிலும், தியான சுலோகங்களிலும் ஆயிரம் கையுடையவர் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது) பக்ஷியின் அங்கமாக அலகும், இறக்கைகளுமுடைய வர். விலங்கின் அங்கமாக வாலுடையவர் (நரியின் வால்போன்ற வாலுடையவர் என்றும் ஒரு தியான சுலோகம்) கூர்மையான நகங்களையும். கோரைப் பல்லையுமுடையவர். சந்திரன், சூரியன், அக்னி என்ற மூன்று திருக்கண்ணுடையவர். சந்திரப்பிறை யணிந்த சடையுடையவர். ஊழிக்காலத்து மேகம்போல் பெரிய கூச்சல் உடையவர். மின்னற்கொடிபோன்று ஒளிவீசும் உடலையுடையவர். தூக்கியகாதும். கருத்த கழுத்தும், பயங்கரமான துடிக்கும் நாக்குமுடையவர். காளியும் துர்க்கையும் இரு இறகுகள். இருதயத்தில் பைரவரும். வயிற்றில் பாடவாக்கினியும், தொடைகளில் வியாதியும் மிருத்யுவும், உடையவர். புயல் காற்றினும் கடுகிய வேகமுடையவர். தலையில் கங்கையும் கிரீடமும் கொண்டவர் தொடையில் கிடத்திய நரசிங்கமுடையவர். இவ்விதமாகச் சரபரூபம் கூறப்படுகிறது. மந்திரயந்திர பேதங்களுக்கு ஏற்றவாறு சிற்சில மாறு பாடுகளும் உருவத்தில் கூறப்பட்டிருக்கின்றன.



11

பிர்மாண்ட புராணத்திலேயே நரசிங்கம் சரபமூர்த்தியைத் துதிப்பதாக ஒரு அஷ்டோத்திரசதநாம ஸ்தோத்திரம் உள்ளது. அதிலுள்ள நாமங்கள் பெரும்பாலும் மகாமந்திரமாகிய ஸ்ரீ ருத்திரத்தில் உள்ளபடி இருக்கின்றன.

अतः प्रदोषे शिव एक एव पूज्योऽथ नान्ये हरिपद्मजाद्याः பிரதோஷ காலத்தில் சிவன் ஒருவனே பூசிக்கத்தக்கவன். மற்ற விஷ்ணு, பிர்மா முதலியோர் பூசிக்கத் தக்கவர் இல்லை என்ற வாக்கியத்திற்கு அபவாதமாக न प्रदोषे हरिं पश्येन्नृसिंहं राघवं विना பிரதோஷ காலத்தில் நரசிம்மனையும், ராகவனையும் தவிர விஷ்ணுவைப் பார்க்க லாகாது என்று காணப்படுகிறது. பிர்மாண்டபுராணத்தில் शिवांशो नृहरिः सेव्यः प्रदोषेष्वप्यसेदतः பிரதோஷ காலத்தில் நரசிம்மன் பூசிக்கத்தக்கவர் என்று கூறி யுள்ளது. மேலும் ஸ்காந்த புராணத்தில்

हरिँ हरन्तं शरभं विश्वस्येशानमीश्वरम् ।
अनुयान्ति सुराः सर्वे नमो वाक्यैः सहद्रुतम् ॥

என்று யஜுர்வேதத்தில் உள்ளது போலவே சொல்லப்படுகிறது. மேலும் शूलायुधाय सुरवृन्दकमौलिमाला लीलायमानचरणाम्बुजपल्लवाय । हेलावलेप परिभूतनृसिंहंरंहो लीला-पराय शरभाकृतये नमोऽस्तु என்று தொடக்கமுள்ள பலதுதிகளும் உள்ளன.

ந்ருசிம்ம புராணத்தில் तन्नृसिंहशिरो यावन्नखैश्छेत्तुं समुद्यतः (நரசிங்கத்தி னுடைய தலையை நகங்களால் எப்பொழுது கொய்ய முயன்ருரோ) என்று தொடங்கி தேவர்களின் வேண்டுகோளும் ஈசன் அதற்கு இசைந்து அருள்பாலித்ததும் கூறப்படுகிறது.

காசிகண்டத்தில் :— पुरा हिरण्यकशिपुं दैत्यराजं महाबलम् । हत्वा तद्रुधिरापान प्रमत्तं याचितः सुरैः । रुद्रः शरभरूपेण नरसिंहमपीडयत् என்று தொடங்கி இவ் வரலாறு காணப்படுகிறது. சிவபராக்கிரமத்தில் சிவபெருமானுடைய அஷ்டாஷ்ட (64) மூர்த்தங்களைப்பற்றிக் கூறுமிடத்து முப்பதாவதாக ஸிம்ஹக்ன மூர்த்தி கூறப்படுகிறது.

சாரதாதிலகம், மந்திரமஹார்ணவம் முதலான மந்திர சாஸ்திரங்களில் சிற்சில மந்திரங்களும், அவற்றிற்குரிய ரிஷி சந்தஸ்தியானம் கரந்யாசம், அங்கந்யாசம் இவை கூறப்படுகின்றன. ஆயினும் சரபமூர்த்தியின் மந்திரங்களையும், யந்திரங் களையும், தியானங்களையும் புரச்சரண முறைகளையும், விரித்துக் கூறுவது ஆகாசபைரவ கல்பம். இதில் பல துதிகள் உள்ளனவாயினும், அவற்றுள் சரபாஷ்டகம், தாருண சப்தகம், சரபபுஜங்கப்ரயாதம் என்ற மூன்று துதிகளும் போற்றத்தக்கனவாக அமைந்துள்ளன. பிர்மாண்ட புராணத்திலும் சரபஸ்துதிகள் உள்ளன. அதிலும் சரபாஷ்டகம் (முன்னதைக் காட்டிலும் வேறு வகையானது) சிறப்பாக உள்ளது.

சரப மந்திரங்கள் சத்ருக்களை அழிப்பதில் ஒப்புயர்வற்றனவாக உலக வழக்கத்தில் கூறப்படினும், சாந்தி, வசீகரணம், ஸ்தம்பனம், வித்வேஷணம்,

உச்சாடனம், மாரணம் என்ற சத்ருஜயத்திற்குத் தேவையான ஷட்கர்ம விதானத்தைத் தவிர, பிள்ளைப்பேறு, பிணி நீக்கம், பிசாசு முதலியவற்றின் நிவர்த்தி முதலிய பயன்களைக் குறித்தும் யந்திரங்களும் அபிஷேக முறைகளும் பலி முறைகளும் கூறப்படுகின்றன.

அபிஷேகம்:- நன்கு அலங்கரிக்கப்பட்ட கும்பத்தில் சரபமூர்த்தியை ஆவாஹனம் செய்து ஷோடசோப சாரத்துடன் பூஜித்து அருகம்புல் அல்லது விர்வா மித்ரம் (ஒருவகையான தர்ப்பம்) இவைகளால் கும்பத்தைத் தொட்டுக்கொண்டு தோஷத்திற்குத் தக்கவாறு 100 அல்லது 1000 ஆவர்த்தி சரபமூலமந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். பின்பு அந்த நீரை அபிஷேகம் செய்யவேண்டும். மூன்று நாள் அபிஷேகம் செய்தால் சிறுநோய்களும், ஐந்து நாள் செய்தால் வாதரோகம் வாதசூலை முதலியனவும் மூன்று மாதம் செய்தால் பிசாசுகளின் பிடையும், ஒருவருஷம் செய்தால் காக்கை வலிப்பு, க்ஷயரோகம் முதலிய பெரும் நோய்களும் நிங்கும்.

இந்த அபிஷேகத்துடன் ரக்ஷையும் கட்டினல் மலட்டுதோஷமும் நீங்கும்; ஜன்ம வந்திக்குப் பத்து நாட்களும், காசு வந்திக்குப் பன்னிரண்டு நாட்களும், மிருத வந்திக்குப் பதினறு நாட்களும் அபிஷேகம் செய்யவேண்டும். ஈயம் ஆறுமாதமும், செம்பு ஒருவருஷமும், மூன்று லோஹம் ஒன்றரையாண்டும், வெள்ளி மூன்று ஆண்டும், பொன் ஆயுள் உள்ள வரையிலும் வீர்யமுடையதாக இருக்கும். ஆதலின் செல்வத்திற்கும், தோஷத்திற்கும் தக்கபடி ஒருலோகத்தால் ரக்ஷை செய்து கட்டவேண்டும். இந்த ரக்ஷையை அணிந்தவர்கள் ஆறுமாதம் வரையில் நதியைத்தாண்டலாகாது. வெள்ளிக்கிழமைகளில் ஸ்நானம்செய்து தூபதீபம் காட்டவேண்டும். காகத்திற்குப் பலி யிடலும் அந்தணர்களுக்கு அன்னமளித்தலும் வேண்டும்.

பலியிடல்:- சுத்தமான பூமியில் பலியை வைத்து பூமியைக்கையால் தொட்டுக் கொண்டு தேவதைகளை அழைக்க வேண்டும், பிறகு அந்த பலியை காகங்கள் உண்ணும் பொழுது பிண்டம் உடையும் நிலை, கூறுகள், அக்கூறுகள் விழுந்ததிசை இவற்றைக்கொண்டு இத்துணைக்காலத்தில் இவள் இன்ன மகவு பெறுவாள் என்பன போன்ற பலசகுனங்களும் கூறப்படுகின்றன,

ஆசார்யனுடைய அருளின்றி மந்திர யந்திரங்கள் பலனளிக்கமாட்டா. ஆதலின் தேசிக ஸ்தோத்திரம் என்று ஒரு துதி ஆசார்யனை சரபமூர்த்தியாகப் பாவித்து எழுதப்பட்டிருக்கிறது, மேலும் ஆகாச பைரவ கல்பத்தில் சரபமூர்த்தியின் கவசம் ஒன்று மற்ற கவசஸ்தோத்திரங்களைப்போலவே ஈசனின் ஒவ்வொரு ரூப நாம பேதங் களைக்கூறி காக்கவேண்டும் என்று பிரார்த்திப்பதாக உள்ளது. அகாராதி அக்ஷராந்த மான ஐம்பத்தொரு அக்ஷரங்களுக்கும், தேவதை, நிறம், ஸ்வரூபம் இவைசொல்லப் படுகின்றன.

சரப மூர்த்திக்குத்தனியாக பிஜாக்ஷரங்கள் நிரம்பிய ஒரு சகஸ்ரநாம ஸ்தோத்திரமும் உள்ளது.

சில மந்திரங்கள்

सालुवेशाय विद्महे पक्षिराजाय धीमहि।
तन्नो रुद्रः प्रचोदयात्

சரப காயத்ரியான இம்மந்திரத்தை ஜபம் செய்பவர்களுக்குக் கனவிலும் பாம்பு பயம் இல்லை என்று விசேஷமான பலன் கூறப்படுகிறது.

மந்திரங்களை மட்டும் ஜபிப்பது அதிக விரைவில் பயனளிப்பதில்லை, ஆதலின் யந்திரம், புரச்சாணம் இவைகளும் இன்றியமையாது வேண்டப்படுவன. மேலும் மந்திரங்களுக்கு ரிஷி சந்தஸ், அங்கந்யாஸம், கரந்யாஸம், தியானம் இவைகளை அறிந்து ஆசார்யனிடம் உபதேசம் பெற்றே மந்திரங்களை ஜபிக்கவேண்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

மாலா மந்திரம் :

ओं नमः पक्षिराजाय निशितत्रिशूलवरनखाय अनेककोटि ब्रह्माण्ड कपालमाला-लंकृताय सकल कुल महानागभूषणाय सकलरिपुसमूह रम्भाटवीमोचनाय महानीलाय नृसिंह-गर्वापहरणाय शरभसालुवाय ह्रां ह्रीं ह्रूं प्रवेशाय रोगग्रहं तापग्रहं बन्धय चातुर्थिकग्रहं बन्धय, भीमग्रहं बन्धय अपस्मारग्रहं बन्धय उन्मादग्रहं बन्धय ब्रह्मराक्षसग्रहं बन्धय भूचरग्रहं बन्धय खेचरग्रहं बन्धय वेतालग्रहं बन्धय कूश्माण्डग्रहं बन्धय स्त्रीग्रहं बन्धय पापग्रहं बन्धय विभ्रमग्रहं बन्धय विक्रमग्रहं बन्धय विकामग्रहं बन्धय प्रेतग्रहं बन्धय पिशाचग्रहं बन्धय आवेशग्रहं बन्धय अनावेशग्रहं बन्धय क्रां हां त्रोटय प्रैं त्रैं ह्रैं मारय, शीघ्रं मारय मुञ्च दह पच नाशय सर्वदुष्टान् नाशय हुं फट् स्वाहा

சரபமூர்த்தியின் மூல மந்திரம் :

ओं खे खां खं फट् प्राणग्रहासि प्राणग्रहासि हुं फट् सर्वशत्रुसंहरणाय शरभसालुवाय पक्षिराजाय हुं फट् स्वाहा (இம்மந்திரத்தில் प्राण ग्रहासि என்றவிடத்தில் प्राणान् ग्रस என்றும் சிலர் பாடம்) கவசத்தில் உள்ள மந்திரம்: ओं नमो भगवते ज्वल ज्वल प्रज्वल प्रज्वल सर्वसाध्यं महां रक्ष रक्ष सर्वदुष्टेभ्यः हुं फट् स्वाहा

ओं नमोऽष्टपादाय सहस्र बाहवे द्विशिरसे त्रिणेत्राय द्विपक्षायाग्निवर्णाय मृगविहङ्ग-रूपाय वीरशरभेश्वराय नमः ओम्।

மற்றொரு மாலா மந்திரம் :

ओं नमो भगवते शरभसालुव सर्वभूतोच्चाटनाय ग्रहराक्षसनिवारणाय ज्वालामाला स्वरूपकदक्ष निष्कासनाय साक्षात्कालरुद्रस्वरूपाष्टमूर्तये कृशानुरेतसे महाक्रूरभूतोच्चाटनाय अप्रतिशयनाय शत्रूंश्च नाशय नाशय शत्रुपशून् गृह्ण गृह्ण खाद खाद ओं हुं फट् स्वाहा

தியானம் :

चन्द्रार्काग्नित्रिदृष्टिः कुलिशवरनखश्चञ्चलात्युऽग्रजिह्वः
काली दुर्गा च पक्षौ हृदयजठरगौ भैरवो बाडवाग्निः ।
ऊरुस्थौ व्याधिमृत्यू शरभखगवरश्चण्डवातातिवेगः
संहर्ता सर्वशत्रून् विजयति शरभः सालुवः पक्षिराजः ॥

ज्वलन कुटिलकेशं सूर्यचन्द्राग्निनेत्रं
निशित करनखाग्रं धूतहेमाद्रिदेहम्
शरभमथ मुनीन्द्रैः सेव्यमानं सिताङ्गं
प्रणतभयविनाशं भावयेत् पक्षिराजम ।

சரபாஷ்டகம்

देवाधिदेवाय जगन्मयाय शिवाय नालीकनिभाननाय ।
शर्वाय भीमाय शराधिपाय नमोऽस्तु तुभ्यं शरभेश्वराय ॥ 1

शीतांशुचूडाय दिगम्बराय सृष्टिस्थितिध्वंसनकारणाय ।
जटाकलापाय जितेन्द्रियाय नमोऽस्तु तुभ्यं शरभेश्वराय ॥ 2

कलङ्ककण्ठाय भवान्तकाय कपालशूलाङ्ककराम्बुजाय ।
भुजङ्गभूषाय पुरान्तकाय नमोऽस्तु .... ... ॥ 3

शमादिषट्काय यमान्तकाय यमादियोगाष्टकसिद्धिदाय ।
उमाधिनाथाय पुरातनाय नमोऽस्तु ... ... ॥ 4

घृणादिपाशाष्टकवर्जिताय खिलीकृतास्मत्पथिपूर्वकाय ।
गुणादिहीनाय गुणत्रयाय नमोऽस्तु ... ... ॥ 5

कालातिवेदामृतकन्दलाय कल्याणकौतूहलकारणाय ।
स्थूलाय सूक्ष्माय स्वरूपकाय नमोऽस्तु ... ... ॥ 6

पञ्चाननायाखिलभास्कराय पञ्चाशदेकर्ण पराशराय ।
पञ्चाक्षरेशाय जगद्धिताय नमोऽस्तु ... ... ॥ 7

हराय भीमाय हरिप्रियाय भवाय शान्ताय परात्पराय ।
मृडाय रुद्राय त्रिलोचनाय नमोऽस्तु तुभ्यं शरभेश्वराय ॥ 8

इमं स्तवं जपेद्यस्तु शरभेशाएकं नरः ।
तस्य नश्यन्ति पापानि रिपवश्च सुरोत्तमाः ॥

ஸ்துதிகள்

1 मृगाङ्कलाङ्गूलसचञ्चुपक्षदंष्ट्राननाष्टाङ्घ्रिभुजासहस्रः ।
त्रिनेत्र गङ्गेन्दुरविप्रभाढ्यः पायादपायाच्छरभेश्वरो नः ॥

2 क्षुब्धं जगद्येन नृसिंहमूर्तेस्तेजोभिरासीद्गततापमोहः ।
अभूत्प्रसन्नः स भवेत्क्षणेन पायादपायाच्छरभेश्वरो नः ॥

3 नृसिंहमत्युद्धतदिव्यतेजसं प्रकाशितं दानवभङ्गदक्षम् ।
प्रशान्तिमन्तं विदधाति योऽसौ पायादपायाच्छरभेश्वरो नः ॥

4 योऽभूत्सहस्रांशुशतप्रकाशः सपक्षसिंहाकृतिरष्टपादः ।
नृसिंह विक्षोभशमं विधाता पायादपायाच्छरभेश्वरो नः ॥

5 यो ब्रह्मणा वज्रधरेण देवैरन्यैरसंप्रेक्ष्यमहामहात्मा ।
क्षणान्नृसिंहादभयं प्रदाता पायादपायाच्छरभेश्वरो नः ॥

6 हुंकारी शरभेश्वरोऽष्टचरणः पक्षी चतुर्बाहुकः
पादाकृष्टनृसिंहविग्रहधरः कालाग्निकोटिद्युतिः ।
विश्वक्षोभहरः सहेतिरनिशं ब्रह्मेन्द्रमुख्यैः स्तुतः
गङ्गाचन्द्रधरः पुरत्रयहरः सद्योरिपुघ्नोऽस्तु नः ॥

7 कनकजठरकोटीरक्तपानोन्मदेन
प्रथितनिखिलपीडा नारसिंहेन जाता ।
शरभ हर शिवेश त्राहि नः सर्वपापा
दनिशमिह कृपाब्धे सालुवेश प्रभो त्वम् ॥

8 दण्ड्रानखोग्रः शरभः सपक्षश्चतुर्भुजश्चाष्टपदः सहेतिः ।
कोटीरगङ्गेन्दुधरो नृसिंहक्षोभावहोऽस्मद्रिपुहास्तु शम्भुः ॥

9 अरुणमरुणमालालंकृताङ्गं कराग्रैः
विधृतपरशुशक्ति पुष्पबाणेक्षुचापम् ।
विविधमणिफणीन्द्रैः भूषणैर्भासिताङ्गं
शरभमखिलनाथं नौम्यहं सालुवेशम् ॥

10 सजलजलदनीलं चाष्टबाहुं त्रिनेत्रं
विविधचटुलपक्षं दीप्यमानोर्ध्वकेशम् ।
मनसि विहितकोपस्पन्दमानाधरोष्ठं
सकलरिपुविनाशं सालुवेशं नमामि ॥

இவ்விதம் வேதம் உபநிஷத் புராணம் முதலிய பிரமாண நூல்கள் யாவற்றிலும் பிரசித்தமாக உள்ள சரபமூர்த்தி திருபுவன க்ஷேத்திரத்தில் தனியாகக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கின்றார். நங்கபுரம் முதலியபல ஜமீன்தார், குடும்பங்களுக்குக் குலதெய்வமாகவும் திகழ்கின்றார். இந்தப் பரம்பொருளை மனமொழி மெய்களால் வழிபட்டு இம்மை மறுமைப் பயன்களைப் பெறுவோமாக,



## சப்தஸ்தான க்ஷேத்திரங்கள்

1. திருவையாறு. 2. திருப்பழனம். 3. திருச்சோற்றுத்துறை.
4. திருவேதிகுடி. 5. திருக்கண்டியூர். 6. திருப்பூந்துருத்தி.
7. திருநெய்த்தானம்.

" நெய்த்தானம் பூந்துருத்தி நேர்கண்டி வேதிகுடி
துய்த்தார்சேர் சோற்றுத் துறைபழனம் — மெய்த்தான
மானதிரு வையா றதனோ டெழுதலங்கள்
மானதிரு மத்தன் மனை."

# யாரின் குற்றம் ?

## திருமதி. செளந்தரா கைலாசம்

பார்க்கின்ற பொருளிலெல்லாம் உன்னைப்பார்த்து
பக்தியினுல் பித்தர்களாய் கல்மனத்தை
ஈர்க்கின்ற சுவைப்பாடல் கோடிகோடி
இசைத்தவராய்த் திரிந்தோரை விழிதிறந்து
பார்க்கின்றேன் ; உருகுகின்றேன் ; ஓடிஉன்றன்
படம்வாங்கித் தொங்கவிட்டு எதிரமர்ந்து
பார்க்கின்றேன் ; நிலைக்காமல் உன்னைவிட்டுப்
பறக்கின்ற மனம்எண்ணி வருந்துகின்றேன்.

குப்பையினில் கோயிலதன் உட்புறத்தில்
குலுங்குமலர்க் கூட்டத்தில் குத்தும்முள்ளில்
இப்படியாய் உலகத்துப் பொருளிலெல்லாம்
ஈடில்லாப் பக்தியெனும் வலையைவிசி
எப்படியோ சிக்கென்று உனைப்பிடிக்கும்
இயல்புடையார் எங்கே ?உன் படத்தைவைத்தும்
அப்படியும் இப்படியும் நெஞ்சம்தன்னை
அலையவிடும் நானெங்கே? இதைநினைத்துச் ;

சிரித்தாலும் ஏளனமாய்ச் சிரிப்பாய் !உள்ளம்
சிலிர்க்கவரும் சிரிப்பேனும் கேட்போமென்று
பொறுத்தாலும் பொறுத்தேன்நான் என்னஇங்கு
பொல்லாங்கு செய்துவிட்டேன் ? ஒளிந்தேநின்ருய் !
திருந்தாத நெஞ்செனினும் திருத்தி, அன்பு
சிறிதேனும் பொருந்தாத நெஞ்சென்ருலும்
பொருந்தியங்கு நடமிடல்உன் கடமைதேவே !
புரிந்திடுமோ ? குறிப்பாகச் சொல்லிவைத்தேன்.

இசையினிலே குறையென்ருல் எழுப்பிவிட்ட
இசைவாணன் பிழையன்ரே ? அங்குமிங்கும்
அசைந்திடுதே செடியென்ருல் வலியகாற்றை
அடிக்கவிட்டோன் பிழையன்ரே ? ஈரமண்ணைப்
பிசைந்துசெய்த பானையிலே பழுதுகாணில்
பிழையதனைக் குயவனன்றி யார்சுமப்பார் ?
பசுமையிலை ; பக்தியிலை நெஞ்சில்என்ருல்
பண்ணியவன் குற்றமன்றி யாரின்குற்றம் ?

# சைவசித்தாந்த வளர்ச்சி

## வித்துவான். திரு. க. வெள்ளைவாரணம்

உலகவாழ்க்கையில் மக்கள் எல்லோரும் ஒரு குடும்பத்தவராக அன்பினால் ஒற்றுமையாக வாழ்வதற்கும் உயிர்க்குயிராய் எங்கும் நீக்கமறக் கலந்து நின்று உலகினை இயக்கியருளும் அம்மையப்பனாகிய இறைவனை வழிபட்டுப் பேரின்ப வாழ்வில் திளைத்து மகிழ்தற்கும் இன்றியமையாத நல்லொழுக்க நெறியே சமயம் எனச் சிறப்பித்துக் கூறப்படுவதாகும். யாவரிடத்தும் வெறுப்பின்றி எல்லோர்க்கும் நலந்தரும் முறையிற் கூறப்படும் சிறந்த உண்மைகளால் எத்திறத்தாரையும் தன்பால் ஈர்த்துக்கொள்ளும் ஆற்றல் வாய்ந்த நெறிமுறை யெதுவோ அதுவே உண்மையான சமயம் என்பர் பெரியோர். நாடு, மொழி, இனம், கட்சிமுதலிய வேற்றுமையுணர்வுகளால் விளையும் பூசல்களுக்கு இடந்தராது எந்நாட்டவர்க்கும்எத்திறத்தார்க்கும் எக்காலத்திற்கும் பயன் தரத்தக்க நிலைத்த உண்மைகளை அறிவுறுத்தும் நூல்கள் எவையோ அவையே மெய்ந்நூல்கள் எனப் போற்றத்தகுவன. உண்மைச் சமயமும் மெய்ந்நூல்களும் ஆகிய இவற்றின் இயல்பினை,

" ஓது சமயங்கள்
பொருளுணரும் நூல்கள்
ஒன்றோடொன் றொவ்வாமல்
உளபலவும் இவற்றுள்
யாதுசமயம் பொருள்நூல்யாது
இங்கு என்னில்
இதுவாகும் அதுவல்ல
தெனும்பிணக்க தின்றி
நீதியினால் இவையெல்லாம்
ஓரிடத்தே காண
நின்றதுயா தொருசமயம்
அதுசமயம் பொருள்நூல்
ஆதலினால் இவையெல்லாம்
அருமறை ஆகமத்தே
அடங்கியிடும் அவையிரண்டும்
அரனடிக்கீழ் அடங்கும் "

என அருணந்திசிவாசாரியார் சிவஞான சித்தியாரில் தெளிவாக அருளிச் செய்துள்ளார்.

அவர் கூறிய வண்ணம் உலகமக்கள் எல்லோரும் விரும்பி மேற்கொள்ளுதற்குரிய நெறிமுறைகளைத் தன்னகத்தே கொண்டு விளங்குவது சைவ சித்தாந்த சமயமாகும். இச்சமயம், எல்லாம்வல்ல சிவபரம் பொருளின் திருவருளால் தோன்றி வளர்ந்த தனிச் சிறப்புடையதாகும்.

உலகியல் நூலாகிய வேதங்களையும் பக்குவமுடைய நல்லறிஞர்க்குரிய சிறப்பியல்பினை விரித்துரைப்பனவாகிய ஆகமங்களையும் அடிப்படையாகக் கொண்டு வளர்ந்தது, சைவ சித்தாந்தமாகிய இச்சமயம் என்பது அறிஞர் பலரும் ஒப்ப முடிந்த உண்மையாகும். ஆயினும், நூல் வகையால் மட்டுமன்றி மக்களது வாழ்வில் வேரூன்றி நிலைபெற்றுள்ள ஒழுகலாறுகளாலும் சைவசித்தாந்தத்தை உருவாக்கி வளர்த்த பெருமை தென்னாடாகிய தமிழ் நாட்டிற்கும் தமிழ்மக்களாற் போற்றிப்

பயிலப்பெற்று வரும் தொல்காப்பியம், திருக்குறள், பத்துப்பாட்டு, எட்டுத் தொகை முதலிய செந்தமிழ் நூல்களுக்கும் சிறப்பாக உரியதெனக் கூறுதல் பொருந் தும். சங்ககாலத்திற்குப் பின்தோன்றிய தமிழ் நூல்களில் தேவாரம் திருவாசகம் முதலிய சைவத் திருமுறைகள் பன்னி ரண்டும் சைவசித்தாந்த உண்மைகளைத் தன்னகத்தேகொண்ட சிறந்த அருளிலக் கியங்களாகத் திகழ்கின்றன.

சைவ சித்தாந்த நுட்பங்களைத் தமிழில் விளக்கும் நூல்களுள் சிறப்பாக குறிப்பிடத்தக்கவை திருமூலர் அருளிய திருமந்திரமும் மெய்கண்டார் அருளிய சிவஞான போதமும் அதனைத் தொடர்ந்து அருணந்தி சிவாசாரியார் இயற்றிய சிவஞான சித்தியாரும் இருபா இருபஃதும் திருவதிகை மனவாசகங் கடந்தார் இயற்றிய உண்மை விளக்க மும், உமாபதிசிவாசாரியார் இயற்றிய சிவப்பிரகாசம் முதலிய எட்டு நூல்களும், திருவியலூர் உய்யவந்ததேவ நாயனர் இயற்றிய திருவுந்தியாரும், திருக்கடவூர் உய்யவந்ததேவநாயனர் இயற்றிய திருக்களிற்றுப் படியாரும், வாகீச முனிவர் இயற்றிய ஞானமிருதமும் ஆகிய சாத்திரங்களாகும்.

மேற்குறித்த தமிழ் நூல்களிற் கூறப் படும் உலகியல் வாழ்க்கை முறையினையும் தெய்வ வழிபாட்டுமுறைகளையும் தத்துவ உண்மைகளையும் கூர்ந்து நோக்குங்கால் சைவசித்தாந்தக் கொள்கைக்கு நாற்றங் காலாக அமைந்தது நம் தமிழகமே என்ற உண்மை நன்கு விளங்கும்.

சிவனெனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனியம்மானை வழிபடும் சமயம் சைவ சமயமாகும். 'சைவம் சிவனுடன் சம்பந்தமாவது' என்ருர் திருமூலதேவ ரும். சிவனை வழிபடும் நெறியாகிய சைவ சமயத்தின் முடிந்த முடிபாக விளங்கும் தத்துவக் கொள்கையே 'சைவ சித்தாந்தம்' என்ற பெயராற் சிறப்பித் துரைக்கப்படும். இதற்குச் சைவ சித்தாந்தம் என்ற பெயர் திருமூலர் காலத்திலேயே வழங்கியிருத்தல் அறியத் தக்கதாகும். பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளுண்மையினை வலியுறுத்துதல் சைவ சித்தாந்தத்தின் தனிச் சிறப் பாகும்.

தொல்காப்பியம், திருக்குறள், பத்துப் பாட்டு, எட்டுத்தொகை முதலிய பழந் தமிழ் நூல்களை ஆராயுமிடத்துக் கட் புலனுகக் காணப்படும் இவ்வுலகத்தைப் பற்றியும், பலவேறு உடம்புகளுடன்கூடி இவ்வுலகில் வாழ்வனவாகிய எண்ணி றந்த உயிர்களைப் பற்றியும், யாண்டும் நீக்கமறக் கலந்துநின்று உலகு உயிர் களை இயக்கியருளும் தனிமுதற்பொரு ளாகிய கடவுளைப் பற்றியும், இம்முப் பொருளுண்மையை உணர்ந்த நிலையில் மனவுணர்வுடைய மக்கள் தமக்கென வகுத்துக்கொள்ளும் நல்லொழுக்க நெறி யாகிய வாழ்க்கை முறையைப் பற்றியும் அறிந்து கடைப்பிடித்தற்குரிய சிறந்த உண்மைகள் ஆங்காங்கே விரித்துக் கூறப்பெற்றிருத்தல் காணலாம்.

தெய்வப்புலவர் திருவள்ளுவர் தாம் இயற்றிய திருக்குறளில் கடவுள்வாழ்த்து மெய்யுணர்தல் ஆகிய அதிகாரங்களில் இறைவனுகிய முழுமுதற் பொருளின் இயல்பினையும் அவனை வழிபட்டோர் அடையும் நலங்களையும் சுருக்கமாகவும் தெளிவாகவும் எடுத்துரைத்துள்ளார். இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன் இறைவன் என்பதும் அவன் முற்றுணர் வினன் என்பதும் ஆகிய உண்மையினை, 'வினையின் நீங்கி விளங்கிய அறிவின், முனைவன்' என வரும் நூற்பாவில்

தொல்காப்பியனுர் அறிவுறுத்தியுள்ளார். வினையின் நீங்கி இயல்பாகவே விளங்கிய முற்றறிவினை உடையான் இறைவன் எனவே, அவனது திருவருளால் வினையினின்றும் நீக்கி விளக்கப்பெறும் சிற்றறிவுடையன ஆன்மாக்கள் என்பதும் உய்த்துணர வைத்தமை அறியத்தக்கதாகும்.

இல்லற வாழ்வில் நுகர வேண்டிய இன்பங்களை யெல்லாம் குறையின்றி நுகர்ந்து மன அமைதிபெற்ற நன்மக்கள் என்றும் அழியாத பேரின்பப் பொருளாய்ச் சிறந்து விளங்கும் செம்பொருளை இடைவிடாது சிந்தித்துப் போற்றிப் பிறவிச் சூழலில் திரும்பிவாராமைக்கு ஏதுவாகிய நன்னெறியினைத் தலைப்படுதலே, இவ்வுலகியல் வாழ்வின் முடிந்த பயனுகும். இவ்வுண்மையினை,

"காமஞ்சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும்
கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன்
பயனே"

எனவரும் கற்பியற் சூத்திரத்தில் ஆசிரியர் தொல்காப்பியனுர் தெளிவாக அறிவுறுத்தியுள்ளார், தோற்றக்கேடுகள் இன்றி எக்காலத்தும் ஒரு தன்மைத்தாய், தன்பால் எப்பொருளும் கலத்தல் இயலாமையால் தூய்மையுடத்தாய், எத்தகைய விகாரமும் இன்றி என்றும் ஒரு தன்மையதாய் நிற்றல் கடவுளின் இயல்பாதலால் அதனைச் 'சிறந்தது' என்ற பெயரால் தொல்காப்பியனுரும், 'சிறப்பென்னும் செம்பொருள்' எனத்திருவள்ளுவனுரும் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார்கள், சிறந்தது எனப்பெரியோர்களாற் போற்றியுரைக்கப்பெறும் முழுமுதற் பொருள் என்பார் 'சிறப்பென்னுஞ் செம்பொருள் என்ருர் திருவள்ளுவர், 'செம்பொருட் டுணிவே' எனப்போற்றினுர் திருவாதவூரடிகளும். எந்நாட்டவர்க்கும் இறைவனுகிய முதல்வனைத் தென்னுட்டவர் சிவன் என்ற திருப்பெயராற் போற்றி வழிபடுகின்றனர் என்பது,

"தென்னுடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவாபோற்றி"

எனவரும்திருவாசகத்தொடராற்புலனும்.

சைவசித்தாந்தம், வினையுண்மையைப் பற்றியும் அஃது உயிர்களுக்குப் பயன்தரும் முறைபற்றியும் தெளிவான முடிவினைவெளியிட்டுரைப்பதாகும். உயிர்கள் இன்பநுகர்ச்சியில் விருப்பும் துன்ப நுகர்ச்சியில் வெறுப்பும் உடையன என்பது நாம் உலகியலிற்காணும் உண்மையாகும், அம்முறையில் பிறரால் ஈட்டப்பெறும் நல்வினைப் பயன்களைத்தாம் கவர்ந்து கொள்ளவும் தாம் செய்த தீவினைப்பயன்கள் தம்மைப் பற்றி வருத்தா வண்ணம் அவற்றைத் தாம்தப்பி விலகவும் உயிர்கள் முயலுதல் இயல்பே, இவ்வாறு ஒருவர் செய்த நல்வினைப் பயனுகிய இன்பத்தை மற்ருருவர் கவர்ந்து கொள்ளாதவாறும் தாம் நுகர்தற்குரிய தீவினைப்பயனுகிய துன்பத்தை நெகிழவிட்டு ஓடாதவாறும் அவரவர்கள் செய்த வினைப்பயன்களை அவரவர்களே நுகரும்படி அரசன் ஆணை போல் வரையறுத்துச் செலுத்துவது இறைவனது ஆணை எனச் சைவசித்தாந்தம் கூறும்.

இறைவனது ஆற்றலாகிய ஆணை அவ்வவ்வுயிர்களின் இருவினைப் பயன்களை முன்னிட்டு இன்பதுன்பங்களை உயிர்களுக்கு நுகர்விப்பதாகலின், இவ்வாறு ஊழினைக் கருவியாகக் கொண்டு செயல் புரியும் இறைவனது செயல்முறையைப் 'பாலது ஆணை' எனக் குறித்தார்

தொல்காப்பியனார். பால் - ஊழ். ஒரு பாற்கோடாது நடுநின்று செங்கோல் செலுத்தும் அரசனது ஆணை நிகழாத போது எளியோர் பொருளை வலியோர் கவர்ந்துகொள்வர். அதுபோல மன்னுயிரனைத்தையும் ஒப்பக் காக்கும் அருளாளனாகிய முதல்வனது ஆணையாகிய முறை நிகழாக்கால் ஒருவர் செய்த வினைப் பயன்களை மற்றொருவர் கவர்வதாய் முடியும். இருவினையும் உணர்வற்றன. ஆதலால் செய்தானைத் தாமே சென்று அடைந்து நுகர்விக்கும் ஆற்றல் அவ் வினைகட்கு இல்லை. எனவே உயிர்களுக்கு இருவினைப்பயன் இறைவனது ஆணையினால் வரும் என்பதே பொருத்தமுடையதாகும். தெய்வத்தைக் குறித்தும் வினையினைக் குறித்தும் தொல்காப்பியனார் காலத் தமிழ்மக்கள் கொண்ட இத்துணிபினைப் 'பால்வரை தெய்வம்' என்ற தொல்காப்பியத் தொடர் தெளிவாக அறிவுறுத்தல் காணலாம்,

இறைவன் வகுத்த முறையாகிய ஊழென்னும் நியதியைக் கடத்தல் ஒருவராலும் இயலாதென்பதனை,

" வகுத்தான் வகுத்த
வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது "

எனவரும் குறளில் திருவள்ளுவர் விளக்கியுள்ளார். இக் குறளில் 'வகுத்தான்' என்றது இறைவனை. 'வகுத்தவகை' என்றது அம்முதல்வனால் வகுக்கப்பெற்ற வினைப்பயனாகிய ஊழினை. இக்கருத்தினைக் கூர்ந்து நோக்குங்கால் வினை செய்யும் உயிர்கள், அவ்வுயிர்களாற் செய்யப்படும் வினைகள், அவ்வினைகளின் பயனாகிய நலந்தீங்குகள், அப்பயன்களைச் செய்த உயிர்களே நுகருமாறு செய்து நல்வழிப்படுத்தும் முதல்வன் ஆகிய நான்கு பொருள்களும் பண்டைத் தமிழ் மக்கள் கண்டுணர்த்தியவை என்பது நன்கு தெளியப்படும். பழந்தமிழ்க்கொள்கையாகிய இதனையே சைவ சமயத்தின் சிறப்புடைக் கொள்கையாகச் சாக்கிய நாயனார் உணர்ந்து கடைப்பிடித்தார் எனப் பெரியபுராணத்தால் அறிகின்றோம்.

" செய்வினையும் செய்வானும்
அதன்பயனும் சேர்ப்பானும்
மெய்வகையால் நான்காகும்
விதித்தபொருள்எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி
யல்லவற்றுக் கில்லையென
உய்வகையாற் பொருள்சிவனென்
றருளாலே உணர்ந்திருந்தார்"

எனவரும் சேக்கிழார் வாய்மொழி இங்கு நோக்கத்தக்கதாகும்.

முத்தமிழும் நான்மறையும் ஆகிய இறைவனது பொருள்சேர் புகழை விரித்துரைக்கும் அருள்நூல்களாகிய பன்னிரு திருமுறைகள் வேதங்களையும் ஆகமங்களையும் தழுவி அந்நூல்களின் முடிந்த பயனாய் நிலவும் சிவநெறியினைப்போற்றி அந்நெறியில் மக்களெல்லோரையும் அன்புடையராய் ஒழுகும்படி செய்யும் ஆற்றல் வாய்ந்தனவாகும். இத் திருமுறைகளின் பயனாகத் தோன்றிய அருள் நூல்களே சிவஞானபோதம் முதலிய சைவசித்தாந்த சாத்திரங்களாகும். திருமுறைகளைக் காதலாகிக்கசிந்து கண்ணீர் மல்கி ஓதி, இறைவனைவழிபட்டு அவனது திருவருளால் சாத்திரங்களின் மெய்ப் பொருளுணர்ந்து, தன்முனைப்படங்கி, 'ஒன்றே குலனும் ஒருவனே தேவனும்' என்னும் உறுதியுடையராய் யாவர்க்கும் நன்றே செய்து வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து தெய்வத் திருவருளின்பத்தில் திளைத்தலே சைவ சித்தாந்தங் காட்டும் செந்நெறியாகும்.

# மெய்கண்டார் அருள்நெறி

டாக்டர். திரு வ. ஆ. தேவசேனபதி M. A., Ph. D.,

இறைவனுடன் இரண்டற நிற்றலே சமய வாழ்வின் சிறந்த பேருகும். இரண்டன்மையாகிய அத்துவிதம் என்பதற்கு மெய்ப்பொருள் கண்டவர் மெய்கண்டார் என்று தாயுமானவர் அவரைப் போற்றி வணங்குகிருர். 'அத்துவிதமென்ற சொல்லானே ஏக மென்று சுட்டுவதுண்மையின் அத்துவித மென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு' என்று சிவஞான போதம் கூறுகிறது. மறைகளெல்லாம் ஒன்றென முழங்க, இரண்டன்மை என்னும் பொருள் கொண்டு உயிர்களைப் பலவாகப் பேசுதல் பொருந்துமா வெனின், மெய்கண்டார் கூறும் விடை சமய உண்மைகளைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் தருவதாக உளது,

'' ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே
பதிபசுவாம்
ஒன்றென்ற நீ பாசத்தோடுளைகாண் -
ஒன் றின்ருல்
அக்கரங்கள் இன்ருல் அகர
உயிரின்றேல்
இக்கிரமத் தென்னு
மிருக்கு ''

ஒன்றென மறைகளில் கூறப்பெறுவது இறைவன் ஒன்றே என்னும் உண்மை. முழுமுதற்பொருள் ஒன்றே. மறைகளையொட்டி ஒன்றெனக் கூறும் உயிர் கட்டுண்ட நிலையிலிருப்பதாகும். பாசத்தால் பிணிப்புற்றுள்ள உயிர் பசுவெனப்படும். உயிரின் இருப்பு நிலை மூவகையாக உளது. பாசத்தால் அறவே கட்டுண்டிருக்கும் நிலை இருள் நிலையாகும். இந்தக்கட்டு நீங்குவதற்கென உடல், கருவிகள், நுகர்பொருள்களாய வற்றை இறைவன் உயிருக்குக் கொடுத்துதவ, கட்டு சற்றே நெகிழ்ந்துள்ள நிலை மருள் நிலையாகும் இருள் நீங்கிய அளவிற்கு முன்னேற்றம் உளதெனினும் பெற்றுள்ளபொருள்களைக்கொண்டு இறைவனை வழிபடாது உயிர் தன் முனைப்போடு புலனெறி சென்று இருவினை ஈட்டுவதால் மருள் நிலை ஏற்படுகிறது. 'பெற்றதுகொண்டு பிழையே பெருக்கிச் சுருக்குமன்பின் வெற்றடியேன்' என்று மாணிக்கவாசகர் கூறுவது ஈண்டு நினைவிற்கு வருகிறது, இனி,

'' அவனே தானே யாகிய அந்நெறி
ஏகனுகி இறைபணி நிற்க
மலமாயை தன்னெடு வல்வினை
யின்றே '

என்பதற்கிணங்க. உயிர்கட்டுற்ற காலத்தில் இறைவன் அதனேடு அத்துவிதமாய்க்கலந்து நின்ற அம்முறையே உயிர் முதல்வனேடு ஒற்றித்து நின்று தானென வேறு காணப்படுமாறில்லாமல் இறைவன் ஆணைவழி ஒழுக, ஆணவம் மாயை என்பவற்ருேடு கொடிய வினையும் நில்லாது நீங்கும். ஏகனுகிய இறைபணி நிற்றலே அருள் நிலையாகும்.

இவ்வாறு இருள், மருள், அருள் என்னும் மூன்று நிலைகள் உயிருக்கு உண்டென விளக்கி அவற்றுள் முதலிரண்டினையும் நீக்கி மூன்ருமதனை

எய்தும் நெறியை மெய்கண்டார் உணர்த்திச் செல்வதால், மெய்கண்டார் காட்டிய நெறி அருள் நெறியெனக் கூறுதல் மிகப் பொருத்தமாம்.

அவையடக்கச் செய்யுளிலேயே மெய்கண்டார் சைவசித்தாந்தச் செந்நெறியின் மையக் கருத்தைவைத்து அவையடக்கம் கூறுகிறுர்.

'தம்மை யுணர்ந்து தமையுடைய
தம்முணர்வார்
எம்மை யுடைமை யெமை இகழார்
— தம்மை
யுணரார் உணரார் உடங்கியைந்து
தம்மிற்
புணராமை கேளாம் புறன்'

இதன் பொருள் வருமாறு: 'உடைமைப் பொருளாகிய தம்மியல்பினை யுணர்ந்து தம்மை உடையனுகிய தலைவனை யுணர்ந்தவர்கள் தமக்கு உடைமையாக எம்மை உடையவர்களாதலின் எம்மை இகழமாட்டார்கள். தம்மை உணராதவர்கள் தலைவனையும் உணராதவர்களே. அவர்கள் ஒருங்குசேர்ந்து தம்முள் ஒற்றுமைப்பட மாட்டாராகலான் அவர்களது புறங்கூற்று மொழியைப் பொருளாகக்கொள்ள மாட்டோம்.

'நான் யார்?' என்னும் கேள்விக்கு விடை பலதிறப்பட்டது. 'நான்' என ஒரு பொருளில்லை யென்பது முதல் 'உடலே நான்' 'பொறிகளே நான்' என்றெல்லாம் ஆழ்ந்தும் அகன்றும் ஆராய்ச்சி நிகழ்கிறது. இவ்வனைத்துக்கும் வேருக 'நான்' என ஓர் அறிவுப் பொருள் உண்டென்போருள்ளும் இரு திறத்தினரைக் காண்கிறேம். ஆன்மா அல்லது அறிவுப்பொருள் ஒன்றே என்போர் ஒரு திறத்தினர். தானே அறியும் பொருளாக ஒரு பேருயிரும் அறிவிக்க அறியும் பொருள்களாகச் சிற்றுயிர்கள் பலவுமாக உயிர்கள் பல என்போர் மறுதிறத்தினர். உயிர்கள் பல என்னும் கொள்கையைச் சுருக்கமாகவும் திறம்படவும் எடுத்துக் கூறுவது சிவ ஞான போதமாகும். இதனாலன்றே, பெரிய மலையையும் தன்னிடத்தே தெளிவாகக் காட்டும் சிறிய கண்ணாடியைப் போன்று இந்நூல் மிகப்பரந்த பொருள்களைப் பற்றிப் பேசுவதாயினும் மிகச் சிறிய அளவில் அமைந்துள்ளது என்னும் ஒப்புமை கூறப்பட்டது.

'மன்னுயிர்' என்று சொல்வதற்கேற்ப நிலைத்து நிற்கும் பொருளாக உயிர்கள் இல்லையெனில் அருள்நெறி தேவைப்படாது. அவ்வாறு நிலைத்து நிற்கும் உயிர் உண்டு; ஆயின், அது ஒன்றே - அதற்கு வேருகப் பிறிதொன்றும் இல்லை என்று கூறினும் அருள்நெறி அமையாது. உயிர்கள் பலவென்று கொள்வதால் அருளை வேண்டி நிற்கும் உயிர்களெனவும் அருள்பாலிக்கும் உயிரெனவும் இருவகை உயிர்கள் பெறப்பட்டு அருள்நெறியின் தேவை புலப்படுகிறது. இறைவனே அருள் பாலிப்பவன்; ஏனைய உயிர்கள் அவனருளால் வாழ்வன என்பது உண்மைதான் ஆயினும் உயிர்கள் கட்டினின்றும் விடுபட்டு நன்னிலை அடைவதற்கு வழி அன்பை வளர்த்து அதன் வழியாக அருளுள்ளம் பெற்று அருளே உருவாகி விடுவதுதான். சமயச் சான்றேர்கள் இவ்வாறுதான் அருளாளர்களாகக் காட்சியளிக்கின்றனர். மன்னவன் மகன் வேடரிடத்தே தங்கி அவர்களைப் போல வளர்ந்து வந்தாலும் மன்னனல் தன் பிறப்பினுண்மை தெரிவிக்கப்பெற்றவுடன் இளவரசுக்குரிய தன்னியல்பில் வாழ்வதைப்போல, உயிர்களும் சமய வாழ்க்கையில் முன்னேறிச்சென்று இறைவனைப் போலாகி விடுகின்றனர். 'யான்'

'எனது' என்னும் அகப்புறப் பற்றுக் களினின்றும் விடுபட்டு அனைத்துயிர் களுக்கும் தொண்டு செய்வதே அவர் களியல்பாகி விடுகிறது. இவ்வாறு உயிர் கள் அருளாளர்களாக வேண்டுமென் பதே இறைவன் திருவுள்ளம். தன்ன லத்தில் தொடங்கி அன்பாக அரும்பி அருளாக மலரும் வாழ்க்கையே படைப் பின் குறிக்கோளாகும்.

இத்தகைய உயிர்வளர்ச்சி முறை சுந்தரம் பிள்ளை அவர்கள் எழுதிய மனோன்மணீயத்தில் வற்புறுத்தப் பெறு கின்றன. பின்வரும் அடிகள் நினைவு கூறற்பாலன.

" (சிலந்தி)

பூரிய உயிரிஃதாயினும் தனது
சீரியவலையிற் சிக்குண் டிறந்த
ஈயினைஈதோ இனியதன் குஞ்சுகள்
ஆயிரம் அருந்த அருகிருந்தூட்டி
மிக்கநல் அன்பெனும் விரிந்தநூல் தெளிய
அக்கரம் பயில்வததிசயம்! அதிசயம்!
இப்படி முதற்படி இதுமுதலா நம்
ஒப்பறும் யாக்கையாம் உயர்படி வரையும்
கற்பதிங்கிந்நூற் கருத்தே அதனால்
இத்தனி உலகில் எத்துயர் காணினும்
அத்தனை துயரும் நம் அழுக்கெலாம் எரித்தும்
சுத்தநற் சுவர்ணமாச் சோதித்தெடுக்க
வைத்தஅக்கினியென மதித்தலே உயிர்கட்கு
உத்தம பத்தி யென்றுள்ளுவர்......?
எல்லாம் அவனருள் அல்லா தில்லை
என்னனுபவமிது மன்னிய இவ்வருள்
தன்னிடை மூழ்கித்தானெனல் மறந்து
நெருப்பிடை இழுதென நெக்கு நெக்குருகி
இருப்பவர் பிறர்க்காய் இராப்பகல் உழைப்பர்
ஒருபயன் கருதார் அருள் கருதுவதென்?
அகிலமுந்தாங்கும் அருளிலோர் அங்கமாச்
சகலமுஞ்செய்வர் அஃதவர் சமாதி
எங்கெலாம் துக்கம் காணினும் அங்கெலாம்
அங்கம் கரைய நின்றரற்றி "ஐயோ!
எம்மையும் காத்த இன்னருள் இவரையும்
செம்மையிற்காக்க" எனமொழிகுளறி
அழுதுவேண்டுவதே அன்றி
விழுமியமுத்தியும் வேண்டார்தமக்கே"

மெய்கண்டார் காட்டும் அருள்நெறி சைவ நன்னெறியன்றோ? சிற்றுயிர்க் கிரங்கி தான் நஞ்சுண்டு அவற்றை வாழவைக்கும் அருளாளன்நெறி இவ் வாறுதானே அமையும்!



## பஞ்சபூதஸ்தலங்கள்

1. திருவாரூர் அல்லது காஞ்சீபுரம் — (பிருதிவி)
2. திருவானைக்கா ... ... — (அப்பு)
3. திருவண்ணாமலை ... ... — (தேயு)
4. திருக்காளத்தி ... ... — (வாயு)
5. சிதம்பரம் ... ... — (ஆகாசம்)

# சிவஞானசித்தியார் பரபக்கக் குறிப்பு

"தருமையாதீனப் புலவர்"
வித்துவான். திரு. சி. அருணைவடிவேலு முதலியார்

தோற்றுவாய் :

சித்தாந்த நூல்களுள் விரிந்த நூல் சிவஞான சித்தியே. இது, 'பரபக்கம், சுபக்கம்' என்னும் இரு பெரும்பிரிவு களை யுடையது. பரபக்கத்தில் பிற மதங் களின் கொள்கைகள் எடுத்துக் காட்டி மறுக்கப்படுகின்றன; சுபக்கத்தில் சித் தாந்தம் விளக்கப்படுகின்றது. அவற் றுள் பரபக்கம் பற்றிய ஒன்றிரண்டு குறிப்புக்கள் இங்குத் தரப்படுகின்றன.

முதல் நூல் :

சித்தாந்தத்தினையே கூறும் சிவ ஞான போதத்தின் வழி நூலாய், அம் முதல்நூற் பொருள்களை யெல்லாம் சுபக்கத்தில் இனிது விளக்குகின்ற இச் சிவஞான சித்தி அதனோடு அமையாது, அம் முதல் நூலில் இல்லாத பரபக்கத் தினைக் கூறுதல் என்னையெனின், பரபக் கம் முதல் நூலில் இல்லாத ஒன்றன்று; எல்லாவற்றையும் சூத்திர முறையில் மிகச் சுருக்கமாகச் சூசிப்பித்தே செல் கின்ற அம்முதல் நூல், பரபக்கத்தினைத் தனது அவையடக்கத்துள்,

> "தம்மை - உணரார் உணரார்;
> உடங் கியைந்து தம்மிற்
> புணராமை கேளாமை புறன்"

எனச் சூசிப்பிக்கின்றது; ஆகவே பிற சமயிகள் தம்மையும் தலைவனையும் உண ராது, ஒருவரோடு ஒருவர் கலாய்த்துக் கொண்டு நிற்றல் எவ்வாறு என்பதனை யும், அவர்தம் புறமொழிகளைச் சித்தாந்தி கள் பொருட்படுத்தாது போதல் என்னை என்பதனையும் விளக்குவது விரித்தல் யாப்பான் அமைந்த வழிநூலாகிய இதற்கு இன்றியமையாததாயிற்று. அவ் வாற்றான் எழுந்ததே பரபக்கமாகும். பிற சமயங்களின் கொள்கைகள் பொருந்து வன அல்ல என்பதனை உணர்ந்த பின்பே, சித்தாந்தத்தின் உண்மைகளை உறுதியாகப் பற்றுதல் உண்டாகும்; அதனைப்பயனாகஉடையது இப்பரபக்கம். இதனுள், பிற சமயங்கள் மதமும், மறு தலையுமாக வைத்து மறுக்கப்படுகின்றன.

பிற சமயங்கள் :

சித்தாந்தத்தின் வேறுபட்ட சமயங் கள், 'புறப்புறம், புறம், அகப்புறம், அகம்' என நான்கு வகைப்படும்; இவ் வாறு சிவஞான போத மாபாடியத்துட் கூறப்பட்டது. இந்நால்வகைச் சமயங் களுள் பரபக்கத்தில், 'புறப்புறம், புறம்' என்னும் சமயங்களே மறுக்கப்பட் டுள்ளன. அவற்றுள்ளும் எல்லாச் சம யங்களும் மறுக்கப்படவில்லை; இன்றி யமையாத சிலவே மறுக்கப்பட்டன. இதற்கு மாபாடியம் உடையார் கூறும் விடை, இவைகளை மறுத்தமையானே, இவற்றிற் பெரிதும் வேற்றுமையின்றிச் சிறிது சிறிது வேறுபட்ட சமயங்களும் மறுக்கப்பட்டன வாகின்றன' என்பது.

அவ்விடை மிகப் பொருத்தமானதேயாகும்; எங்ஙனமெனின், பெரிதும் வேறுபடாத சமயங்களின் கொள்கைகளையும், அவற்றுக்கு வேண்டும் மறுப்புக்களையும் எடுத்துக் கூறின், முன்னர்க் கூறியவற்றையே பின்னுங் கூறுதலாய், நூல் பயனின்றி விரியுமேயன்றி வேறில்லை; ஆகவே இன்றியமையாது எடுத்தோதி மறுக்கற்பாலனவாய புறச் சமயங்களே அங்ஙனம் மறுக்கப்பட்டன.

அகப்புறச் சமயங்கள் பெரும்பான்மையும் கிரியா பாதமாகிய ஒழுக்க நெறியில் வேறுபட்டனவன்றி, ஞானபாதமாகிய தத்துவக் கொள்கையில் வேறுபட்டன அல்ல; அகச் சமயங்கள், பொருளியல்புகளிற் சிறிது மாறுபட்டு முத்தி நிலையைப் பிழைபடக் கூறுகின்றன; பொருள் உண்மைகொள்வதில் சித்தாந்தத்தோடு ஒத்தே நிற்கின்றன; இக்காரணங்களால் ஆசிரியர் இவற்றைப் பரபக்கத்துள் எடுத்தோதி மறுத்திலர். எனினும், அகச் சமங்களை உமாபதி சிவாசாரியர் தமது சங்கற்ப நிராகரணத்துள் எடுத்தோதி மறுத்தார்.

புறப்புறச் சமயங்கள்

வேதம், சிவாகமம், என்னும் இரு முதல் நூல்களுள் ஒன்றையும் உடன்படாது. அவற்றிற்கு நேர்மாறாய் நிற்பவை புறப்புறச் சமயங்கள்; அவை, 'உலகாயதம் நால்வகைப் பௌத்தம், சமணம்' என்னும் ஆறுமாம்.

புறச் சமயங்கள் :

வேதத்தை மட்டும் உடன்பட்டுச் சிவாகமத்தை உடன்படாதவை புறச் சமயங்கள்; அவை, 'தருக்கம் (நையாயிகம், வைசேடிகம்), பூர்வ மிமாஞ்சை (பாட்டம், பிரபாகரம்), ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் (வைணவம்) என்பன.

அகப்புறச் சமயங்கள் :

வேத சிவாகமங்களோடு நில்லாது அவற்றிற்கு வேறாகிய சில நூல்களையும் முதல் நூல்களாகக் கொள்வன அகப்புறச் சமயங்கள்; அவைகள், 'பாசுபதம் மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்கியவாத சைவம்' என்பன. இவைகள் சைவச் சார்புடையனவே. இவற்றுள் வாமமே, 'சாத்தேயம்' எனப்படுவது.

அகச் சமயங்கள் :

பொருள் உண்மைகளில் சித்தாந்த சைவத்தோடு ஒத்து நின்று, அவற்றின் தன்னியல்பு பொதுவியல்புகளிலும், முத்திநிலை பற்றிய கொள்கையிலும் மட்டும் வேறுபடுவன அகச் சமயங்கள்; அவை, 'பாடாணவாத சைவம், பேதவாத சைவம், சிவசமவாத சைவம், சிவசங்கிராந்தவாத சைவம், ஈசுவர அவிகாரவாத வைசம், சிவாத்துவித சைவம்' என்பன. 'சுத்த சைவம்' எனவும் ஒன்று உண்டு; அதற்கும் சித்தாந்தத்திற்கும் வேறுபாடு மிகச் சிறிதே.

அகச் சமயங்கள் சித்தாந்த சைவத்திற்கு மிக அணுக்கமாய் உள்ளவையே ஆதலின்,

"ஒன்றது பேரூர் வழிஆ றதற்குள
என்றது போலும் இருமுச் சமயமும்"

(திருமந்திரம் - 1558) என்றாற்போல ஒற்றுமை யுணர்வுபெறக் கூறும் திருமொழிகள் எல்லாம், சிவநெறிப் பகுதிகளாகிய இவ் வகச்சமயங்களை நோக்கி எழுந்தனவே யன்றிச் சிவநெறிக்கு

எதிராகத் தாம்தாம் அறிந்தவாறு கூறி நிற்கும் புறச்சமயங்களை நோக்கியெழுந்தன அல்ல என்க. இதனையே பரபக்கப் பாயிரத்துள் ஆசிரியர் அருணந்தி தேவ நாயனர்,

" சுத்தவடி வியல்பாக
உடைய சோதி
சொல்லியஆ கமங்களெலாம்
சூழப் போயும்
ஒத்துமுடி யும்கூட
ஓரி டத்தே
ஒருபதிக்குப் பலநெறிகள்
உளவா ணுற்போல்
பித்தர்குண மதுபோல
ஒருகால் உண்டாய்ப்
பின்ஒருகால் அறிவின்றிப்
பேதை யோராய்க்
கத்திடும்ஆன் மாக்கள்உரைக்
கட்டிற் பட்டோர்
கனகவரை குறித்துப்போய்க்
கடற்கே விழ்வர் "

என விளக்கினர். எனவே, இக்கருத்துப் பற்றியே அவர் பரபக்கத்துள் பெரிதும் வேறுபட்டு நிற்கும். 'புறப்புறம், புறம்' என்னும் வகையினவாகிய சமயங்களையே மறுத்தமைந்தமைந்தார் என்க.

## சமய நூல்கள்

### உலகாயத, பௌத்த, சமண நூல்கள்:

புறப்புறச் சமயங்களில், 'உலகாயதத்திற்கு முதல்நூல் தேவகுருவாகிய பிருகற்பதியார் செய்தார்' எனவும், 'பௌத்தத்திற்கு முதல்நூல் ஆதிபுத்தர் செய்தார்' எனவும், 'சமணத்திற்கு முதல்நூல் அருகதேவர் செய்தார்; இகல தேவர் (மற்கலி தேவர்) செய்தார்' எனவும் கூறுதல் மரபு. ஆயினும், அந்நூல்கள் வழக்காற்றில் காணப்படுவன வல்ல. எனினும், பௌத்தமதக் கொள்கைகளையும் ஒழுக்கங்களையும் விரித்துக் கூறும் நூல் பாலி மொழியிலும், வடமொழியிலும் உள. சமண மதத்திற்கும் அத்தன்மையான நூல்கள் வடமொழிக்கண் உள. தமிழில் உள்ள மணிமேகலை, நீலகேசி முதலிய பௌத்த சமண இலக்கியங்களிலும் அம்மதக்கொள்கை முதலியவை விரித்துப் பேசப் பட்டுள்ளன. இன்னோரன்ன நூல்களிலும், உரைகளிலும் மறுக்கப்படுமிடத்தில் உலகாயத மதம் காணப்படுகின்றதேயன்றி, அதற்கென்று அமைந்து அதனை உடம்பட்டுக் கூறும் நூல் யாதொன்றும் இல்லை.

### தருக்க நூல்:

இனி, புறச் சமயங்களுள் தருக்க மதம், 'வைசேடிசம், நையாயிகம்' என இருவகைத்து. இவற்றிற்குரிய விளக்கமான நூல்கள் வடமொழியில் உள்ளன. இவற்றின் மொழிபெயர்ப்பு நூல்கள் பல தமிழிலும் இஞ்ஞான்று உள்ளன. வைசேடிகத்திற்கு முதல்நூல் 'கணதர்' என்னும் முனிவரும், நையாயிகத்திற்கு முதல்நூல் 'அக்கபாதர்' என்னும் முனிவரும் செய்தனர் என்பர்.

### மீமாஞ்சை நூல்:

பூருவ மீமாஞ்சைக்குச் சைமினி முனிவர் செய்த பூருவ மீமாஞ்சை நூல் வடமொழியில் உண்டு; அதற்கு, 'சரபர்' என்பவர் பாடியம் வகுத்தார். நூற்கொள்கைக்கு, பாடியக்கொள்கை வேறுபடுகின்றது என்று கொண்டு 'பட்டாசாரியர்' என்பவர் நூற்கொள்கைபற்றி வழிநூல் செய்தார். அவர் மாணக்கர் 'பிரபாகரர்' என்பவர் பாடியக் கொள்கையே சிறந்ததுஎன்று, வேறொரு

வழிநூல் செய்தார். அதனுல், 'பாட்டம், பிரபாகரம்' என, மீமாஞ்சை மதம் இரண்டாய்ப் பிரிந்தது. பிரபாகரர் மதத்தை, குருமதம்' என்றும் வழங்குவர்.

ஏகான்மவாத நூல் :

ஏகான்ம வாதமே இக்காலத்தில் 'அத்வைத மதம்' என வழங்கப்படுகின்றது. இதற்கு ஆதி சங்சரரே முதல்வர் என்பதும், அவர் வியாசர் செய்த, 'பிரமசூத்திரம்' எனப்படும் உத்தர மீமாஞ்சை நூலுக்கு வகுத்த பாடியத்தாலே இம்மதம் தோன்றிற்று என்பதும் இக்காலத்தவர் சொல்வன. பிரம சூத்திரத்திற்குச் சிவாத்துவிதமதம் பட நீலகண்ட சிவாசாரியர் பாடியம் வகுத்துள்ளார். எனினும், சிவஞான போத மாபடியம் உடையார், உத்தர மீமாஞ்சை நூலே, 'ஏகான்மவாத நூல்' என்றே குறிப்பிடுகின்ருர். அதனுல், 'பாடியங்களே யன்றி அந்நூலும் சித்தாந்திகட்குப் பிரமாணமாகாது' என்பது அவரது கருத்தாதல் தெளிவு. எனவே, கச்சியப்ப சிவாசாரியர் தமது கந்த புராணப் பாயிரப் படலத்து நாற்பத்தாரும் செய்யுளில், 'அளத்தற்கரிய வேதங்களின் பொருளை வரையறுத்துணர்த்தற் பொருட்டுப் பிரமசூத்திரத்தை வியாசர் செய்தார்' என்றது, அம்முனிவரது கருத்தினைக் குறித்தது எனவும், "தேவர் குறளும்" என்னும் ஔவையார் பாடலுள், "முனிமொழியும்" என்றதற்கு,' திருவாதவூரடிகள் அருளிச் செய்த' என்பதே பொருள் எனவும் கொள்ளுதலே பொருந்துவதாகின்றது.

அன்றியும் ஏகான்மவாதம், 'மாயா வாதம், பாற்கரிய வாதம், கிரீடாப் பிரம வாதம், சத்தப் பிரமவாதம்' என நான்கு பிரிவினதாய்க் காணப்படுகின்றது. அவற்றுள் மாயாவாதமே பெரிதாயினும், கிரீடாப் பிரமவாதம் தவிர ஏனைய மூன்றையும் ஆசிரியர் எடுத்தோதி மறுக்கின்ருர். ஆகவே, நான்கு மதங்களையும் சங்கரர் ஒருவரே தோற்றுவித்தார் என்பது பொருந்தாமையால், பிரமசூத்திரத்திற்கு ஆதி சங்கரருக்கு முன்பே இந் நால்வகை மதமும் பட உரை உரைக்கப்பட்டு வந்தன எனவும், நான்கும் ஏகான்ம வாதத்தின் மாறுபடாமையால் பிரம சூத்திரம் ஏகான்மவாத நூலே எனவும் கொள்ளுதலே பொருத்தமாம். இதனுனே, திருவாசகத்துள் மாயாவாத மதம் குறிப்பிடப்படுதல் பற்றி, ஆளுடைய அடிகள் காலம் சங்கரர் காலத்திற்குப் பிற்பட்ட தாகாமையும் உணர்க. சங்கர பாடியம் தவிர ஏனைய பாடியங்களும் ஏகான்ம வாதத்தைவிட்டு விலகினவாகாமை அறிந்துகொள்க.

மேலும் சித்தாந்த ஆசிரியர்கள் பௌட்கரம் முதலிய ஆகமங்கட்குப் பேருரை வகுக்குமாற்ருல் சித்தாந்தத்தை விளக்க முயன்றனரே யன்றி, பிரம சூத்திரத்திற்குப்பேருரைவகுத்து அதனை விளக்க அவர் முயலாமையும் அந்நூல் சித்தாந்த நூலாகாமையை இனிது விளக்கும்.

சாங்கியநூல் :

இனிச் சாங்கிய மதத்திற்கு முதல் நூல் செய்தவர் கபில முனிவர் என்ப, இவர் மதம் இறைவன் இல்லை என்பதே. ஆயினும், பிறகொள்கைகள் பலராலும் உடம் பட்டுக் கடவுட் கொள்கையுடன் கூட்டிக்கொள்ளப் பெற்றமையால், சாங்கிய மதம், 'நிரீச்சுர சாங்கியம்' என வேறுபடுத்துக்கூறப்படுகின்றது.

வைணவ நூல் :

இனி வைணவ சமயம், பாஞ்சராத்திரம், வைகானசம், என்னும் இரண்டு ஆகமங்களின் வழித் தோன்றியது, பாஞ்சராத்தின் வழிநிற்போர் பலராதல் பற்றி வைணவத்தை ஆசிரியர், 'பாஞ்சராத்திரம்' என்றே குறிக்கின்ருர். வைணவ ஆகமங்கள் பெரும்பான்மையும் சமய ஒழுக்க நெறியாய் அமைந்தன வன்றித் தத்துவத்தை விரித்தில என்பது, பிரமசூத்திரத்தையே வைணவத் தத்துவ நூலாகக் கொண்டு, சுபாலம் முதலிய சில உபநிடதங்களையே மேற்கோளாகக் காட்டி, அவர் உரைவகுத்துக் கொண்டமையால் விளங்கும். அது பற்றியே ஆசிரியர் பாஞ்சராத்திரத்தைத் தத்துவக் கொள்கை வகையிலன்றி புராண வரலாறு பற்றியே எடுத்தோதி, அவ்வகையிலே மறுத்தார்.

கண்ணன் அருச்சுனற்குக்கூறிய கீதை வைணவநூல் அன்ருே எனின், அதனுள், கண்ணன் தன்னையே இறைவனுகக் கூறியது தவிர, வைணவத்திற்குச் சிறப்பாக உரிய பகுதிபிறிது ஏதும் இல்லை ; அதனுல், ஏகான்மவாதிகள், ஆவிதவாதிகள்தாமும் அந்நூலைத் தங்கட்கு உரியதாகக் கொள்வர். ஆகவே, அஃது அவர்கட்கும் பொது நூலாவதன்றி வைணத்திற்கே உரிய சிறப்பு நூல் ஆகாது.

ஆயினும், வைணவரது கோட்பாடு பற்றிக் கீதையை அவர்தம் நூலாகவே வைத்து, 'மாயோன், திரிபுரத்து அசுரரை மயக்குங் கருத்துப் பற்றிப் புத்தனுய்த்தோன்றிப் பௌத்த நூல் செய்தான் எனக்கூறி, செய்தவன் இறைவனுயினும், செய்தகருத்து வேருதல்பற்றி அந்நூல் பிரமாணம் ஆகாது என விலக்கும் நீ, அருச்சுனனைப் போரிற் புகச்செய்யும் கருத்துப்பற்றிச் செய்த கீதையை மட்டும் தலைசிறந்த பிரமாண நூலாகக் கொள்வது என்னையோ' என ஆசிரியர், பாஞ்சாரத்திர மறுதலையுட் கூறி மறுத்துள்ளார். இம்மறுப்பு, அதனைச் சிறந்த பிரமாணமாகக் கொள்ளும் ஏனையோர்க்கும் பொருந்தக் கூறிய தேயாகும்.

இவ்வாருயினும், இறைவன் இல்லை என்ருே, சிவபிரானை யன்றிப் பிறரை முதற்கடவுள் என்ருே கூறுதல் அவ்விடத்தும் கருத்தன்று என்பதை விளக்குதற் பொருட்டு, "சிவஞானமாபாடியத்துள், அருச்சுனற்குக் கீதைநூல் செவியறிவுறுத்த கண்ணன், சிவோகம் பாவனையில் நின்றே, 'யானே உலகெலாம் ஆயினேன்' என்றதூஉம், 'ஏனையவற்றைக் கைவிட்டு என்னையே வழிபடுக' என்றதூஉம், 'அதனை உறுதியாகக் கொண்டேன்' என்ற அருச்சுனன் அவன் கூறிய கருத்துணர்ந்து சாங்காறும் சிவனையே வழிபட்டதூஉம்' என்று உரைத்தார்.

பிறமதங்களை உணர்தற்கு இங்ஙனம் எத்துணை நூல்களை ஆராய வேண்டும்? அத்துணை நூல்களையும் ஆராய்ந்து, அவற்றின் தெளிவுகளையே ஆசிரியர் அம் மதங்களாக எடுத்துக் கூறி, அவை பொருந்தாமையைச் செவ்விய முறையிலே பரபக்கத்துள் தெரித்துக் காட்டியுள்ளார்.

## மதங்களும் மறுப்பும்

உலகாயத மதம் :

காட்சியாற் கண்டுணரப்படுவனவே உண்மை ; அவ்வாறன்றிக் கருதியும்,

நூல்கள் பற்றியும் உணரப்படுவன உண்மையாகா ; ஆதலின், காணப்பட்ட உடம்பும், உலகமுமே உண்மையாவன; ஏனைய உயிர், கடவுள் இருவினை, மறு பிறப்பு முதலியன உண்மையாவன அல்ல.

இதற்கு மறுப்பு :

அணை ஒன்றும் இல்லாத ஆற்றில், மழையில்லாதபொழுது வெள்ளம் வரின், அவ்வாற்றின் முதலிடத்தில் மழை பெய்தது என்று உணர்தல் உண்மை உணர்வு அன்றோ ? 'அன்ன பிறவும் காட்சியே; கருதல் அன்று' எனின், கருதியுணர்வதையும் காட்சி என்றே கூறின், 'கருதியுணர்வதை உடன்படேம்' என்று கூறிக்கொள்வதனால் பயன் என்னை ?

சோதிட நூல்பற்றிக் கூறும் எதிர்கால நிகழ்ச்சியும், மந்திரம் முதலியவற்றால், மறைந்து கிடக்கும் பொருள்களைக் கண்டெடுத்தலும், பிறவும் உண்மையாதல் அனுபவமாக அறியப்படுதலின், நூல் பற்றி உணர்தலும் உண்மை யுணர்வேயாதல் அறிக.

பௌத்த மதம் :

வித்துக் கெட முளை தோன்றுதல் போல, ஒரு கணத்தில் தோன்றிய பொருள் மறுகணத்தில் அழிய, அம் மறுகணத்தில் மற்றொரு பொருள் தோன்றும். முன்னது காரணமாகவும், பின்னது காரியமாகவும் உணரப்பட்டு எல்லாப் பொருளும் தொடர்ச்சியாய் உள்ளன போலத் தோன்றும். எந்தப் பொருளும் ஒரு கணத்திற்குமேல் நிற்பது இல்லை. ஆகவே உலக வாழ்க்கை, கடவுளின் செயல் முதலிய யாவும் வெற்றுணர்ச்சியே ; இஃது அறிந்து ஒன்றையும் உணராது விடுதலே விடு பேறு.

இதற்கு மறுப்பு :

முன்னர் அழிந்ததும் பின்னர்த் தோன்றியதும், குடம் ஆடை முதலியன போல உள்ள பொருள்களா ? முயற் கோடு ஆகாயத்தாமரை போல இல்லாத பொருள்களா ? உள்ள பொருளாயின் இல்லாதொழியாது; இல்லாத பொருளாயின் தோன்றாது ; ஆகவே, வித்துக் கெட முளை தோன்றிற்று என்றது, வித்துத்தானே முளையாய்த் தோன்றிற்று எனல் அமையும் ; ஆகவே, உலகம் நிலை மாற்றத்தினை அடைந்து வரும் உள் பொருளேயாம். அந்நிலை மாற்றம் அதற்குத் தானே எய்தாமையின், அதனை வருவிக்கும் இறைவனும் உளன்.

சமணமதம் :

உலகம் அணுக்களின் கூடுதல் பிரிதல் காரணமாகத் தோன்றி யழியும்; உயிர்களுக்கு அவை செய்த கன்மமே பயனைக் கொடுக்கும்; ஆகவே, உலகத்தை ஆக்கி அழிக்கவும் செய்த வினையின் பயனைச் செய்தவனுக்குக் கூட்டுவிக்கவும் இறைவன் வேண்டா ; உடம்பை வருத்துதலாகிய தவத்தை மேற்கொண்டு வினைசெய்யாதிருந்து, முன்பு செய்த கன்மங்களை அனுபவித்துத் தொலைத்தால் விடு பேறு உண்டாகும்.

இதற்கு மறுப்பு :

அணுக்களும் வினையும் அறிவில்லாத பொருள்களாதலின் அவற்றைக் கூட்டவும் பிரிக்கவும் அறிவுடைய இறைவன் வேண்டும். பிறப்பில் வினை செய்யாதிருத்தல் கூடாமையால், வினையை

அநுபவித்துத் தொலேத்தல் முடியாது ; இறைவன் அருளாலேயே விணயி லிருந்து நீங்குதல் வேண்டும்.

மீமாஞ்சை மதம் :

வேதம் முதல்நூ லாதலின், அஃது ஒருவரால் செய்யப்படாது, என்றும் உள்ளது ; அவ்வாறன்றி அதனைச் சிலர் செய்தார் எனின், அவர் அதற்குமுன் எந்த நூலைக் கற்றுச் செய்தார்? என்னும்வினு எழும். 'கற்றல் வேண்டாத கடவுள் செய்தான்' எனின், சிறுமகாரும் ஊமைகளும் பல வேதங்களைச் செய்ய வல்லவராவர். ஆகவே, வேதம் ஒருவராலும் செய்யப்படாததே. அதிற் சொல்லப்பட்ட கன்மங்களைச் செய்யின் அவைகளே தம் தம் பயனைக் கொடுக்கும். பயன் கருதாது செய்யும் கன்மங்களால் விடு பேறுஉண்டாகும்.

இதற்கு மறுப்பு :

வேதம் பரமசிவனுற் செய்யப்பட்டது என்பது வேதத்திலேயே சொல்லப் பட்டது. அவ் வாக்கியங்கள் உனக்குப் பிரமாணமல்ல எனின், நீ கொண்ட அநுமானத்திற்கும், வேதம் சுயம்பு என்றல் ஏலாது ; எங்ஙனமெனில், செய்யுள் வடிவனவாய பாரதம் முதலிய நூல்களுள் யாதொன்றும் சுயம்பு வாகாமையாலும், வேதமும் செய்யுள் வடிவின தே யாகையாலும் என்க. இனி வினைப் பயன் இறைவன் இன்றித் தானே வரும் என்றலும் அநுமானத்திற்கு ஏலாததே யாகும்.

இவ்வாறே, ஏகான்ம வாதம், சாங் கியம், பாஞ்சாரத்திரம் என்னும் மதங் களையும் விரிவாகக் கூறி மறுத்துள்ளார்.

அவைகளை யெல்லாம் சித்தாந்தத் தின் பொருட்டன்றி அறிவின் பொருட் டாயினும் ஆய்ந்துணரின், பன்னூல் களின் பயனையும் எளிதில் ஒருங்கு பெறுதல் கூடும்.



## பஞ்சசபைகள்

1. திருவாலங்காடு — இரத்தினசபை.
2. சிதம்பரம் — கனகசபை ( பொன்னம்பலம் )
3. மதுரை — ரஜதசபை ( வெள்ளியம்பலம் )
4. திருநெல்வேலி — தாமிரசபை.
5. திருக்குற்றாலம் — சித்திரசபை.

# திரிபுவனச் சிற்பங்கள்

திரு. தொ. மு. பாஸ்கரத்தொண்டைமான் M. A., I. A. S..

இன்றைய உலகம் சினிமா உலகம். சினிமாவில் காதல் காட்சிகள் அதிகம் இடம்பெறுகிறது என்பதையும் அறிவோம். பண்டைத்தமிழன் காதல் வாழ்வில் திளைத்தவன். சங்க இலக்கியங்கள் எல்லாம் அந்த வரலாற்றைத் தானே கூறுகின்றன. ஒத்தகுலமும், ஒத்த நலனும், ஒத்த அழகும், ஒத்த பண்பும் உடைய தலைமகன் ஒருவனும், தலைமகள் ஒருத்தியும் கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றி ஒரு பொழிலிடத்தே ஊழ்வினை வசத்தால் தனித்துச் சந்திக்கின்றனர். காதல் அரும்புகிறது; பின்னர் மலர்கிறது என்றெல்லாம் கதை விரிகிறது இலக்கியங்களிலே. இன்றோ கல்லூரிகளிலே, கடற்கரையிலே, சாலைகளிலே சோலைகளிலே கன்னி ஒருத்தியும் காளை ஒருவனும் சந்தித்து காதலை வளர்க்கிறார்கள் என்றே சினிமாக் கதைகள் உருவாகின்றன. பெண், சோலை மரங்களுக்கிடையே ஓடுவதும், மல்லிகைப் பந்தரின் கீழே அவளை ஓடிப்பிடித்து விளையாடிக் காதல் உரையாடுவதும் நாம் நாளும் பார்க்கும் காட்சிகளாக அமைகின்றன. ஆம்! கொடியடியில் காணும் மடக்கொடிகளாக மங்கையர் நிற்பதைத்தானே வெள்ளித்திரை தெள்ளத் தெளிவுடன் உருவாக்குகின்றது. இந்தக் கற்பனைக்கெல்லாம் மூலமாய் அமைந்த வடிவங்கள் நம்நாட்டுச் சிற்பக்கலை உலகிலும் உண்டு. ஆம்! கொடியடியில் காணும் மடக்கொடிகள் இருவர் கல்லுருவில் நிற்கிறார்கள் ஒரு கோயிலிலே. அந்தக் கோயில்தான் திரிபுவனம் கம்பஹரேஸ்வரர் கோயில். இந்தப் பெண்களை, ஆம்! சிலைஉருவில் நிற்பவர்களைப் பார்த்த பின்தான் கவிச்சக்ரவர்த்தி கம்பன்,

நஞ்சினும் கொடிய நாட்டம்
அமுதினும் நயந்து நோக்கி
செஞ்சவே கமலக்கையால்
தீண்டலும் நீண்ட கொம்பர்
தன் சிலம்பு அடியில் மென்பூச்
சொரிந்து உடன்தாழ்ந்த
என்றால்
வஞ்சிபோல் மருங்குலார் மாட்டு
யாவரே வணங்கலாதார்?

என்று பாடி இருக்கவேணும். இன்னும் புகழேந்தியும் கம்பனது அடி ஒற்றியே

பாவையர் கைதீண்டப்
பணியாதார் யாவரே?
பூவையர் கைதீண்டலும்
அப்பூங்கொம்பு—மேவிஅவர்
பொன்னடியில் தாழ்ந்தனவே,

என்றும் பாடுகின்றான். இந்தப் பெண் வடிவங்களைச் சிற்ப உலகில் சலபாஞ்சிகைகள் என்று கூறுகின்றனர். தமிழ் நாட்டின் சிற்பக்கலை உலகில் இவ்விரு பெண்களும் ஒரு ஒப்பற்ற சிருஷ்டி என்று கூறினால் அதை ஒருவராலும் மறுக்க முடியாது. அவர்கள் நிற்கின்ற ஒயில், அவர்கள் உடுத்தியிருக்கும் உடை, அணிந்திருக்கும் ஆபரணங்கள் எல்லாமே அழகுக்குஅழகு செய்கின்றன. இன்னும் கூந்தலை வாரிமுடித்து, அவை

களைச் சுற்றி முத்து மாலைகளைக் கோத்துக் கட்டி அந்தக்கொண்டைகளிலே மகரிகைகளை அணிந்து சர்வாலங்கார சோபிதைகளாக அவர்கள் நிற்கின்றனர். காதிலே அணிந்துள்ள விராடகுண்டலங்களும், இடுப்பில் அணிந்துள்ள அந்தரியமும், காலிலே அணிந்திருக்கும் சுப்ரபதீனும், ஒலிக்கும் ஒலியையே கேட்கிறோம் நாம். மார்பகத்தை மூடாது மலையனைய முலை காட்டி, மாரனையே பொரவிடும் மங்கையராக அல்லவா அவர்கள் நிற்கிறார்கள். இவர்களைக் கண்டபின்,

நடந்தாள் ஒரு கன்னி மராச
 கேசரி நாட்டில், கொங்கைக்
குடந்தான் அசைய, ஒயிலாய்
 அது கண்டு, கொற்றவரும்
தொடர்ந்தார், சந்நியாசிகள் யோகம்
 விட்டார், சுத்தரைவரெலாம்
மடந்தான் அடைத்துச் சிவபூசையும்
 கட்டி வைத்தனரே.

என்று கவிஞன் ஒருவனுக்குப் பாடத் தோன்றினால் வியப்பே இல்லை, இந்த இரண்டு சலபாஞ்சிகை சிற்ப வடிவங்களைக் காணவே ஒரு நடை போகலாம் திரிபுவனத்திற்கு.

சரி போகிறதே போகிறோம் அங்குள்ள மற்ற சிற்ப வடிவங்களையும் காணாமல் திரும்ப இயலுமா? என்ன? கோயிலை, மூன்று வாயில்கள் அழகு செய்கின்றன. அவற்றை முறையே தோரணத் திருவாயில், திருமாளிகைத் திருவாயில், திருஅணுக்கன் திருவாயில் என்கின்றனர். இவற்றை எல்லாம் கடந்து உள்ளே சென்று மூலக்கோயிலை ஒரு சுற்றுச் சுற்றினால், கருவறைமேலே எழுந்துள்ள ஒரு பெரிய விமானத்தையுமே காண்போம். இந்த விமானம் தஞ்சைப் பெருவுடையார், கங்கை கொண்ட சோளிச்சரத்தார் கோயில் விமானங்களைப்போல உயரமோ காத்திரமோ உடையது அல்ல என்றாலும் அழகில் குறைந்ததல்ல. இதனையே சச்சிதானந்த விமானம் என்பர். விமான தரிசனம் செய்துகொண்டே மேலப் பிரகாரத்திற்கு வந்தால் அங்கே மேற்கே பார்த்த கோஷ்டத்தில் லிங்கோத்பவர் இருப்பர். நான்கண்ட லிங்கோத்பவர்களில் எல்லாம் அழகு வாய்ந்த வடிவம் இது ஒன்றே தான். பொங்கழல் உருவன் அவன் என்பதைக் காட்ட அந்த வடிவத்தில் சுடர் விடும் பல சுடர்களுக்கு உள்ளேயே இறைவனைக் காட்டியிருக்கிறான் சிற்பி.

இனி, கோயிலுள் சென்று நடுக்கந் தீர்த்த பெருமானும் கம்பகரேஸ்வரனைத் தரிசித்து விட்டுத்திரும்பும் போது செப்புச் சிலை வடிவில் நிற்கும் பிக்ஷாடனத் திருக்கோலத்தைக் காணலாம். சோழர் காலத்துச் செப்புப் படிமங்களில் சிறந்த ஒன்று அது. சொல்லாதன எல்லாம் சொல்லித் தொடர்ந்து நம்மை ஆளாக்கொண்டு', நம் அன்பையும் ஆணவத்தையும் பிக்ஷை கேட்கும் அந்த அழகனை வணங்கிய பின் வடபக்கம் உள்ள அறம் வளர்த்தாளையும் வணங்க வேண்டும். அதற்குப் பின் நாம் சரபர் சந்நிதியில் நுழைந்தால் அங்குதான் நாம் காண வந்த கன்னியர் இருவர் நிற்பர். அவர்களைக்கண்டு, அவர்கள் அழகில் மயங்கி நம் உள்ளங்களைப்பறி கொடாதவாறு நிமிர்ந்து நோக்கினால் சரபமூர்த்தியைக்காணலாம். அது என்ன சரபமூர்த்தி என்கிறீர்களா? சரபர் சிவனது அஷ்டாஷ்ட மூர்த்தங்களில் ஒன்று என்பதைப்பலர் அறியார்கள். அவர் எப்படித்தோன்றினர், எதற்காகத் தோன்றினர், என்று சொல்ல வேண்டாமா? நமக்குத்தெரியும் மகாவிஷ்ணு இரணியனை அழிக்க பாதி

மிருகமாகவும் பாதி மனிதனுகவும் உள்ள நரசிம்ம வடிவம் எடுத்தார் என்று. இரணியன் உடல் கிழித்து உதிரம் குடித்ததும் அவருக்கு ஒரு வெறியே ஏற்பட்டு விடுகிறது. அந்த வெறியை அடக்க சிவபிரானே சரபர் வடிவில் வந்து அதனை ஒடுக்குகிருர். பாதி சிங்க வடிவிலும் பாதி பறவை வடிவிலும் வந்த வரையே சரபம் என்கிரேம். நரசிம்மனை அடக்க இறைவனே சரபராக வந்தான் என்று கொள்வது வைஷ்ணவ பக்தர்களுக்குக் கொஞ்சம் கஷ்டமானதாக இருக்கும். ஆனுல் எல்லா மூர்த்திகளும், தோன்றி நின்று ஒடுங்கும் இறைவன் ஒருவனே. அவனே நரசிம்மன், அவனே கம்பகரேஸ்வரன், அவனே சரபன் என்று மட்டும் உணர்ந்துகொண்டால் உள்ளத்தில் விகற்பங்கள் ஒன்றும் தோன்ருது. இக்கோயிலில் மூலவராம் சரபரைவிட உத்சவராக சிறிய வடிவில் செப்புப்படிமமாக இருப்பவரே மிக்க அழகு வாய்ந்தவர். சிற்பக்கலை உலகில் அதிசயமானவரும் கூட.

இத்தனை நல்ல சிற்பங்களையும் தன்னகத்தே கொண்டதுதான் திரிபுவனம் கோயில். இக்கோயிலை மூன்ருங் குலோத்துங்கன் என்னும் திரிபுவனச்சக்ரவர்த்தி பன்னிரண்டாம் நூற்ருண்டின் முற்பகுதியிலே கட்டியிருக்கிருன். சோழர் கோயில் கற்பளிகளிலே ஒரு முக்கியமான மைல்கல் இக்கோயில். இந்தத் திரிபுவனச் சக்ரவர்த்தி விரும்பியபடியே இவனது முதல் அமைச்சராக இருந்த சேக்கிழார், திருத்தொண்டர் பெரிய புராணத்தைப் பாடி இருக்கிருர். அதன் அருமையையும் பெருமையையும் உணர்ந்த குலோத்துங்கன் அவரை யானை மீதேற்றித்தானும் உடன் இருந்து அவருக்குச் சாமரைவீசிக் கௌரவித்திருக்கிருன். பக்தியும் கலையும் நிரம்பியவனுக இருந்ததனுல் அல்லவா இப்படி ஒரு கலைக்கோயிலும் காவியக்கோயிலும் உருவாவதற்குக் காரணமாக இருந்திருக்கிருன் அவன். இக்கோயில் இன்று தருமபுரம் ஆதீன கர்த்தர் அவர்கள் மேற்பார்வையில்இருக்கிறது. திருப்பணி சிறப்பாக நடந்து குடமுழுக்கும் நடக்கிறது. ஆதீனகர்த்தர் அவர்களின் கலைப்பணியையும் பக்திக்கனிவையும் நினைந்து நான் தலை தாழ்த்துகின்றேன்.

## பாடல்பெற்ற சிவதலங்கள்

| | | |
|---|---|---|
| 1. | மூவராலும் பாடப்பட்ட தலங்கள். ... ... | 94 |
| 2. | திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இருவரால்பாடப்பட்டன. | 84 |
| 3. | திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி ஆகிய இருவரால் பாடப்பட்டன. | 8 |
| 4. | திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி ஆகிய இருவரால் பாடப்பட்டன. | 17 |
| 5. | திருஞானசம்பந்தரால் மட்டும் பாடப்பட்டன. ... ... | 43 |
| 6. | திருநாவுக்கரசரால் மட்டும் பாடப்பட்டன. ... ... | 18 |
| 7. | சுந்தரமூர்த்தியால் மட்டும் பாடப்பட்டன. ... ... | 10 |
| | ஆக | 274 |



14

# திருபுவனமும் சோழபாண்டியத் தொடர்பும்

திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியார்

திருபுவனக் கோயிலோடு தொடர்பு கொண்ட மன்னர்களுள் பாண்டியர்களில் வரகுண பாண்டியனும் சோழர்களில் குலோத்துங்கனுமே சிறந்தவர்கள். இவர்களுடைய தொடர்பைக் காலவரையறையை முன்னிட்டு ஒரு சிறிது கூறுவாம்.

மதுரையில் ஆண்ட பாண்டியர்களில் வரகுணன் என்ற பெயரோடு இரண்டு பாண்டியர்கள் ஆண்டார்கள். அவர்களில் முதல் வரகுணன் கி. பி. 792—835ல் ஆண்டான். அவன் இராசசிம்ம பாண்டியன் மகன். இரண்டாவது வரகுண வர்மன் கி. பி. 862—880ல் ஆண்டான். அவன் சீமாறன் சீவல்லபனுடைய மகன். முதல் வரகுணனுடைய பேரன். பராக்கிரம பாண்டியனுடைய தமயன். முதல் வரகுணன் (மகாராசன்) சோழநாடு முழுவதும் பிடித்ததுமன்றி தொண்டைநாட்டில் ஒரு பகுதியையும் பிடித்து ஆண்டான். அவன் ஒரு சிறந்த சிவபக்தன். இரண்டாம் வரகுணனே (வர்மன்) போரில் வல்லமை உடையவன். தன் வாழ்க்கை முழுவதும் போரிலேயே செலவழித்தான். இந்தச் செய்திகளை சின்னமனூர்ச் செப்பேடுகளிலும் வேள்விக்குடிச் செப்பேடுகளிலும் தமிழ்நாட்டுக் கல்வெட்டுக்களிலும் அறிகிறோம். இரண்டாம் வரகுணனுக்குப் பிறகு பாண்டியர் செல்வாக்கு குறைந்து போய் சோழர்களுடைய பெருமை முன்னேறியது. விசயாலயச் சோழர் வம்சம் தமிழ்நாட்டிலும் அக்கம்பக்கத்து நாடுகளிலும் வெகு தீவிரமாகப் பரவிற்று. அந்த வம்சத்தில் பல மன்னர்கள் மிகச் சிறப்போடு சைவசமயப் பரப்பில் முன்னேறி ஆலயங்களைக் கட்டினார்கள். அவர்களில் தோன்றிய குலோத்துங்கன் III என்றவன் (திரிபுவன வீரன்) திரிபுவனவீச்சரத்தைக் கட்டினான். இந்தச் செய்திகள் கல்வெட்டுக்களின் மூலம் அறிகிறோம்.

இனித் தமிழ் இலக்கியத்தின்படி ஆராய்ச்சி செய்யும்போது சமயச் சார்பில் கிடைக்கும் செய்திகள் பல கிடைக்கின்றன. வரகுணனைப்பற்றிப் பேசும் புராணங்கள் - திருவிளையாடற் புராணம், திருவிடைமருதூர்ப் புராணம், திருபுவனமான்மியம், என்பன. இலக்கியங்களோ - மாணிக்கவாசகர் அருளிய திருக்கோவையார், பட்டினத்தடிகள் அருளிய திருவிடைமருதூர் மும்மணிக் கோவை, நம்பியாண்டார் நம்பி அருளிய கோயில் திருப்பண்ணியர் விருத்தம் என்பன. இவைகளில் எல்லாம் வரகுணன் ஒரு சிறந்த சிவனடியார் என்றும், சிவச்சின்னங்களில் மிக அன்பு செலுத்தினவர் என்றும் சிவாலயத் திருப்பணிகள் இயற்றினவர் என்றும் காண்கிறோம். அறியாமல் நடந்த ஒரு அந்தணச்சாவினால் தன்னைத் தொடர்ந்த ஒரு பிரம்மகத்தியை நீக்குவதற்குத் திருவிடைமருதூர் சென்று கோயிலின் கிழக்கு வாயிலில் உள்ளேபுகப் பிரமகத்தி வெளியே நின்று விட்டதென்றும் பிறகு மேற்கு வாயில் வழியாக வெளிச்செல்ல

அது தொடரவில்லை என்றும் அந்த வாயிலை நெடுங்கோபுரமாகத் திருப்பணி செய்துவிட்டுச் சென்றான் எனவும் புராணங்கள் கூறுகின்றன. பிரம்மகத்தி யின் வடிவம்ஒன்று இன்றைக்கும்கிழக்குக் கோபுரத்துத் தென்பால் குடவரையில் இருக்கிறது. மேலும் மேற்குக் கோபுரம் இன்றைக்கும் வரகுணன் கோபுரம் என்று வழங்குகிறது. திருபுவன மான் மியப்படி வரகுணனுடைய பிரம்மகத்தி நீங்கினபோதிலும் அவன் நடுக்கம் தீர வில்லையாம். திருவிடைமருதூரைவிட்டு மேற்கே செல்லுகையில் திருபுவன ஈசு வரரை அவன் தொழவே அந்த நடுக்கம் நீங்கினதாம். இதுபுராணச்செய்தி.

இனிச் செந்தமிழ் இலக்கியத்தின்படி வரகுணனின் சைவப் பேரன்பின் சிறப்புக்களை நன்கு அறிகின்றோம், மாணிக்கவாசகப் பெருமான் அருளிய திருக்கோவையாரில் "வரகுணனும் தென்னவன் ஏத்தும் சிற்றம்பலத்தான்" என்றும் "களியானை வரகுணன் வெற்பு" என்றும் வரகுணனைத் தம் எடுத்துக்காட்டுக்களுக்கு இலக்காக வைத்திருப்பதில் எத்துணைப் பாராட்டி யிருக்கின்றார் என்று அறியலாம். பட்டி னத்தடிகள் தம் திருவிடைமருதூர் மும் மணிக்கோவையில் வரகுணன் செய்த அரும்பெருந் தொண்டுகளை வியந்து பாராட்டி "வெள்ளைநீறு மெய்யில் கண்டு கள்ளன் கையில் கட்டவிழ்ப்பித் தும் ... ... ... புரிகுழற்றே வியைப் பரிவுடன் கொடுத்த பெரிய அன்பின் வரகுண தேவரும்" என்று பாராட்டி யதும் அறியலாம். 10ம் நூற்றாண்டில் இருந்த நம்பியாண்டார் நம்பி தாம் பாடிய கோயில் திருப்பண்ணியர் விருத் தத்தில் "வரகுணன் தன் முடியே தரு கழல் அம்பலத்தாடி தன் மொய்கழலே" என்று வரகுணனுடைய பேரன்பினைப் புகழ்ந்துள்ளார். இவ்வாறு சைவப் பெரியார்களால் புகழ்ந்துரைக்கப்பெற்ற வரகுணன் இருந்த காலத்தை ஆராயின் அவ்வடியார்களுக்கு முந்தி இருக்க வேண்டும் என்று துணிந்து கூறலாம்.

மேலே கூறிய கல்வெட்டுச் செய்தி களுக்கும் புராண இலக்கியச் செய்தி களுக்கும் ஒரு வேறுபாடு இருக்கக் காண்கிறோம். கல்வெட்டுக்களில் வரகுணன் பெயர்கள் கொண்ட பாண்டியர்கள் இருவர் கூறப் பட்டுள்ளார்கள். அவர்கள் முறையே பாட்டனும் பேரனும் ஆவார்கள். ஆனால் புராண இலக்கியங்களில் ஒரே பெயர் தான் குறிக்கப்பட்டுள்ளது. எந்தப் பாண்டியன் என்றறிய வழியில்லை. வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் முதல் வரகுணனே சிறந்த சிவபக்தன் என்றும் அவனே திருவிடை மருதூரில் மேல் கோபுரத் திருப்பணி செய்தான் என்றும் கூறுகிறார்கள். பிரம்மகத்திநீரும் பொருட்டு மதுரைச் சொக்கநாதப் பெரு மானால் ஏவப்பட்டு, பாண்டி நாட்டின் மீது படையெடுத்து வந்த சோழனைத் துரத்திச் சென்று சோழ நாட்டைப் பிடித்துத் திருவிடைமருதூரில் கோபுரத் திருப்பணி செய்தவன் அவனே என்றும் கூறுகிறார்கள். இங்கே திருவிளையாடற் புராணச் செய்திகளும் கல்வெட்டுச் செய்திகளும் இணைக்கப் பெற்றுள்ளன.

மேலும் இரண்டாம் வரகுணன் போர்கள் புரியத் தொடங்கி சோழ நாட்டின் மீது படை யெடுத்து மண்ணி யாற்றங்கரையில் இடவை என்ற இடத்தில் பெரும்போர் புரிந்து புகழும் பெற்றான் என்பதையும் ஏற்பர்.

ஆனால் அண்மையில் வெளிவந்த மதுரைக்கும்பாபிஷேக மலரில் வெளி வந்த ஒருகட்டுரையில் இடவையில்

போர் செய்தவன் முதல் வரகுணன் என்றும், அவன் இடவைத் தலைவன் மகளைத் திருமணம் செய்துகொண்டு மேற்கே திருவிடைமருதூர் அடைந்தான் என்றும் அங்கே பட்டினத்தார் சொல்லு கிறபடி அந்தத் தேவியை இறை வனுக்குத் தந்தான் என்றும் காண் கின்றோம். இடவைப் போரைப்பற்றி இந்த இரண்டு ஆராய்ச்சிகளுக்கும் வேறுபாடு இருக்கின்றது. கல்வெட்டுக் களின்படி இடவைப்போர் நிகழ்ந்தது 880 கி. பி. யில். ஆகவே இப்போர் புரிந்து அவ்வூரையும் அதனைச்சுற்றிலும் இருந்த நாட்டைக் கைப்பற்றினவன் இரண்டாம் வரகுணனே ஆவான். முதல் வரகுணன் இடவையில் கட்டியிருந்த அரண்மனையை மீட்பதற்கே இரண்டாம் வரகுணன் போர் புரிந்திருக்கவேண்டும் என்று பாண்டியர் வரலாறு என்னும் நூல் கூறுகிறது. ஆகவே பொதுவாக சோழ நாட்டைப்பிடித்துத் திருவிடைமருதூரில் கோபுரத் திருப்பணி செய்தவன் முதல் வரகுணனே (792—835) என்றும் திருபு வனத்தில் வழிபாடு செய்து தன் நடுக் கத்தைத் தீர்த்துக்கொண்டவனும் அவனே எனவும் சொல்லலாம்.

சில ஆராய்ச்சியாளர்கள் இடவை யும் திரு இடை மருதூரும் ஒன்றே என் றும் எழுதுகிறார்கள். இடவை என்றது மண்ணியாற்றங்கரையில் உள்ள ஊர். திருவிடைமருதூர், கும்பகோணத்திற் கருகில் உள்ளஊர். இடவையில் வர குணன் இரண்டாமவன் போர் புரிந் தான். திருவிடைமருதூரில் முதல் வர குணன் கோபுரம் கட்டினான். இந்தக் கால வேற்றுமையும் செயல் வேற்றுமை யும் தெளிவு படுத்துகின்றன அன்றோ.

இனி, திருபுவனத்தில் கோயிலைக் கட்டினவன் திரிபுவன வீரன் என்ற பட்டம் வகித்திருந்த மூன்றாம் குலோத் துங்கன். அவன் கி. பி. 1177—1215ல் ஆண்ட சோழன். அவன் தன் பெய ரையே ஊருக்கும் கோயிலுக்கும் வைத்துப் போற்றினான். தலத்தின் பெயர் திரிபுவன வீரபுரம் என்று கல் வெட்டுக்கள் கூறுகின்றன. அப்பெயரே குறுகியும் மருவியும் திருபுவனம் என்று தற்போது வழங்குகிறது. மூலத்தானத்து இறைவன் பெயர் திரிபுவன ஈசுவரன். வடமொழியில் கம்பஹரேசுவரர் என்றும் தமிழில் நடுக்கம் தீர்த்த பெருமான் என்றும் வழங்குகின்றன. இப்பெயர் பொதுவாக மக்களின் நடுக்கத்தைத் தீர்க்கிறவர் என்று பொருள்பட்டபோதி லும் வரகுண பாண்டியனுடைய நடுக் கத்தைத் தீர்த்த காரணத்தினால் இந்தப் பெயர் சிறப்பாக ஏற்பட்டது எனலாம்.

வரகுண பாண்டியனுடைய நடுக்கம் தீர்த்த காலத்திலேயே அதாவது கி. பி. 800ம் ஆண்டிலேயே இந்த மூர்த்தி இந்தத் தலத்தில் எழுந்தருளியிருக்க வேண்டும். அப்போது கோயில் சிறிதாக இருந்திருக்கவேண்டும். பிறகு சோழ மன்னன் குலோத்துங்கன் III இங்கு வந்தபோது இதனைப் பெரிதாகக்கட்டி திருப்பணி செய்திருக்கவேண்டும். சோழநாட்டில் சிறந்த விமானங்கள் விசயாலயச் சோழ வம்சத்தாராலேயே செய்யப்பட்டன. மூலத்தானத்தின் மீது முழுவதுமாக விமானத்தைக்கட்டி சிகரம் வரைக்கும் அழகாக அமைத்தவர்கள் சோழ பெருமன்னர்களேயாவர். இராச ராசன் I கட்டிய பெரு ஆவுடையார் விமானம், இராசேந்திரன் I கட்டிய கங்கை கொண்டேச்சரம், குலோத்துங் கன் III கட்டிய திரிபுவனேச்சரம் இந்த மூன்று கோயில் விமானங்களும் ஒரே வகையாக இருக்கக் காண்கிறோம். அது சோழர் திருப்பணி.

இனி விமானம் என்ருல் நன்ருக அளவு செய்யப்பட்டது என்பது பொருள் (வி + மானம்). விமானம் கருவரையில் எழுப்பப்படுவது. அது வேறு கோபுரம் வேறு. கோபுரம் என்பது கோயிலின் வாயில்மேல் கட்டப்படுவது. பண்டைக் காலத்தில் ஒரு கோயிலில் விமானம் தான் சிறப்பாக அமைக்கப்பட்டது, பிற்காலத்தில் கோபுரம் பெரிதாக அமைக்கப்படுகிறது, முதற்சோழர்கள் விமானத்தையே நன்ருகக் கட்டினூர்கள். தஞ்சைக் கோயிலைக் காண்க. உலக சிற்பிகள் எல்லாரும் அதைப் பாராட்டுகிருர்கள். அது போலவே வெற்றி வீரனுன குலோத்துங்கள் III திரிபுவனக்கோயில் விமானத்தை நிருமித்தான். இது கி. பி. 1200 வாக்கில் கட்டப்பட்டது. இந்தத் தலத்திற்கும் வரகுணபாண்டியனுக்கும் குலோத்துங்கன் III க்கும் தொடர்பு உண்டு என்று கண்டோம். வரகுணன் கி. பி. 802-லும் குலோத்துங்கன் 1200 ஆண்டிலும் இத் தலத்தில் வந்திருந்து தொழுதார்கள். இடையில் 400 ஆண்டுகள்வரை இந்தத் தலம் சிறந்து விளங்கியது. தற்போது வெகு சிறப்பாக விளங்கி வருகிறது. குடமுழுக்கு விழா, நடக்கையில் இச் செய்திகளை அறிய நமக்கு ஆவல் இருக்காதா?



## பாடல்பெற்ற சிவதலங்களின் நாடு முதலிய விவரம்

| நாடு | ஸ்தலங்கள் | பதிகங்கள் |
|---|---|---|
| 1. சோழநாடு காவிரிக்கு வடகரை | 63 | 238 |
| ,, காவிரிக்கு தென்கரை | 127 | 318 |
| 2. ஈழநாடு | 2 | 3 |
| 3. பாண்டிநாடு | 14 | 34 |
| 4. மலைநாடு | 1 | 1 |
| 5. கொங்குநாடு | 7 | 9 |
| 6. நடுநாடு | 22 | 62 |
| 7. தொண்டைநாடு | 32 | 68 |
| 8. துளுவநாடு | 1 | 2 |
| 9. வடநாடு | 5 | 14 |
| | 274 | 749 |
| பொதுப் பதிகம் | | 48 |
| ஆகப் பதிகங்கள் | | 797 |

# திரிபுவனவரலாற்றுச் சிறப்பும் : : :
# : : : கல்வெட்டுச் செய்திகளும்

'' கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர் ''

வித்துவான். திரு. வை. சுந்தரேச வாண்டையார்

திரிபுரவனம் நடுக்கந் தீர்த்த பெருமான் வணக்கம்

( அறுசீரடி விருத்தம் )

'' கொடுக்கு மிம்மை மறுமையொடு குறையா வின்பப் பெருவீடும்
எடுக்கும் பிறவிக் கடனின்றும் இடையோர்க் கவுணர் திரிபுரங்கள்
அடுக்கும் துன்பத் துடன்மடங்க லாற்று மாற்ற வொண்ணுத
நடுக்கந் துடைத்த பெருமானுர் நளின மலர்ப் பொற்ருளிணையே ''

## திரிபுரவனம்

### வரலாற்றுச் சிறப்பு :

பண்டொரு காலத்தில் அச்சுவக்கிரீவன், விடபக்கிரீவன், வியாளக்கிரீவன் என்ற மூன்று அசுரர்கள் இருந்தனர். அவர்கள் தவமுயன்று பெருவலி உடைய ராவதன் முன்னமே அவர்களை அழித்து விடவேண்டும் என்று கருதிய தேவர்கள் சேனையோடு சென்று கடும்போர் விளைத்தனர். அஞ்சாது நெடுங்காலம் போர்புரிந்த அசுரர்கள் இனித்தாம் உயிர் தப்ப இயலாது என்று உணர்ந்து மாயையால் மறைந்து மண்ணுலகத்தை அடைந்து மாறுவேடத்தோடு திரிந்தனர். மண்ணுலகத்தில் காடுகளிலும் மலைகளிலும் திரிகின்ற பொழுது வில்வமரங்கள் அடர்ந்த 'ஒரு காட்டினையும் அதன் நடுவே ஒரு லிங்கத்தையும் கண்டனர். உயிர் பிழைத்தல் அரிதான 'நிலையிலிருந்த அசுரர்கள் அப்பெருமானிடம் அடைக்கலம் புகுந்தனர். இறைவன் அஞ்சலென்றருளி அவர்களது நடுக்கத்தை விலக்கி அருளினுன்.

'வேண்டிய வேண்டியாங்கெய்தலால் செய்தவம் ஈண்டு முயலப்படும்' என்பதை நன்குணர்ந்த அசுரர்கள் இறைவனைக் குறித்து அருந்தவம் ஆற்றினர். அவர்களது தவத்துக்கிரங்கி. சிவபெருமான் காட்சியருளி, வேண்டும் வரங்களை வேண்டு

---

குறிப்பு :— அடுக்குந் துன்பம் - மேன்மேல் விளைக்குந் துன்பம். மடங்கல் - நரசிங்கம். ஆற்றும் - செய்த. ஆற்றவொண்ணுத - பொறுக்க முடியாத.

மாறு பணித்தருளினர். அசுரர்கள், எம் இறைவனே! "எங்கள் பகைவர்களாகிய அமரரால் அடர்க்கப்பட்டு யாம் பெரிதும் துன்புற்றேம்: உயிர்க்கு அஞ்சினோம், எங்கள் அச்சத்தைத் தவிர்த்து தேவரீரே அவர்களை யாங்கள் அடர்க்கும் ஆற்றலும் அருளவேண்டும். ஆதலால் தேவராலும் யாவராலும் அழியாதவையும் பொன், வெள்ளி, இரும்பு என்பவற்றால் தனித்தனியாகியவையும் எங்கள் விருப்பம்போல் எங்கு வேண்டுமாயினும் உலவித் திரிபவையும் ஆகிய மூன்று கோட்டைகளை எங்களுக்கு அருளவேண்டும்' என்று வேண்டினர். இறைவன் அவ்வாறே அருளினான்.

அருள்பெற்ற அசுரர்கள் அன்று முதலாகத் தேவர்களையும் ஏனையோர்களையும் துன்புறுத்தத் தொடங்கினர். மலரோன், திருமால் முதலிய பெருந்தேவர்களும் அவர்களை எதிர்த்து ஆற்றலழிந்து அடங்கினர். இன்னல் பொறுக்க இயலாது அஞ்சினர்க்கு அரணாகிய அரனாரிடம் முற்கூறிய வில்வவனத்திற் சரண்புகுந்து குறையிரந்து முறையிட்டனர். சார்ந்தோரைத் தாங்கும் தயாநிதியாகிய சிவபெருமான் அவர்களுக்குப் புகல் அருளித் திரிபுரத்தசுரர்களை அழிக்கப் புறப்பட்டார். அதுகாலை சூரிய சந்திரர்களே சக்கரங்களாகப் பூமியே தேராயமைந்தது. மேருமலையே வில்லாகவும், வாசுகியென்ற பெரும்பாம்பே நாணாகவும் அமைந்தன. திருமால் அம்பாகவும், அக்கினிதேவன் முனையாகவும், வாயுதேவன் இறகாகவும் அமர்ந்தனர். இத்தகைய போர்த்துணைகளோடு இறைவன் புறப்படுங்காலை, தேவர்கள் தாம் இறைவனுக்குப் போர்த்துணையாய் அமைந்ததைக்கருதிச் செருக்குற்றனர். அவர்கள் செருக்கை அழிக்க இறைவன் கருதினான். தேர்மேல் கால் வைத்தவுடன் அச்சு முறிந்தது. உடனே திருமால் விடைவடிவாய் அன்பொடு தாங்கினான். இறைவன் நகைத்தான் முப்புரமும் அழிந்தன. தேவர்கள் நடுக்கம் ஒழிந்தது. திரிபுரத்து அசுரர்களுக்கு அடைக்கலம் கொடுத்துஇறைவன் காத்ததாலும் அவ்வசுரர்களால் வந்த துன்பத்தை நீக்கித் தேவர்களைக் காத்ததாலும் வில்வவனம், திரிபுரவனம் என்ற திருப்பெயர்களைப் பெற்றது.

## ஸ்ரீ கம்பேசுவரர்

இரணியன், இரணியாக்கன் என்ற இரண்டு அசுரர்கள் அண்ணன் தம்பியர் பிரமனை நோக்கிக் கடுந்தவம் இயற்றி அரியபெரிய வரங்களைப் பெற்றிருந்தனர். அவர்களில் மூத்தவனாகிய இரணியன் தேவர், மனிதர், விலங்கு முதலிய யாவராலும் எத்தகைய ஆயுதத்தாலும் அகம், புறம் என்ற ஈரிடத்திலும் பகலிரவு என்ற இரு வேளையிலும் சாகாத வரம் வேண்டும் என்று வேண்டிப்பெற்றான் அதனால் தன்னை எதிர்ப்பார் ஒருவருமின்றிப் பெருஞ்செருக்குற்றான். அச்செருக்கு முதிர்ந்து இறுதியில் தானே பிரமம் என்றும் தன்னையொழிய யாரும் எவரையும் வழிபடலாகாது என்றும் அனைவருக்கும் ஆணையிட்டான். அவ்வாணையைக் கடந்தார் யாவரேயெனினும் அவர்களுக்குக் கடுந்தண்டனையும் இட்டுவந்தான்.

இங்ஙனம் நிகழும் நாட்களில் அவனுக்குப் பிரகலாதன் என்றொரு புண்ணியப் புதல்வன் பிறந்தான். அவன் தாய் வயிற்றிலிருக்கும் போதே நாரத முனிவரது உபதேசத்தால் திருமால்பால் பேரன்புடையவனாயினான். பிறந்து மொழிபயின்று பள்ளியில் வைக்கப்பெற்றபோது அவனுடைய ஆசிரியன் 'ஓம் நமோ இரண்யாய'

என்று கூறும்படி ஏவினன். சிறுவன் அதனை மறுத்து 'ஓம் நமோ நாராயணாய' என்றான். ஆசிரியன் பெரிதும் அஞ்சி அவ்வாறு கூறக்கூடாதென நயத்தாலும் பயத்தாலும் கூறிய கூற்றுக்களையெல்லாம் மறுத்து வெளிப்படையாகத் திருமாலின் பத்தியுடையவனாக அச்சிறுவன் விளங்கினான். அதனையுணர்ந்த தந்தை இரணியன் சிறுவனை அழைத்துப் பலவிதமாக அச்சுறுத்தியும் சிறுவன் தந்தையின் கருத்துக்கு இணங்கினானல்லன். இரணியன் பெருங்கோபங்கொண்டு பல்லாற்றானும் சிறுவனைக் கொல்ல முயன்றான்.

திருமாலின் அருளால் சிறுவன் இடையூறின்றி விளங்கினான். தன் தீச் சினத்தை அடக்கலாற்றா இரணியன் ஒருநாள் சிறுவனையழைத்து "ஏடா சிறுவ! நீ சொல்லும் நாராயணன் என்பான் யாண்டுளன்? என் தம்பியைக் கொன்ற அக்கயவன் என் சினத்துக்கு அஞ்சி எங்கோ கரந்து உறைகின்றான்? அவனும் ஒரு தெய்வமா? நீ அவனை எனக்குக்காட்டு. உன்கண்முன் அவனைக்கொன்று நானேகடவுள் என்பதை உனக்குத் தெரிவிக்கின்றேன்" என்றான். சிறுவன் "தந்தையே! நாராயணன் தூணிலும் இருக்கின்றான், துரும்பிலும் இருக்கின்றான்" என்றான். எங்கே, அவன் தெய்வமானால் இத்தூணிலிருந்து வெளிவரட்டும்? என்று தூணை எட்டி உதைத்தான். உடனே தூணைப் பிளந்து திருமால் நரசிம்ம வடிவாய் வெளித்தோன்றினார். இரணியன் அடங்காச் சினமூண்டு தன் தம்பியைக்கொன்ற பழிக்குப்பழி வாங்குவதாகக்கூறி எதிர்த்தான். திருமால் அவனைப்பற்றித் தூக்கிச்சென்று வாயிற்படியில் வீற்றிருந்து அவன் வயிற்றைக் கிழித்துக்கொன்றார். அவனது குருதி முழுவதையும் பருகினார்.

'நானே பிரமம்' என்று பேசிப் பொல்லாங்கு செய்து திரிந்த இரணியன்மேல் திருமால் கொண்டிருந்த சினத்தீ அவனைக்கொன்ற பின்னும் குறைந்திலது. அவனது குருதியாகிய நெய்யால் கொழுந்துவிட்டு வளர்ந்தது. அதனால் திருமால் மயங்கி உலகத்தையே அழிப்பான் தொடங்கினர். இரணியனது குருதியே அதனையுண்ட திருமாலின் மதியை மயக்கி இத்தகைய கொடுமை செய்வித்தது எனின் அவன் எத்தகைய கொடியனாயிருந்திருப்பான்? பிரகலாதனும் திருமகளும் பலவாறு புகழ்ந்து ஆற்றியும் கோபந்தணிந்திலது. அதனைக்கண்ட பிரமன் முதலிய தேவர்கள் தேவ தேவராகிய நீலகண்டனிடம் புகலடைந்து முறையிட்டனர். சிவபெருமான் சரபப் பறவை வடிவுகொண்டு நரசிம்மத்தை நோக்கிச் சென்றார். சரபத்தினைக்கண்ட நரசிம்மம் அஞ்சியோடத் தொடங்கிற்று. துரத்திச்சென்ற சரபம் தன்மீதுபட்ட உடனே நரசிங்கம் தன் கொடுமை அடங்கப்பெற்று அமைதியுற்றது. தன் இயல்பாய நல்லுணர்வைத் திருமால் பெற்றார். பிரகலாதன், திருமால், தேவர் மனிதர் முதலிய யாவரது பயமும் நீங்கிற்று. தம் தவற்றினை உணர்ந்த திருமாலும் ஏனைய தேவர்களும் சிவபெருமானைப் புகழ்ந்து பாடி அருள்பெற்றனர். தங்களுக்கு விளைந்த கம்பத்தினை (நடுக்கத்தை) நீக்கியருளியதால் அத்தலத்திலேயே சிவபெருமானுக்குக் கம்பகரேசுவரர் (நடுக்கந்தவிர்த்த பெருமான்) என்ற திருப்பெயர் உண்டாக வேண்டும் என்றும் அங்கே அவரையடைந்து வணங்கினரெல்லாரும் நடுக்கந்தீர்ந்து நலமெய்தச் சரபவடிவுடன் வீற்றிருந்தருளவேண்டுமென்றும் வரம்பெற்றனர்.

அதனல் அத்தலத்தில் சிவபெருமானுக்குக் கம்பகரேச்சுவரர் என்ற திருப்பெயர் ஏற்பட்டது. சரபமூர்த்தியும் அங்கு வீற்றிருந்து அடைந்தோர்க்கருள் செய்கின்ருர். மதுரையை ஆண்ட சிவபத்திச் செல்வனுகிய வரகுண பாண்டியன் சோமசுந்தரப்பெருமானுரின் கட்டளைப்படித் திருவிடைமருதூரடைந்து தன்னைப் பற்றியிருந்த பிரமஹத்தி நீங்கப்பெற்ருன். எனினும் "மழைபெய்தும் துவ்வானம் விடாததுபோல பிரமஹத்தியின் அச்சம் நீங்கப்பெற்றிலன். அந்த அச்சம் இத்திரிபுர வனத்தை அடைந்தபின்னரே நீங்கிற்று.

ஆதலால் அன்பர்களே! இவ்விறைவனை அடைவீரேல் 'அஞ்சுவதி யாதொன்றுமில்லை அஞ்சவருவதுமில்லை' என்பது தேற்றம்.

## கல்வெட்டுச் செய்திகள் *

திரிபுவன வீரன் என்பது நம் சோழமண்டலத்தை, கி. பி. 1178 முதல் கி. பி. 1218 முடிய ஆண்ட மூன்ருங்குலோத்துங்கசோழ மன்னனுடைய சிறப்புப் பெயர் களுள் ஒன்று. இம்மன்னனல் இத்திரிபுவனத்தில் உள்ள சிவன் கோயில் கட்டப் பெற்றமையால் இது திரிபுவனவீரேச்சுரம் என்னும் பெயர் எய்திற்று. இது உருவத் தில் தஞ்சை இராசராசேச்சுரத்தை ஒத்துள்ளது. இத் திரிபுவனவீரேச்சுரத்தில் மூன்று கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவைகள் சம்ஸ்கிருதக் கல்வெட்டுக்கள்; ஆனல் கிரந்த எழுத்துக்களில் செதுக்கப்பெற்றுள்ளன. அவைகளுள் ஒன்று கர்ப்ப இல்லின் (Central shrine) தென்புறச் சுவரிலும், ஏனைய இரண்டு முதல் கோபுரவாசலின் தெற்கு வடக்குப் பக்கங்களிலும் இருக்கின்றன. இவைகள் மூன்றும் ஓரே பொருளைத் தழுவி, செதுக்கப்பெற்றுள்ளன, கர்ப்ப இல்லின் தென்புறச் சுவரில் உள்ள கல் வெட்டில் 10 சுலோகங்கள் அடங்கியுள்ளன, அவைகளுள் 6 முதல் 10 முடியவுள்ள சுலோகங்கள் மூன்ருங்குலோத்துங்கனின் திருப்பணிகளைப்பற்றிக் குறிப்பிடுகின்றன.

இவன், சிதம்பரத்தில் நடராசப்பெருமானின் திருமுன்புள்ள மண்டபம்' சிவகாமசுந்தரி அம்மன் கோயிலின் கோபுரம், திருச்சுற்றுமாளிகை இவைகளையும்; காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதருடைய திருக்கோயில், மதுரையில் சுந்தரேசப்பெருமா னுடைய திருக்கோயில், திருவிடைமருதூரில் திருவிடைமருதூர் உடையார் கோயில், இராசராசேச்சுரம், திருவாரூரில் புற்றிடங்கொண்டாரது சபை, பெரிய கோபுரம், திரிபுவனத்தில் ஆகாயத்தை அளாவிய மிகப்பெரிய விமானத்துடன் திரிபுவனவீரேச் சுரம் இவைகளையும்கட்டியுள்ளான் என மேற்படிசுலோகங்களால் அறியக்கிடக்கின்றன.

குறிப்பு:— இங்கு இராசராசேச்சரம் என்பது இக்காலம் தாராசுரம் என வழங்கப்பெறும் இராஜராஜபுரத்தில் உள்ள திருக்கோயில் ஆகும்.

---

* See the annual report on South Indian Epigraphy for the year 1907. No. 190, 191, and 192.

See the annual report on South Indian Epigraphy for the year 1908 Part II. Para 64. And the South Indian Temple Inscriptions Vol. II pages 945—950.

மேலும் மேல்குறித்துள்ள ஒன்பதாவது சுலோகம், இம்மன்னன், ஸ்ரீ கண்ட சம்பு என்பவரின் மகனும், தன்னுடைய குருவுமான ஈசுவரசிவர் என்பவரைக்கொண்டு, இத்திரிபுவனவீரேச்சரத்தில் எழுந்தருளியிருக்கும் அம்மையப்பரைப் பிரதிஷ்டை செய்வித்துள்ளான் என்பதைக் குறிப்பிடுகின்றது.

சிதம்பரத் திருப்பணியைக் குறிக்கும் 6-ஆவது சுலோகம் மூன்றுங்குலோத் துங்க சோழனை, 'ததேகபக்தோ முழுதே நரேந்திர' எனக் குறிப்பிடுவதிலிருந்து இம்மன்னன் நடராசப்பெருமானின் ஏகபக்தன் (the unequalled devotee) என்று பெறப்படுகின்றது.

வெளிக்கோபுரத்துக் கல்வெட்டு இம்மன்னனது 8-ஆவது ஆட்சியாண்டைக் குறிப்பதால் இக்கோயில் கி. பி. 1186-க்குச் சிறிது முன் கருங்கல்லால் இம்மன்னனால் கட்டப்பெற்றதாகும். எனவே இக்கோயில் கட்டப்பெற்று இன்றைக்கு 777 ஆண்டுகள் ஆகின்றன.

**இக்கோயில் கல்வெட்டுச் சுலோகங்கள் :**

1 ஶ்ருத்வா ஶ்ராவணாநாம் ஸுரஸரஸி யஸ்ஸம்ஸாரு ஸிம்ஹஸேந்த்ராநு
பாண்டேஷ்வேஷு கோலேஷு விதரஸாரவதிம் யோவடீஷு வீரவாண்யு |
போ வா வீராபிஷேகம் வ்ருதநூத யோரம் வாஞ்ச்யமாஸ்தாம் ஜயிஷ்வா
ராஜா த்ரைலோக்ய வீரஸ்ஸமவி விஜயதே ஶ்ரீ குலோத்துங்கதேவ: ||

2 விஶ்வம்பரா யஸ்ய ஸராஜமண்டலாயாம் ஸதோவ ஸமந்தம் வஶிவாய யத்ர |
ஶ்ரீத்யா ஸ்ரோத்ராஶீவராஹ தம்ஷ்ட்ரா வாஸாவஸீயாரா ஶ்ருதவேதநாநாம் ||

3 ஸ்வராஜ்யதாவாநய ஶ்ரீதேவா ஸம்ப்ராப்த லக்ஷ்யா: கவயீஶவாவ: |
த்ரைலோக்ய ரக்ஷாவிபிவிஶ்வ ஶ்ரீதேஷ்ட: ஜாகர்தி யஸ்யநாமாம: ஶ்ருவாண: ||

4 த்யாவாஸ்வள வ்யாவ்ய விஜ்ரும்பமாணா நிரங்குஶம் ராஜதியஸ்ய கீர்த்தி: |
விநாகவாணேர நாகவர்தீவ ஶ்ரீதேஷ்ரவ யத்ராத ஜகத்த்ரயாயா: ||

5 ஸாநுப்ராயே த்ரிநஸ்தம்பவிஷ்டரணே ஶ்லக்ஷ்ணாயாம் க்ஷிதி:
ப்ரோஸ்யே த்வஸ்யபா: வரா க்ருஷ்டியேள தள ஜாத்ரஜ்ஞாநள |
நீதள ஶாக்ருஷ்யவ்யவஸ்திதி ஸாரவதி த்ரைலோக்யரக்ஷாக்ருதே
ஸம்பீதே ஸரதோஷ்மநி நர்மவதி வீர்ய: கதம் வர்ண்யதே ||

6 ஸஹாவசெ்தசா்ணுவஸா்ரவதீ்ஷ் ஙிரீரு ஜாவெஸூநி ஞெவாஙாரம் வ ।
ரூகாராஹஸா்ரம் வ வியாய ஷெஹஸம் தஷெக ஹஷொ ஸாஙஸாஙெ நரெநு: ॥

7 வஙகாஞெ ஸூா ஷிவுயாஸ ஸயாஙா ஹாயாஹஸயஷாயம்
ஸ்ரீஸயாஜாஙாநயாஸ யாஸ வ தயா ஸ்ரீராஜராஜெஸ்வராஃ ।
வஸீகெஸ்வரவெஸுவெதி ஙிஷிரம் ஙிஸாயய ஷெஹஸம் நுவொ
வஸீகாயிவதெஸ்காா வ ஸஹாம் ஷிவும் ஸஹஸ ஞெவாஙாஃ ॥

8 ஜிஷ்வா வுபுஸீம் தி்ரஹாவநவீரஸுதாஙாநாம்
வகெரு்ஷூநம் தி்ரஹாவநவீரெஸுரஸெதஸ ।
நாநாஹஸாவ்ரூகஷுதஸொஹஃ ஙஹாஙரயும்
ஷெஹஸொதாஙம ரூவரவிஸாநஷு்மிதாகஃ ॥

9 ஸ்ரீகணஸம்ஹாதநயெந வதிம் நுவாணாம்
வாணுாஸி ஙீஸுர...ஸிவெநஃ
ஸொரெஸ்வரெண ஙாராஙணா ஹாவநஸு விதொ
ஸ்ரெஷாஸகாரயதிஷஸள ஙிவயொஃ ரூதிஷ்டாஃ ॥

10 விஷுாயெந ஸநீஷிணா ஙிகஷிதா விஷஷிஷாஜஸ
ஷூணொயெநு விகுளவஙிஷஜம் விஸுாயிககம் விஷொஃ ।
யெநாகாஙிவ ஷெவதஸரஷநஷுஙா ஷிஜாஷூதாகரொ
ராஜெஷொ யஸ்ய ஙாராஷ ஙாஸம்ஸுரஸிவஃ கஷுஸ்ய ஸரஜெூாஙாணஃ ॥



இறைவன் திருவருள் இல்லையானல் உலகம் இயங்காது. ஆண்டவனைப் பற்றிய எண்ணம் நம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் எழவேண்டும். நமக்குப் பெருங்கருணைத் தடங்கடலாகிய கடவுளிடத்திலே அன்பு வேண்டும். அப்படி அன்போடு எழுந்த அருள்மொழிகளே இன்று தோத்திரமாக உள்ளன; பன்னிரு திருமுறையாக உள்ளன.

— கயிலைக் குருமணி.

# கும்பாபிஷேகம்

சிவஸ்ரீ. தி. சந்திரசேகர சிவாச்சாரியார்

## கும்பாபிஷேகத் தத்துவம் :

கும்பாபிஷேகம் எனும் குடத்து நீராட்டல், இறைவன் அருள் ஒளி பேரொளியாகி அன்பர்களுக்கெல்லாம் பயன் தரச்செய்யும் மாபெருஞ் செயல். அவன் அருள்பெற்று இறை காட்டி யருளிய ஆகமவழி நின்று, முக்கரண மும் ஒன்றிசைந்து முற்பிற்பாடு முறை தவறுமல் அருள்பெறச் செய்வது, செய் விப்பது, உரிய சாதனங்கள் அமைப்பது ஆகிய எல்லாம் சிவாகமச் செயலில் இன்றியமையாதன. இதன் முன்பின் அங்கச் செயல்கள் பல, விடைபெறல், விநாயகர் வழிபாடுவகைமுதல் மண்டல பூர்த்தி இறுதியாகவும், இடையில் "அதிவாசம்" அல்லது யாக ஆரம்பம், "அவபிருதம்" அல்லது குடமுழுக்காட் டல் என்பன முக்கியம். எஞ்சியது கௌணம்; யாகாரம்பத்திற்குமுன் ஆச் சார்ய நியமனம், உபவாசம், அங்குர பூஜை. ரக்ஷாபந்தனம் நித்திய விசேஷ சந்தி தர்பணங்கள், கும்ப அலங்காரம், கலாகர்ஷணம், யாத்ராதானம் ஹோமம், யாகசாலா பிரவேசம் இவைகள் யாகா ரம்பதினம் மாலை தொடங்கி யாக பூர்த்தி செய்ய விருக்கின்றன. யாகம் ஏழுராத் திரி, ஐந்துராத்திரி, மூன்றுராத்திரி, ஒரு ராத்திரி, (அதாவது 7 நாட்கள் அல் லது 5, 3, 1. நாட்கள்) என்று உசிதம் போல் செய்ய விதி இருக்கிறது, யாக பூர்த்தி அவபிருததின காலை வேளையில் முடித்து யாத்ராதானம், கலசோத்தா பனம் முதலியன செய்து அபிஷேகம் செய்ய வேண்டும். யாகமத்தியில் ஆகாரசோதனம் அஷ்டபந்தன சமர்ப் பணம், சாந்திஹோமம், பிம்பசுத்தி, ரக்ஷாபந்தனம், ஜீவநியாசம், ஸ்பரி சாகுதி யாவும் அதிவாச பூர்த்திக்குள் செய்ய வேண்டும். இதில் ஆவர்த்தம், புனராவர்த்தம், அனுவர்த்தம், அந்தரி தம் எனப் பிரதிஷ்டை நான்கு வகை யுடையது.

## ஆவர்த்தம் :

ஆவர்த்தம் என்னும் பிரதிஷ்டை முதலில் பாலஸ்தாபனம் செய்து புதிய தாக ஆலய நிர்மாணம் செய்து பால மூர்த்தியிலிருந்து மூலஸ்தானஉள்ளுறை யில் சேர்ப்பது. புனராவர்த்தம் என் பது பழைய ஆலயம் ஜர்ணமடைந்து பிராகாரம் கோபுரம் முதலானவைகள் பழையனவாகி அஷ்டபந்தன மருந்தின் நீக்கத்தால் தோஷமுற்று நித்திய பூஜை முதலிய வழிபாடுகள் செய்விக்க இயலாத நேரம். உள்ளுறையின் சக்தியை ஆகர் ஷித்து பாலாலயத்தில், பால மூர்த்தியில் ஆரோபணம்செய்து ஆலயத்திருப்பணி களைச் செய்வித்துப் பிறகு பாலமூர்த்தி யிலிருந்து உள்ளுறையில் சேர்ப்பது, (இதில் அஷ்டபந்தன மென்பது இறை வன் அம்சமாகிய அஷ்டமூர்த்தியின் அருள்பெற்று, அணிமாதி அஷ்டைச்வர் யமும் சித்தி அடைந்தநிலையில், ஞான கிரியாசக்தியாகும் சங்கநிதி, பதுமநிதி இரண்டும் தோன்றிப் பரம் பொருளின் ஆணையால் சாம்ராஜ்ய லக்ஷ்மியும்.

அதிலிருந்து பயன்தரும் வகையில் தன லக்ஷ்மி, தான்யலக்ஷ்மி. வித்யாலக்ஷ்மி, கீர்த்திலக்ஷ்மி, சௌபாக்யலக்ஷ்மி, வீரலக்ஷ்மி, ஜயலக்ஷ்மி சந்தான லக்ஷ்மி ஈருக உருக்கொண்டு அன்பர்களை உஜ்ஜீவிக்கும் வண்ணம் உயரியகதி தருவது அஷ்டபந்தன ஸமர்ப்பணம்.)

அனுவர்த்தம் :

ஆலயத்தில் விளையும் பலவிதமான தவறுதல்கள், சோரன், சண்டாளன், பதிதன், உன்மத்தன் முதலியவர்களால் தீண்டப்பட்டு மாறுதல் அடையச் செய்தல், மனிதன் பசு, பக்ஷி முதலிய பிராணிகளின் ம்ருதி. மற்றும் தகாதன வாகிய செயல்கள் முதலிய நீக்கத்தின் பொருட்டுச் செய்யும் பிராயச்சித்த ரூபம்,

அந்தரிதம் :

பிம்பத்தில் பிளவு. ப்ரத்யாங்கம், உபாங்கம் இவைகளில் சிறிது பின்னம், வர்ணஸ்போடம், ஸ்தலகர்ம ஆதார பத்ம பீடம், வஸ்த்ரம், ஆபரணம் முதலி யன இன்மை, இவைகளைப் பூரணப் படுத்திச்செய்வது அந்தரிதம்.

இந்நான்கு பிரதிஷ்டைகளில் முன்னி ரண்டும் நன்மை தரும் நாள் முதலியன பார்த்துச் செய்வன, பின்னிரண்டும் நாள், கோள் பாராமல் ஆவன செய்து உடனே கடமையைச் செய்வது. ஆகிய இவைகளின்செயலுக்கு உரித்தான இடம் யாகசாலை. அது கலாமயம் நிவிருத்தி முதலிய நான்கு கலைளாகிய நான்கு பக்க நிலைகளாம். இதற்கு நான்கு கலசங்கள் ஒவ்வொரு நிலையின் வலப் பக்கம் அமையும். நிலைக்கு இருபுறமும் வாயிற் காப்பாளர்கள், நந்தி, மஹா காளன், பிருங்கி, விநாயகர், விருஷபம், ஸ்கந்தர், தேவி, சண்டேசுவரர் ஆகிய எண்மருக்கும் எட்டுக் கலசங்கள். பிறகு கிழக்குமுதல் எட்டுத் திக்குகளுக்கும் மேல் கீழ் இரு திசைகளுக்கு ஈசானத்தின் தெற்கும் நைருதியின் வடக்கும் சேர்ந்து பத்து திக்குகளுக்கு இந்திரன், அக்னி, யமன். நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், பிரமன். விஷ்ணு ஆகிய திக்பாலர்கள் பதின்மருக்கும் பத்துக் கலசங்கள். அக்னி கலசத்திற்கு வடக்கில் இறைவன் முதல் ஆதாரமாகிய சிவசூரியன் கலசமும். நைருதியின் கிழக்கில் யாகபூமி பயன்தரச் செய்வ தற்கு வாஸ்து பிரமன் கலசமும், வாயு கலசத்திற்கு தெற்கில் யாகதிரவிய ஸமிருத்திக்கும், உத்தம யாக மண்டல மாகும் தன்மைக்கும் காரணமாகும் மகா லட்சுமி கலசமும், வாயுவின் திக்கில் யாகத்தில் நேரக்கூடிய விக்கின நீக்கத் திற்கு விநாயகர் கலசமும், ஈசான மேற்கில் யாகத்தில் எதையும் கேட்டுச் செய்வதற்கு சதா சிவர் முதல் சப்த குருமூர்த்திகளின் கலசமும் சேர்ந்து இருபத்தேழு பரிவார கலசங்கள்.

யாகமாம் தன்மை பொருந்தவும், அவரவர்கள் செயலில் வழுவாதிருக்க ஞானவாள்தாங்கி நாத பிந்துவின் சேர்க்கையால், கலாதிகளைத் தோற்று வித்து உலகம் உய்யும் உடன்பாடு உடையவர்கள் யாகேஸ்வர், அஸ்திர வர்த்தனி இவர்கள் கலசங்கள் இரண்டு.

யாக வேதிகையின் மேல் ப்ரதான மாகிய உள்ளுறை மூர்த்தியின் கலசமும். அதன் அபின்ன சக்தியாகிய பீடசக்தி யின் கலசமும் முக்யமானவை.

முழுமுதற் கடவுளின் அருள் வெள் ளம் பெருகும் வண்ணம் ஜாக்கிரதை யுடன் இருப்பதில் அஷ்டமூர்த்தியாகிய அனந்தன், சூக்ஷ்மன், சிவோத்தமன்,

ஏகநேத்திரன், ஏக ருத்ரன், திருமூர்த்தி, ஸ்ரீ கண்டன், சிகண்டி ஆகிய எட்டும் ப்ராதன மூர்த்தியின் ஆவரணங்கள்.

சிவசூர்ய மண்டல மத்யம், ஆசார்யார் ஹ்ருதயம் உள்ளுறையான பிரதான கலசம், சிவாக்கினி, சித்தாந்த புத்தகம், ஆகிய ஆறு ஆதாரமும் நிறைந்து, உண்மை அன்பர்கள் உள்ளும் புறமும் தோன்றி எப்பொழுதும் இம்மை மறுமை பயனளிக்கும் அருட்சக்தி வாய்ந்தது சிவயாகம்.

இதை மனம், வாக்கு, காயம் ஆகிய முக்கரணங்களும் ஒன்று சேர்ந்து, சொல்லின் பொருள் நிலைத்து, சூக்ஷ்மை, மத்யமை, வைகரி, பச்யந்தி ஆகிய நாற் சொல்நிலை அமைந்து, செயல் விளக்கம் செய்வதான கைகளாலாகிய முத்திரையும் சேர்ந்து, இறைவனிடம் லயித்து, அவனும் தன்மை ஏற்றுப் பயனடையச் செய்யும் பெரும் சாந்தியும், மங்கள மெலாம் திரண்டு சேர்ந்ததும், விடை பெறல் விநாயக வழிபாடு முதல் மண்டல பூர்த்திவரை நூற்றுப்பதினைந்து செயல் கொண்டதும் ஆகிப் பாமரர்களுக்கும் பரமானந்த பரவசமடையச் செய்து பயனளிப்பது மஹாகும்பாபிஷேகம்.



உலகமே ஒரு சர்வகலாசாலை போன்றது. கலாசாலைகளில் ஒரு சமயத்தில் ஒரு விஷயம்தான் கற்றுக்கொள்ள வாய்ப்பிருக்கும். யாத்திரையின் மூலமோ பல விஷயங்களை ஏககாலத்தில் அறிந்து கொள்ள வாய்ப்பு உண்டு. சர்வகலாசாலையில், படித்த பெரிய அறிவாளிகள் - பண்டிதர்கள் - இருந்து போதிப்பார்கள். ஆனால் யாத்திரையிலோ படிப்பறிவே இல்லாத பாமரரிலிருந்து பெரிய படித்த மேதாவிகள் பலரும் நமக்கு அறிவு கொளுத்திகளாக அமைந்து விளங்குகிறார்கள்.

* * *

கடவுள் துணைக்கொண்டு செய்யும் எந்தக்காரியமும் வெற்றிகரமாக - மங்களகரமாக முடியுமென்று நம்புகிறோம். இந்த நினைப்பு ஒன்றே நம்மை உலகத்திலே தன்னம்பிக்கையோடு வாழச் செய்கிறது. நாம் உயர வேண்டுமானால் நம் ஆத்மிக சக்தி வளர வேண்டும். இந்த ஆத்மிக சக்தியைக் கொண்டு நாம் உலகம் வியக்கும் செயல்கள் பல செய்திருக்கிறோம்.

— கயிலைக் குருமணி.

# தாயுமானவரும் சைவசித்தாந்தமும்

"திருக்குறள்வேள்"

திரு. ஜி. வரதராஜப்பிள்ளை B. A.,

சோழவள நாட்டிலே திருமறைக் காட்டிலே இன்றைக்குச் சற்றேறக்குறைய முந்நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு கேடிலியப்ப பிள்ளை என்ற சைவ வேளாளப் பெருந்தகையார் ஒருவர் இருந்தார். அக்காலத்தில் திருச்சிராப் பள்ளியில் ஆட்சிபுரிந்த விஜய இரகு நாதசொக்கலிங்க நாயகர் இவரது கல்வி அறிவு ஒழுக்கங்களைக் கேள்வியுற்றுத் தம் அரசுப்பெருங் கணக்கராக நியமித் தார். அரசரது காரியங்களைக் கண்ணும் கருத்துமாய் இருந்து கவனித்து அரச ரது நன்மதிப்புக்காளானார். இவரது பிள்ளையாகிய சிவசிதம்பரம் பிள்ளையை இவரது தமையனாருக்கு வளர்ப்புப் பிள்ளையாகக் கொடுத்துவிட்டார். தமக் குப் பிள்ளையில்லையே என்று எண்ணித் தவம் கிடக்கு நாளில் தாயுமானார் தமிழ் நாடு செய்த தவப்பயனாய்த் தோன்றினார். குழந்தை நாளொரு மேனியும் பொழு தொரு வண்ணமாக வளர்ந்து, தென் தமிழும் வடமொழியும் கற்று வல்லவு ரானார். இக்காலத்தில் தந்தையார் கேடிலியப்பர் இறைவன் திருவடி நீழலை யடைந்தார்.

தாயுமானார் தந்தையார்பதவியேற்று அரசன் ஆணைப்படி நடக்கலானார். எனினும், பூர்வ புண்ணியப் பயனாய் தன்னுடைய எண்ணம் இறைநாட்டத் திலேயே இருந்தது. ஒருநாள் அடிகள் காலம் கைகூட மவுனகுரு சுவாமிகளைத் தாயுமானவர் ஆலயத்தில் தட்சணா மூர்த்தி சந்நிதியில் கண்டார். 'அன்றே என்றன் ஆவியும் உடலும், உடமை யெல்லாமும், குன்றேயனையாய் எனை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ' என்று கூறுவார் போல, அவரது திரு வடியில் வீழ்ந்து இறைஞ்சினார். அவரும் இவரது பக்குவத்தையறிந்து ஏற்றுக் கொண்டு சிவஞான உபதேசம் செய்தார். அடிகளுடைய பக்குவமறிந்த அரசரும் தன்மையாகவே அவரிடம் நடந்து கொண்டார். அரசரது இறுதிக் காலம் வரவே, அவரும் இறைவன் நீழலை எய்தினார். அரசியார் பட்டத்துக்கு வரவே அடிகளுக்கு அரசு வேலையைத் தொடர்ந்து பார்க்க முடியாதநிலை யேற் பட்டது. இராமநாதபுரத்துக்குச் சென்று அங்குத் தங்கியிருந்தார். இதனைக்கேள்வி யுற்ற இவரது தமையனார் சிவசிதம்பரம் பிள்ளை அடிகளுக்குத் திருமணம் செய் விக்க எண்ணி இராமநாதபுரத்துக்கு வந்து தம்பியாரைக் கேட்டுக்கொண்டார். தம்பியாரும் இசைவுதர மட்டுவார் குழலி என்னும் அம்மையாரை மணம் பேசி முடித்தார். இவ்வாறு திருமறைக்காட்டில் இல்லறமே நல்லறமாகக்கொண்டு,

"தென்புலத்தார் தெய்வம் விருந்து
ஒக்கல் தான் என்ற
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை"

என்று ஐவகை வேள்வியும் வழுவாது ஓம்பி வாழும் நாளில் ஒரு ஆண்மகவு

பிறந்தது. அக்குழந்தைக்குக் கனக சபாபதி என்னும் திருப்பெயர் சூட்டினர். சின்னாள் இருந்து மட்டுவார் குழலியம்மை யார் சிவபதம் பெற்றனர். இவ்வமயம் அடிகள் தம் குருநாதராகிய மவுனகுரு சுவாமிகளின் உபதேசத்தை மீண்டும் பெற்றுத் துறவறம் மேற்கொண்டு யாத்திரை கிளம்பினர். காசி காஞ்சி அருணை, சிதம்பரம், திருவாரூர், மதுரை, திருப்பரங்குன்றம் முதலிய பதிகளைத் தரிசித்துக்கொண்டு அடிகள் திருவிரா மேச்சுரம் போய்ச் சேர்ந்தார். அங்கு நீண்டகாலம் மழையின்மையால் மக்கள் படும் அவதியைக் கண்ணுற்று இறை வனை நினைந்து.

"சைவ சமயஞ் சமயமெனி லச்சமயத்
தெய்வம் பிறைசூடுந் தெய்வமெனி
லவரைவென்று
ஆனந்த வின்பி லழுந்துவது
முத்தியெனில்
வானங்காள் பெய்ம்மின் மழை"

என்று சைவசமயத்தின் மேலும், சைவ சமயத்தின் பிறைசூடும் தெய்வமாகிய சிவத்தின் பேரிலும் ஆணையிட்டு மழை பெய்யவேண்டும் என்ற கருத்துக் கொண்ட திருவெண்பாவைப் பாடினர் மழை பெய்தது; ஊர் செழித்தது; மக்கள் மகிழ்ந்து தாயுமான அடிகளைப் போற்றி னர். சைவசமயத்தின் பேரில் அடி களுக்கு இருந்த பற்றும், சைவ சமயக் கடவுளாகிய சிவபெருமான் மீது கொண்டுள்ள நம்பிக்கையும் இவ் வெண் பாவினல் விளங்குகிறது. அடுத்து இராமேச்சுரத்திலிருந்து புறப்பட்டு அடிகள் இராமநாதபுரத்துக்கு வந்து சிவத்திலே இரண்டறக் கலந்தனர்.

சைவத்துக்குரிய கடவுள் சிவம். சிவம் நிலையான பொருள், அறிவுடைய பொருள், ஆனந்தமுடைய பொருள். இதனைச் சச்சிதானந்தம் என்று கூறுவர். பதி, பசு, பாசம் என்பன, என்றும்உள்ள பொருள்கள். அவை அநாதி என்று சாத்திரம் கூறும். பதி என்பது இறை வன்; பசு என்பது உயிர்; பாசம் என்பது ஆணவம் கன்மம் மாயை என்ற மும் மலங்கள். உயிராகிய பசு பாசமாகிய மலத்தோடு கட்டுண்டிருக்கிறது. ஆனல் பாசமாகிய மலத்தைவிட்டுப் பசுவாகிய உயிர் பதியாகிய சிவத்தை யடைய வேண்டும்

"ஆணவத் தோடத் துவிதமானபடி
மெஞ்ஞானத்
தாணுவினேடத் துவிதமா குநாள்
எந்நாளோ"

என்ற தாயுமானர் வாக்குப்படி மெஞ் ஞானத்தாணுவாகிய சிவத்தையடைவது தான் உயிருக்குக் குறிக்கோளாகும். இன்னும் அதற்குச் சாதனம்இறைவனது புகழை இடைவிடாதுருகிப் பாட வேண்டும்.

"கற்றதனலாய பயனென் கொல்
வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"

என்றார் வள்ளுவரும். அடுத்து அடியார் கூட்டமும் வேண்டும். சிவஞானபோதம் பன்னிரண்டாம் சூத்திரத்தில்,

"செம்மலர் நோன்றாள் சேரலொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும்அரனெனத்தொழுமே"

என்று மலத்தைக் கழுவி அடியாரோடு கூடி அன்பு செய்து அரனடி அடைய வேண்டும் என்று அடியார் கூட்டத்தை இறைவனடி சேரச் சாதனமாக மெய் கண்டதேவர் கூறினர். தாயுமானரும் இக்கருத்துக்களை உள்ளடக்கியே

" அரும்பொனே மணியேயென்
அன்பேயென் அன்பான
அறிவேயென் அறிவிலுறும்
ஆனந்த வெள்ளமே
என்றென்று பாடினேன்
ஆடினேன் நாடிநாடி
விரும்பியே கூவினேன்
உலறினேன் அலறினேன்
மெய்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரி எனஎனிரு
கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந் தேனியான்
இரும்புநேர் நெஞ்சகக்
கள்வனுலும் உனை
இடைவிட்டு நின்றதுண்டோ
என்று நீ யன்று நான்
உன்னடிமை யல்லவோ
யாதேனும் அறியா வெறுந்
துரும்பனேன் என்னினும்
கைவிடுதல் நீதியோ
தொண்டரொடு கூட்டு கண்டாய்
சுத்தநிர்க் குணமான
பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

என்று கூறினர்.

சைவ சமயந்தான் சிறப்புடையது என்பதும், பிறைசூடும் பெருமான்தான் சைவசமயக் கடவுள் என்பதும் அடிகள் திருவிராமேச்சுரத்தில் மழையைவேண்டி அருளிய பாட்டால் விளங்குகிறது. அடுத்துப் பிறைசூடும் பெருமான் சத்து சித்து ஆனந்தப்பொருளாய் இருக்கிருன் என்பது 'அன்பே அறிவே ஆனந்த வெள்ளமே' என்றதனுல் விளங்குகிறது.

பதி, பசு, பாசம், அநாதி என் பதும், என்றும் இருந்தபோதிலும் பதி ஆண்டான்; பசு அடிமை என்பதும் 'என்று நீ அன்று நான் உன்னடிமை யல்லவோ' என்றதனுல் அறியக் கிடக் கின்றன. ஆனுல் அடிமையாகிய பசு இறை வனை அலறினுல் அடையலாம் என்பதும், அதற்குச் சாதனம் தொண்டர் கூட்டம் என்பதும், உலறிலேன் அலறினேன். என்றதனுலும், 'தொண்டரொடு கூட்டு கண்டாய்' என்றதனுலும். கிடைக்கிறது. இவ்வளவு சித்தாந்த உண்மைகளும் பொதிந்து கிடக்கும் இத்திருப்பாட்டை நாடொறும் பாடி சுத்த நிர்குணமான பரதெய்வத்தை வழிபட்டு உய்வோமாக.

' வாழ்க சைவம் '



ஒருவர் சிறிது உபகாரம் செய்தாலும் ஏற்றவர் அதை எப்பொழுதும் மறக்கக்கூடாது. அப்படியானுல் உலகத்தையும் தந்து அதனை அனுபவிக்க உயிர்களாகிய நமக்கு உடலையும் தந்த கடவுளை - அவர் செய்துவரும் நன்றியை - நாம் மறக்கலாமா? நன்றியை மறப்பது நன்ருகுமா?

— கயிலைக் குருமணி.

# ஆலய வழிபாட்டின் தத்துவம்

" சிவாகம வித்துவான் "

திரு. S. சுவாமிநாத சிவாச்சாரியார்

गुरुं गणपतिं स्कन्दं साम्बं च परमेश्वरम् ।
वन्दे वाणीं महालक्ष्मीमिष्टकाम्यार्थ सिद्धये ॥

ஆன்மாக்கள் அநாதியே ஆணவபந்தமுள்ளவை. ஆணவத்தால் ஆன்மாக்களின் இயற்கையான அறிவு இச்சை செயல்கள் தடைப்பட்டு, மூடமாய்க் கிடந்தன.

பேரருளாளராகிய கடவுள் தமது பெருங்கருணையால் ஆன்மாக்களின் பந்தத்தைநீக்கி அவைகளின் அறிவிச்சை செயல்களை விளக்கி. அவைகளுக்குத் தமது இன்பத்தைக் கொடுக்கக் கருதித் தமது அருட்சக்தியால் உலகத்தையும் உடலையும் அவைகளுக்குச் சிருட்டித்துக் கொடுத்தார். அவற்றைப்பொருந்தித் தமதறிவிச்சை செயல்கள் விளங்கப்பெற்ற ஆன்மாக்கள், நன்றியறிதலாகக் கடவுளை வழிபட வேண்டுவது அவசியம்.

கடவுள் வழிபாடானது அவர் அதிஷ்டித்து நிற்கும் இடத்தாலும் வழிபாட்டிற்குரிய காரணங்களாலும் வழிபடும் அறிவு வகையாலும் மூவகைப்பட்டு ஒவ்வொன்றும் மும்மூன்ருகும்.

கடவுள் எங்கும் வியாபியாய் நிறைந்திருப்பினும் பாலில் நெய்போல் விளங்காது நிற்கிருர். குருவினிடத்திலும், சிவாலயத்திலும் சிவனடியாரிடத்திலும் தயிரில் நெய்போல் வெளிப்பட்டு விளங்கியருள்வார்.

சிவாலயத்தையும் சிவலிங்கத்தையும் சிவமெனவே கண்டு வழிபட்டவர்கள் முத்தியடைந்ததுண்டாகையாலும், சிவாலயமும் சிவக்குறிகளும், சிவாலய பூஜா காரியங்களும் மந்திரபூர்வமாக இருத்தலாலும் மந்திர சாந்நித்யமுடைய சிவாலயம் சிவனை வழிபடுதற்குரிய இடமாகும்.

திருக்கோயிலுள்ளிருக்கும் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவனங்கே
யுருக்கோலி மந்திரத்தால் நினையுமவர்க்கெங்கு
முளனெங்கு மிலனிங்குமுளனென்பார்க்கு

விருப்பாய வடிவாகி யிந்தனத்தி னெரி போல்
மந்திரத்தின் வந்துதிப்ப னிருஞ்சுரபிக் கெங்கும்
உருக்காண வொண்ணுத பால்முலைப்பால் விம்மி
ஒழுகுவது போல்வெளிப்பட்டரு ளுவனன் பர்க்கே.

— சிவஞான சித்தியார்.

திருக்கோயிலின்கண் ஆகமமுறையானமைந்த பரார்த்தமாகிய சிவலிங்கம் முதலிய திருவுருவங்களைச் சிவன் எனக்கண்டு உருவ வழிபாடு செய்யும் சரியையாளருக்கு அவ்வுருவங்களிலே வெளிப்படாது நின்று அருள் செய்வன்; திருவுருவங்களை ஆன் மார்த்தமாக எழுந்தருளச்செய்து மந்திரவடிவுங் கூட்டி அத்துவாமூர்த்தியாய்க் கொண்டு. உருவாருவ வழிபாடு செய்யுங்கிரியையாளருக்குத் திருக்கோயிலிற் காணுந் திருவுருவங்களில் மந்திரவடிவமாய் நின்று அருள் செய்வன்; சராசரங்களெங்கும் அருவாய்க் குடிகொண்டு நிற்கும் முதல்வன் தம் தேகத்தில் உள்ளத்தே பாவனை யானவடிவமைந்திருப்பன் எனக்கொண்டு அருவவழிபாடு செய்யும் யோகியர்க்குத் தேகமே திருக்கோயில் போன்றிருக்க, அதன்கண் கோயில் அகத்துத் தோன்று மாறே விறகில் தோன்ருது நின்ற தீ கடைய வந்துதிப்பது போல, பாவனுவடி வத்தோடு வெளிப்பட்டு அருள் செய்வன். மெய்யன்புகூடி அறிவு மாத்திரையான் அருளுருவில் வணங்கும் ஞானியர்க்கு மேம்பாடுற்ற கறவைப்பசுவின் உடலெங் கனும் செறிந்திருந்தும் வெளிக்காண முடியாதிருக்கும்பாலானது முலைவழியாக விம்மிப் பொழிவதுபோல் கருணையின் வெளிப்பட்டுத் தோன்றி யருள்செய்வன். ஆகையால் திருக்கோயில் வழிபாடு யாவரும் செய்யவேண்டியதாகும்.

உயிர்கள் கர்ம சக்கரத்தாற் சுழன்று பிரபஞ்ச வாசனையில் அழுந்தி, தாரம், தனம் முதலான பொருள்களின் மோகத்தால் சுகதுக்கங்களைக் கடலலைபோல் ஓயாது மாறி மாறி அனுபவிக்கின்றன. கடவுள் எங்கும் வியாபகராயிருத்தலால் எந்த விடத்திலிருந்தும் அவரை வழிபடலாம் என எண்ணில், சுகதுக்கரூப அலைகள் எங்கும் சூழ்ந்து கொண்டிருத்தலால் அவை அவ்வழிபாட்டை நிலைக்கவொட்டாது தடைபண்ணும். ஆகவே ஒருமனத்தோடு வழிபாடு செய்வதற்குரிய இடம் ஆலயம். எல்லோரும் ஒருங்குகூடிக் கடவுளை வழிபடுவதற்கும் ஆலயம் அவசியமாகும். எனவே ஆலயமானது எங்கும் வியாபியாயிருக்கிற கடவுள் மந்த்ர பூர்வமாக ஸ்தாபிக்கப்படும் வடிவங்களில் வெளிப்பட்டு ஆன்மாக்களுக்கு அருள்புரியுமிடமாகும். ஆ. பசு லயம் ஒடுங்குதல், எனப் பொருள்படுதலால் அது ஆன்மாக்கள், தம்மைப் பந்தித்த ஆணவ மல வலி ஒடுங்கப்பெற்றுப் பேரன்புடன் மனோவாக்குக் காயங்களென்னும் திரிகரணங் களாலும் முறையே சிந்தித்து, வாழ்த்தி, வணங்கி, அருண்ஞானமடைந்து, இறைவ னிடத்து ஒடுங்குவதற்குச் சாதனமான இடமாகும்.

சிவாலயம் அண்டத்தில் காணப்படும் பாகுபாடுகளையும் பிண்டத்தில் காணப் படும் பாகுபாடுகளையும் குறிப்பதாகும். அண்டத்தில் காணப்படும் அத்துவாக்களின் வகையாலும் உடலில் காணப்படும் உறுப்பு வகையாலும் தியானத்தின் நிமித்தம் உடலிற் பாவிக்கப்படும் ஆதாரங்களின் வகையாலும் சிவாலயம் அண்ட பிண்ட ஸ்வரூபமாயுள்ளது.

அண்டத்தில் காணப்படுவதுபோல் சிவாலயத்தில் கர்ப்பக் கிரஹம் சுத்த மாயை, மஹாமண்டபம் சுத்தாசுத்தமாயை, வெளிப்பிரகாரங்கள் அசுத்தமாயை. இவ்வாறே அண்டத்திலுள்ளதுபோல், சாந்தியதீதை, சாந்தி, வித்தை, பிரதிஷ்டை நிவிருத்தி என்ற ஐந்துகலைகளும் ஐந்து பிரகாரமாகும்.

பிண்டமாகிய உடலில் தலை, கழுத்து, மார்பு, நாபி, பாதம் என்று காணப் படுவது போல் ஆலயத்திலும் பிரிவு காணப்படுகிறது. ஒரு புருஷ வடிவமாகக் கொள்ளப்பட்ட சிவாலயத்தின் கர்ப்பக்கிரஹம் தலை, அர்த்தமண்டபம் கழுத்து, ஸ்னபன மண்டபம் மார்பு, மஹாமண்டபம் கொப்பூழ், நர்த்தன மண்டபம் தொடை, ஆஸ்தான மண்டபம் முழங்கால், கோபுரம் பாதம் என்று கூறப்படுகிறது.

गर्भगेहं शिरः प्रोक्त मर्धं कण्ठस्थलं भवेत् ।
स्नपनं वक्षःस्थलं चैव महामण्डप नाभिकम् ॥
नृत्तमण्डप ऊरुःस्या दास्थानं जंघिका भवेत् ।
महागोपुर पादं चेत्येवं रूपमुदाहृतम् ॥

மற்றும் சிவாலயம் ஸர்வதேவதாஸ்ரூபமாகவும் கூறப்படுகிறது. கடவுள் ஒருவராய் இருந்தும் ஆன்மாக்களை அனுக்ரஹிக்கவேண்டியும் நிக்கிரகிக்கவேண்டியும் கொள்ளப்பட்ட அருள் வடிவங்கள் பலவுள. அவை சந்திரசேகரர் சோமாஸ்கந்தர் இடபாரூடர் முதலிய அனுக்ரஹ வடிவங்களும் காமதகனர் திரிபுரதகனர், காலகாலர் முதலிய நிக்ரஹ வடிவங்களுமாகும். இன்னும் ஆன்மாக்களின் பக்குவ பேதத்திற் கிணங்க அவைகளுணர்ந்து வழிபட்டுய்யும் பொருட்டுக் கடவுளதிகாரம் பெற்று நிக்ர ஹாநுக்கிரஹங்களைச் செய்கின்ற தேவர்களான விஷ்ணு, பிரும்மா, இந்திரன் முதலிய தேவர்களும் பலர் ஆவார்கள். இவர்கள் சிவாலயத்தில் இடம்பெற்று பூஜிக்கப்படு வதால்சிவாலயம் சர்வதேவதாஸ்வரூபம், ஆதலால் யாவர்க்கும் ஆலய வழிபாடு மிகவும் முக்கியமாகும்.

சிவாலய தரிசனம் செய்பவர்கள் தீர்த்தமாடிப் புனிதமுற்றுக் கோபுரத்தை வணங்கிப் பிராகாரம் வலம்வந்து உள்ளேசென்று பலிபீடம் நந்தி துவஜஸ்தம்பங் களைத் தரிசித்து பலிபீடத்தருகே நமஸ்கரித்து மண்டபங்களைக் கடந்து சந்நிதியை அடைந்து திரிகரணங்களால் இறைவனை வாழ்த்தி வணங்கவேண்டும்.

गोपुरे शिखरे द्वारे प्रासादे बलिपीठके ।
अर्चके मूललिङ्गे च, सदा सन्निहितो भवेत् ॥

என்ற சிவாகம வாக்கியத்தின்படி இறைவன் கோபுரத்திலும் சிகரத்திலும் வாயிற் படியிலும், ஆலய மண்டபங்களிலும் பலிபீடத்தினிடத்திலும் அர்ச்சகரிடத்திலும், மூல லிங்கத்திலும் எப்போதும் பிரசன்னமுள்ளவனுக இருக்கிறுன் என்பதினுல் கோபுரம் முதலியவைகளைக் கைகூப்பி வணங்கவேண்டும். மற்றும் வெகு தூரத்திலேயே காணப்படும் சிவாலயத்தின் சிகரத்தைக்கண்டு யார் வணங்குகிறுனே அவன் சட்டை நீக்கிய அரவம்போல், பாபத்தினின்று நீங்குகிறுன்.

விமானம் ஸ்தூலலிங்கம், சிவலிங்கம் சூக்ஷ்மலிங்கம், பலிபீடம் பத்ரலிங்கம் ஆதலால், ஸ்தூலலிங்கமான விமானத்தை வணங்கி உட்சென்று இறைவனை வணங்க வேண்டும்.

வஸ்திரத்தினுல் சரீரத்தை மூடிக்கொண்டு ஆலயத்தில் பிரதக்ஷிணம் நமஸ்காரம் செய்பவன் மூன்று ஜன்மாவில் ஊமையாகவும் பிற ஏழு ஜன்மாவில் தரித்திரனுகவும் ஆகிறுன். அதாவது,

वस्त्रेणाच्छाद्य देहं स्वं यो नरः प्रणमेत्तु माम् ।
त्रिजन्म जायते मूकः सप्तजन्मसु निर्धनः ॥

— அம்சுமானுசய.

ஆலயத்திற்குச்சென்று தரிசனம் செய்பவர்கள் முக்கியமாக முப்பத்திரண்டுவித அபராதங்களைக் கவனித்து அதை விலக்கி நடந்துகொள்ளவேண்டும். அதாவது, ஒரு நமஸ்காரம், ஒரு பிரதக்ஷிணம், எச்சில் உமிழ்தல், தீட்டுடன் செல்லுதல், தனித் தனியாக ஒவ்வொரு சுவாமிக்கும் நமஸ்காரம் செய்தல், கோவிலுக்குள் கால் அலம்புதல் ஆலயத்துள் கட்டிலில் உட்காருதல், படுக்கை, உணவு, பொய்பேசுதல், இரைந்து சிரித்தல், ஜல்ப்பம், அழுதல் அப்யங்கம், ஒருவருக்கொருவர் இடித்துக் கொள்ளுதல், ஒருவனை அடித்தல், அனுக்கிரஹம் செய்தல், பெண்களிடம் முறை தவறிப் பேசுதல், தேசாந்தரக்கதை பேசுதல், வாயுபறிதல் கம்பளியைத்தரித்தல் பிறரை நிந்தித்தல், வேறு ஒருவரை நினைத்தல், சுவாமிக்கும் விருஷபத்திற்கும் நடுவில் செல்லுதல், வேருெருவருக்கு வந்தனம் செய்தல், தலை ஆற்றுதல், இறைவனுக்கு நிவேதனம் செய்யாததை உண்ணல், சோமசூத்திரத்தைத்தாண்டுதல், குருநிந்தை, தாம்பூல பக்ஷணம், எண்ணெய் தடவிக்கொள்ளல், சிறு நீர்கழித்தல், என்பவைகள் கொடிய அபசாரங்களாகும்.

प्रदक्षिणत्रयं कृत्वा नमस्कारं तु पञ्चकम् ।

என்றபடி சிவபெருமானுக்கு மூன்று பிரதக்ஷிணம் செய்யவேண்டும். ஐந்து தடவை வந்தனம் செய்யவேண்டும். 'பிரதக்ஷிணம் என்பது ஸவ்யம் என்றும் அபஸவ்யம் என்றும் சவ்யாபஸவ்யம் என்றும் மூன்றுவிதம். ஸவ்யம் ப்ரதக்ஷிணம் என்பது, ஆலயத்தின் ப்ராகாரத்தில் வலது புறமாகச் சுற்றிவருதல், இந்தப் பிரதக்ஷிணம் போகத்தை அளிக்கும். அபசவ்யப்ரதக்ஷிணம் முக்தியை விரும்புகிறவர்களால் செய்யப்படும் இடமாகச் சுற்றும் பிரதக்ஷிணம். போகம் மோக்ஷமிரண்டையும் கொடுக்க வல்லது. சவ்யாபசவ்யப்ரதக்ஷிணம் அதாவது,

वृषादि चण्डनाथं च वृषभ सोमसूत्रकम् ।
पुनर्वृषं च चण्डं च नालदेशं च पार्श्वके ॥
एवं प्रदक्षिणं कार्यं सव्यापसव्यकेऽपि च ।
आद्यन्तं वृषभं चैव चतुःस्थानमुदाहृतम् ॥

त्रिचण्ड स्थान संयुक्त पक्षाभ्यां सोमसूत्रकम् ।
आत्मप्रदक्षिणं कुर्यात् तत्तत्स्थानैक संख्यया ॥
तथैव नव संख्या च एवमेवं समाचरेत् ।

— அம்சுமான்.

முதலில் வ்ருஷபத்தைத் தரிசித்து அப்படியே இடதுபுறமாகச் சண்டிகேசனைத் தரிசிக்கவேண்டும். அதன்பிறகு வலமாக விருஷபதேவனைத் தரிசித்துக்கொண்டு பிரதக்ஷிணமாக வடக்குப் பிரகாரம் வந்து, கோமுகத்தை தரிசிக்கவேண்டும். மறுபடியும் அப்ரதக்ஷிணமாக விருஷப தேவனையும் அதே முறையில் சண்டீசனையும் தரிசித்துக் கொண்டு, அங்கிருந்து பக்கத்திலிருக்கும் கோமுகத்தைத் தரிசிக்கவேண்டும். பிறகு பிரதக்ஷிணமாக அங்குச் சண்டீசனையும், அதன் பிறகு பிரதக்ஷிணமாக விருஷப தேவனையும் தரிசித்துக்கொள்ளவேண்டும். ஆகவே, நான்கு தடவை விருஷப தேவனையும் மூன்று தடவை சண்டேச்வரனையும் இரண்டு தடவை கோமுகத்தையும் தரிசித்தல் ஒரு சோமசூத்ரப்ரதக்ஷிணமாகும். அங்கு ஒவ்வொரு இடத்திலும் ஒரு ஆத்ம ப்ரதக்ஷிணம் செய்யவேண்டும். இம்முறைப்படி ஒன்பது தடவை சோமசூத்ரப்ர தக்ஷிணம் செய்யவேண்டும். இதற்கு சவ்யாபசவ்யப்ரதக்ஷிணம் என்று பெயர்.

விஷ்ணு ஆலயமும் சிவாலயமும் சேர்ந்து இருக்குமிடத்தில் சோமசூத்ர ப்ரதக்ஷிணம் செய்யக்கூடாது. அதாவது விஷ்ணு கோவிலும் சிவாலயமும் சேர்ந்து ஒரே பிராகாரமாக இருக்குமிடத்தில் செய்தல் கூடாது. சிவாலயத்தின்கண் செய்யப்படும் தொண்டுகள் விசேஷ பலனை உடையவை. அதாவது, ஆலயத்தில் திருவலகிடுவது மனதிடத்தே கழிவின்றிக் கிடக்கிற காமம் வெகுளி பொய் முதலியவைகளாகிய குப்பைகளை ஒழிப்பதைக் குறிக்கும். திருமெழுக்கிடுவதானது கோப முதலியவைகளை நீக்கி வினைகடந்த தத்துவஞானமென்னும் நறுஞ் சாணத்தைக்கொண்டு அன்பாகிய நீருடன் கலந்து மெழுகி மனாலயத்தைப் புநிதப்படுத்துவதைக் குறிக்கும். தீபமிடுதலாவது உடலாகிய ஆலயத்தில் உள்ளமென்னும் தகழியில் அறிவாகிய நெய்யை நிறைத்து உயிராகிய திரியையிட்டுப் பிராணவாயுவாகிய காற்றை நிறுத்தி ஆணவமாகிய இருள் நீங்கச் சிவஞானமாகிய நந்தா விளக்கை ஏற்றுதலைக் குறிக்கும். மற்றும், சிவதீர்த்தத்தில் நீராடுவதால் சத்திநிபாதமுற்று, பிராகாரங்களை வலம்வந்து உள்ளே செல்லுவதால் தத்துவங்களைக் கடந்து சரீரங்களைநீக்கி, பலிபீடம், நந்தி துவஜஸ்தம்ப தரிசனத்தால், பாசம் பசு பதி என்னும் முப்பொருளுணர்ச்சியுற்றுப் பாச நீக்கமும் உற்றுச் செருக்கற்றுப் பரவசமடைந்து, மண்டபங்களைக் கடத்தலால் ஆறு ஆதாரங்களைக் கடந்து அதிகார நந்தி ஸ்தானத்தை அடைவதால் அதிகாரமுத்தனாகி சிவலிங்க தரிசனத்தால் அபரமுத்தனாகிறான்.

சிவாலயத்தில் சிவாசாரியரால் செய்யப்படும் பூஜை உயிர்களுக்குச் செய்யப்படும் தீக்ஷையாகும். அங்குச் சந்நிதியில் அளிக்கப்படும் விபூதி திருவருட்பிரசாதத்தைக் கொடுத்தலாகும்.

விழுந்து மெய்யுறப் பணிபவர் வினைகளே விழும்
எழுந்தபோதினில் வினைகளுமெழுந்துருதிறக்கு
மழுந்து மேனியாற் றுகளினுக் காயிர வருடங்
கொழுந்து சூடுவார் கயிலையிற் குடிகளாயிருப்பார்

தங்கங் கனக மேருவரை தானங் கொடுத்தல் சதகோடி
மங்கு லளகக் கன்னியரை வளத்தி னளித்த லொருகோடி
துங்கந் தருகோ டுடைத்தீம்பாற் சுரபி வழங்கல் துலங்குசிவ
லிங்கந் தனையே தரிசித்தோர் தங்கள் பலத்துக்கிணை யாமால்.

காலைதொழ வற்றைவினைக் கட்டகலுங்கட்டுச்சி
வேலைதொழ விப்பிறப்பில் வெந்துயர்போ — மாலையினில்
வந்து சிவனுனை வந்தித்தா லேழ்பிறப்பின்
வெந்துயர மெல்லாம் விடும்.

இங்கனம் சிவாலய தரிசனம் செய்வதால் அபரமுத்தனுகிருன்.

நாடொறும் தவருமல் சிவாலய தரிசனஞ்செய்து வருவதால் பரிபக்குவ மடைந்து பதி பசு பாசம் என்னும் முப்பொருளுணர்ச்சியுற்று உலகபோகங்களின் அழிவை உணர்ந்து அதனின் வெறுப்புற்று இடைவிடாச் சிவசிந்தனையின் பயனுக முத்தி சித்திக்கும்.

"இம்மையேதரும் சோறும் கூறையும் ஏத்தலாம் இடர்கெடலுமாம் அம்மையே சிவலோகமாள்வதற்கு யாதுமையுறவில்லையே" என்ற சுந்தரரின் திருவாக்கின்படி சிவதரிசனம் இம்மையிலும் வேண்டியதைத்தந்து பிறகு முக்தியையும் கொடுக்கும்.

சிவாலய வழிபாடானது முக்திக்குச் சாதனம் என்றுமட்டும் நினைத்து முமுக்ஷுக்கள் மாத்திரம் தரிசனம் செய்வதில்லை. முக்தியடைந்தோரும் நன்றி செலுத்தும் முறையிலுமுள்ளது. அதனுல்தான் காணுங்கரணங்களெல்லாம் சிவகரண மாகப்பேணுமடியார்களெல்லாம் சிவஸ்தலங்கள்தோறும் சென்று சிவாலய தரிசனம் செய்து வந்தார்கள்.

ஆணவத்தால் மூடனுய்க்கிடந்த தன்னை அருள் கையாலெடுத்துத் தமது சிவானந்தானுவத்தைக் கொடுத்த கடவுளை வழிபடாவிடின் உய்தியில்லாததோர் பெரும்பிழை நேரும்,

எந்நன்றி கொன்ருர்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

என்பது தமிழ்மறை அல்லவா ?

ஆதலால் முத்தியின்பத்தை விழையுமவரன்றி அதனைப் பெற்ரேரும் சிவாலய தரிசனம் செய்யவேண்டும். அவர்களுக்கும் அது இன்றியமையாத செயலாகும்.

ஸ்ரீலஸ்ரீ கயிலை மகாசந்நிதானம் அவர்கள் ஆணையின்வண்ணம் எழுதிய இக்கட்டுரையை ஸ்ரீ சரபேச்வரருடைய பாதங்களில் சமர்ப்பிக்கிறேன்.



# சமயமும் இலக்கியமும்

" பைந்தமிழ்ச்செல்வர் "

திரு. ச. சிவகுமாரன் M. A.

மனித வாழ்க்கை இவ்வுலகத்தோடு முடிவடைந்து விடவில்லை; மேலும் தொடர்கிறது. நாம் இவ்வுடலை விட்டு நீங்கியபிறகு, நமது வினைகளுக்கேற்ப அருள் உலகத்திற்கோ அல்லது இருள் உலகத்திற்கோ செல்கிறோம். அருள் உலகம் துன்பமில்லாத நல்லுலகம், அங்குச்சென்று சேரவேண்டுமானால் நாம் இவ்வுலக வாழ்விலேயே நன்னெறியில் நின்று இறைவனின் திருவருளைப் பெற வேண்டும். இறைவனுக்கு அருளாளன் என்றே ஒரு திருநாமம் உண்டு; அவர் சிறப்பாகச் சாந்நித்தியம் கொண்டுள்ள ஒரு திருக்கோயிலுக்குத் " திருவருட்டுறை " என்றே பெயர். (திருவெண்ணை நல்லூர்த் திருக்கோயில்) சுந்தரமூர்த்தி சுவாமிகள் " பித்தாபிறை சூடி பெருமானே அருளாளா " என்று தமது இனிய தேவாரப் பாடல்களைத் தொடங்கினர்.

இந்த அருளை இவ்வுலகில் தக்க குருமுதல்வர் மூலமாகவும் ஆண்டவன் அருளுகிறன். ஆண்டவனே அருளுவது திருவருளென்றும், குருநாதன் மூலம் பெறுவது குருவருளென்றும் கூறப்படும். இவ்வாறு திருவருளும் குருவருளும் நமக்கு எய்தப்பெறுவதற்கு அடிப்படையாக அமைவது, இங்கு இப்பொழுதே நாம் வாழும் நன்னெறி வாழ்வாகும். நல்ல வழியில் பொருள் சம்பாதித்து நல்ல வழியில் பொருளைச் செலவு செய்து பொருளை அருளாக மாற்றியும், யாவரிடத்தும் அன்பாக இருந்து அன்பை அருளாக வளர்த்தும் வாழ்வோமேயானுல் திருவருளும் குருவருளும் இன்னும் எளிதில் கைகூடும். இத்தகைய அருள்வாழ்வு வாழும் நல்லோரே பின்னர் அருளுலகு சேர்கிறார்கள்.

" அருளிலார்க்கு அவ்வுலகமில்லை
பொருளிலார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு "

மனிதன் அருள்வாழ்வு வாழ்வதற்கான வழிவகைகளை வாழ்வு முறைகளை நன்ருகச் சமைத்துத் தந்த இலக்கியத்தைச் சமயம் என்கிறோம். சமய சம்பந்தமாக எழுந்த சாத்திர தோத்திரங்களையும் மற்றும் அருள் விசாரணை நூல்களையும், இலட்சியமுள்ள இலக்கண வரம்புக்கு உட்பட்ட சமய இலக்கியம் என்கிறோம்.

எந்தநாட்டில் வழங்கும் மொழியை எடுத்துக் கொண்டாலும், முதன் முதலில் ஒலி வடிவிலும் பின்னர் வரிவடிவிலும் வளர்ந்து, பல நூற்றுண்டுகட்கு முன்னரே உருவாகிய பெருநூல்கள் சமய இலக்கியங்களே யாகும். வேதம், ஆகமம், விவிலியம், கொரான், பாலி மொழி பௌத்த ஜாதகம், திருக்குறள் திருவாசகம் முதலியவை சமய இலக்கியக் கருவூலங்கள் ஆகும். தமிழ் ஆங்கிலம் இவற்றில் திருக்குறள் விவிலியநூல் இரண்டும் சுமார் இரண்டாயிரம்

ஆண்டுகட்கு முன்னர் முறையே தமிழிலும் ஹிப்ரூ மொழியிலும் வெளி வந்த வாழ்வு முறை நூல்களாகும். கிறிஸ்துபிரான் அருள்வாக்குகள் புதிய ஆகமம் என்று 1688-ல் இங்கிலாந்து மன்னர் ஜேம்ஸ் II காலத்தில் மீண்டும் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப் பட்டன; மொழிபெயர்ப்பாகிய இப் பதிப்பு ஆங்கில இலக்கியத்திலேயே தலைசிறந்தது என்பது உலகப்பிரசித்தம். தமிழ் மொழியிலும் சமயத்தை முன்னிட்டு இலக்கியம் தோன்றி வளர்ந்து பரவி மக்களை உய்வித்த வரலாறு மகத்தானது. திருமுருகாற்றுப்படை, ஆண்டாள் திருப்பாவை, திருப்பாவை வியாக்கியானங்கள், ஆழ்வார்கள் பிரபந்தம், நாயன்மார்கள் நால்வரின் தேவார திருவாசகம், சேக்கிழார் பெரியபுராணம். கம்பரது இராமாயணம், தாயுமானுர் பாடல், அருணகிரியாரின் திருப்புகழ், தருமையாதீனச் சிவபோகசாரம், திருப்பனந்தாள் குமரகுருபரர் பிரபந்தங்கள், திருவாவடுதுறை மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய தலபுராணங்கள், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம், பாம்பன் குமரகுரு தாச சுவாமிகளின் குமார சுவாமியம், சிதம்பரம் இராமலிங்க வள்ளலாரின் திருவருட்பா முதலிய அருள்நூல்கள் வழியாக சமயமும் இலக்கியமும் பின்னிக்கொண்டு வளர்ந்த வரலாறு மிகச் சுவையானது.

பண்டைக் காலந்தொட்டுக் கிழக்கிந்திய கம்பெனிகாலம் வரை இந்தியாவில் அச்சுவாகனம்-அச்சுத்தாள் வசதியின்மை காரணமாக, இலக்கியம் சாத்திரம் தோத்திரம் யாவும் ஓலைச் சுவடியில் எழுத்தாணிகொண்டு எழுதப் பெற்றன. எழுத்தாணிகொண்டு எழுதுவது இக்காலத்தில் உருளுமுனைப் பேனு கொண்டு எழுதிக் குவிப்பதுபோல அவ்வளவு இலகுவானதல்ல. மேலும் பல சுவடிகள் செல்லரித்துப் போகும். மீண்டும் அவற்றைப் பிரதி பண்ணுவது சிரமமானதாகும். ஒவ்வொருவரும் சுவடியெடுத்துப் படிப்பதைக்காட்டிலும், ஒருவர் படிக்கப் பலபேர் கேட்பதே பழைய வழக்கம்; கற்றலிற் கேட்டலே நன்ருக இருந்தது. கர்ண பரம்பரையாகப் பல நூற்றுண்டுகள் பல்லாயிரக் கணக்கான பாடல்கள் - ஸ்லோகங்கள் பாரம்பர்யமான குடும்பக்கலை விளக்காக விளங்கிவந்தன. அதிகாலையில் கல்வி பயிலுதல், ஞாபகசக்தி, அமைதி, இயற்கை யழகினை நன்கு நுகர்தல் முதலானவை பழங்காலப் பெருமைகள். மேற்கூறிய காரணங்களால் அண்மைக் காலம்வரை இலக்கியம் எதுகை மோனைகளோடு மனனம் பண்ணுவதற்கு வசதியாகச் சுருங்கச்சொல்லி விளங்கவைப்பதாகச் செய்யுள் வடிவில் வளர்ந்தது.

பதினெட்டாம் நூற்ருண்டு முதல் தற்காலம் என்றுகொள்ளலாம். காகிதம், அச்சுயந்திரம், யந்திரப் புரட்சியெனும் மேலைநாட்டு இயந்திர வளர்ச்சி. விஞ்ஞான நூதனங்கள், மின்சார வசதிகள் போன்றவை வாழ்க்கைச் சாதனங்களையும் வாழ்க்கை வசதிகளையும் வாழ்வு முறைகளையும் வெகுவாக மாற்றிவிட்டன சமயம், மொழி, நிறம், சாதி ஆகிய அடிப்படையில் ஏற்பட்ட வித்தியாசங்கள் குறைந்து, மனிதன் நேரத்தையும் தூரத்தையும் வென்றுவிட்ட காலத்தில் நாம் வாழ்கிருேம். சமயமும் இலக்கியமும், சமய இலக்கியமும் வடிவில் வசனமாகவும் கருத்தில் சமரசமாகவும் மாறி வருகின்றன. உதாரணமாகத் திரு. வி. க. அவர்களின் நூல்களையும் அவர்களது இரண்டாவது பெரியபுராணப் பதிப்பினையும் கூறலாம். அவ்வாறே டாக்டர்

சர். எஸ். ராதாகிருஷ்ணன் அவர்களின் "இந்திய தத்துவம்" "கிழக்கும் மேற்கும்" போன்ற நூல்களையும் அவர் பேருரைகளையும் குறிப்பிடலாம்.

சமய இலக்கியத்தில் மாறுதல்கள் எவ்வாறு தோன்றினும் அதன் அடிப்படை உண்மை மட்டும் மாருது; மாறுவதற்கில்லை. மனிதன் பணத்தாலோ, போகபோக்கியங்களாலோ மன அமைதி கொள்வதில்லை. வயது ஏற ஏறத் தனது அறிவிற்கும் உணர்விற்கும் அப்பாற்பட்ட, ஆனால் அன்பிற்கு எளியனை இறைவனையும் இறையருளையுமே தேடுகிறான்: நாடுகிறான். அதற்கு வழி காட்டும் வகையில் சமயமும், அம்முயற்சியைச் செப்பனிடுவதில் தத்துவமும், அவற்றை எடுத்துரைப்பதில் இலக்கியமும் பங்கு கொள்கின்றன.

"For Life, religion offers a belief, Phi'osophy a theory, literature an interpretation" - The Outlook for Literature by Thorudike.

பொருளாதாரத்துறையிலும் குடும்ப அமைப்பிலும் இந்த நூற்றுண்டில் விரைவில் பெருத்த மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. சுயநலமும் சந்தர்ப்ப சூழ்நிலைகளுமே முக்கியமானவையாகவும் பந்த பாசங்கள் கட்டுத் தளர்ந்தும் வருகின்றன. சமய இலக்கியங்களைக் கற்போரும், அவற்றின் பேருண்மைகளை இக்காலத்துக்கு ஏற்ற முறையில் எடுத்து விளக்குவோரும் குறைவாக இருக்கிறார்கள். இவற்றைப் பிறர் விரும்பிக் கேட்கும் வகையில் பிரசங்கிக்கக் கூடிய ஒருசிலர் சற்றுத் தாராளமாக முன்வந்து இலவசமாகக்கல்விதானம் செய்தால் நன்ருக இருக்கும். சமயப் பூசல்கள் மலிந்திருந்த காலத்தில் அமைப்புச் சமயம் (Ritualistic Institutional Religions) தேவைப்பட்டது. இப்பொழுது சமரச சமயம் அல்லாத சமயமே கூடாது என்கிற காலம்; இக்காலத்துச் சமயம் அன்பையும் அறிவையும் இருகண்களாகக் கொண்டதாக இருக்க வேண்டும். இத்தேவைகளை ஏற்கனவே சைவ சமய இலக்கியங்கள் புராணங்கள் பூர்த்தி செய்கின்றன. இவற்றைப் படித்துப் பிரசங்கிக்கத் தன்னலமற்ற பொருள் வசதியுள்ள கல்விகற்ற இளைஞர்கள் முன்வர வேண்டும்.

தேசிய சுதந்திரம் பெற்றுப் பொருளாதாரச் சுதந்திரத்திற்கும் பெருமுயற்சி செய்து வரும் இக்காலத்தில் உலகப் பொது நோக்குப் பற்றியே எங்கும் பேசப்படுகிறது. ரஷ்ய அமெரிக்க வல்லரசுகளே யுத்தமின்றி வாழவேண்டுமென்று ஒப்பந்தம் பேசுகின்றன. இந்தச் சூழலில், உலகப் பொது நோக்குடைய சைவ சமய இலக்கியம் ஆங்கிலத்திலேனும் நன்கு மொழி பெயர்க்கப்பட்டு உலகம் முழுவதும் பரவினல் யாவரும் நலம் பெறுவர்.

"உலகம் உவப்ப வலன் ஏர்பு
திரிதரு"
"உலகெலாம் உணர்ந்து ஓதற்கு
அரியவன்"
"உலகம் யாவையும் தாம் உள
ஆக்கலின்"

என்றல்லவா தமிழ்ச் சமய இலக்கியம் பேசுகிறது. இத்தகைய சமரச இலக்கியமே சிறந்தது. சமயமும் இலக்கியமும் மனித சமுதாயத்திற்கு இரு கண்களாகும்; இவற்றை நாம் போற்றி வளர்ப்போமாக.

"The Literature which through so many paths and against so

many obstacles continues to search for a philosophy which continues to ask guidance and faith in human progress and which continues to adjust its conception to a changing world will seem to them likely to continue in the future as in the past a vessel of revelation, bearer of that light which Lighteth the world."

Literature in a changing Age.

— Ashley H. T

தென்னுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி



யோகம் என்பது மன ஒருமைப்பாடு. கடவுளோடு உயிர் இணைந்து இருக்கும் தன்மையே யோகம். பேரொளியாகிய நித்தியப்பொருள் ஒன்ருேடு உயிரொளியாகிய நித்தியப் பொருள் இணைந்து இருப்பதே யோகம்.

* * *

சித்திரத்தைக் கண்டவுடன் சிற்பியின் ஞாபகம் வருவதுபோல, அதியற்புதமான இந்தச் சிருஷ்டி அற்புதங்களைக் கண்டவுடன் செய்தவன் ஞாபகம் வரத்தானே வேண்டும்?

* * *

மாற்றம் காணு இடத்தில் மகிழ்ச்சி ஏது? உண்டதையே உண்டு, கண்டதையே கண்டு, உடுத்ததையே உடுப்பதில் உலகம் மகிழ்கிறதா? பரிணுமத்தில் அல்லவா களிப்பைக் காண்கிறது!

* * *

உடல் பெற்ற பயன் ஏது? பெருமானை வணங்குதல்; கண்ணுல் தரிசித்தல்; வாயால் அவன் புகழைப் பாடுதல்; கால்களால் வலம் வருதல். இக்காரியங்கள் இலேசான காரியங்களல்லவா? இதற்குச் சிரமம் வேண்டுமா? இவைகளைச் செய்வதால் வரும் பெரும் பயன் தான் திருவருள்.

— கயிலைக் குருமணி.

# தணிகைப் புராணத்தில் கோவை இலக்கியம்

வித்துவான். திரு. செ. வேங்கடராமச் செட்டியார்

மலைகளில் தலைசிறந்து நிற்கும் இமயம்போலத் தலபுராணங்களில் தலைசிறந்து நிற்பது தணிகைப்புராணம். கவிச்சக்ரவர்த்தி என்றும் கவிராட்சசன் என்றும், கௌடப்புலவன் என்றும் பாருளோர் புகழப் பதினெட்டாம் நூற்றாண்டில் பைந்தமிழ்ப் புலமை நடாத்திய உச்சிமேல் புலவர்கொள் கச்சியப்ப முனிவரே இத்தணிகைப் புராணத்தை ஈடும், எடுப்பும் இன்றி இயற்றியருளிய கவிஞர் ஏறு ஆவர். ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பிய நூலின் நுட்பங்களையும் பொய்கண்டார் காணாத மெய்கண்ட நூல்களின் மேம்படு நுட்பங்களையும் சங்க இலக்கியங்களின் சால்புடைக் கருத்துக்களையும் ஒரே நூலில் விளங்கக் கண்டு மகிழவேண்டுமானால் தணிகைப் புராணத்தையே நாடுதல் வேண்டும். மூவாயிரத்து நூற்றறுபத்தொரு செய்யுட்கள் அடங்கிய இப்புராணத்தை இத்தகு சிறப்புக்களோடு இயற்றக் கச்சியப்ப முனிவர் மேற்கொண்ட முயற்சியும் ஆராய்ச்சியும் மிகப்பெரியன என்பதை இந்நூலைப் படிப்போர் நினையாமல் இருக்க இயலாது. தணிகைப் புராணத்தை ஊன்றிப் படிப்போர்க்குக் கச்சியப்ப முனிவர், கற்பனைக் களஞ்சியமாய், இலக்கணக் கடலாய், சைவசித்தாந்த சாத்திரச் செம்மலாய், சங்க நூற்கடலை அள்ளிப்பருகிய துங்கச் செந்தமிழ்ப் புலவராய்க் காட்சியளிக்கின்றார் என்றால் அது புனைந்துரை ஆகாது. புலமை நுட்பங்களைக் கண்டு மகிழும் ஆர்வமிக்க தமிழ்ப்புலவர்க்கு இத்தணிகைப் புராணம் ஆராஅமுதாய் அமைந்து இன்புறுத்தவல்லது.

கச்சியப்ப முனிவர் இத்தணிகைப் புராணத்தில், சைவசித்தாந்தக் கருத்துக்களை நந்தி உபதேசப் படலத்திலும், புறத்திணைத் துறைகளைச் சீபரிபூரண நாமப் படலத்திலும், அழகுற அமைத்து விளக்கியது போலவே, அகத்திணைத் துறைகளைக் கோவைப்படுத்திக் களவுப் படலத்தில் அமைத்துத் தம் புலமைத் திற முழுமையும் தோன்ற விளக்கியுள்ளார். கந்த புராணம் இயற்றிய கச்சியப்ப சிவாசாரியார் வள்ளியம்மை திருமணத்தில் சில அகப்பொருள் துறைகளை அமைத்து விளக்கியுள்ளமை கண்ட கச்சியப்ப முனிவர் அவரைப் பின்பற்றித் தம் தணிகைப் புராணத்திற்கு மிகவும் இயைபுள்ள அவ்வள்ளியம்மை திருமணத்தைக் கூறுங்கால் அதற்கு முன்னதாகக் களவுப்படலம் என்று ஒரு படலம் அமைத்து அதில், காட்சிமுதல் உடன் போக்கில் நற்றாய் கிளத்தல் வரையில் ஐந்நூறு துறைகளுக்கு மேலாக நிரல்பட விரித்துக்கூறி ஒரு கோவை இலக்கியத்தையே நுழைத்துவைத்திருக்கின்றார். அகனைந்திணைக்குத் தலைவன் தலைவியராக மலைவாழ்நராகிய குறவனையும் குறத்தியையும் படைத்துக் கொள்ளுதல் தமிழ்ப்புலவர் மரபு. அவ்வாறு படைத்துக்கொள்ள வேண்டாது இயல்பாகவே குறமகளாகிய வள்ளி தலைவியாகவும் குறிஞ்சிக் கிழவஞ்கிய முருகவேடன் தலைவனாகவும் இப்புராணத்தில் வாய்த்திருக்

கும்போது கற்பனையிற் சிறந்த கச்சியப்ப முனிவர் அகப்பொருள் துறைகளைக் கோவைப்படுத்திக் கூருது விடுவரோ? மேலும் இறைவனாகிய முருகனும் அவ் விறைவன்பால் தலைப்பட விரும்பிய ஆன்மாவாகிய வள்ளியும் இயைகின்ற தூய்மையான தெய்வக்காதலை உணர்த் தும் பகுதியே இவ்வள்ளியம்மை திரு மணம் ஆதலின் அதனைத் தம்புலமைத் திறமெல்லாம் தோன்ற, கவிநலங்கள் எல்லாம் பொதுள அழகுற விரித்துரைத் திருக்கின்ருர்.

திருக்கோவையார் முதலிய கோவை இலக்கியங்களில் களவொழுக்கமும் கற் பொழுக்கமும் சேர்த்துப் பெரும்பாலும் நானூறு துறைகளே கூறப்படுகின்றன. களவொழுக்கத்தில் உடன்போக்கு வரை யில் துறைகள் அமைத்துக்கூறும் இக் களவுப் படலத்தில் ஐந்நூறு துறை கட்கு மேலாகக் கூறியிருத்தல் வியத்தகு செய்தியாகும். கோவைத் துறைகட்கு இடையிடையே புராணமும் விரவிவரு கின்றது. தலைவன் தலைவியர் பெயரை அப்புராணப் பகுதியில் மட்டுமே காண லாம். கோவைத்துறைகள் கூறும்வழித் தலைவன் தலைவியர் பெயர்களைக் கூருது அகப்பொருள் மரபைக் காத்துச் செல்லு கின்ருர்.

கச்சியப்பமுனிவர் கவினுறப்புனைந்த இக்கோவை இலக்கியத்தில் தலைவனும் தலைவியும் தோழியும் சைவ சித்தாந்த சாத்திரம் வல்லுநராய், நுட்பங்களை இணையின்றித் தெளிந்தவராய்ப் பேசும் பேச்சுக்கள் தனிச் சிறப்புடையவாகத் திகழ்கின்றன. சில காண்பாம். தலைவன் தலைவியின்கண்களைப் பாராட்டுகின்ருன். அதைப் பொருத தலைவி நாணித் தன் கைகளால் கண்களை மூடிக்கொள்ள முயலுகின்ருள். ‘நாண்ட மழைக்கண் வாணுதல் புதைத்தல் என்று நிகழ்சிக்குத் துறைகூறுவர். ஒருவர் துன்புறும்போது அவரோடு நெருங்கிய தொடர்புடை யோரே துணையாய் நின்று அத் துன் பத்தைப் போக்குவர். இது உலகியல். தலைவியின் கண்கள், தம்மைப்பாராட்டிய தலைவனைக் காணவும் நாணி வருந்து கின்றன. அக்கண்களின் துன்பத்தைத் துடைத்துத் துணையாதற்குரியன கைகளே எனத் தலைவி அக்கைகட்குச் சொல்லுகின்ருள். மற்ற உறுப்புகளுக்கு இல்லாத தொடர்பு கண்ணெடு கை களுக்கு மட்டும் எப்படி உண்டாயது? என்ற கேள்வி நம்முள்ளத்தில் எழுகின்ற தன்ருே? அதற்குவிடை தலைவி சொல்லு கின்ருள்.

“ ஒலிதழற் பூதத் தொளிர்விழி
யோடுனக் கொற்றுமையான்
மெலிதரு காற்றுணை வேருர்
நினையன்றி மென்கரமே ”

(களவுப்-94)

என்று கையையே விளித்துச் சொல் போது அவ்வுறவுக்குக் காரணத்தையும் சுருக்கமாக விளக்கிவிடுகிருள். மெல்லிய கையே! நெருப்பாகிய பெரும்பூதத்தின் இடமாகத் தோன்றி ஈதலும் ஏற்றலும் செய்யும் உனக்கு நெருங்கிய ஒற்றுமை உண்டு; ஆதலான், அந்தக் கண் மெலிந்து துன்புறும்போது அதற்கு நினையன்றி வேறுயார் துணையாவர்? சொல் (எனவே அக்கண்களை மறைத்து அதன் மெலிவை நீக்குக) என்பது கருத்து.

கண்ணும் கையும் நெருப்பாகிய பூதத்தின் இடமாகத் தோன்றியவை என்னும் கருத்துச் சித்தாந்த சாத்திரத் தில் உண்மை விளக்கம் என்ற நூலால் விளக்கம் பெறத்தக்கது. “பார்வையிற் கண் அங்கி விரவி உருவங்காணுமே”

(12) என்றது காண்க. ஞானேந்திரியங்களில் கண் நெருப்பிலிடமாக நின்று உருவங்களைக் காணும் என்பது கருத்து. 'அனல் — ஏற்கும் இடும்கை' (15) என்பதால் கை, நெருப்பிடமாக நின்று ஈதலும் ஏற்றலும் செய்யும் என்பது புலனும். இங்குக்கூறிய . சித்தாந்தக் கருத்தை உணர்ந்தவள் தலைவியாதலின், தன்கையை விளித்து இவ்வாறு கூறலானுள். இதனுல் கண்ணும் கையும் தோன்றிய இடத்தால் ஒற்றுமையுடையன என்பது புலனுயிற்று. இவ்வுண்மை விளக்கக் கருத்தை உணர்ந்தாலன்றி அச்செய்யுளின் முதலடிக்குப் பொருள் விளக்கம் பெருது என்பது தெளிவு.

தலைவன் தோழிபாற் சென்று தலைவியைத் தன்னெடு சேர்க்குமாறு வேண்டத் தோழி, 'தலைவி இழிந்த குலத்தவள் ஆதலின் உயர்ந்த குலத்துத் தலைவனுகிய நீ அவளை விரும்புதல் பொருந்தாது' என்று தடுக்கத் தலைவன், அவள் உயர்ந்தவளே என்று கூறி வற்புறுத்துகின்ருன். அப்பொழுது தோழி, 'எங்குலம் இழுக்கும், என்று' தலைவனை அகற்றுகின்ருள். "அரைமாத்திரை ஓசையுடைய குற்றியலுகரம் தனக்கு முன்னும் பின்னும் வல்லினம் குறுக நின்னுல் — வன்றெடர் குற்றியலுகரம் வல்லெழுத்தோடு சேருமாயின் — முன்புள்ள அரைமாத்திரையினுங் குறைந்து கால்மாத்திரை யுடையதாகும்; அது போல உயர்குலத்தவனுகிய நின்னேடு எம் குறமகள் இணைவது பொருத்தமே என நீயும் நின்னேடொத்த உயர்ந்த குலத்தவனுகிய இந்திரன் முதலியவர்களும் எண்ணினுலும் இயல்பாகவே குறைந்துள்ள எம் குன்றவரின் வளம் வாய்ந்த குறக்குலம் மேலும் குறைவுறும்; பழிச்சொல்லும் உண்டாகும்; ஆதலால் எம் குலமகளை விரும்பாதே" என்கின்ருள். .

"குன்றிய லுந்தொடர் வல்லின
முன்பின் குறுகநிற்பிற்
குன்றுவ துள்ள வளவையி
னின்னெடு கோற்றெடியைக்
குன்றிற கீர்த்தவன் ணுதியர்
நன்கு குறிக்கினுமெங்
குன்றவர் வன்குலங் குன்றுவ
புன்சொற் கொழுந்தெழுமே"

என்பது அக்கருத்துடைய செய்யுள். 'உப்புக்குறைவு' என்ற சொற்றெடர் முன்பின் வல்லினம் குறுக நின்ற குற்றியலுகரத் தொடராகும். உப்பு என்பதில் உள்ள வன்றெடர்க்குற்றியலுகரம் அரை மாத்திரை ஓசையேயுடையது; அதற்குப் பின்னும் வருமொழியில் குறைவு என வல்லினம் வந்தமையால் 'பு' என்பது முன்புள்ள அரை மாத்திரையினும் குறைந்து கால் மாத்திரையுடையதாயிற்று. இதற்கு விதி,

"இடைப்படிற் குறுகு மிடனுமாருண்டே
கடப்பா டறிந்த புணரிய லான"

(தொல். எழுத்து 37.)

"வல்லொற்றுத் தொடர்மொழி
வல்லெழுத்து வருவழித்
தொல்லை யியற்கை நிலையலு
முரித்தே"

(தொல் எழுத்து 409)

என்ற நூற்பாக்களால் பெறப்படும். கொக்குக் கடிது, கொக்குக் கடுமை என அரைமாத்திரையிற் குறைந்தவாறு, குரங்கு கடிது என்பது முதலியவற்றேடு படுத்துச் செவி கருவியாக உணர்க' என்ற நச்சினர்க்கினியர் விளக்கமும் இங்கு நினையத்தகும். இதனுல், தோழி, தொல்காப்பிய நுட்பங்களை நன்குணர்ந்து இலக்கணப் புலமை நிரம்பியவளாகக் காட்டப்படுவது காணலாம்.

இவ்வாறு இலக்கண நெறியால் தன் வேண்டுகோளை மறுத்துக்கூறிய தோழியை மறுத்துக்கூறித் தன் கருத்தை நிறுவும் தலைவனும் இலக்கண நெறியையே எடுத்துக்காட்டித் தன் இலக்கணப் புலமையைப் புலப்படுத்தியுள்ள திறம் பாராட்டுதற்குரியதாகும். பெயர், வினை, இடை, உரி எனத் தமிழில் சொல் நான்குவகைப்படும். அவற்றுள், பெயரும் வினையும்தனித்து நடக்கும்சிறப்புடையன. மற்றைய இரண்டும் தனித்து நடக்கும் சிறப்புடையன அல்ல. "சிறப்பில்லாத இடைச்சொல்லும் உரிச்சொல்லும் சிறப்புடையனவாகிய பெயர்ச்சொல்லையும் வினைச்சொல்லையும் சார்ந்தமையால் குறைவுருமல் சிறப்புப்பெற்று இனிது இயலும். அவற்றைப்போல நும்முடைய குறவர்குலம் குறைவுடையதாயினும் உயர்ந்த குலத்தினமாகிய எம்மால் உயர்வினையே எய்தும் ஆதலால் நின் தலைமகளை யான் விரும்புதல் தக்கதே' என்கின்ருன் தலைவன்.

பெயர்வினை சேரி னிடையுரி யாங்கும்
பிறங்கெழில் வாய்ந்
தயர்வினை யெய்தா தினிதியலா
நிற்கு மாரணங்கே
மயர்வினை தீர்த்தருள் வீராட்ட
காசத்தெம் மானருளால்
உயர்வினையே நுங்குல மென்று
மெம்மாலுறுவதுவே.

என்பதே அச்செய்யுள். 'பால்போலும் இன்சொல்' என்புழிப்போலும் என்ற இடைச்சொல்லும் 'நனிபேதை' என்புழி நனி என்ற உரிச்சொல்லும் பெயர்ச் சொற்களைச் சேர்ந்தமையால் பொருள் சிறப்புடையவாய் அழகுடன் விளங்குதல் காணலாம். இலக்கண நுட்பங்களைக் கொண்டு உரையாடும் இவ்விளையாட்டு, புலவர்க்கு விருந்தாய் அமைந்து இன்புறுத்தல் காணலாம்.



உயிர்கள் வாழ்வதற்காகவே உலகம் ஆக்கப்பெற்றது என்பது எவர்க்கும் புலனுகும். உலகம் தானே தோன்றியது அன்று. உலகம் அறிவில்லாதது; சடப்பொருளாகும். அதனல், அவ்வறிவில்லாதவொன்று ஆவதும், இருப்பதும், அழிவதும் உடையது. அது ஆக்கவும், காக்கவும், அழிக்கவும் படுவது. ஆதலால் உயிர்களாகிய நம்முடைய தேவைக்குத் தக்கவாறு இப்படி ஆக்க, காக்க அழிக்க வல்ல ஒரு தலைவன் இருக்கத்தானே வேண்டும்? அவனே கடவுள்.

— கயிலைக் குருமணி.

# தருமையாதீனப் பண்டாரசாத்திரங்கள்

" திருநெறிச்செம்மல் "

வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர்

பண்டாரம் என்ற சொல் மிகப் பழமையானது. கருவூலம் என்ற பொருளை உணர்த்தும் இச்சொல் சங்ககால இலக்கியமாகிய பரிபாடலிலும் அருமையாக எடுத்தாளப் பெறுகிறது. பொருள்களைச் சேர்த்துச் சேமித்து வைக்கும் இடத்திற்குப் பண்டசாலைகள் என்று வழங்கும் வழக்கு இக்காலத்திலும் உண்டு. பண்டசாலை பண்டகசாலையாக மாறி வழங்குகின்றது. அதுபோல இச் சொல் ஞானநுபவங்களைத்தேக்கி வேண்டும்போது அவ்வவர் தகுதிக்கேற்றவாறு வழங்கும் அறிவுக் களஞ்சியத்தை உணர்த்திப் பின்னர் அறிவுக்கருவூலமாக விளங்கும் ஆசாரியப் பெருமக்களுக்கும் வழங்குவதாயிற்று. பண்டம் - ஆரம் என்ற இரு சொற்களின் கூட்டமே பண்டாரம் என்பதாகும். பண்டம் - ஞானம். ஆரம் - ஆர்தல்; நிறைதலை உடையது. என்ற பொருளைத் தருவது இச்சொற்றொடர். மணிவாசகர் இறைவனை "மூலபண்டாரம்" என்று வழங்குவதையும் நினைவு கொள்ளுதல் வேண்டும்.

ஞானக் கருவூலங்களாக விளங்கிய ஆசாரியப் பெருமக்கள் சிவாநுபவ நிலையிலிருந்து பரிபாகமுற்ற சீடர்களுக்குக் கூறிய உபதேசங்களே பண்டார சாத்திரங்கள் எனப்படும். இச் சாத்திரங்கள் வேத சிவாகமங்கள், சித்தாந்த சாத்திர தோத்திரங்கள் இவற்றின் பிழிவாகவிளங்குபவை. இம்முறையில்தருமையாதீனத்தைநிறுவியமுதற்பெருங்குரவர் ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிகர் முதலாகப் பின்னர் அவர்கள் வழி எழுந்தருளிய ஆசாரியப் பெருமக்கள் அருளிச் செய்த உபதேச நூல்கள் அனைத்தும் பண்டார சாத்திரங்கள் எனப்படும்.

தருமையாதீனப் பண்டார சாத்திரங்களில் ஸ்ரீ குருஞானசம்பந்தப் பெருமானால் அருளிச் செய்யப்பெற்ற நூல்கள் எட்டு. அவையாவன:- சிவபோகசாரம், சொக்கநாத வெண்பா, முத்திநிச்சயம், திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல், சோடசகலாப் பிராசாத ஷட்கம், சொக்கநாதக் கலித்துறை, பண்டாரக் கலித்துறை, நவரத்னமாலை என்பனவாகும்.

1. சிவபோகசாரம்

இந்நூல் பதினெண்சித்தர்க் கோவையிலும் மற்றும் பல நூல்களிலும் இணைக்கப்பெற்றுத் தமிழ்மக்களால் விரும்பிப் பயிலும் நூலாக இருந்துவருகின்றது. தருமையாதீனப் பண்டார சாத்திரங்களில் மிக மேலான நூலாக மதிக்கப் பெறுவது. மக்கள் மனம் பண்படவும் பக்திநெறியில் செல்லவும் இந்நூற் பாடலில் ஒன்றே போதுமானது என்பதைப் பயின்றவர் அறிவர். இந்நூல் பயிலுதற்குச் சில தகுதிகள் முதலில் தேவை.

இறைவன் திருவருளைப் பெறுதற்குரிய வேட்கை யிருக்கவேண்டும்.

பிறப்பு துன்பம் தருவது; வீடுபேறு ஒன்றே இன்பம் தருவது; என்ற உணர்வும் பிறவித் துன்பங்களுக்கு ஏதுவான வினையை நீக்கிக் கொள்ளுதற்கேற்ற முயற்சியும் அதனால் பேரின்பத்தைத் தரும் சிவாநுபூதி நிலையை அடைதற்கண் வேட்கையும் உடையவராய் விரைய வந்தடையும் தீவிரதர பக்குவிகட்கு இந்நூல் உரியது என்று ஸ்ரீகுருஞானசம்பந்தரே கூறுகின்றார்.

பிறப்பொழிக்கும்வழி, நிலையாப் பொருளுணர்ச்சி, திருவருட் பேற்றின் தடைகள், குருவின்பெருமை, சிவபோகம் முதலிய பல்வகைப் பொருள்களை இந்நூல் எடுத்துக்கூறிச் சிவாநந்த சாகரத்துள் ஒன்றும் இரண்டு மறத்தோயும் சிவபோகச் சிறப்பைச் சாரமாக எடுத்துக் கூறுவதால் சிவபோகசாரம் எனப் பெயர்பெற்றது.

இந்நூலில் குருஞானசம்பந்தரது உபதேச மொழிகளாக உள்ளனவற்றுள் சிலவற்றைச் சிந்திப்போம்.

யாவர்க்கும் அவரவர் வினைக்கு ஈடாக முன்னே அமைந்துகிடக்கின்ற நன்மை தீமைகளை வைத்து அவ்வவர்க்கும் இறைவனே நன்மை தீமைகளைச் செய்தலால் உலகத்தில் நல்லவர் பொல்லாதவர் என்று யாரையும் எண்ணுதல் கூடாது. நன்மை வரும்போதும் கேடு வரும்போதும் எல்லாம் சிவன்செயல் என்றே இருக்கவேண்டும். சிவ - 73

உலகம் கனவுபோன்றது. அதில் பற்றுவைத்தலை விட்டுப் பரத்தில் அன்பு செய். சிவ - 107

'தேசம், ஊர், பேர், காணி, சீர், வரிசை, சாதியென்று ஆசையால் நெஞ்சே அலையாதே'

'இருவர் அறியாத ஈசன் அருளல்லால் ஒருவர் துணையுண்டோ உரை' சிவ - 114.

உடம்பு - சிறை, கரணங்கள் - காவலர். உலக போகங்கள் - தண்டனை. உயிர் - கைதி. விடுதலை அளிப்பவன் - இறைவன். சிவ - 118.

கற்க இடர்ப்பட்டுக் கற்ற எல்லாம் கற்றவர்பால், தர்க்கமிட்டு நாய்போலச் சள்ளெனவோ நற்கருணை வெள்ளம் அடங்கும் விரிசடையார்க்கு ஆளாகி உள்ளம் அடங்க அல்லவோ. சிவ - 128

நீதியற்ற மன்னவராலும் நாடு, நெற்றியில் விபூதி இல்லாதவர் செய்யும் தவம், இறைவன் திருவடி அறியாத ஆசான், கல்வியில்லாதவர் ஒழுக்கம் - இவைகளை விழலென நீக்கிவிடு. சிவ-130

பரபரக்காதே, அமைதியாக எதையும் ஆராய்ந்தறி. ஒருவருக்கும் தீங்கு எண்ணாதே, செய்நன்றி மறவாதே" சிவ - 132

தில்லை, திருவாரூர், மாயூரம் போன்ற சிவதலங்களை யாத்திரை செய்து தரிசனம் செய் அல்லது இங்கு எல்லாம் இறைவன் எழுந்தருளியுள்ள அருமையை எண்ணி அத்தலத்தின் பெயர்களை யாவது சொல் முத்திதானே கிடைக்கும். சிவ - 139

ஆசையை அகற்று, சிவபூசைசெய், திருவைந்தெழுத்தை எண்; சினம் தவிர், திருமுறைகளை ஓது. சிவ - 138.

இவ்வாறு சிவபோகசாரம் இறைவன் திருவருள் பெறுதற்குரிய எல்லா வழிகளையும் உபதேசவாயிலாக உணர்த்துகின்றது.

## உ. சோக்கநாதவெண்பா

இதுகுருஞானசம்பந்தர் ஆன்மார்த்த மூர்த்தியாகிய சொக்கலிங்கப் பெருமான் மேல் பாடியருளிய தோத்திர நூலாகும்.

வறியவர் செல்வர் என்ற வேறுபடு கருதாது இருவரையும் காத்தல் மன்னவன் கடமை. தென்பாண்டி மன்னனுகை நாடாண்ட சொக்கேசன் அறிஞர்களை மட்டும் ஆட்கொள்வது நீதியா என்று நீதிக்கு வாதாடும் காட்சி அறிவிற்கு விருந்தளிக்கிறது. (சொக்-6.)

நோய்கண்டவர்கள் உதவிக்கு மருத்துவரை அழைப்பர். மருத்துவரும் நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும் வாய் நாடி நோய் நீக்குவர். பிறவிப் பெருநோய் போக்கும் மருத்துவனுகிய இறைவன் எத்தனை முறை அழைத்தும் இவர்பால் வந்தாரில்லையாம். மருத்துவரும் கருணையில்லாதவர் இல்லை. பன்றிக்குட்டிக்கும் பரிவுகாட்டிய பண்பினர் தன்னிடத்துமட்டும் இவர் தயவு காட்டாதது ஏன்? என்கிருர்.

" நோயாய் வருந்திஉனை
  நூறுதரம் கூப்பிட்டால்
நீயாரெனு திருக்கை
  நீதியோ—தாயாய்
அலைகொடுத்த கேழல்
  அருங்குழவிக்கு அன்று
முலை கொடுத்தாய்
  நீயலவோ முன் " (சொக் 57.)

உள்ளம், உரை, உடல் மூன்ருலும் இறைவனைப் பக்தி செய்யவேண்டும். இவைகளை உண்மையில் இயக்குவது நம் உயிரல்ல. இவற்றை இயக்குபவன் இறைவன்தான்.

" மூன்று கரணங்களும் தீயவழிகளில் செல்வதற்கும் அவன் தானே காரணமாவான். ஆலவாய் இறைவனே ! என் கருவி கரணங்களை நல்வழியில் செலுத்தி எப்போது எனக்கு முத்தி சித்திக்கச் செய்யப் போகிருய் " என்று கேட்கிருர்.

" வாக்கில்உரை பொய்யே
  மனம்நினைப்ப தும்கவடே
ஆக்கைதினம் செய்வது
  அகிர்த்தியமே—நோக்கில்
திரிவிதமும் இப்படி நீ
  செய்வித்தால் முத்தி
தருவிதமென் சொக்கநாதா."

(சொக். 41.)

குருஞானசம்பந்தர் கேட்கும் சில வரங்கள் நாம் கேட்பனவாக உள்ளன. " ஆபாதகன் என்று நீக்காது என்னை அருளில் ஆண்டருள். பேசா அநுபூதி பிறக்க எனதுளத்தில் ஆசாபசாசை அகற்று. இறந்தும் பிறந்தும் இளைத்தேன். மறந்தும் பிறவா வரம்தா. உனக்குப் பணிசெய்ய உன்றனை எந்நாளும் நினைக்கவரம் எனக்கு நீதா" :—

" பேரன்பன் அல்லன்
  பிழைசெய்யான் தானல்லன்
ஓரன்பும் இல்லா
  உலுத்தனேன்—பேரன்பு
காட்டிஎனைக் காட்டிஉனைக்
  காட்டிஇன்பத் தொட்டிலிலே
ஆட்டிவளர் சொக்கநாதா."

(சொ. 68.)

## 3 முத்திநிச்சயம்

சிதம்பரத்திலிருந்த கண்கட்டி மறைஞான பண்டாரம் என்னும் சைவப் பெரும்புலவர் " விடுபெற்ற உயிர் தன் இன்பமே நுகரும் சிவானந்தம் நுகர்தல் இல்லை " என்ற முடிவைக்கொண்ட

முத்திநிலை என்றொரு நூல் இயற்றினர். அதை மறுத்து ஸ்ரீ குருஞானசம்பந்தர் எழுதிய நூல் முத்திநிச்சயம்.

" வேதாகமத்தின் விதித்தமுத்தி
தானன்றி
நீதானே இன்பமென்றல்
நீதியோ "

என்று அறியாமையால் எழுந்த கருத்து நீதிக்கு மாருனதென இடித்துரைத்து வேதாகம நீதிக்கு மாருகாத முத்தியைப் 'பெறுவான் நீ பேறு ஆனந்தம்' என்றுணர்த்திய நூல் இது.

" உற்றபர மாநந்தத்து
ஒன்ருய் அதில்உறங்கி
முற்றுவதே முத்தி
முடிவு "

என்றும்,

" உள்ளமலம் நீங்கி
ஓங்கு சிவானந்த
வெள்ளம் திளைத்துஅதுவாய்
மேவுதலே—கள்ளவிழ்பூங்
கொத்தார் விரிசடையார்
கூறு சிவாகமத்தில்
சித்தாந்த முத்தியெனத்
தேறு "

என்றும் முத்திநிச்சயம் உரைக்கப்படுகிறது.

## 4. திரிபதார்த்தருபாதிதசகாரியம்

முப்பொருள்களாகிய பதி பசு பாசம் என்பவற்றின் உருவம் முதலிய பத்துக் காரியங்களை உணர்த்தும் நூல். பாச தசகாரியம் :- சுபாவம், வியாத்தி, வியாபகம், குணம், விசேடம், ரூபகம், ரூபம், சொரூபம் தரிசனம், சுத்தி. பசு தசகாரியம் :- மேற்கூறிய வற்ருேடு லாபம் என்ற ஒன்று சேர்த்துக் கொள்க. பதி தசகாரியம் :- மேற்கூறியவற்றில் சுத்தி, லாபம் என்ற இரண்டை நீக்கி வியோகம் போகம் கூட்டுக.

மற்ற தசகாரிய நூல்களுக்கு இல்லாத தனிச் சிறப்பு இந்நூலுக்கு உண்டு. ஏனைய நூல்கள் உண்மை என்பதை ரூபம் என்றும் பதிகாரியத்தில் சுத்தி என்றதைச் சிவபோகம் சிவ யோகம் எனவும் கூறுகிறது இந் நூல்.

## 5. சோடசகலாப்பிராசாதஷட்கம்

யோக நெறிக்கு இது மிகச் சிறந்த நூல். பிரா - சிவஞானம். ஸா - கதி. தம் - தருவது. சிவஞான கதியாகிய மோக்ஷத்தைத்தரும் ஆறு பாடல்களை உடையது. ஷோடச கலைகள் - பதினறு கலைகள். பிராசாதம் கலா பேதவகையால் பஞ்சகலாப் பிரசாதம், அஷ்டகலாப் பிராசாதம் நவகலாப் பிராசாதம். துவாதசகலாப் பிராசாதம், சோடசகலாப் பிராசாதம் என ஐந்து வகைப்படும். அகாரம், உகாரம், மகாரம், விந்து அர்த்த சந்திரன் நிரோதினி, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபினி, வ்யோம ரூபிணி, அநந்தை, அநாதை, அநாசிருதை. சமனை, உன்மனை என்னும் பதினறு கலைகளின் இயல்புகள் விரித்து வைக்கப் படுகின்றன. இக்கலைகள் நாபி முதல் தலைக்கு மேலும் பன்னிரண்டங் குலம் இருந்து விளங்கும்.

தருமையாதீனத்தில் குருவருளால் இக்கலைகளைப் பயின்றவர் முறையே தங்கி நிட்டை புரிந்த இடம் பதினெருடுக்கம் என விளங்குகின்றது

## 6 சோக்கநாதர் கலித்துறை

கண்ணுக்கினிய பொருளாய்க் குருஞானசம்பந்தர் திருக்கையில் சொக்க

நாதப் பெருமான் கிடைத்த பொழுது சொல்லியருளிய தோத்திரம்.

ஆதாரம் உன்னையல்லால் ஆருளர், துக்கசாகரத்தில் மூழ்கிய என் தலை விதியை மாற்றி ஆனந்த சாகரத்துள் அழுத்துக, எல்லாம் சிவன் செய லாதலின் என் செயலாவது யாதொன்று மில்லை, என்று கூறும் பாடற்பகுதிகள் கல்மனங்கரைக்கும் அருட்கவிதைகள்.

7 ஞானப்பிரகாசமாலை

பண்டாரக் கலித்துறை எனவும் வழங்கப் பெறுவது. ஸ்ரீ குருஞானசம் பந்தர் பக்திக்குச் சான்ருக விளங்குவது.

குருஅடி பேரார் கருவடி சேரார், குருவேசிவமெனக் குறியார்க்கு நரகு, குருவருள் எதிரே கருஇருள் உருது. தாயினுமினியன் சற்குருநாதன், முதலிய பல நற்கருத்துக்களால் குருபக்தியின் இன்றியமையாமை புலப்படுத்தப் பெறு கிறது.

8 நவரத்னமாலை

ஸ்ரீ குருஞானசம்பந்தர் தம் குருநாத ராகிய கமலை ஞானப்பிரகாசர் சிவசாயுச் சியம் பெற்றபோது அவரது பிரிவாற் ருமல் பாடியது.

இவ்வெட்டுநூல்களும் ஸ்ரீ குருஞான சம்பந்தர் அருளிய நூல்களாகும். அவர் களுக்குப் பின் 7வது குருமூர்த்திகளாகிய ஸ்ரீலஸ்ரீ திருவம்பல தேசிகர் அவர்கள் அருளிய வருணுச்ரம சந்திரிகை சமாதி லிங்கப் பிரதிஷ்டாவிதி, 9 வது மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ திருநாவுக்கரசு தேசிக சுவாமிகள் அவர்கள் அருளிய சித்தாந்த நிச்சயம், 10வது மகாசந்நி தானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமி கள் அருளிய, செல்வமுத்துக்குமாரர் திருவருட்பா, ஆபதுத்தாரணர் மாலை சிதம்பரநாதர் பதிகம், தக்ஷிணுமூர்த்தி திருவருட்பா, அசபாநட்னப் பதிகம், துண்டிராஜகணபதி, விசுவநாதர், அன் னபூரணி, கேதாரநாதர், கேதார கௌரி விருத்தகாளேசுவரர், காசி கால பைர வர், கதிர்காமவேலவர், பாகீரதியம்மை, திருவருட்பாப் பிரபந்தங்களும், தாரகப் பத்தும் இவர்கள் இயற்றியருளியவை. 11 வது குருமூர்த்திகள் வடமொழிச் சிவ ஞானபோதத்திற்கு வடமொழியில் ஒரு பாஷ்யம் எழுதியருளியுள்ளார்கள்.

25வது குருமகா சந்நிதானமாய் இலங்கும் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளிய சாத்திர தோத்திர விரிவுரைகள் செந்தமிழ்ப்பூம் பொழில்களாக வெளிவந்துள்ளன.

இவ்வாறுதருமையாதீனப் பண்டார சாத்திரங்கள் வேத சிவாகமத் திருமுறை சைவசித்தாந்தம் இவற்றின் சாரமாய் பாடல்களாகவும், உரைநூல்களாகவும், உபதேச மொழிகளாகவும் வெளிவந் துள்ளன.



அன்புருவாகிய கடவுளை அன்பாலேயே தொழவேண்டும். அன்பு விலையில்லாத மாணிக்கம். உலகியலிலும்கூட அன்பாலேயே அமைதி யைக் காணமுடிகிறது. அன்புள்ள இடத்தில் இன்பம் தானே விளையும்.

— கயிலைக் குருமணி.

The Maha Kumbhabhishegam at

# THIRUBHUVANAM

## a great Chola temple - Standing monument to Architecture & Sculpture.

TEXT & PHOTOS By N. RAMAKRISHNA

The Maha Kumbhabhishegam of Sri Kampahareswara Swamy Devasthanam at THIRUBHUVANAM took place on the 6th September 1963. The temple belongs to Dharmapuram Adhinam and it has been very well renovated at a great cost of about 5½ lakhs of rupees by His Holiness Sri La Sri Kailai Guru Mahasannidhanam of Dharmapuram Adhinam. The big Rajagopuram in front has been repaired on the outside as well as inside and painted in rich oil colours at a cost of about Rs. 107700/- The Moolasthana Vimanam, the Vimanam of the Amman temple, the Vimanam of Sri Sarabhar temple, have all been repaired and renovated in addition to stone flooring, rest houses for pilgrims, and water supply at a cost of about Rs. 144000/- The Silver Kavachams, Vahanams, Vessels and Jewels have been made at a cost of about Rs. 100000/- The Yaga Salai was decorated on a grand scale at a cost of about Rs. 10000/- and the cost of the Maha Kumbhabhishegam exceeded Rs. 65000/- About 65 learned Pandits and Sivacharyas from all over the State took part in the functions. A Silver Car has been made for Sarabhamurthy also. The decoration of the Yaga Salais is an art in Tanjavur District. Though made of casurina poles, bamboo thatis, and coloured papers they appear as if they have been constructed in a permanent manner.

Thirubhuvanam is about 5 miles from Kumbakonam in the Tanjavur District in Tamil Nad and is famous for the great Chola temple there, said to have been built by Kulothunga Chola III some 800 years back Modelled after the great temples at Tanjavur and Gangaikondacholapuram built by Raja Raja Chola and his son Rajendra Chola, the temple at Thirubhuvanam is massive, artistic, colourful, and very

attractive. Kulothunga Chola built this temple as well as the temple at Darasuram and some at Kumbakonam nearby.

The kshethram is described as Thirubhuvana Veerapuram in the inscriptions. But nowadays it is known as Thirubhuvanam. The temple is in the centre of the village, now growing into a town of the same name, and facing east. There are Two Prakarams in addition to the Sanctum Sanctorum. There are 3 main gateways before reaching the temple and the entire construction has been planned and well done conforming to the tenets of the science of temple construction and art.

The Lord of the temple goes by the name SRI KAMPAHARESWARAR - Nadukkam Theertha-Peruman, meaning one who wards off and liberates people shuddering in utter fear. The Goddess goes by the name DHARMASAMVARDHANI - Aram Valartha Nayaki. The Lingam in the Sanctum Sanctorum though small when compared to the ones at Tanjavur and Gangaikondacholapuram, is fine and attractive. It is made of two stones and the area around it is spacious and airy.

The temple is noted for the separate shrine of SARABHAR within the same compound. After the Samharam or the killing of Hiranya, Narasimhamurthy was found to be in a very angry mood, and those around him could not stand his ferocity and began to shudder and shiver. They all prayed to Lord Siva who came in the form of Sarabhar and subdued the ferocity of Narasimha and saved one and all.

SARABHAR is an unique figure being neither human, nor animal nor bird. Indeed it does not conform to any living species, but is a combination of all the three forms. Sarabhamurthy appears to be more ferocious than Narasimha himself and so one could easily imagine his form. The figure of Sarabhamurthy in the sanctum sanctorum of the temple dedicated to Him is an excellent piece of art in stone. It is aweinspiring to see the figure at the midday Maha Abhishegam.

The bronze image of Sarabhamurthy, installed in the adjoining apartment is a fine specimen in metal and a type of this cannot be seen anywhere. One must see it in its naked form to appreciate its intricate workmanship It is taken in procession during the festival time. On the walls around are painted the episode of Hiranya, Narasimha, and Sarabhar. There are other lovely bronzes like

Bikshadanar and Boga Shakthi Amman reproduced elsewhere in this book.

On either side of the Sannidhi of Sarabhar at the Moolasthanam there are two beautiful carved images of ladies with creepers twaining around them. They go by the name SALA PANCHIKAS (Some call these Sri Devi and Boo Devi) These stone images cut in smooth black stone remind us of the figures from the Hoyasola temples of Belur and Halebid. The 12 Jyothir Lingams are prominent in the ceiling just in front of the sannidhi.

The Vimanam over the Sanctum Sanctorum is a massive structure. Huge boulders have been brought, shaped and used here. Tanjavur is a district where rocks cannot be found, and in those days it was a wonder as to how such massive stone structures were constructed in this district. Dakshinamurthy is fine in this temple. The Lingothbhavar is unique in the respect that there are separate images of Brahma and Vishnu on the sides.

## ARCHITECTURAL AND SCULPTURAL STUDIES

The tower is full of sculptural studies and figures relating to various episodes from puranas, and all around the temple on all the three sides can be seen giant sized images such as Lingothbhavar, Vishnu, Brahma, Durga etc. On the eastern side of the temple walls one can see panels from RAMAYANA, MANU NEETHI CHOLA STORY, SIRUTHONDAR PURANAM and SUNDARAR & SERAMAN PERUMAN, two inseparable friends. As a matter of fact at the entrance to the temple one sees Sundarar going to Mount Kailas on a White Elephant and Seraman following him on his horse. There are immortal stone figures and one finds innumerable Dance panels, probably explaining and relating to a particular song in praise of the Lord or the King. Elephants and Yalis are seen in plenty and over their backs Ladies dance to the tune of music Intricate workmanship highlight the Rows of decorations numbering 6, one over the other such as the Elephant, Yali, Lotus, Boothams, Flowers and Chains. The figures of Hiranya and Narasimha have been carved out nicely. The temple has excellent stone pillars on the inside, and the outside and one finds delicate work on them. How the sculptors chiselled out so small a figure and so fine on the pillars is a thing to be wondered. Some of the pillars have the Pallava touch also. On the top ceiling one finds stories

chiselled nicely. In one of the panels a lively Delivery scene of an elephant is depicted with the other elephants helping. In another panel an elephant suckles milk from a lady. The steps are richly decorated with figures. Not an inch of space has been left vacant. The sculptors have done all these just for the sake of art. It could not have been for money or under orders. The chisel has moved like a pencil and the stone has served like a paper.

The Vasantha Mantapam has been built like a chariot and has some delicate workmanship on its sides and walls. The wheels are not seen there, but adjoining the place one finds the wheels with fine carvings over them. One finds the Border Strips also here.

## SCULPTURAL STUDIES AND THE CHOLA FRIEZES

The temple is noted for elaborate and delicate work in stone. It is a standing monument to the Chola architecture and sculpture. The Vimanam over the sanctum sanctorum is full of sculptural figures relating to various episodes from puranas and there are different forms of the deities also.

There are panels depicting the Bharatha Natya poses and ladies dance to the tune of music. The hair dressing styles are depicted nicely and one sees various forms of coiffures sported by ladies from all walks of life. Animals figure prominently and elephants and yalis march in rows. Intricate workmanship highlights each of the panels.

The friezes attract the attention of one and all. There are six rows of them one over the other such as Yali - Lotus - Bootham, Flower design, - Elephant and Chain. On the ceilings also these are chiselled in circular forms. There are panels relating to the stories of Kannappa Nayanar and other devotees.

The fight between Hiranya and Narasima, the figures of Yoga Narasimha Dakshinamurthy, Vigneswara, Durga Devi, Vishnu, Brahma, Chandeswara, Lingothbhavar are all splendid examples of the Chola Art The Vasantha Mandapam is noted for these friezes, and it is said that there were wheels supporting this just like a chariot. But now we see the wheels separate with excellent work of art on them.

Inside the temple there are a variety of pillars supporting the

entire construction and each one of the pillars has intricate design on them. Not an inch of space has been wasted and there are figures three inches high with all details. How the sculptors managed to work on so small a figure is a thing to be wondered. There are no rocks in this district and the massive construction makes us think that no time, wealth, or labour has been spared to build this colossal temple. It could not have been built for money or under orders. The sculptors must have done the job out of sheer enthusiasm. In a corner we see Subramania on Elephant Mount - a rare specimen. There is reference to this in Thirumurugatrupadai.

In the Ramayana panel there are some life like figures and the imagination of the sculptor plays an important part. For example there is the Mareecha Vadam scene. Rama in full force has just sent an arrow flying and the demon in the form of a Deer has been hit. On impact the Deer slowly transforms itself into the Demon and the whole scene has been beautifully cut in a small panel. The killing of Ravana and the cry of Mandodhari is another masterpiece. In Manuneethi Chola story, the king grants justice to the Cow whose calf was run over and killed under the chariot wheels of the prince, by running his chariot over his son. The form of the bull in sorrow ringing the bell, the calf running about in full vigour, the king driving the chariot over his son are all beautifully carved with expressions. The two great friends Sundaramurthy Nayanar and Cheraman Perumal are seen going to Mount Kailas over the White elephant and Horse. There are elephants in various poses and angles, but the striking ones are the Birth of a baby elephant and an elephant suckling milk from the breast of a lady.

The RajaGopuram too has excellent specimens in stone figures. The finest of the figures is stationed on the northern side in a remote corner - familiarly known as MOHINI - striking an attractive and stately pose with excellent Hair Dress. Her body has a twist at her waist. Many of the panels in the temple have ladies with different types of Hair-Dos. Even men have spent time on their head and hair. The Ajantha type of Hair-Dos are also seen

On the terrace of the Sanctum Sanctorum there is the temple dedicated to Peria Nayakar with a stone image of the deity, Amman and Somaskander. The figure of

Isvara Sivan and his consort are also there. Isvara Sivan, son of Skandha Sambu, is said have installed the Lingam in the temple and performed the first Kumbhabishegam, at the time of Kulothunga Chola III. Hence the Lord got the name Thirubhuvana Iswara Mudaya Mahadevan. The King got the name Thirubhuvana Veera Devan.

The Sthala Vriksham is Bhilva which is in the northern prakaram of the temple. There are 6 Theerthams dedicated to this place. There are some inscriptions in this temple and from these one learns that Kulothunga Chola amassed a huge fortune in his victories over his enemies, and utilised the amount in building the shrines at Thirubhuvanam and Darasuram and modelled them after the temples built by his illustrious predecessors the Great Raja Raja Chola and Rajendra Chola.

The first Sthalapuranam relating to this temple was in Sanskrit which has been translated into Tamil later. It is surprising that this temple has no Thevara Hymns.

From the Sthalapuranam we learn that this place was once known as Thripura Vanam as the 3 Demons - THRIPURAS - did their penance here. A Pandya King by name Varaguna Pandya had his Brahma Hathi Dosha and his Fear removed by Lord Kampahareswara and in turn he built many shrines.

Thirubhuvanam can be reached by bus from Kumbakonam and Mayuram and is about a mile from Tiruvidamarudur Railway Station.

## THE ART GALLERY

In the corridors of the outer prakarms on the east one finds some fine beautiful figures in stone but mutilated. The figures of Sala - Panchika resembling the one at Sarabhar Sannidhi with an attendant, the Goddess in fine proportions, a huge Vigneswara made of a single stone, and some other figures attract one's attention. An Art Gallery has been started in this temple on the occasion of the Kumbhabhishegam. There are some wooden specimens from an old temple car, and these with other specimens have made the Art Gallery fairly sizable. The Vahanams made and bedecked in Tanjavur Glass work in this temple are excellent and colourful. This is an art in itself in the modern sense.

The Maha Kumbhabhishegam was performed on a grand scale in the early hours of the morning

and it was a sight to see the Kalasams glittering in the yellow rays of the morning sun and the Gopurams silhouetted against the red sky. More than 50,000 people witnessed the whole function and in the night the Panchamurthis were taken in procession in Pushpa Pallakku to the accompaniment of Nathaswaram Music and Dummy Horse Dance. It was indeed a model Kumbhabhishegam designed and conducted by His Holiness Sri La Sri Kailai Guru Maha Sannidhanam of Dharmapuram Adhinam. A Thirumurai Conference and a Siva Pujakar Conference were also conducted and eminent scholars and savants took part in them.



செல்வம் புண்ணியத்தைச் செய்யவும் அப்புண்ணியத்தால் விளையும் நல்ல இன்பத்தை அடையவும் கிடைத்தது. அதைப் பாவத்திற் செலவிடாமல், தெய்வ கைங்கரியத்தில் பயன்படச் செய்வது சிறந்தது. அழியும் செல்வத்தால் அழியாத சிவபுண்ணியத்தைத் தேடிக் கொள்வதே அறிவுக்குப் பொருத்தம் ஆகும்.

* * *

மனிதன் என்றால் மனம் உடையவன்; நினைப்பவன் என்று பொருள். நினைப்பது இறைவன் திருவடியேயாகும். திருவருளிருந்தாலன்றி அவன் திருவடி நினைக்கும் பேறும் மனிதனுக்குக்கிடையாது.

* * *

அன்புருவாகிய ஆண்டவனைக் காட்டும் கருவி மொழி; அதிலும் அநுபவ மொழி; அதிலும் அனைவருக்கும் தன்பொருளைத் தயக்கமின்றி அறிவிக்கும் தாய்மொழி வாயிலாக, நமது தமிழ் நாட்டில் வாழ்ந்த நாயன்மார்களும், ஆழ்வார்களும் கடவுளைக் கண்டார்கள். தாம் அடைந்த அன்பு வெள்ளத்தை ஆயிரமாயிரம் ஆண்டுகளாகப் பெருக வைத்திருக்கிறார்கள்.

* * *

நாம் பிறந்ததன் பயன் சாஸ்திரப் பயிற்சியால் கலைஞானம் வரப்பெற்று, தெளிந்து, உணர்வரிய மெய்ஞ்ஞானம் அடைதலேயாம்.

— கயிலைக் குருமணி.

# திருத்தருமையாதீனம்

## ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்களின்

# ஆட்சி நலங்கள்

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்களின் குணநலன்கள் :-

தருமையாதீன வரலாற்றில் ஒரு பொற்காலமாகக் கயிலைக் குருமணி அவர்களின் ஆட்சிக் காலத்தைக் குறிப்பிடவேண்டும். அவர்கள் அருளாட்சியில் ஏற்பட்டுள்ள மடாலயச் சீர்திருத்தங்களும், திருக்கோயில் திருப்பணிகளும் எண்ணற்றவை. கயிலைக் குருமணி அவர்கள் சிவபூஜா பரம்பரைத் தோற்றமும் இளமை முதலாக சிவநெறி வழுவாத சிந்தையும் உடையவர்கள். ஜபதபங்களைக் கடைப்பிடிப்பவர்கள். வாரந்தோறும் குருவாரத்தில் மௌன உபவாச விரதம் அனுஷ்டித்து வருபவர்கள். கந்தஷஷ்டி திருநாட்கள்தோறும் திருச்செந்தூர் சென்று உபவாசம் இருந்து செந்திற்குமரன் திருவருள் விலாசத்தில் திளைப்பவர்கள். நாடோறும் ஸ்ரீ சொக்கநாதப்பெருமானை அன்போடு அபிஷேக ஆராதனைகள் செய்தும், ஸ்ரீ மகாலக்ஷ்மி துர்க்காதேவியைத் தரிசித்தும்வரும் நியமம் உடையவர்கள். மகாகும்பாபிஷேகங்கள் செய்வித்து மகிழும் இயல்பும், லட்சார்ச்சனை கோடியர்ச்சனை, முதலிய அர்ச்சனைகள் செய்து இன்புறுவதும், நவரத்தினம் தங்கம் வெள்ளி முதலியவற்றில் திருவாபரணங்கள் செய்து கடவுளுக்கு அணிவித்துக் கண்டு மகிழ்வதும் இவர்கள் இயல்பு. மடாலயத்தையும் மற்றும் எல்லாக் கோவில்களையும் சாந்நித்தியத்துடன் தெய்வமணங் கமழும் வண்ணம் தூய்மையாக - அழகாக - கவர்ச்சியாக இருக்கும்படி செய்வதில் ஆர்வம் மிக்கவர்கள். சிவதல யாத்திரைகளை மேற்கொண்டு இமயம் முதல் குமரி வரை தரிசனம் செய்தும் இன்புற்றவர்கள். யாத்திரைகளில் மிகச் சிறந்த மகாகயிலாய தரிசனம்செய்த சிறப்பும்,ஜோதிர்லிங்கத் தலங்களைத் தரிசித்த சிறப்பும்இவர்கட்கே உரியது. இவ்வளவு பெருஞ் சிறப்புகட்கு உரிய இவர்களுக்கு அன்பர்கள் கனகாபிஷேகம் செய்து பாராட்டியது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு எல்லாவகையாலும் அருளாட்சி செய்துவரும் கயிலைக் குருமணி அவர்களை உலகம் பாராட்டிவருகிறது. கல்வி சமய வளர்ச்சி, நூல் வெளியிட்டுப்பணி, திருக்கோயில் திருப்பணி, சமுதாய உதவிகள் முதலிய பலவும் இவர்களால் செய்விக்கப்பெற்று வருகிறது. இவர்கள் அருளாட்சி ஏற்ற திருநாள் 20—5—1945.

திருக்கூட்டம் :-

பரம்பரைச் சைவகுலத்தில் வந்த சிறுவயதினர் இங்குத் தம்பிரான்களாக அவரவர் தகுதிதெரிந்து ஏற்றுக்கொள்ளப்படுவார்கள். துறவு மேற்கொண்டதும் அவர்களுக்குக் கல்விப் பயிற்சியும், சமயசாத்திரப் பயிற்சியும், ஆலய நிர்வாகமும்,

நல்ல பொருள்கள் பற்றிப் பேசும் ஆற்றலும் உண்டாகும்படி பல போதனைகளைக் கொடுத்துத் திறனும் பக்குவநிலையும் கண்டு படிமுறையாலே தீட்சை முதலியன அளிக்கப்பெறுவார்கள். ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணிகளின் ஆட்சியில் தம்பிரான் சுவாமிகளாக ஏற்றுக்கொள்ளப்படுபவர்கள் எல்லோருக்கும் இவ்விதமாகக் கல்விப் பயிற்சி அளிக்கப்படுகிறது. அவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்து வித்துவான் களாகத் தேர்ச்சியும் பெற்றிருக்கிறார்கள். இத்திருக்கூட்டத்து அடியவர்கள் பலரும் திருக்கோயில் நிர்வாகங்களோடு சமயப் பிரசாரப் பணியிலும் ஈடுபட்டுவருகின்றனர்.

**கல்வி நிலையங்கள் :-**

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்டுவருகின்ற கல்வி வளர்ச்சி குறிப்பிடத்தக்கது. 2—8—1946 இல் தருமையாதீனத்தில் தமிழ்க் கல்லூரி ஒன்று நிறுவப்பெற்று நன்கு நடைபெற்றுவருகின்றது. சென்னைப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த இக் கல்லூரியில்' இதுவரை இருநூற்றுக்கும் மேற்பட்ட புலவர்கள் வெளிவந்துள்ளனர். இக் கல்லூரியில் தமிழ் வித்துவான் பாட வகுப்புக்களோடு, சமயக் கல்வியும் நன்கு பயிற்றுவிக்கப்படுகிறது. இக் கல்லூரியில் வடமொழி சாஹித்திய வகுப்பும் நடத்தப்பெற்றது. அதில் பயின்று சிரோமணிகளாகப் பலர் வெளிவந்துள்ளனர்.

திருமுறைப்பயிற்சி வளர்ச்சி அடைய இவ்வாதீனத்தில் தொடங்கப்பெற்ற தேவாரப் பாடசாலை நன்கு நடைபெற்றுவருகிறது. மாணவர்கள் திருமுறைகளோடு சமய நூல்களும் கற்றுவருகிறார்கள். ஐந்தாண்டுப் பாடத் திட்டங்கள் வகுக்கப் பெற்று முற்றிலும் இலவச உணவு உறையுளோடு இப்பாடசாலை நடத்தப்பெறு கிறது. இதுவரை இப்பாடசாலையில் பயின்று வெளிவந்துள்ள தேவார இசை மணிகள் பலர். இவர்களில் பலரும் திருமுறை இசைவாணர்களாகவும், தமிழாசிரியர் களாகவும் பணிபுரிகின்றனர்.

திருக்கோயில் வழிபாடுகளை வேதசிவாகம விதிகளோடு அறிந்து அர்ச்சிக்க சிவாசாரியர் குழந்தைகளுக்குப் பயிற்சிதர வேதசிவாகம பாடசாலை தொடங்கப் பெற்று நன்கு நடைபெற்றுவருகிறது. இப் பாடசாலையிலும் இலவச உணவு உறையுள் வசதிகள் அளிக்கப்படுகின்றன. ஐந்தாண்டு பாடத் திட்டமுள்ள இப் பாடசாலை மாணவர்கள் வேதசிவாகமங்களோடு திருமுறை, தமிழ், சமய நூற் பயிற்சியும் பெற்றுவருகிறார்கள். இப்பாடசாலையிலிருந்து இதுவரை ஆகமப்பிரவீணர்களாக நாற்பதுக்கும் மேற்பட்டவர்கள் வெளிவந்துள்ளனர். இவர்களில் பலரும் திருக் கோயில் அர்ச்சகர்களாகவும் ஆசிரியர்களாகவும் பணிபுரிகின்றனர்.

தருமையிலும் தருமையைச் சார்ந்த சிறு கிராமங்களிலும் வாழும் குடிமக்களின் குழந்தைகள் கல்வி பயில்வதற்குத் தொடக்கப்பள்ளி ஒன்றும் நடத்தப்பெற்றுவரு கின்றது. இதில் ஐந்நூறுக்கும் மேற்பட்ட குழந்தைகள் கல்வி பெறுகின்றன.

தொடக்கக் கல்வியோடு உயர்பள்ளிக் கல்வியையும் மாணவர்கள் பெறு வதற்காக ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளி என்ற பெயரில் ஓர் உயர்நிலைப்

பள்ளியும் நடைபெற்றுவருகின்றது. இங்குப் பயிற்சிபெறும் சிறுவர் சிறுமியர் சமயக் கல்வியும் பெற்றுவருவது குறிப்பிடத்தக்கது.

கல்வி உதவிகள் :-

வெளிப்பள்ளிகளில் பயிலும் தகுதிவாய்ந்த சிறுவர்களுக்குப் பள்ளிச்சம்பளம், புத்தகங்கள் வாங்க உதவித்தொகை தேர்வுக்கட்டணம் முதலியனவும் அளிக்கப் படுகின்றன. ஆதீனத் திருமடத்திலும் தேவஸ்தானங்களிலும் தொடக்கப்பள்ளி மாணவர் பலருக்கு நண்பகல் உணவு அளிக்கப்பெறுகிறது.

தமிழில் ஆர்வம் உண்டாவதற்காக பேரூர் சாந்தலிங்க அடிகளார் கல்லூரி, மாயூரம் A. V. C. கல்லூரி முதலிய கல்லூரி வகுப்புகளிலும் ஸ்ரீவைகுண்டம், சீகாழி, பேரூர், மாயூரம், ஸ்ரீ வில்லிபுத்தூர் முதலிய பல ஊர்களிலும் உள்ள உயர் நிலைபள்ளி இறுதி வகுப்பிலும், தமிழில் முதன்மையாகத் தேர்ச்சியுறும் மாணவர்க்குப் பொற்பதக்கங்களும் பரிசில்களும் வழங்கப்படுகின்றன. இவை யல்லாது தொழிற்படிப் பிற்குப் படிக்கும் மாணவர்கள் சிலரும் உதவி அளிக்கப் பெறுகிறார்கள்.

கல்வி நிலையங்களின் கட்டிடம் பராமரிப்பு நிதிகளுக்குப் பெரும் அளவில் நிதி உதவிகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. 1. காஞ்சிபுரம் கன்யா வித்யாலயம். ரூ. 5000. 2. ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளி, ரூ. 5000, 3. வைத்தீஸ்வரன்கோயில் மாவட்ட உயர்நிலைப்பள்ளி, 4. சிதம்பரம் கிழமூங்கிலடி, தேசியவிநாயகம் பிள்ளை ஆசிரியப்பயிற்சிப் பள்ளி, 5. வேதாரண்யம் கஸ்தூரிபா கன்யாகுருகுலம், 6. திருநெல்வேலி திரவியம் தாயுமானவர் ஹிந்து கல்லூரி, 7. கோயம்புத்தூர் இராமகிருஷ்ணா திருக்குறள் ரூ. 2500. 8. தமிழ் இசைச் சங்கம் ரூ. 750. 9. திருவள்ளுவர் ஆலயம் ரூ. 1000. புதுதில்லி தமிழ்ச் சங்கம் ரூ. 1001. திருப்பனந்தாள் உயர்நிலைப்பள்ளி கட்டிட நிதிக்கு ரூ. 6000. இவைபோன்ற பல.

திருமுறை வளர்ச்சி :-

கயிலைக் குருமணியவர்கள் திருமுறைகளில் மிக்க ஈடுபாடுடையவர்கள். பன்னிரு திருமுறைகளையும் குறிப்புரைகளோடு மிக அழகாகப் பிழையின்றிப் பதிப் பிக்கத் திருவுளம்கொண்டு ஆறு திருமுறைகளை மிக அழகாக வெளியிட்டருளியிருக் கிறார்கள். தருமையாதீனத் திருக்கோயில்கள்தோறும் மாலை வேளைகளில் தேவார ஓதுவார்களைக்கொண்டு திருமுறை வகுப்புக்கள் நடத்தச் செய்தருளியுள்ளார்கள். பல சிறுவர் சிறுமியர் இத்திருமுறை வகுப்புக்களில் பயிற்சிபெற்று வருகிறார்கள். இவர்களுக்கு ஊக்கமளிக்க ஆண்டுதோறும் தேர்வுகள் நிகழ்த்திப் பரிசுகள் வழங்கப் பெறுகின்றன. நாடோறும் திருக்கோயிலுக்குச் செல்லுதல் கடவுளை வழிபடுதல், திருமுறை பயிலல், சொற்பொழிவுகள் கேட்டல், திருவிழாக் காலங்களில் தேவார பாராயணம் செய்தல் ஆகிய பல பயன்களை இவர்கள் பெற்று வருகின்றனர்.

திருமுறை வளச்சிக்கு இசைத்தட்டுகள் வெளியிட்டுள்ள பெருமை இக் குருமணி அவர்களுக்கு உரியது. பன்னிரு திருமுறை இசைத்தட்டு, திருவெம்பாவை

திருப்பள்ளியெழுச்சி இசைத்தட்டுகள் தமிழ் நாடெங்கும் தெய்வகீதம் பரப்பி வருகின்றன. மாத ஜன்ம நக்ஷத்திரத் திருநாட்களில் தேவாரப் பாடல்பெற்ற சிவ தலங்கள்தோறும் ஓதுவாமூர்த்திகளை அனுப்பி அபிஷேக ஆராதனைகள் செய்வித்து அவ்வத் தலத் திருப்பதிகங்களை வெளியிட்டு ஓதச்செய்து மக்களுக்கு வழங்கியருளியுள்ளார்கள். இப்பணி 1945-ல் தொடங்கி 1963-ல் முடிவுற்றது. பாடல்பெற்ற சிவதலங்கள் 274.

இவையன்றி பெரிய திருத்தலங்களில் அத்தலத் திருப்பதிகங்களைச் சலவைக் கல்லில் வெட்டிவைத்து அன்பர்கள் ஓதிப் பயனடைய சுவர்களில் பதித்தருளி இருக்கிறார்கள். 1. வேளூர், 2. சீகாழி, 3. திருக்கடவூர் (திருப்பதிகங்களும் அபிராமி அந்தாதி 100 பாடலும்) 4. விளநகர், 5. பறியலூர், 6. கொறுக்கை, 7. ஆச்சாள்புரம், 8. திருக்குவளை, 9. திருவாரூர், 10. மதுரை, 11. திருக்கழுக்குன்றம், 12. சிதம்பரம், 13. திருவேட்களம், 14. கேதாரம்.

திருமுறை ஓதுவாமூர்த்திகளை அடிக்கடி அழைத்துப் பாடச்செய்து பரிசில்கள் வழங்கியும், தேவார பாராயணம் செய்யச்செய்தும் வெளியூர்களுக்கு அனுப்பியும் ஊக்குவித்து வருகின்றார்கள்.

**சமயப் பிரசாரம் :-**

சமயப் பிரசாரத்திற்கென்றே வேளூர் ஸ்ரீ வைத்தியநாதஸ்வாமி தேவஸ்தானத்தின் சார்பில் சென்னையில் ஒரு கட்டிடம் வாங்கப்பட்டிருக்கிறது. அது "வேளூர் தேவஸ்தான இறைபணி மன்றம்" என்ற பெயரோடு அரிய தொண்டுகள் பல ஆற்றி வருகிறது. அங்கு சமயச் சார்பான இலக்கியங்களைப் படித்துணர விரும்புவோர்க்கு நல்லதொரு நூல்நிலையம் அமைக்கப்பட்டிருக்கிறது. அங்கு வருவோர்க்கு வேண்டும் நூல்களைக் கொடுத்து அங்கேயே படித்துவரச் செய்யப்படுகிறது. திருமுறைப் பயிற்சி, இசைப் பயிற்சி, சமயப்பயிற்சி, தமிழ் வித்துவான் தேர்விற்கு இராப்பள்ளிகள், வாரத் தொடக்கத்தில் சமயக் கூட்டம், அவ்வப்போதும் சிறப்புக் கூட்டங்கள், மாநாடுகள், வடமொழிப்பயிற்சி இவைபோன்ற பல நற்செயல்கள் அங்கே ஆற்றப்படுகின்றன. மாதம் ஒருமுறை கூட்டுவழிபாட்டுக்குச் சென்னை நகரில்உள்ள பல சங்கங்களையும் அன்பர்கள் பலரையும் ஒன்றுசேர்த்துப் பாடல்பெற்ற தலங்கள்தோறும் சென்று வழிபாடாற்றிவருவதற்குத் திட்டங்கள்அமைத்து அதன்படி நடந்துவருகிறது இங்குள்ள சுவாமிகளும், திருமுறை ஆசிரியரும் பல வெளியிடங்களில் நடைபெறும் கூட்டங்களிலும் சொற்பொழிவு, திருமுறைப் பாராயணம் போன்றவற்றிலும் பங்கு கொண்டு தொண்டாற்றி வருகிறார்கள். இவர்கள் பேச்சுக்களும் பாராயணமும் வானொலி மூலமும் ஒலிபரப்பப் படுகின்றன.

இந்த ஆதீன சம்பந்தப்பட்ட பல ஸ்தாபனங்களின் செய்தி நிலையமாகவும் சமயப் பிரசார நிலையமாகவும் இது நடத்தப்படுவதால் ஆஸ்திக அன்பர்கள் பலருக்கு ஆதீனக்கோயில்களில் ஆங்காங்கும் நிகழ்கின்ற ஏறுபடி விழாக்களில் வந்து கலந்து பிரசாதம் பெற்றுக்கொள்ள முடியாதவர்களுக்கு அங்கங்கிருந்தும் பிரசாதங்கள் தக்கார் மூலம் அனுப்பி, இந்தநிலையத்திற்கு வந்து பிரசாதம் பெற விரும்புகிறவர்களை

அழைத்து விநியோகம் செய்யப்படுகின்றது. நல்லபயனையும் பாராட்டுதலையும் பெறக் கூடியதாக இருக்கின்றன இச்செயல்கள். இங்கு நம்நாட்டு அரசியல் தலைவர்கள் பலரும், சமயத் தலைவர்கள் பலரும், இசைப்புலவர்கள் பலரும் வந்து கலந்துகொள்கிறார்கள். இங்கு நிகழும் செய்திகள் பல பத்திரிகைகளில் பிரசுரமாவதால் வெளியிடங்களில் உள்ள பலரும் இதனால் பயன்பெறுகிறார்கள்.

ஆலயங்களில் விழாக்காலங்களிலும் ஏறுபடிகாலங்களிலும் பல புலவர்களைக் கொண்டு சொற்பொழிவுகளும் நல்லிசை முழக்கங்களும் செய்விக்கப்படுகின்றன. மாநாடுகள், திருமுறை ஊர்வலங்கள் இவைகளின் மூலமும் மக்களுக்குச் சமயக் கருத்துக்கள் பரவச்செய்யப்படுகின்றன. இவ்விதமாக தாகமிகவுண்டாய் ஓடிவரும் காரணர்க்கு உண்மை உணர்த்த எழுந்த இம்மடம் இப்போது அங்கங்கும் ஓடி ஓடிச் சென்று தன் பணியைச் செய்துவருகிறது

சமயப் பிரசாரத்திற்குத் தனியே பேருந்து வாகனம் ஒன்று வாங்கப்பெற்று தென்னாடு முழுதும் இவ்வாகனத்தில் சமயப் பிரசாரம் செய்யப்பெற்றது. கிராமங்கள் தோறும் சென்று சேரிப் பிரசாரங்களும் அடிக்கடி செய்யப்பெற்றுவருகின்றன.

ஞானசம்பந்தம் :-

சமய உணர்வு பெருக பத்திரிகை அவசியம் அல்லவா? இதனை அறிந்து இவ்வாதீனத்தில் 22 ஆண்டுகளாக "ஞானசம்பந்தம்" என்ற பெயருடன் மாத இதழ் ஒன்று வெளிவருகிறது. இவ்வெளியீட்டில் சமயக் கருத்துக்களடங்கிய கதை, கட்டுரை, கவிதைகள், ஆராய்ச்சி உரைகள், நூல் வெளியீடுகள், சமயத் தொடர்பான செய்திகள் முதலியன வெளிவருகின்றன. இவ்விதழ் இலங்கை மலேயா முதலிய வெளிநாடுகளுக்கும் அனுப்பப்படுகின்றன.

பதிப்பகம் :-

ஆதீன வெளியீடுகள், ஞானசம்பந்தம் மாத இதழ், தேவஸ்தான நிர்வாக அறிக்கைகள் முதலியன அச்சிடுவதற்கென்றே ஞானசம்பந்தம் பதிப்பகம் தருமையில் நன்கு இயங்கிவருகின்றது. நல்ல இயந்திர சாதனங்கள் அமைத்துத் திறமையான பணியாளர்களைக்கொண்டு நூல் பதிப்பு வேலைகள் நடத்தப்பெறுகின்றன. இதுவரை 500க்கு மேலாக நூல் வெளியீடுகள் இவ்வச்சகத்தில் பதிப்பிக்கப்பெற்று வெளி வந்துள்ளன.

வெளியீடுகள் :-

தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளில் சமய நூல்கள் பலவும் பிறவும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் ஆட்சிக் காலத்தில் வெளியிடப் பெற்றுள்ளன. விழாக் காலங்களில் அன்பர்களுக்கு இலவசமாக, பல நூல்களும் வெளியிடப்பெற்று வழங்கப்படுகின்றன. இவர்கள் காலத்தில் வெளியிடப்பெற்ற குறிப்பிடத்தக்க நூல்களுள் சில :— 1. திருமுறைகள் (குறிப்புரைகளுடன்),

2. மெய்கண்டசாத்திரம், 3. திருக்குறள் உரைவளம், 4. ஞானவரணவிளக்கம், 5. முத்திநிச்சயப்பேருரை, 6. சைவசித்தாந்தம் ( ஆங்கில மொழி பெயர்ப்பு ) 7. சச்சபுடவெண்பா 8. சிவபோகசாரம் (ஆங்கிலம், இந்தி மொழிபெயர்ப்புக் களுடன்.

நூல் நிலையங்கள் :-

கருமையாதீன திருமடத்தின் அருகில் மிகப்பெரிய இரண்டு நூல்நிலையங்கள் நிறுவப்பெற்று நன்கு பரிபாலிக்கப்படுகின்றன. இந்நூலகத்தில் 14 மொழிகளுக்கு மேற்பட்ட மொழிநூல்கள் உள்ளன. ஏறத்தாழ 16,000 நூல்கள் இந்நூல் நிலையத் தில் இருக்கின்றன. ஆதீன வெளியீட்டுத்துறை ஆசிரியர்களும், கல்லூரி ஆசிரியர் களும் மாணவர்களும், உலக நூலகங்களில் ஒன்றாகப் பொதுமக்களும் இந்நூலகத்தை நன்கு பயன்படுத்திக்கொண்டு வருகிறார்கள்.

திருநெறிய தெய்வத்தமிழ் மன்றம் :-

ஆதீன திருமடத்தில் நிகழும் குருபூஜைவிழா, ஆவணிமூலவிழா, நவராத்திரி விழாக்களிலும் மற்றும் பல சந்தர்ப்பங்களிலும் சமய சம்பந்தமான ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் நடைபெறத் திருமடத்தின்முன்பு மின்விளக்கு, மின்சார சுழல் விசிறி ஆகிய வசதிகளுடன் திருநெறிய தெய்வத்தமிழ் மன்றம் ஒன்று கயிலைக்குருமணி அவர்களால் நிறுவப்பெற்று (20—5—51) கனம் சக்கரவர்த்தி இராஜகோபாலாச் சாரியார் அவர்களால் திறந்துவைக்கப்பெற்றது.

புலவர்க்கும் பிறர்க்கும் பாராட்டு :-

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களால் பாராட்டப்பெற்று பட்டங்கள்பெற்ற சிறப்பிற்கு உரியவர்கள் :—

1. தமிழ்நாடு அறநிலைய அமைச்சர் கனம். திரு. M. பக்தவத்சலம் B. A., B. L., "நல்லறங்காவலர்"
2. திரு. R. P. சேதுப்பிள்ளை B. A., B. L., "சொல்லின்செல்வர்"
3. திரு. T. P. மீனாட்சிசுந்தரம்பிள்ளை M. A., B. L., M. O. L., "பல்கலைச்செல்வர்"
4. திருமதி. E. T. இராஜேஸ்வரி அம்மையார் M. A., "விஞ்ஞானச்செல்வி"
5. வித்துவான். திரு. கி. வா. ஜகந்நாதன், M. A., "செந்தமிழ்ச்செல்வர்"
6. திரு. அ. சிதம்பரநாதன் செட்டியார் M. A., Phd. "செந்தமிழ்க்காவலர்"
7. திரு. சிவராமன் M. A.. "சித்தாந்தச்செல்வர்"
8. திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் "முத்தமிழ் வித்தகர்"
9. திரு. T. M. P. மகாதேவன் M. A. Phd. "வேதாந்த வித்தகர்"

| | | |
|---|---|---|
| 10. | புலவர். சி. குழந்தையம்மாள், M. L. A. | "செந்தமிழ்ச் செல்வி" |
| 11. | திரு. அ. ஸ்ரீநிவாசராகவன் M. A. | "செந்தமிழ்ச் செம்மல்" |
| 12. | வித்துவான். திரு. சி. அருணைவடிவேல் முதலியார் | "ஆதீனத் தமிழ்ப்புலவர்" |
| 13. | திரு. S. உருத்திரபதி M. A., | " |
| 14. | சிவத்திரு. S. சுவாமிநாத சிவாசாரியார் | "சிவாகம வித்துவான்" |
| 15. | பிரம்ஸ்ரீ. K. முத்து ஜோதிடர் | "ஜோதிஷார்ணவம்" |
| 16. | திரு. V. இராமநாத அய்யர் | "சிவநேசச்செல்வர்" |
| 17. | திரு. T. S. தியாகராஜ அய்யர் | "சிவார்ச்சனைச் செல்வர்" |
| 18. | திரு. எம்பார். விஜயராகவாச்சாரியார் | "தருமையாதீனவித்வான்" |
| 19. | திருமதி. K. B. சுந்தராம்பாள் | "ஏழிசைவல்லபி" |
| 20. | திரு. M. K. தியாகராஜ பாகவதர் | "ஏழிசைச் செல்வர்" |
| 21. | திருமதி. N. C. வசந்தகோகிலம் | "கானசூடாமணி" |
| 22. | திரு. G. வரதராஜபிள்ளை | "திருக்குறள்வேள்" |
| 23. | திரு. வை. சுந்தரேச வாண்டையார் | "கல்வெட்டாராய்ச்சிக் கலைஞர்" |
| 24. | திரு. வை. ஆறுமுகம் பிள்ளை | "செந்தமிழ்ச் சிவநெறிச் செல்வர்" |
| 25. | திரு. கு. அருணசலக் கவுண்டர் | "பைந்தமிழ்ச்செம்மல்" |
| 26. | டாக்டர். திரு. மா. இராசமாணிக்கனர், M. A., M. O. L. Phd. | "சைவஇலக்கியப் பேரறிஞர்" |
| 27. | திரு. ச. சிவகுமாரன் M. A., | "பைந்தமிழ்ச்செல்வர்" |

பெரியோர்கள் வருகை :-

சமயத் தலைவர்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும் வாய்ப்பு பல்லாண்டுகளாக இல்லாமல் இருந்துவந்தது. கயிலைக் குருமணி அவர்கள்தான் இவ்வாய்ப்பை ஏற்படுத்தி சமய உலகம் மகிழும் வகைகளைச் செய்தருளினர்கள் என்று கூறலாம். அவ்வாறு இவ்வாதீனத்திற்கு வருகைபுரிந்தவர்களில்: 1. ஸ்ரீமத். சங்கராசாரியசுவாமிகள் காஞ்சி காமகோடி பீடம், 2. ஸ்ரீமத். சங்கராச்சாரிய சுவாமிகள் சிருங்கேரி மடம், 3. திருவாவடுதுறை, குன்றக்குடி, மதுரை, சூரியனர்கோயில், செங்கோல்மடம் முதலிய சைவப்பெருமடங்களின் மகாசந்நிதானங்கள். 4. மயிலம் சாந்தலிங்க அடிகளார் மடம், கௌமார மடம், அம்பலத்தாடிகள் மடம் இவற்றின் தலைவர்கள், 5. ஸ்ரீ சுவாமி சிவானந்தமகராஜ். சுவாமி வித்தியானந்த சரஸ்வதி மகராஜ், ஸ்ரீ முக்தானந்த சரஸ்வதி மகராஜ் முதலியவர்கள். 6. இந்திய ஜனதிபதி, உபஜனதிபதி, அமைச்சர்கள், பாரதநாட்டு உயர்மன்ற நீதிபதிகள், நமது ராஜ்ய கவர்னர்கள் அமைச்சர்கள்

நீதிபதிகள். நாட்டுப் பேரறிஞர்கள் பலரும் ஆதீனத்திற்கு வந்து ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களைத் தரிசித்துச் சென்றுள்ளனர்.

மருத்துவ உதவி :-

மாயூரத்தில் பெண்கள் குழந்தைகள் நலன்கருதி மகப்பேறு இல்லம் லக்ஷ ரூபாய்க்கு மேற்பட்ட செலவில் கட்டி 18 படுக்கைகளும் அவற்றிற்கு வேண்டிய எல்லாக் கருவிகளும் உபகரணங்களும் வாங்கி அளித்திருக்கின்றார்கள். இப்பொழுது அது இந்தப் பகுதியிலேயே சிறந்த ஒரு மருத்துவ விடுதியாய் விளங்கிவருகின்றது. பின்னும் அதனை நடத்த மாயூரம் நகராட்சியாளருக்கு ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் 7500—00 விதம் அளிக்கப்பட்டு வரப்பட்டது.

சிங்கிப்பட்டி மகாத்மா காந்தி நினைவு என்புருக்கிநோய் நிவாரண விடுதிக்கு ரூ. 10,000 கொடுத்து ஒரு பெரிய வார்டு கட்டச்செய்யப்பட்டது. பின்னும் சில யாண்டுகள் பராமரிப்பு செலவிற்குக்கூட ஆதீன மடம் கோவில் நிதியிலிருந்து உதவி அளிக்கப்பட்டது.

தஞ்சை தலைமை ராஜா சரபோஜி மிராசுதார் ஆஸ்பத்திரியில் நர்ஸ் விடுதிக்கு ரேடியோ வாங்கி அளிக்கப்பட்டது.

சிறுவார்தாரு ஓமந்தூர் ரெட்டியார் மருத்துவ விடுதியில் ஒருவார்டு கட்ட ரூ. 4000—00 நிதிஉதவி அளிக்கப்பட்டது. இரண்டாவது உலகப் பெரும்போரில் மருத்துவ விடுதியில் பயன்பட ஆதீனத்திலிருந்த ( Air Conditioning Unit ) குளிர் பதன அமைப்பையும் மேயூரார் வானையும் அளித்திருக்கிறார்கள்.

தஞ்சைப் புயல் நிவாரணம், ஆந்திரப் புயல் நிவாரணம், வெள்ளத்தில் துன்பங்கள் ஏற்பட்டபொழுதெல்லாம் வேட்டி, புடவைகளும், சட்டைத்துணிகளும், அரிசியும், பொருள் உதவியும் அளித்திருக்கிறார்கள். ஆயிரமாயிரமாக அகதிகளுக்கு பாதுகாப்பு உதவியும் அளிக்கப்பட்டது. பஞ்ச நிலைமை ஏற்பட்ட காலங்களில் எல்லாம் அரிசியும் பொருள் உதவியும் அளிக்கப்பட்டன.

அன்னதானம் :-

ஆதீன மடத்திலும்; ஆலய விழாக்களிலும், மகாகும்பாபிஷேக காலங்களிலும் மக்களுக்கு அன்னம்பாலிப்பு நடத்தப்படும். திருநள்ளாறு சனிப்பெயர்ச்சி, வெளியார் நடத்தும் ஆராதனைகள், கும்பாபிஷேகங்கள் போன்ற திருவிழா நாட்களில் எளிய மக்களுக்கு அடிக்கடி எண்ணெய் அறப்பு வழங்கி முழுகச்செய்து அன்னம் அளிக்கப் படுகிறது. பணியாளர். அகதிகள் முதலியோருக்கு ஓரளவு உதவிகள் அளிக்கப் படுகின்றன.

குடிதண்ணீர் வசதி :-

தாமாய் இயங்கிக் குழாய்கள் அமைத்து மக்களுக்குக் குடிதண்ணீர் உதவப் படுகிறது. 1. தருமபுரம், 2. வேளூர், (நான்குவீதிகளிலும்) மாயூரம் குமரக்கட்டளை,

பெண்கள் மருத்துவ விடுதி. 4. திருக்கடவூர். 5. திருவாரூர் இராஜன்கட்டளை, 6. திருபுவனம். 7. சீகாழி. 8. திருக்குவளை. 9. ஆச்சாள்புரம்.

வார வழிபாடு :-

பல இடங்களிலும் மக்களைத்திரட்டி வாரவழிபாட்டு முறையில் ஆலய தரிசனம் செய்யும்படிச் செய்திருக்கிறது. அவற்றுள், குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டம். மாயூரம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் வார வழிபாட்டுக் கழகம். சென்னை மாதாந்திர வழிபாட்டுக் கூட்டம், நெல்லை - தருமை அருள்பெறு அருணகிரியார் இசைக்கழகம் திருச்சி மௌனகுரு வாரவழிபாட்டுக் கழகம் முதலியன சிறந்து விளங்குகின்றன.

யாத்திரை :-

யாத்திரையால் அநுபவம் பெருகும் என்று ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் திருவுளம் பற்றுதல் வழக்கம். பாடல்பெற்ற தலங்களில் ஈழநாட்டுத் தலங்களும் சோழநாட்டில் இரண்டு மூன்று நீங்கலாக மற்றவை முழுவதும் தரிசனம் செய்திருக்கிறார்கள். மலையாள நாட்டுத் தலங்களும், பன்னிரண்டு ஜோதிர்லிங்கத் தலங்களும், திருப்பதி, மைசூரில் சாமுண்டீஸ்வரி, நஞ்சன்கூடு, ஸ்ரீரங்கம், வடமதுரை, கல்கத்தா காளி, நேபாளத்திலுள்ள ஸ்ரீ பசுபதிநாதர், குஹ்யேஸ்வரி, காஷ்மீரத்தி லுள்ள ஸ்ரீ அமரநாதம், ஜம்முவிலுள்ள சூரியர்கோவில் முதலிய பெருந்தலங்களையும் யாத்திரை சென்று தரிசித்திருக்கிறார்கள். இமயத்திலுள்ள கேதாரம், ரிஷிகேசம், வைத்தியநாதம், பாகேஷ்வரம், ஜாகேஷ்வரம், நந்தகோட், தார்தகுண்ட், நந்தாதேவி திரிசூலி, பஞ்சசூலி, கைலாசநாதம் முதலிய தல தரிசனம் செய்திருக்கிறார்கள்.

நம் நாட்டிலுள்ள சப்த நதிகளிலும் கீழ்கடல், மேல்கடல், தென்குமரிக்கடல், மந்தாகினி, பாகீரதி, பாங்மதி, குஜராத்திலுள்ள சரஸ்வதி, சட்லீஜ், ஜீலம் செனுப், (சதத்ரு) சரயூ, கைலாசத்திலுள்ள கயிலைநதி, மானசசரோவரம், ராக்ஷஸ்தால் முதலிய புண்ணிய நதிகளிலும் காவிரிப்பூம்பட்டினம், தனுஷ்கோடியிலுள்ள கோடி தீர்த்தத் திலும், திருச்செந்தூர் கடலிலும், தாம்ரவருணி, பாபநாசம், பொங்குமாகடல், வாண தீர்த்தம் முதலிய பல நதி தீர்த்தங்களிலும், கடல் துறைகளிலும் திருமஞ்சனம் செய்திருக்கிறார்கள்.

இந்தியாவிலுள்ள உலக அதிசயங்களான தங்கக்கோவில், தாஜ்மஹால், குதுப்மினர், அக்பர்கோட்டை, (அலகாபாத் ஆக்ரா) செங்கோட்டை, இராமகிருஷ்ண மடம், சாரநாத் முதலிய பலவற்றையும் கண்டு வந்திருக்கிறார்கள். இமயமலையில் பல அற்புதக் காட்சிகளையும் கண்டிருக்கிறார்கள்.

இவ்விதமாக இமயம்முதல் குமரிவரையிலும் இமயங்கடந்து அப்பாலும், கல்கத்தாவிலிருந்து சோமநாத் (குஜராத்) வரையிலும் இந்த பாரத பூமியிலுள்ள எல்லாப் பெருந் தல தரிசனமும், நதிகளில் திருமஞ்சனமும், இந்த நாட்டை முப் புறத்தாலும் சூழ்ந்துள்ள கடல்துறைகள் பலவற்றிலும் திருமஞ்சனமும் செய்திருக் கிறார்கள்.

ஸ்ரீ காசி விசுவேசரைப் பாலுள் மூழ்குவித்தும் லட்டால் அபிஷேகித்தும் மகிழும் செயலுடையவர்கள். திருப்பதியில் பெருமாளவுக்குப் பால் அபிஷேகம்செய்து பாற்கடலில் திளைக்கச்செய்து மகிழ்வார்கள். குமரி அம்மனுக்கும், ஸ்ரீ மகாலக்ஷிமி துர்க்கா தேவிக்கும் வருஷந்தோறும் புஷ்பாஞ்சலி செய்து மகிழ்வார்கள்.

**நிர்வாகம் :-**

ஆதீன நிர்வாகம், ஆதீன மடம் கோயில்கள் என்ற இரண்டு பிரிவில் நடத்தப்படுகின்றது. ஒவ்வொருபகுதிக்கும் மேலாளர் (மானேஜர்) ஒருவரும் நிர்வாகத்துக்கு வேண்டிய மற்ற அலுவலர்களும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அந்தந்தக் கோயிலிலும் வேண்டிய அளவுக்குச் சிப்பந்திகள் நியமிக்கப்பட்டு உள்துறை நிர்வாகம் நடத்தப்படுகிறது. பல பெருங்கோயில்களில் ஆதீனத் திருக்கூட்டத்துத் தம்பிரான்களுள் ஒவ்வொருவர் மேற்பார்வையாளராக இருந்து பணியாற்றி வருவார்கள்.

வழிபாட்டிடங்கள், தெய்வத் திருமேனிகள், திருக்குளங்கள், பரிவட்டங்கள், பிரசாதங்கள், சமையல்இடங்கள், அவற்றில் பயன்படும் பாத்திரங்கள் முதலிய எல்லாம் மிகத்தூய்மையாக வைக்கப்பட்டிருக்கின்றன. நித்திய நைமித்திகங்கள் சிறப்பு விழாக்களெல்லாம் உரிய காலங்களில் மக்கள் பலரும் காணும் வண்ணம் நடத்தப்படுகின்றன.

சொத்துப் பராமரிப்பிலும் குடிபடைகளோடு அந்நியோந்நியமான நிலைமை நீடித்து வைத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. குத்தகைகளை வசூலிப்பதில் யாருக்கும்துன்பம் இல்லாமல் நிலுவை தங்காதபடி அவ்வப்போதும் வாங்கிவிட ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. நிலுவை தங்கினால் குடிமக்களுக்கும் பின்பு நாளடைவில் பெருகிப் பெரும்பாரமாக ஆகிவிடுமல்லவா? அப்பொழுது கேட்டு வாங்குவதைவிட அவ்வப்போதும் ஒவ்வொரு ஆண்டிலும் அந்தந்த ஆண்டு நிலுவைகளை அவ்வப்போதும் வசூலித்துக் கொள்வதால் இருசாராருக்கும் துன்பம் இல்லாது மனம் கோணாது நலமாகவே முடிகிறது. கூட்டுறவு முறையில் சாகுபடி வைத்துக்கொள்ள முன்வரும் குடிகளுக்கு அது நல்ல முறையில் நடக்கும்படியும் வேண்டிய உதவிகள் அளிக்கப்படுகின்றன. சில சந்தர்ப்பங்களில் தலைவர் என்று பேர் சொல்லிக்கொள்பவர்கள் சிலர் குறுக்கிட்டு நடுவில் பிளவு ஏற்படச்செய்யும் அப்பொழுதும் குடிகள் மனம் திருந்தும்வரை பொறுத்திருந்து திருந்திவந்ததும் அவர்களிடம் எந்தவித மாறுபாடும் இல்லாது எப்போதும்போல பழகப்பட்டு வருவதால் முன்பு அவர்கள் வேறுபட்டு நின்றதைக் குறித்து வருந்திய பின்னர் மிகவும் நல்லமுறையில் பழகத் தொடங்குகிறார்கள்.

குத்தகையாளர், சாகுபடியாளர் சட்டங்கள், வாடகைக் கட்டுப்பாட்டுச் சட்டம் முதலிய எல்லாச் சட்ட விதிகளின்படியே யாருக்கும் துன்பம் இல்லாதபடி பார்த்து வரப்படுகிறது. சட்ட விதிகளுக்கு ஒத்த நிலையில் நிர்வாகத்தைத் திருத்தி அமைத்துக்கொண்டு சொத்துக்கள் அதற்கேற்ப நிர்வகிக்கப்படும். இதிலும் சில சமயங்களில் வியவகாரங்கள் போடும்படி ஏற்படக்கூடும், அந்த நிலையிலும் அவ்விதம் செய்வதற்கு

முன்னதாக அதனால் பாதிக்கப்படுவோருக்கு நேரிய முறையில் முன்னறிவிப்புக்கள் கொடுத்துத் திருத்திக்கொள்ள அவகாசமும் கொடுத்து அவையெல்லாம் பயன் இல்லாமல் போனாலொழிய வியவகாரங்கள் போட்டு அதனால் பிறருக்குத் துன்பமும் அறநிலையங்களின் நல்ல பணத்தை வீண் விரயமும் செய்வதில்லை. இதுபோன்றே சொத்துரிமை வழக்கர்கள், உரிமைகளைப் பாதிக்கும்போதும் பொறுத்திருந்து பார்த்து வேறு வழியில்லாமல் இருந்தால் ஒழிய நீதிமன்றங்களில் சென்று பரிகாரம் தேடுவது கிடையாது. ஆகையால் இவ்வளவு நிதானமாக எடுக்கப்படும் வழக்குகள் ஆதீனத்துக்குச் சாதகமாகவே முடிகின்றன. ஆதீன ஆட்சியில் உள்ள நிறுவனங்களில் கடன் வாங்குதலும் பாக்கி தங்க இடங்கொடுப்பதும் இல்லை. அவ்வப்போதும் பணம் கொடுக்கப்பட்டுவிடும். பொருளாதார நிலை எப்பொழுதும் சீராக நல்லபடியாகவே இருக்கும். அதில் குறைபடுதல் கிடையாது. வரவு, செலவுகளில் வரவிற்குட்பட்டதாகவே செலவினங்கள் அமையும்படி பார்த்து வரப்படுகிறது. இவ்விதம் கண்காணிக்கப்படுவதால் எல்லா ஆலயங்களிலும் ஆதீன மடத்திலும் பெருந் திருப்பணிகளும், திருவாபரணங்கள், வெள்ளிச்சாமான்கள் முதலியன செய்து இந்த நிலையங்களின் நிலையை உயர்த்துவதற்கு உதவியாக இருக்கிறது.

திருப்பணிகள் :-

தருமையில் உள்ள ஆதீன மடம், மற்றும் அதனைச் சேர்ந்த எல்லாக் கட்டிடங்களும் உள்ளூரிலும், வெளியூரிலும் நல்ல நிலைமையில் பழுதின்றிக் காத்தலும் அவ்வப்போது ஏற்படும் பழுதுகள் உரிய காலத்தில் பார்த்துத் திருத்துதலும் முதற்பணியாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. செய்யவேண்டிய பெரும்பணிகளையும் அவ்வப்போதும் செய்ய முயற்சிகளும் எடுத்துக்கொள்ளப்படுகின்றன.

அவ்வகையில் தருமை ஆதீன மடாலயத்தில் பூஜைமடம், அஷ்டலக்ஷ்மிக் கட்டு, நடுஹால் முதலிய இடங்களில் மொசைக்கற்கள் போட்டு வேலை செய்யப்பட்டன. மேலவீதியை ஒட்டி ஒரு பெரிய விருந்தினர் மாளிகை கட்டப்பட்டிருக்கிறது. முகப்பில் திருநெறிய தெய்வத்தமிழ்மன்றம் என்ற பெயரில் கீழே தளவரிசையிட்டு அகன்ற பெரிய மன்றம் (Hall) அமைக்கப்பட்டிருக்கிறது. ஆதீன நூல்களைச் சேமித்துவைக்க நடுமுகப்பின் தெற்குப் பகுதியில் நூல் நிலையம் அமைக்கப்பட்டிருக்கிறது. ஆதீனக் கல்லூரி முதலியவை வைத்து நடத்த மெய்கண்டான் நிலையம், அருள்நந்தி நிலையம், ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் பெயரால் நிலையங்கள், அமரநாதம், பசுபதிநாதம், கேதாரநாதம், கைலாசம் என்ற சிறந்த தல யாத்திரை நினைவு நிலையங்கள் ஆகியவை கட்டப்பட்டிருக்கின்றன. வடக்கு வீதியில் ஸ்ரீலஸ்ரீ சுப்ரமணியம் ஆர்ச் சுதைவேலை, கீழ வீதியில் ஸ்ரீ தருமபுரீசுவரர் சந்நிதி, ஸ்ரீ ஞானபுரீசுவரர் சந்நிதிகளில் கைலாயயாத்திரை நினைவு வளைவுகள் கட்டப்பட்டு அணி செய்யப்பட்டிருக்கின்றன. ஆகம பாடசாலை வைப்பதற்கும் ஆதீனப்பணியாளர்கள் வீடுகளில் நிகழும் திருமணங்கள் நடத்துவதற்கும் கல்யாணக்கூட அமைப்புடைய ஷண்முகவிலாச மண்டபமும் கட்டப்பட்டிருக்கிறது. பலவிதப்பட்ட சிப்பந்திகள் குடியிருப்பதற்காக 25 வீடுகளும் வேலையாட்கள் குடியிருப்புக்கு 25 வீடுகளும் கட்டப்பட்டுள்ளன. குடியிருப்பு வீடுகள் பலவற்றிற்கும் மின்வசதி செய்யப்பட்டிருக்கிறது. ஷண்முகம் வளைவிலிருந்து வரும் வழியைத்

தார்ச்சாலையாக்கி இருபுறமும் வளைவுச் சுவர்களும் ஆரம்பப் பாடசாலையில் மேல்புறம், வடபுறம் வளைவுச் சுவர்களும் கட்டப்பட்டன. உயர்நிலைப்பள்ளிக் கட்டிடம் கட்டப் பட்டுள்ளது, சாணன் தோப்பு, தெற்குவிதி கீழவீதிப் புறங்களில் சுற்றுச் சுவர்கள் கட்டப்பட்டன. மேலைக்குருமூர்த்த சுற்றுச் சுவர்கள் திருத்தப்பட்டன. பழங் காவிரிக்கு ஒரு பாலமும் பிள்ளையார் குளத்துக்குக் கீழ்கரையும் கட்டப்பட்டன.

பிறவுதவிகள் :-

ஒருலக்ஷத்துப்பதினேழாயிரம் ரூபாய் தேசியப் பாதுகாப்பு நிதிக்கு சென்னை மாநில முதலமைச்சர் கனம், திரு. கு. காமராஜ் அவர்களிடம சேர்க்கப்பட்டிருக் கிறது. தங்கப்பத்திரங்கள் வாங்கப்பட்டிருக்கின்றன. மதுரை ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசுவர சுவாமி தேவஸ்தானத் திருப்பணிக்கு ஒருலக்ஷம் ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது

மேலக் குருமூர்த்தங்கள் மூன்றும் பெரிய ஆலயங்களாக எழுப்பப்பெற்றன. வடக்குக் குருமூர்த்தத்தில் இப்பொழுது ஆலயத்திருப்பணிகள் நடந்துகொண்டிருக் கின்றன. ஸ்ரீ ஞானபுரீசுவரர் ஆலயத்தில் வெளிப்பிரகாரம் உட்பிரகாரங்கள் தளவரிசை யிடப்பெற்றுள்ளன. விமானங்கள் கோபுரங்கள் புதுக்கி வர்ணம் வைத்து சுவாமி அம்பாள் கலசங்களுக்குத் தங்க மூலாம் இட்டு சிறப்பாகக் கும்பாபிஷேகம் நடத்தப்பெற்றது. திருமடத்தின் முன்னுள்ள ஞானதீர்த்தம் பெரியதாக்கப்பெற்று தெற்கு வடகரைகள் கட்டப்பெற்றுள்ளன. ஸ்ரீ தரும புரீசுவரர் ஆலயத்தில் வெளிப்பிரகாரங்கள் தளவரிசையிட்டும் விமானங்கள் புதுக்கி வர்ணம் வைத்தும் கும்பாபிஷேகம் செய்விக்கப்பெற்றது. உந்தூர்திகள் நிறுத்தி வைக்க மூன்று மண்டபக் கட்டிடங்களும் ஆதீனக் கூட்டுறவு பண்டகசாலையின் ஒரு பிரிவுக்கு இரு மண்டபங்களும் கட்டப்பெற்றிருக்கின்றன ஞானசம்பந்தம் அச்சகத் துக்கென தனிக்கட்டிடம் கட்டப்பட்டு வருகிறது.

திருப்பணி :-

பாபநாசம், திருநெல்வேலி முதலிய இடங்களில் புதிதாக மடத்துக்குச் சொந்த மான இடங்களில் கடை கட்டிடம் வகையறுக்கள் கட்டப்பட்டு ஆதீனத்துக்கு வருமா னம் வரும் வகையில் வாடகைக்கு விடப்பட்டிருக்கிறது.

திருநெல்வேலியில் 6 ஆவது மகாசந்நிதானம் குருமூர்த்த ஆலயம் புதி தாகத் திருப்பணி தொடங்கிச் சிற்பவேலைபாடுகளுடன் கட்டப்பட்டு வருகிறது. திருபு வனத்தில் 17 ஆவது மகாசந்நிதானம் குருமூர்த்த ஆலயம் கட்டப்பட்டிருக்கிறது.

ஆதீன மடத்துக்குச் சொந்தமான ஆலவேலி கிராமத்தில் ஒரு விநாயகர் கோவில் புதுப்பித்துத் திருப்பணி செய்யப்பட்டு வருகிறது. திருநள்ளாறு, பேரளம் முதலிய இடங்களில் கட்டளை மடம் கட்டப்பட்டு வருகிறது.

திருவாபரணங்கள் :-

ஆதீனத் திருமடத்தில் உள்ள திருவாபரணங்களனைத்தும் பழுதுபார்த்துப் புதுப்பிக்கப்பெற்றன. கிரீடம் ஒன்று கல்வைத்து இழைக்கப்பெற்றது. புதிதாகவும் பல செய்யப்பட்டுள்ளன.

பூஜைமடத்து வாயில் நிலையும் கதவும் வெள்ளித்தகடு வேயப்பெற்றது. தங்கக்குடம், தங்க வட்டா வையலு, வெள்ளிக்குடம், வெள்ளிச்சொம்புகள், வெள்ளி நாற்காலி, ஸ்ரீ ஞானபுரீசுவரருக்கு வெள்ளிக்குவளை, நந்திபார்வைத்தகடு. ஸ்ரீ மகாலக்ஷ்மி துர்க்காதேவிக்கு தங்கக் கிரீடம், பாதமும் ரூபாய் 20,000 மதிப்புள்ள 216 காசுகள்கொண்ட காசுமாலை, வெள்ளிக் கவசம் முதலியனவும் செய்விக்கப் பெற்றன.

வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரப் பெருமானுக்கு நவரத்தன கவசம் செய்வித்த சிறப்பும், வள்ளலார்கோயில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திப் பெருமானுக்குத் தங்கக் கவசம் செய்தளித்த சிறப்பும், திருக்கடவூர் ஸ்ரீ காலசம்காரமூர்த்திக்கு வெள்ளி வாயில் திருப்பணி செய்தருளிய சிறப்பும், திருநள்ளாறு ஸ்ரீ சனீஸ்வரபகவானுக்குத் தங்கக் கவசம் செய்வித்த சிறப்பும் கயிலைக் குருமணியவர்களுக்கு உரியது.

பூஜைமடம் :-

பூஜை மடத்தின் உட்புறச் சுவர்களில் ஆதீன வரலாற்றை விளக்கும் ஓவியங்கள் சிறந்த முறையில் வரையப்பட்டுள்ளன.

ஸ்ரீ மகாலக்ஷ்மி துர்க்காதேவி :-

ஸ்ரீ தருமபுரீசுவரர் ஆலயத்திற்கு வடபால் மூலையில் திருக்கோயில் எழுப்பி பதினெட்டு திருக்கரங்களோடு ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலக்ஷ்மி துர்க்காதேவி புதிதாக பிரதிஷ்டை செய்விக்கப்பெற்றது. இந்த அம்பிகை திருக்கோயிலுக்கு எதிரே தனி வாயிலும் இராஜகோபுரமும் மிக அழகிய சுதை வேலைப்பாடுகளோடு எழுப்பப் பட்டுள்ளது. ஸ்ரீ துர்க்காம்பிகை மிக்க தெய்வீகத்தோடு விளங்கும் கண்கண்ட தெய்வம். இவ்வம்பிகைக்கு நவராத்திரியில் விசேஷ யாகங்களும் அபிஷேகங்களும் செய்விக்கப்படுகின்றன. இதுவரை 3 கோடிக்கு மேற்பட்ட அர்ச்சனைகள் நிகழ்த்தப் பெற்றுள்ளன. 12 சதசண்டி யக்ஞம் நடத்தப்பெற்றுள்ளது.

வனதுர்க்கை :-

ஸ்ரீ ஆனந்த பரவசர் பூங்காவில் வனதுர்க்கை பிரதிஷ்டைசெய்விக்கப்பெற்று விசேஷ அர்ச்சனை ஆராதனைகள் செய்விக்கப்பெற்று வருகின்றது.

கனகாபிஷேகம் :-

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் ஆட்சியேற்றது முதல் அன்பர்களுக்கு அறிவுரை வழங்கியும், இறைபணி, மக்கட்பணி, கல்விப்பணி முதலியவற்றைச் சிறக்கச் செய்தும், பாரதபூமியில் உள்ள பெருந்தலங்கள் தீர்த்தங்கள் எல்லாவற்றையும் வழிபட்டும் வந்த பெருமையோடு இமயப் பெருந்தலங்களையும் அதற்கப்பால் உள்ள மகாகயிலாய தரிசனம் செய்து மானசசரோவரம் தீர்த்தமாடி வந்த சிறப்பும் உடையவர்கள் ஆதலின் அன்பர்கள் பலரும் இவர்களுக்குக் கனகாபிஷேகம் செய்வித்துத் தரிசிக்கவேண்டுமென்று விரும்பினர். அதற்கெனத் தனிக்

கமிட்டிகள் நிறுவப்பெற்றன. அன்பர்கள் பலரும் பெரும் பொருள் அளித்து குருவருளுக்கு உரியவராயினர். 1008 அரைப்பவுன் அளவுள்ள பொன்மலர்களைக் கொண்டு 12—3—1961 அன்று திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் அருச்சித்து அபிஷேகிக்க கயிலைக் குருமணியவர்களின் கனகாபிஷேகம் மிகச் சிறப்பாக நிறைவேறியது.

இந்தியநாட்டின் பல பகுதிகளிலிருந்து இவ்விழாவிற்கு அன்பர்கள்வந்து குருதரிசனம் செய்து இன்புற்றது குறிப்பிடத்தக்கது.

கனகாபிஷேக நினைவு வளைவு :-

12—3—1961 இல் நடைபெற்ற கனகாபிஷேக நினைவாக ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி சந்நிதிக்கு எதிரில் கீழவீதியைச்சார மிகச் சிறந்த சுதைவேலைப்பாடுகளுடன் கயிலைக் குருமணி அவர்களின் தலயாத்திரையை விளக்கும் சிற்பங்களுடனும் கனகாபிஷேகச் சிற்பத்துடனும் ஒரு பெரிய வளைவு நிறுவப்பெற்றுள்ளது.

சைவ சித்தாந்தக் கல்லூரி :-

கனகாபிஷேக நினைவாகச் சைவ சித்தாந்தச் சிறப்பு வகுப்புப் பயிற்றுவிக்கும் சைவ சித்தாந்தக் கல்லூரி ஒன்றும் துவக்கப்பெற்றுள்ளது. ஆதீனத் தமிழ்ப்புலவர், சித்தாந்தப் பேராசிரியர், வித்துவான், திரு. சி. அருணைவடிவேல் முதலியார் அவர்களால் வகுப்புக்கள் நடத்தப்பெறுகின்றன. இக் கல்லூரிக்கான அடிக்கல் நாட்டு விழாவை இந்திய அரசின் முன்னாள் அமைச்சர் டாக்டர். திரு. பி. சுப்பராயன் ( பார் - அட்லா ) அவர்கள் நிகழ்த்தினார்கள். இக் கல்லூரிக்கான பாடத் திட்டங்கள் மிகச் சிறப்புற சித்தாந்தப் பேராசிரியரவர்களால் வகுக்கப்பட்டுள்ளன. மாணவர்கள் சைவசித்தாந்தம் கற்பதுடன் உலக சமயத் தத்துவங்களையும் கற்றுணர்ந்து சிறப்புறவேண்டும் என்பது ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் பெரு விருப்பமாகும். சைவசித்தாந்த வளர்ச்சிக்காக கனகாபிஷேக பொற்காசுகளின் ஆதாயம் முழுவதும் அப்படியே அறக்கட்டளையாகச் செய்தருளினார்கள்.

கோடி அருச்சனை - வேள்விகள் :-

அருச்சனை புரிவதாலேயே இறைவன் திருநாமங்களைக் கூறுவது, கேட்பது, ஆகிய சிவபுண்ணியங்கள் செழித்து வளர்கின்றன. இச் சிவபுண்ணியம் நாடெங்கும் பரவவேண்டும் என்பது ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களது திருவுள்ளம். ஆதீன தேவஸ்தானங்களில், மாயூரம் வள்ளலார்கோயில், வைத்தீசுவரன்கோயில் ஆகியவற்றில் ஸ்ரீ மேதா தட்சிணாமூர்த்திக்கும் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரப் பெருமானுக்கும் கோடி அருச்சனைகள் நிகழ்த்தியுள்ளார்கள். ஆதீனத்தைச் சார்ந்த தருமபுரத்தில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலட்சுமி துர்க்கா தேவிக்குக் கோடியருச்சனைகள் பல புரிந்துள்ளார்கள். வருஷந்தோறும் சதசண்டி யக்ஞம் முதலிய பெருவேள்விகள் நிகழ்ந்துவருகின்றன. இதனால் உலகு நற்பலன்

எய்திவருவது கண்கூடு. இத்தகைய கோடி அருச்சனைகளும் வேள்விகளும் உலக நலம் கருதிப் புரிந்துவரும் திருவருட் பெருங்கருணையை எடுத்து ஏத்தாதவரும் உளரோ ? உலகம் வாழவேண்டும், உலகம் செழிக்கவேண்டும், உலகம் ஓங்கவேண்டும் என்பதே நம் தவச்சான்றோர் பேருள்ளமாக இருந்துவருகின்றது. அவ்வகையில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களும் உலகநலம் கருதி இவற்றைப் புரிவதைத் தம் கடமையாகக் கருதிச் செய்துவருகின்றார்கள்.

### சமயாசாரியர் விழா :-

ஆசாரியனை வழிபடுவதும், ஆசாரியனுடைய திருவார்த்தைகளைச் சிந்திப்பதும், உய்திதரும் உயர் நெறிகள். சமயாசாரியர் சந்தானசாரியர்களிடம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் கொண்டிருக்கும் ஈடுபாடும் பக்தியும் இணையற்றவை. சமயாசாரியர்களது குருபூஜை தினங்களில் அவர்களது திருவுருவங்களைத் திருவீதி உலாச் செய்வித்துத் திருவீதிகளில் ஆங்காங்கு அவர்களுடைய அற்புத விளக்கங்களைத் தக்காரைக் கொண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்துவித்து எல்லார் உள்ளத்தும் நல்லன பரவச்செய்து வருகின்றார்கள். தருமையிலேயே சந்தானசாரியர் திருவுருவங்களைப் பிரதிட்டை செய்வித்து அனைவரையும் வழிபட ஆற்றுப்படுத்திய பெருமை இவர்கட்குண்டு. இவ்வாறு நிகழ்த்தும் இவ்வரும்பெருஞ் செயல்களால் நம் ஆசாரியர்களிடத்து நாம் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்று மக்கள் ஒவ்வொருவரும் எண்ணி ஒழுகி உய்திபெறுகிறார்கள்.



தெய்வத் தமிழோ கலைப் பொக்கிஷமாக விளங்குகிறது ; எடுக்க எடுக்கக் குறையாத பொருள் வளம் உடையது. நாம் காட்டுகின்ற மேற்கோள்கள் எல்லாவற்றிற்கும் இத் தெய்வத் தமிழ் இடந்தந்து நிற்கும். நம் நாட்டுக் கலைப் பொக்கிஷங்களைப் பிறநாட்டார் மொழி பெயர்த்தும், விரும்பிப் படித்தும் பயன்பெறுகின்றனர். ஆனால் நாமோ நம்மிடம் உள்ள கலைப் பொருளை மறந்து பிறநாட்டு மொழியாசிரியர்கள் கூற்றை மேற்கோளாக எடுத்துக் கூறுகிறோம். நம்மிடம் சரக்கு இல்லையென்றால் பிறர் கையை எதிர்பார்க்க வேண்டியதுதான். நம்மிடம் பழங்காலச் செல்வம் எவ்வளவோ இருக்கின்றது. அவைகளை வைத்துக்கொண்டு பிறர் கையை எதிர்பார்ப்பது கூடாதல்லவா ?

— கயிலைக் குருமணி.

# திருத்தருமையாதீன ஆலயங்கள்

திருத்தருமையாதீன நிர்வாகத்தில் உள்ளவை இருபத்தேழு திருக்கோயில்கள். இருபத்தேழு விண்மீன்களாக இவையனைத்தும் விளங்குகின்றன. திருத்தருமையாதீன தேவஸ்தானங்கள் என்றால் ஒரு தனி முத்திரையுடனிருத்தலைத் தமிழ் உலகு காண கின்றது. தக்க மேற்பார்வை, செம்மையான வழிபாடு, செப்பமான திருப்பணிகள், கண்ணைக் கவரும் சிற்பச் சித்திரங்கள், கருத்தைக் கவரும் திருமுறைப் பாராயணங்கள், சிந்தனையைத் தூண்டும் சிறப்பான திருவிழாக்கள் முதலிய எல்லா வகையாலும் திருத் தருமையாதீன தேவஸ்தானங்கள் சிறந்து விளங்குகின்றன. இவ்வளவு சிறப்புக்கும் ஆட்சி நலத்தில் இணையற்று விளங்கும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் தெய்வ பக்தியும், ஆர்வமும், சொல்திறனும் ஆகும். இவர்கள் அருளாட்சி ஏற்றது முதலாக செய்துள்ள சில நலங்களை இங்குச் சுருக்கமாக காண்போம்.

## 1. வைத்தீசுவரன்கோயில் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 4,10,000/ மூர்த்தி தலம் தீர்த்தம் மூன்றாலும் சிறப்புற்றது இத்திருத்தலம். தீராதவினைகளையெல்லாம் தீர்த்து இன்னருள் புரியும் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி ஆலயத்தில் பல திருப்பணிகள் புதிதாக நடைபெற்றிருக் கின்றன.

வடக்கு வெளிப் பிராகாரம் மதில் புதிதாக எழுப்பப்பட்டது. ஆலயத்தி லிருந்து கழிநீர் செவ்வனே வடிய வடிகால் புதிதாக அமைக்கப்பட்டது. வாகன மண்டபம், அலுவலகக் கட்டிடம், பசுமடம், பண்ணை மாட்டுக் கொட்டகைகள், நெற்களஞ்சியம், பிரசார மண்டபம், யாத்திரிகர்கள் தங்குவதற்கேற்ற பெருங் கொட்டகை, விடுதிக் கட்டிடம் முதலியன கட்டப்பெற்றன. நான்கு பக்கமும் கருங் கல்லில் தளவரிசை இடப்பட்டது. அம்பாள் சன்னதி தட்டிசுற்றி மண்டபம், உட்கோயில் தளவரிசைகள், சண்முக விலாசப் பிரசங்க சபா மண்டபங்கள் முதலியன செப்பனிடப்பட்டுள்ளன. உள்மண்டபங்களிலும், தூண்களிலும், சந்தனக்குழம்பு மண்டபத்திலும் சித்திரங்கள் தீட்டப்பட்டுள்ளன. சுவாமி அம்பாள் சந்நிதிகளில் அன்பர்கள் சௌகர்யமாக வழிபடத் தக்க வகையில் கைப்பிடி அமைக்கப்பட்டிருக் கிறது. அறுபத்துமூவர் சந்நிதி, நூல்நிலையம், பழைய வாகன மண்டபம், ஆஸ்தான மண்டபம் இவைகளில் கம்பி அடைப்பு செய்யப்பட்டிருக்கிறது. சந்தனக்குழம்பு மண்டபத்தில் அன்பர்கள் சந்தனக்குழம்பு எளிதாக, முறையாக பெற வசதியாக வழி அமைத்து அடைப்பு அமைக்கப்பட்டிருக்கிறது. இரயில் நிலையத்திற்கு அண் மையில் சேவார்த்திகள் தங்க எட்டு அறைகள் கொண்ட விடுதி கட்டப்பட்டிருக் கிறது. இவ்வூர் உயர்நிலைப்பள்ளிக்கு பிரார்த்தனை மண்டபம் ஒன்றும், சிப்பந்திகள் குடியிருப்புக்கு வீடுகளும் கட்டிவரப்படுகின்றன. தேவார பாடசாலை, ஆகமப் பாட சாலை, இந்து அனாதைக் குழந்தைகள் விடுதி, இலவச சித்த வைத்தியசாலை வைத்துப்

பராமரிக்கப்படுகிறது. பள்ளிச் சிறுவர்களுக்கு மதிய உணவளிக்கப்படுகிறது. கட்டளைமடம் கட்டப்பட்டிருக்கிறது.

தங்கத்தில் குடங்கள் மூன்றும், அபிஷேகக்கலசம் ஒன்றும், கற்பூரபஞ்ச ஆரத்தி ஒன்றும், பிரசாதத் தாம்பாளம் ஒன்றும், சகஸ்ரதாரை ஒன்றும் செய்திருக்கின்றன. சுவாமிக்கு நாகாபரணம், குவளை ; அம்பிகை, ஆறுமுகக்குமாரர், விநாயகர் ஆகிய மூர்த்திகளுக்கு தங்கத்தில் கவசங்கள் செய்யப்பெற்றிருக்கின்றன. ஸ்ரீ செல்வமுத்துக்குமாரர்க்கு நவரத்தின கவசம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்களின் ஆர்வத்தாலும், அன்பர்கள் பலருடைய காணிக்கைகளாலும் செய்விக்கப்பெற்றுள்ளது.

சிறப்பாக சுவாமி அம்பாள் செல்வமுத்துக்குமாரசுவாமி ஆறுமுகக்குமாரர் சன்னிதி பார்வையாகவும், எடுப்பாகவும், கவர்ச்சிகரமாகவும் அமைய பித்தளைத் தகட்டில் நகாஸ்வேலை செய்து அலங்கரித்திருக்கிறது. அதற்கேற்றாற்போல, சரவிளக்கு தோரணவிளக்கு குத்துவிளக்குகள் பிரகாசிக்கச் செய்திருக்கிறது.

மண்டப விளக்குகள் இரண்டு, ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி மஞ்சம் பார்வைத்தகடு, அபிஷேகவேதி, குடங்கள், அண்டாக்கள், சொம்புகள், பிரசாதத் தாம்பாளம், பூக்குடலைகள், ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி ஸ்ரீ அம்பாள் சந்நிதிகளில் நிலைக்கதவுகள் முதலியன வெள்ளியினால் செய்யப்பட்டுள்ளன. பழனியாண்டவர், அங்காரகன், துர்க்கை, தட்சிணாமூர்த்தி, உள் நந்தி, கண்ணாடி இவைகளுக்கு வெள்ளிக் கவசங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அங்காரகன் உற்சவர், பள்ளியறைப் பல்லக்கு, மூஞ்சூர், ரிஷபவாகனங்கள், தங்கமுலாமிட்ட மயில்வாகனம், ஸ்ருவம் முதலானவையும் வெள்ளியில் செய்யப்பட்டிருக்கின்றன. மேற்கண்டவைகளைப் பாதுகாப்பாக வைக்கப் பெரிய காட்ரஜ் இரும்பு பெட்டிகள் வாங்கப்பட்டிருக்கின்றன. மகத்துவஜஸ்தம்பத்திற்கு புது மரம் வாங்கி நிறுத்தி தங்கமுலாமிட்ட குவளைகள் போடப்பட்டிருக்கின்றன. வெகுகாலமாக தொந்திரவுதந்துகொண்டிருந்த புரொப் போசல் நில விஷயமாக ஒருவித பைசல் கண்டுபிடித்து அந்த வேலை துரிதமாக நடந்துகொண்டிருக்கிறது.

## 2. சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 2,60,000/ சுவாமி கோயில் திருச்சுற்று மதில்கள் பழுதுபார்க்கப்பட்டு கோஷ்டமூர்த்தங்கள் மூலை பூத ரிஷபங்கள் அமைக்கப்பெற்றிருக்கின்றன. கிழக்கு வெளிமதிலை ஒட்டி சந்நிதியில் இறக்கைச்சுவர், வடபகுதியில் பசுமடம் முதலானவை கட்டப்பட்டுள்ளன. ஆலயத்திலுள்ள எல்லா விமானங்களும் பழுது பார்க்கப்பட்டு வர்ணம் வைத்து, சுவாமி அம்பாள் ஞானசம்பந்தர் விமானங்களுக்கு தங்கமுலாமிட்ட கலசங்கள் அமைத்து மிகச் சிறந்த முறையில் மகாகும்பாபிஷேகம் நடத்தப்பட்டது. இப்போது கணநாத நாயனாருக்கு கோயில் கட்டப்பட்டுள்ளது. வெளிப் பிராகாரம் கருங்கல் தளவரிசை இடப்பட்டுவருகிறது. திருக்குளத்தில் திருஞானசம்பந்தர் திருமுலைப்பால் பெற்ற இடத்தில் அந்த ஐதீகம் விளங்க ஒரு வளைவும், அதன் எதிரே பெருமானும் பெருமாட்டியும் பால் வழங்க எழுந்தருளிவக் ஒரு வாயிலும், அதன்மீது ஐதீகச் சுதையும் அமைத்துக் கட்டப்பட்டுள்ளன. தெற்குர

கோபுரத்தை ஒட்டியுள்ள விநாயகர், சுப்பிரமணியர் ஆலயங்கள், தேரடி விநாயகர் ஆலயங்கள் புதுப்பிக்கப்பட்டன. திருஞானசம்பந்தர் கோயில் திருமாளிகைப்பத்திகள் பழுதுபார்த்துத் தளவரிசை போடப்பட்டிருக்கிறது. அம்பாள் கோயில் வடக்குத் திருமாளிகைப்பத்தி கட்டப்பட்டது. பிராகாரங்கள் கருங்கல்லால் தளவரிசையிடப்பட்டது. சிப்பந்திகளுக்கு வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. யானை கட்டும் மண்டபம் கட்டப்பட்டது. தேரடிகள் பழுதுபார்க்கப்பட்டன. ஸ்ரீ திருஞானசம்பந்தர் அபிஷேக விழாவும், ஸ்ரீ முத்துச்சட்டைநாதர் புறப்பாடும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் ஏற்படுத்திய சிறப்பு விழாக்களாகும்.

அம்பிகைக்கும் திருஞானசம்பந்தருக்கும் தங்கக் கவசங்கள் செய்யப்பட்டன. தங்கக் குடம் ஒன்றும், காசுமாலை, மாங்காய்மாலை, பதக்கங்கள் முதலியனவும் செய்யப்பட்டன. வெள்ளியினால் செய்யப்பட்ட சுவாமிக்கு சார்த்தும் குவளை, நாகாபரணம், அம்பிகைக் கவசம், திருஞானசம்பந்தர் மஞ்சம், இரதம், குடம் 3, சொம்புகள் 8, சோடசோபசார சாமான்கள், தாம்பாளம் முதலியனவும் உள்ளன. ஸ்ரீ முத்துச்சட்டைநாதருக்கு வெள்ளி மஞ்சம் செய்யப்பட்டுள்ளது. புதிதாக வெள்ளி இரதம் ஒன்று அழகிய முறையில் செய்யப்பெற்றுள்ளது. அம்பாள் கோயில் பிராகாரம், சுவாமி கோயில் வடக்குப் பிராகாரம் கருங்கல் தளவரிசை போடப்பட்டது.

### 3. ஆச்சாள்புரம் ஸ்ரீ சிவலோகத்தியாகராஜசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 30,000/ பிரம்ம உற்சவம் நடக்கிறது. திருஞானசம்பந்தர் ஐக்கிய ஐதீக உற்சவம் சிறப்பானது. வெளிப் பிரகாரம் பூராவும் தளவரிசை போடப்பட்டுள்ளது. திருமடைப்பள்ளி, சாலவம் இவைகள் பழுது பார்க்கப்பட்டன. இராஜகோபுரத்தை ஒட்டி உட்புறத்தின் தென்பக்கத்தில் தளவாடங்கள் போட இரும்புச் சார்ப்பு அமைக்கப்பட்டிருக்கிறது. எல்லா விமானங்களையும் பழுதுபார்த்து புதுப்பித்தும், கோபுரம் பழுதுபார்த்தும், எல்லாவற்றிற்கும் வர்ணம் தீட்டி மற்றும் பல சில்லரை திருப்பணிகள் செய்து மகாகும்பாபிஷேகம் செய்ய ஏற்பாடாகிவருகிறது. வெள்ளியில் விபூதி மடல், கற்பூரக்கிளை, கமலத்தாம்பாளம் முதலியனவும் இவ்வாலயத்திற்கு செய்யப்பெற்றுள்ளன.

### 4. திருமுல்லைவாயில் ஸ்ரீ முல்லைவனநாதசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 4000/ நித்திய காரியங்களுக்கே போதாதநிலை. இவ்வாலயத்தின் விமானங்கள் புதுக்கி, மதில்கள் மண்டபங்கள் பழுதுபார்த்து, மதில்கள் எடுத்து மகாகும்பாபிஷேகம் செய்விக்கப்பட்டது. சிப்பந்திகள் குடியிருப்பு வீடுகள் பழுதுபார்க்கப்பட்டுள்ளது.

### 5. தலைஞாயிறு ஸ்ரீ குற்றம்பொறுத்தீசுவரசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 14,000/ பல ஏறுபடிகள் நடக்கின்றன. திருக்கோயிலில் மலைக்கோயில் அடியிலிருந்து பிரித்துக் கட்டி சுதையில் உமாமகேசர், சட்டைநாதர் திருவுருவங்கள் அமைக்கப்பட்டிருக்கிறது. மண்டபங்கள், விமானங்கள்,

கோபுரம் பழுதுபார்த்து வர்ணம் வைத்து மகாகும்பாபிஷேகம் செய்யப்பட்டது. நந்தவனம் திருச்சுற்றுசுவர் எடுத்து பராமரிக்கப்பட்டுவருகிறது. சிப்பந்திகளுக்கு குடியிருப்பு வீடுகள் கட்டப்பட்டன. விபூதி மடல், கற்பூரக்கிளை முதலியன வெள்ளியினால் செய்யப்பட்டிருக்கின்றன.

### 6 குறுக்கை ஸ்ரீ வீரட்டேசுவரசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 20,000/ இவ்வாலயத்தில் வெளித் திருச்சுற்று மதில் அமைந்து, விமானங்கள், மண்டபங்கள் பழுதுபார்த்து புதுப்பித்து கட்டப்பட்டிருக்கின்றன. கோபுரம் புதுப்பிக்கப்பட்டது. வர்ணம்தீட்டி மகாகும்பாபிஷேகம் செய்விக்கப்பட்டது. திருக்குளத்திற்கு படித்துறை கட்டப்பட்டிருக்கிறது. சிப்பந்திகளுக்கு குடியிருப்பு வீடுகள் கட்டப்பட்டுள்ளன. அலுவலகக் கட்டிடம் திருத்தியமைக்கப்பட்டிருக்கிறது. உள்கோயில் கீழ்ப்பிராகாரத்தை ஒட்டி மண்டபம் அமைத்துப் பரிவாரங்களை எழுந்தருளச்செய்திருக்கிறது. சந்நிதியில் அதிகார நந்திகளுக்கு விமானம்கட்டி பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது.

இத்திருக்கோயிலில் மகரிமாலை, மகரித்தொங்கல், பதக்கம் முதலிய திருவாபரணங்களும், வெள்ளியில் விபூதிமடல், தாம்பாளம், கற்பூரக்கிளை, சம்ஹாரமூர்த்திக்கு வெள்ளி மஞ்சம், பெருமானுக்கு நாகாபரணம், குவளை, அம்பிகைக்கு கிரீடம் இவைகள் செய்து இருக்கின்றன.

### 7. வள்ளலார்கோயில் ஸ்ரீ வதான்யேசுவரசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 20,000/ துலா உற்சவம் நடக்கிறது. இவ்வாலயத்தின் மேலவாயில் தெற்குவாயில்களை புதுக்கிக்கட்டி, தளவரிசையிட்டு, விமானங்கள் இராஜகோபுரம் முதலியன பழுதுபார்த்து மகாகும்பாபிஷேகம் செய்விக்கப்பட்டது. உட்பிராகாரம் தளவரிசையிடப்பட்டிருக்கிறது. அம்மன்கோயில் முன்புறத்தில் கொட்டகை அமைக்கப்பட்டது. ஸ்ரீ மேதா தட்சிணாமூர்த்திக்கு தங்கக்கவசம் செய்யப்பட்டிருக்கிறது. தவிர திருவாசி, கல்லாலமரம், ஸ்ரீ துர்க்கைக்கும் ஸ்ரீ சனீஸ்வர பகவானுக்கும் கவசங்கள், கற்பூரக்கிளை, விபூதிமடல், தாம்பாளம் முதலியன வெள்ளியினால் செய்யப்பட்டிருக்கின்றன. கோடி அர்ச்சனை முதன்முதலாக நடந்தது இப்பெருமானுக்கே.

### 8. மாயூரம் ஸ்ரீ காசி விசுவநாதசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 3500/ துலா உற்சவம் நடக்கிறது. இவ்வாலயத்தை அடியிலிருந்து புதிதாக கருங்கல் திருப்பணி செய்து சுற்று நீராழி மண்டபம் கட்டி காசிபாணியில் சுவாமி விமானம் அமைத்து, இதர விமானங்கள் எழுப்பி திருமாளிகைப்பத்தி மடைப்பள்ளி முதலியவை கட்டி புதிய ஆலயமாக ஆக்கி மகாகும்பாபிஷேகம் செய்யப்பட்டது. அம்மன் சந்நிதிக்குத் தெற்கு வாயிலில் சுதை வேலைப்பாடுகளுடன் இரும்புக் கதவு அமைத்து அழகிய வாயில் அமைக்கப்பட்டிருக்கிறது.

### 9. மாயூரம் குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 45,000/ இவ்வாலயத்தின் ஆஸ்தான மண்டபம் கட்டப்பட்டிருக்கிறது. கருங்கல் தளவரிசை போட்டிருக்கிறது. குமார விலாச மண்டபம், ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி விமானம் பழுதுபார்த்து சுவாமி, அறுபத்துமூவர் முதலிய மூர்த்திகளுக்கு மருந்து சார்த்தி மகாகும்பாபிஷேகம் செய்யப்பட்டது. களஞ்சிய அறை, அலுவலகம் பழுதுபார்த்து செப்பனிடப்பட்டன. யாத்திரிகர்கள் தங்க சந்நிதியில் விலைக்கு வாங்கி சகல நவீன வசதிகளுடன் விடுதிக் கட்டிடம் புதிதாகக் கட்டப்பட்டிருக்கிறது. ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு தங்கக் கவசம் செய்யப் பட்டது. வள்ளி தெய்வயானைக்கு கவசம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. குடம், சோடசோபசார சாமான்கள், விளக்குகள் வெள்ளியினால் செய்யப்பட்டன. கந்தசஷ்டி உற்சவம் நடக்கிறது.

சுமார் ஐந்து ஏக்கர் நிலத்தில் சவுக்கைகள் தேவஸ்தானத்தில் போடப்பட் டிருக்கிறது. நிலம் குத்தகை நெல் கலம் 500/ வரை அதிக ஆதாயம் வருகிறது.

### 10. விளநகர் ஸ்ரீ துறைகாட்டும்வள்ளலார்சுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 17.000/ இவ்வாலயத்தின் விமானங்கள், இராஜகோபுரம் முதலியன பழுதுபார்த்தும், புதிதாக சுதைகளில் உருவங்கள் அமைத்தும், வர்ணம் தீட்டப்பட்டது. வெளிப் பிராகாரம், உட்பிராகாரங்கள் தள வரிசையிட்டும் மகாகும்பாபிஷேகம் சிறப்பாகச் செய்விக்கப்பட்டது. சுவாமிக்கு வெள்ளியில் நாகாபரணம் செய்யப்பட்டது. விபூதிமடல், தாம்பாளம், கற்பூரகிண்ணி முதலியவை வெள்ளியினால் செய்திருக்கின்றன. மைக்வைக்கப்பட்டது. திருப்பதிகக் கல்வெட்டு அமைக்கப்பட்டது, நால்வர்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. நான்கு ஏக்கரில் சவுக்கை போடப்பட்டிருக்கிறது. சாகுபடி செய்யும் ஹரிஜனங்களுக்கு (சுமார் முப்பதுபேர்) வீடு கட்டிக்கொள்ள மனை பகுதிக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது.

### 11. திருப்பறியலூர் ஸ்ரீ வீரட்டேசுவரசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 25,000/ மாயூரம் தரங்கம்பாடி ரோட்டில் - செம்பொன்னார்கோயிலிருந்து தென்மேற்கில் ஒருமைல் தூரத்தில் இருக்கின்றது. சுவாமி : ஸ்ரீ வீரட்டேசுவரர். அம்பாள் : ஸ்ரீ இளங்கொம்பனையாள் என்றும், ஸ்ரீ ஞானம்பாள் என்ற இரண்டு பெயர்களும் உண்டு. அஷ்டவீரட்டத் தலங்களில் ஒன்று.

சமீபத்தில் கோயில் விமானங்கள் எல்லாம் நல்லமுறையில் பழுதுபார்த்து வர்ணம் வைத்து, சுவாமி அம்பாள் பரிவாரங்களுக்கு மருந்து சார்த்தி மகாகும்பா பிஷேகம் செய்யப்பட்டிருக்கிறது. கோபுர வாசலில் ஒரு கொட்டகையும் போடப்பட் டிருக்கிறது. ஆபீஸ் கட்டிடம் புதிதாகக் கட்டப்பட்டிருக்கிறது. கோயிலைச் சேர்ந்த புறக் கோயில்களும் மருந்து சார்த்தி மகாகும்பாபிஷேகம் செய்யப்பட்டிருக்கிறது.

திருத்தகுமையாதீன

திருக்குளம் தண்ணீர் இறைத்து, சேர் அள்ளி வெட்டப்பட்டிருக்கிறது. அதன் கறைகளிலும், கோயிலை சேர்ந்தாற்போல் பக்கத்திலும் நூறு தென்னம்பிள்ளைகள் போடப்பட்டிருக்கிறது. கிராமத்தில் பாசன வாய்க்கால் மதகு சர்க்கார் உதவித் தொகை ஒரு பகுதியில் கட்டப்பட்டிருக்கிறது.

நஞ்சை நிலங்கள் குத்தகை விட்டிருப்பதில் முன் இருந்ததைவிட நெல் கலம் 600—00 அதிகமாகி இருக்கிறது.

சுவாமிக்கு வெள்ளி நாகாபரணமும், மற்றும் உள்ள சாமான்களும் செய்யப் பட்டிருக்கிறது. முன் இருந்ததைவிட திட்டம் அதிகம் செய்தும், கோயில் பூஜை காலங்களில் மேளம் சேவகம் செய்யவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. உற்சவ மண்டபம், பிராகாரம் தளவரிசை. ஸ்ரீ'காலசம்காரமூர்த்தி முன்பக்கம் மண்டபம், சிப்பந்திகள் குடியிருப்புக்கு வீடு வகையரா கட்டவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. தேவாரப் பதிகக் கல்வெட்டு வைக்கப்பட்டிருக்கிறது.

## 12. திருவாரூர் இராஜன் கட்டளை :

வருஷ வருமானம் சுமார் ரூ. 2,00 000/ கட்டளை சுவாமிகள் தங்குமிடம் கட்டப்பட்டது. மேல்புறத்தில் நூல்நிலையம் திருத்தி அமைக்கப்பட்டது. அலுவலகம், சேவார்த்திகள் தங்க இடங்கள் கட்ட ஏற்பாடாகிவருகிறது.

கிடாரங்கொண்டான் கிராமத்தில் திருமதிற் சிறப்புடைய ஆலயம் புனருத் தாரணவேலை] நடைபெற்றுவருகிறது. ஸ்ரீ தியாகராஜசுவாமி ஆலயத்தில் பல ஏறுபடிகள் நடத்தப்படுகின்றன, நித்தியப்படியில் பெருஞ்செலவில் திட்டம் அமைத்து செய்யப்படுகிறது. பசுமடம் வைத்திருக்கிறது. சுவாமிக்கு தினமானம் அபிஷேகம் செய்து குழந்தைகளுக்கு வினியோகம் செய்யப்படுகிறது. நிலம் பண்ணை சாகுபடி நடக்கிறது. சாகுபடியாளர்கள் கூட்டுறவு சங்கத்துக்கு இரண்டு கிராமங்கள் கொடுக் கப்பட்டிருக்கின்றன.

## 13. திருக்குவளை ஸ்ரீ தியாகராஜசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 1,00,000/- திருவாரூர் திருத்துறைப்பூண்டி ரோட்டில் கச்சனம் என்ற ஸ்தலத்திலிருந்து கிழக்குப்பக்கத்தில் ஆறுமைல் தொலைவில் உள்ளது. தலைஞாயர் திருவாரூர் பஸ்மார்க்கத்தில் இந்த ஸ்தலம் அமைந்திருக் கிறது. சப்தவிடங்க ஸ்தலங்களில் ஒன்று. இந்த ஸ்தலத்தில் நவக்கிரகங்கள் நேர்வரிசையாக இருக்கிறது. ஸ்தலத்தில் அர்ச்சித்து பூசிப்பவர்களுக்கு நவக்கிரகங் களின் கோள் இல்லை ஆகையால்தான் நேர்முகமாக இருக்கிறது என்று கூறுவர். சுவாமி ஸ்ரீ பிரமபுரீசுவரர். அம்பாள் ஸ்ரீ வண்டமரும்பூங்குழலம்மை. பிரதான மூர்த்தி ஸ்ரீ தியாகராஜா.

ஸ்ரீ தியாகராஜாவிற்கு வருஷத்தில் ஆறு அபிஷேகம் உள்ளது. முக்கிய உத்சவம் திருவாதிரை. அன்று ஸ்ரீ தியாகராஜா பாததரிசனம்நிகழும். வைகாசி விசாகம் முதலிய உத்சவங்கள் நடைபெறுகின்றன.

இந்த தேவஸ்தானத்தில் இராஜகோபுரம் திருத்தி நல்லமுறையில் திருப்பணி செய்து, மதில் சுவர் வேலை செய்யப்பட்டிருக்கிறது. ஆபீஸ் கட்டிடம், கோயில் இவற்றிற்கு மின்விளக்குகள் போடப்பட்டுள்ளன. சுவாமி சந்நிதி, அம்பாள் சந்நிதி, இராஜ கோபுரம் - இரண்டாவது கோபுரம் மத்தியபாகம் இவை கருங்கல் தளவரிசை போடப்பட்டிருக்கின்றன. சந்நிதிகளுக்கு பந்தோபஸ்தை உத்தேசித்து இரும்பு கம்பிக் கதவுகளும், உத்சவமூர்த்திகள் இருக்கும் பாகம் நல்லமுறையில் பார்வையாக கம்பி அடைப்பு வேலையும் செய்யப்பட்டிருக்கிறது. சுவாமி கோயில் விமானம், அம்பாள் விமானம் முதலியனவும். இரண்டாவது கோபுரம் முதலிய பாகங்களும் திருப்பணி வேலை ஆரம்பித்து நடந்து வருகிறது. பிராகாரம் தளவரிசை செய்யவும் ஏற்பாடு செய்துவருகிறது.

முன்பக்கத்தில் உள்ள தீர்த்தம் தண்ணீர் இறைத்து சேர் அள்ளி சுத்தம் செய்யப்பட்டிருக்கிறது. கைப்பிடிச்சுவர் ஒரு அளவிலும், படித்துறையும் கட்ட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. சுற்றுபக்கத்தில் தென்னம்பிள்ளைகள் போட்டிருக்கிறது.

நாட்டிருப்பு என்ற கிராமம் கூட்டுறவு சாகுபடிக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீ தியாகராஜாவிற்கு வெள்ளி மஞ்சமும், ஸ்ரீ பிரமபுரீசுவரருக்கு வெள்ளி நாகாபரணமும் மற்றும் வெள்ளிக் குடங்களும், வெள்ளிக் குத்துவிளக்குகளும் செய்யப்பட்டிருக்கின்றன,

நீண்டகாலமாக நின்ற உத்சவத்தை நல்ல முறையில் செய்யவும், மற்றும் நித்தியபடி திட்டம் முதலியன நல்ல முறையில் திருத்தம் செய்து கோயில்காரியங்கள் உத்சவாதிகள் நல்ல முறையில் மேலும் நடத்தவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

பிராகாரத்தில் ஆட்டோமேட்டிக் மோட்டார் வைத்து பொது ஜனங்கள் குடிதண்ணீர் உபயோகத்திற்கு ஏற்றதாக வெளியில் கொண்டுவந்து குழாய் வைக்கப்பட்டிருக்கிறது. பள்ளி மாணவமாணவிகளுக்கு மதிய உணவு சுமார் ஐம்பது குழந்தைகளுக்கு அளிக்கப்படுகிறது. சிப்பந்திகள் குடியிருப்பு வீடுகளும், கோயில் ஐதீகம் தெரியும்படி வளைவுகளும் கட்டவும் உத்தேசிக்கப்பட்டிருக்கின்றன.

தேவாரக் கல்வெட்டு வைக்கப்பட்டிருக்கிறது. காலை மாலை தேவாரப் பாராயணம் செய்ய ஓதுவார் நியமனம் செய்து, ஒலிபெருக்கி வைத்து அதன்மூலம் பாராயணம் செய்யவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

### 14 பேரளம் ஸ்ரீ சுயம்புநாதசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 40,000/ இந்த ஸ்தலம் திருவாரூர் மாயூரம் இரயில் மார்க்கத்தில் பன்னிரண்டுமைல் தூரத்தில் இருக்கிறது. சுவாமி ஸ்ரீசுயம்புநாத சுவாமி. அம்பாள் ஸ்ரீ பவானியம்பாள். முக்கிய உத்சவமாகிய பங்குனி உத்திரத்தில் தீர்த்தம் நிகழும்.

திருத்தருமையாதீன

இந்த தேவஸ்தானத்தில் இராஜகோபுரம், இதர விமானங்கள், புறக்கோயில்கள் முதலியன நல்ல முறையில் திருப்பணி செய்து சமீபத்தில் மருந்து சார்த்தி மகாகும்பாபிஷேகம் செய்யப்பட்டிருக்கிறது.

சுவாமி கோயில் முன்பக்கம் மண்டபம், பிராகாரம் தளவரிசை முதலியன பழுதுபார்த்து நல்ல முறையில் பார்வையாகத் திருப்பணி செய்யப்பட்டிருக்கிறது. மண்டபத்தில் ஆறுபடைவீடு, முக்கிய ஸ்தலங்கள் இவை ஐதீகப்படங்களுடன் எழுதப்பட்டிருக்கின்றன.

திருக்கோயிலுக்குப் பின்பக்கமாக உள்ள தீர்த்தம் தண்ணீர் இறைத்து. சேர் அள்ளி நல்ல முறையில் வேலை செய்யப்பட்டிருக்கிறது. சுற்றுக் கரைகளில் நூறு தென்னம்பிள்ளைகள் போடப்பட்டிருக்கின்றன.

கோயிலுக்குள்ள வாகனங்கள் வேலை செய்து வர்ணம் வைத்தும், கைலாச வாகனம், நட்டுக்கண்பார் முதலியன செய்யப்பட்டிருக்கின்றன. சுவாமிக்கு நாகாபரணம் வெள்ளியில் செய்யப்பட்டிருக்கிறது.

கிராமங்கள் குத்தகைக்குவிட்டிருப்பதில் முன் இருந்த குத்தகையைவிட இப்பொழுது நெல் கலம் 1000—0—0 அதிகம் வரக்கூடியதாக இருக்கிறது.

மதில் சுவர் வேலை செய்யவும், நந்தவனம் வகையரா காம்பவுண்டு சுவர் வேலை செய்யவும். கோயிலுக்கு நல்ல ஆதாயம் வரக்கூடிய முறையில் ஸ்ரீ அம்பாள் சந்நிதியில் எட்டு வீடுகள் கட்டவும் ஏற்பாடுசெய்துவருகிறது.

தேவஸ்தானத்தில் தேவார பாராயணம் செய்ய ஓதுவார் ஒருவர் நியமனம் செய்து காலை மாலை ஒலிபெருக்கிமூலம் தேவாரப் பாராயணம் செய்யப்பட்டுவருகிறது.

## 15. காரைக்கால் தருமபுரம் ஸ்ரீ யாழ்மூரிநாதசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 4000/ 1361 ஆம் பசலியில் திருக்கோயில் பூராவும் புதுப்பித்து ஜீரணோத்தாரணஞ்செய்து அஷ்டபந்தன மகாகும்பாபிஷேம் செய்விக்கப்பட்டது. கோயிலுக்கு வீடு ஒன்றும் வாங்கப்பட்டது.

## 16. குத்தாலம் ஸ்ரீ உக்தவேதீசுவரசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 20,000/ இவ்வாலயத்தில் இராஜகோபுரம், உட்கோபுரம், விமானங்கள் திருத்தி செப்பனிட்டு சுவாமிகோயிலில் சுவாமி விமானத்தை சுற்றி ஐதீக சுதை வேலைகள் செய்யப்பட்டன. துவாரபாலகர் துவாரசக்தி அமைத்து எல்லாவற்றிற்கும் வர்ணம் தீட்டி சிறப்பாகக் கும்பாபிஷேகம் செய்விக்கப்பட்டது. இராஜகோபுரத்தை ஒட்டி உள்ளே தளவரிசை இடப்பட்டது. கொடிமரம் அமைத்து நந்தி மண்டபமும் கட்டப்பட்டது. அலுவலகக்கட்டிடம் புதிதாக அமைக்கப்பட்டது. வெள்ளியில் விபூதிமடல், கற்பூரக்கிளை, தாம்பாளம் இவைசெய்யப்பட்டன. சந்நிதியில்

நந்தவனம் நன்ருகப் பராமரித்துவரப்படுகிறது. குளம் தூர் எடுத்து சுத்தம் செய்யப் பட்டது. சாகுபடியாளர்களுக்குக் கூட்டுறவு சங்கம் ஏற்படுத்தியிருக்கிறது.

## 17. திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி ஆலயம்:

வருஷ வருமானம் சுமார் ரூ. 1,34,000/ இவ்வாலயத்தில் நித்திய விசேஷ ஏறுபடிகளும் உற்சவங்களும் செம்மையாக நடத்தப்பட்டு வருகிறது. இராஜ கோபுரத்திலிருந்து உட்கோபுரம் வரையும் சரபர் கோவிலிலும் கருங்கல் தளவரிசை யிடப்பட்டிருக்கிறது. அலுவலகம் கட்டப்பட்டது. சிப்பந்திகள் குடியிருக்க எட்டுவீடு களும் பசுமடமும் புதியதாகக் கட்டப்பட்டது. இராஜகோபுரம் திருத்தி புதுப்பித்துக் கட்டி சுதை வேலேகள் செய்தும் இரண்டாம் கோபுரம் மற்றும் எல்லா விமானங் களும் பழுது பார்த்தும் எல்லாவற்றிற்கும் வர்ணம் வைத்தும், வர்ணம் தீட்டியும், புறக்கோவில்களும் பழுது பார்க்கப்பெற்றுள்ளன. அலுவலகத்தின் முன்னும், சுப்பிரமணியசுவாமி, அம்பாள். சரபர் சன்னதிகளிலும் தகரக் கொட்டகைகள் போடப் பெற்றுள்ளன. அம்பாள் சன்னிதி சரபர் சன்னதிகளில் சுதைச் சிற்பங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. இரண்டாம் கோபுரவாயிலில் துவார பாலகர்கள் போடப் பெற்றுள்ளன. கயிலே சென்ற சுந்தரர், சேரமான் திருவுருவங்கள் பழுதுபார்க்கப் பெற்றுள்ளன. சரபர் சன்னிதியில் படிகளுக்கும் நிலேகளுக்கும் நகாசு வேலேசெய்த பித்தளேத் தகடுகள் புதிதாக வேயப்பெற்றுள்ளன.

சிற்ப வேலேயிலும் சித்திர வேலேயிலும் சிறந்து விளங்கும் இக்கோவிலில் கலேக்கூடம் ஒன்று அமைத்துப் பராமரிக்கப்படுகிறது. இந்த ஆலயத்தின் இரண்டு கிராமங்களில் சாகுபடியாளர்களுக்குக் கூட்டுறவு சங்கம் அமைக்கப்பட்டிருக்கிறது.

திருக்கோயிலுக்கு யானே ஒன்றும் வாங்கப்பெற்று பராமரிக்கப்பட்டு வரு கிறது. திருக்கோயிலனேத்தும் புதுப்பிக்கப்பெற்றும் சித்திரங்கள் தீட்டப்பெற்றும் திருப்பணிகள் நிறைவேறியுள்ளன. திருப்பணிகள் அனேத்தும் முடிந்து சோபகிருது ஆண்டு ஆவணிமீ 21உ (6—9—63) வெள்ளியன்று கும்பாபிஷேகம் நடைபெற்றது.

இவ்வாலயத்தில் வெள்ளி சோடசோபசார சாமான்கள் ஸ்ரீ சரபமூர்த்தி வெள்ளிக்கவசம், வெள்ளிப் பார்வைத்தகடு, கல்லிழைத்த பதக்கங்கள், வெள்ளிக் குடங்கள், ஸ்ரீ சரபமூர்த்திக்கு வெள்ளி ரதம் முதலியன செய்யப்பட்டிருக்கின்றன. யாத்திரிகர்கள் தங்குவதற்கு எல்லா வசதியுடன் கூடிய கட்டிடம் ஒன்று கோயில் வாயிலில் கட்டப்பெற்றுள்ளது.

## 18. திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி ஆலயம் :-

வருஷ வருமானம் சுமார் ரூ. 1,60,000/ இவ்வாலயத்தில் நல்லமுறையில் அலுவலகம், களஞ்சியம் கட்டப்பட்டன. ஒரு நூல்நிலேயம் வைத்திருக்கிறது. எல்லா பிராகாரங்களிலும் தளவரிசையிடப்பட்டது. சுவாமிகோயில் உட்புறம் கருங்கல் தளவரிசையிடப்பட்டது. வெள்ளியினுல் திருவாசி, தாம்பாளம், குடங்கள்

செய்யப்பட்டிருக்கின்றன. எல்லா வாகனங்களும் நல்லமுறையில் திருத்தி புதுப்பிக்கப்பட்டிருக்கின்றன. நந்தவனம், பசுமடம் நன்ருய் அமைந்துள்ளது. யானை ஒன்று வாங்கப்பட்டிருக்கிறது. உற்சவம் சிறப்பாக நடத்தப்படுகிறது. அந்தந்த காலத்தில் சோழ அரசர் காலம்போல் கொள்ளிடம்போய் பஞ்சமூர்த்திகளும் தீர்த்தம் கொடுத்துவரும் விழா நடைபெறுகிறது.

## 19. திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 1,00,000/ ஏறுபடிகள் நிறைய உண்டு. உற்சவங்களும் மிகுதியாகவுள்ளன. கோவில் காரியங்களுக்கே வரும்படி போதுமானதல்ல. திருப்பணி அதிகம் செய்யத்தோதில்லை. இருந்த போதிலும் பல சில்லரைத் திருப்பணிகள் கோவில் பூராவும் நடந்திருக்கிறது. பழனியாண்டவர் மண்டபம் புதுப்பிக்கப்பட்டது. நடப்பு தளவரிசை புதிதாகப் போடப்பட்டது. உள்கோவில் பெரியமண்டபம், சுவாமி சந்நிதி முகப்பு செப்பனிடப்பட்டது. சுதை வேலைகள் செய்யப்பட்டன. தேருக்கு இரும்புத் தகடு அடைப்பு அமைக்கப்பட்டது. விடுதிக் கட்டிடம் ஒன்று கட்டப்பட்டது. இவ்வாலயத்தில் பவுன் காசுமாலை, பவுன் யக்ஞோபவிதம் 2, மாங்காய் மாலை 1, வெள்ளி தங்க மூலாமிட்ட கிரீடம் 1, வெள்ளி பவுன் பதக்கங்கள் 3 செட் செய்திருக்கின்றன. கொடி மரத்துக்குத் தங்கத்தகடு போடப்பட்டது. இந்தக்கோயிலுக்கு ஒரு யானை வாங்கிவைத்து பராமரிக்கப்பட்டுவருகிறது. ஒரு கிராமத்திய நிலங்கள் கூட்டுறவு சங்க சாகுபடியிலுள்ளது.

## 20. உய்யக்கொண்டான் ஸ்ரீ உஜ்ஜீவநாதசுவாமி ஆலயம் :-

வருஷ வருமானம் சுமார் ரூ. 12,000/ இவ்வாலயத்தில் திருமடைப்பள்ளி, திருக்குளம் படித்துறைகள், கோபுரங்கள் பழுதுபார்க்கப்பட்டன. விமானங்கள் செப்பனிட்டு வர்ணம் தீட்டி, மூர்த்திகளுக்கு மருந்து சார்த்தி கும்பாபிஷேம் நடைபெற்றது.

## 21. மணக்குடி ஸ்ரீ சுந்தரேசுவரசுவாமி ஆலயம் :-

வருஷ வருமானம் சுமார் ரூ. 2000/ இவ்வாலயத்தில் உட்பிராகாரங்கள் சுற்றுச்சுவர்கள் பழுது பார்க்கப்பட்டன. எல்லா விமானங்களும் வேலை செய்து மருந்துசார்த்தி கும்பாபிஷேகம் செய்யப்பெற்றது.

## 22. திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவரசுவாமி ஆலயம் :

வருஷ வருமானம் சுமார் ரூ. 1,50,000/ மாயூரம் தரங்கம்பாடி ரஸ்தாவில் பன்னிரண்டுமைல் தூரத்தில் இருக்கிறது. சுவாமி :- ஸ்ரீ அமிர்தகடேசுவரர். அம்பாள் :- ஸ்ரீ அபிராமியம்பாள். பிரதானமூர்த்தி :- ஸ்ரீ காலசம்காரமூர்த்தி. அஷ்ட விரட்டத் தலங்களில் ஒன்று. மார்க்கண்டேயர் என்றும் சிரஞ்சீவியாய் முக்திபெற்ற ஸ்தலம். பிரதான உத்சவங்கள் :- கார்த்திகைமாத சோமவார தினங்களில் ஆயிரத்தெட்டு சங்காபிஷேகம், சித்திரை உத்சவம், ஆடிப்பூரம்

முதலியன முக்கியமானவை. இந்த ஸ்தலத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ காலசம்கார மூர்த்திக்கு வருஷத்தில் பதினெருமுறை அபிஷேகம் நடைபெறும். சித்திரைமாதத்தில் சம்காரத்தன்று மட்டுமே ஸ்ரீ சம்காரமூர்த்தி புறப்பாடு உண்டு. இந்த சந்நிதியில் முக்கியமாக மிருத்தஞ்சய ஹோமம் என்ற சாந்தி செய்துவருகிருர்கள். அறுபதாவது வயது பூர்த்திக்கு விசேஷ அர்ச்சனை அபிஷேகம் செய்தும் சாந்திசெய்கிருர்கள். ஆயுள் விருத்திக்கு பிரார்த்தனை செய்யும் ஸ்தலம்.

இத் திருக்கோயிலில் இராஜகோபுரம், இரண்டாவது கோபுரம், சுவாமி விமானங்கள் மற்றும் புறக்கோயில்கள் எல்லாம் நல்லமுறையில் திருப்பணிசெய்து சுவாமி, அம்பாள், பரிவாரங்களுக்கு நல்லமுறையில் மருந்து சார்த்தி 21—4—1957 இல் மகாகும்பாபிஷேகம் செய்யப்பட்டது. உள்பிராகாரம், சங்குமண்டபம், உத்சவ மண்டபம், உத்சவமண்டபம் முன்பக்கம், இராஜகோபுரம், இரண்டாவது கோபுரம் மத்தியபாகம், அம்பாள்கோயில் பிராகாரம் முதலியன கருங்கல்தளவரிசை செய்யப்பட்டிருக்கிறது. சந்நிதியில் சேவார்த்திகள்வந்து தங்க ஒற்றுமையாக சகல வசதிகளுடன் விடுதிக் கட்டிடம் கட்டப்பட்டிருக்கிறது. அமிர்தபுஷ்கரிணி தண்ணீர் இறைத்து படித்துறை செப்பனிட்டு சேவார்த்திகள் ஸ்நானம் செய்ய ஏற்றதாக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. நந்தவனம் மதில் சுவர் புதுப்பித்தும், பிராகாரம் மதில் சுவர் புதுப்பித்தும் வேலை செய்யப்பட்டிருக்கிறது. சுவாமி கோயில், அம்பாள் கோயில், கொடிமரம் (துவஜஸ்தம்பம்) புதுப்பித்து வேலைசெய்யப்பட்டிருக்கிறது. பிராகாரத்தில் ஸ்தல ஐதீகம், மார்க்கண்டேயர் சரித்திரம், வில்வவனம் என்ற பெயர் ஏற்படக் காரணம் காட்டும் ஐதீகம் முதலியன தெரியும்படி வர்ணங்களால் ஐதீகப்படங்கள் வரையப்பட்டிருக்கின்றன. சுவாமி கோயில் முன்மண்டபத்தில் தேவாரப் பதிகக் கல்வெட்டும், அம்பாள் கோயில் முன் மண்டபத்தில் அபிராமி அந்தாதி நூறுபாடல் அடங்கிய கல்வெட்டும் செய்து வைத்துக் கட்டப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ காலசம்காரமூர்த்திக்கு வெள்ளி மஞ்சம், வெள்ளி யானைவாகனம், வெள்ளி மூஷிகவாகனம், வெள்ளி சோடசோபசார சாமான்கள், வெள்ளி கமலத்தாம்பாளம், வலம்புரி சங்கத்திற்கு பவுன் குவளை கட்டி நவரத்தினக்கற்கள் வைத்து கட்டப்பட்டிருக்கிறது. மீன் இலாக்கா துவாராவாக கோயில் சங்காபிஷேகத்திற்கு ஒற்றுமையாக புதிய சங்குகள் ஆயிரத்தெட்டு வாங்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ காலசம்காரமூர்த்தி, ஸ்ரீ பாலாம்பிகை அம்பாள் ஆகிய மூர்த்திகளுக்குத் தங்கக் கவசம், கிரீடம் முதலியன செய்யப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ அபிராமியம்பாளுக்கு தங்கக் கிரீடம் செய்யப்பட்டிருக்கிறது. மேலும் காசுமாலை, மாங்காய்மாலைகளும் செய்யப்பட்டிருக்கின்றன. பந்தோபஸ்து அறை ஒன்று நல்ல முறையில் கட்டியும், மற்றும் சந்நிதிகள், உத்சவ மண்டபம் முதலிய இடங்களில் இரும்புக் கதவுகள் போடப்பட்டிருக்கின்றன. பிராகாரத்தில் ஜலம் நல்ல முறையில் வெளியில் செல்ல சாலவம் புதுப்பித்து வேலை செய்யப்பட்டிருக்கிறது.

தேர் புதிதாகச் செய்யப்பட்டிருக்கிறது. யானை ஒன்று வாங்கப்பட்டிருக்கிறது. நல்ல கறவைப்பசுக்கள் வாங்கிப் பால்கறந்து சுவாமிக்கு அபிஷேகத்திற்கு உபயோகப் படுத்தப்படுகிறது. திட்டத்தில் அதிகம் செய்து மகோத்சவம், ஆடிப்பூர உத்சவம்

நல்ல முறையில் செய்யப்பட்டுவருகிறது. சிறந்த ஓதுவார் ஒருவரை நியமித்து தினந் தோறும் சந்நிதியில் தேவாரப் பாராயணம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இலவசமாகத் தேவார வகுப்பு நடத்தப்படுகிறது. ஆண்டு விழாவும் நல்ல முறையில் செய்யப்பட்டு வருகிறது.

கோயில் நஞ்சை நிலங்கள் இரண்டு கிராமங்களில் கூட்டுறவு பண்ணை சாகுபடிக்குக் குத்தகை கொடுக்கப்பட்டிருக்கிறது. மேலும் கிராமத்தில் எந்த அளவு சவுக்கை சாகுபடி செய்யக்கூடுமோ அந்த அளவிற்கு சாகுபடிதாரர்களைக்கொண்டு வாரசாகுபடி முறையில் சவுக்கை சாகுபடி செய்யப்பட்டுவருகிறது. கோயிலில் நேரடியாக ஐம்பதினாயிரம் வரை சவுக்கைகள் வைத்து பயிர்செய்யப்பட்டிருக்கிறது.

குத்தகைக் கிராமங்களில் குத்தகை நெல் எந்த அளவு கோயிலுக்கு இலாப கரமாகக் கிடைக்கக்கூடுமோ அந்த அளவு ஏற்பாடு செய்து சமீபத்தில் சுமார் ஐந்நூறு கலம் வரை நெல் அதிகம் வரக்கூடியதாக இருக்கிறது.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் இந்தக் கோயிலுக்கு ஸ்ரீ அபிராமியம்பாளுக்கு சக்கரதாடங்கமும், ஸ்ரீ காலசம்காரமூர்த்திக்கு மகரி உருத்திராக்ஷமாலையும் அளித்திருக்கிறார்கள்.

மேலும் இந்தக் கோயில் சிப்பந்திகள் குடியிருப்புக்கு வீடும், வாடகைக்கு விடும் முறையில் விடுகளும், சந்நிதியில் ஆர்ச்சும், மேலவிதியில் வாடகைக்குவிடும் முறையில் கடைகளும் கட்ட ஏற்பாடு செய்யப்பட்டுவருகின்றன.

இந்த தேவஸ்தானத்திற்கு வெள்ளி இரதமும், ஸ்ரீ காலசம்காரமூர்த்தி புறப்பாட்டிற்கு வெள்ளி மஞ்சம், வெள்ளி மயில்வாகனம், வெள்ளிப் பிரதோஷ வாகனம் முதலியன செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீ காலசம்காரமூர்த்தி சந்நிதி கதவு புதிதாகச் செய்து வெள்ளித்தகடு போடப்பட்டிருக்கிறது.

சென்னைராஜ்ய மேன்மைதங்கிய கவர்னர் ஸ்ரீ விஷ்ணுராம்மேதி அவர்களும், முதல் அமைச்சர் கனம் M. பக்தவத்சலம் B. A., B. L., அவர்களும், மத்திய அரசாங்க மந்திரி கனம் C. சுப்பிரமணியம் B. A., B. L., அவர்களும் மற்றும் பல பிரமுகர்களும் அடிக்கடி வந்து தரிசனம் செய்து போகிறார்கள்.

## 23. கருங்குயில்நாதன்பேட்டை ஸ்ரீ சக்திபுரீசுவரசுவாமி ஆலயம்:

வருஷ வருமானம் சுமார் ரூ. 10,000/ இவ்வாலயத்தில் பிராகாரம் தளவரிசை இடப்பட்டிருக்கிறது. குருக்கள் குடியிருப்பு விடு கட்டப்பட்டிருக்கிறது. நந்தவனம் திருத்தி விஸ்தரிக்கப்பட்டது. திருமாளிகைப்பத்தி கட்டவும், விமானம் பழுதுபார்த்து வர்ணம் வைக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

## 24. திருநின்றியூர் ஸ்ரீலக்ஷ்மிபுரீசுவரசுவாமி ஆலயம்:

வருஷ வருமானம் சுமார் ரூ. 2000/ இராஜகோபுரம் விமானங்கள் பழுது பார்க்கப்பட்டன. இராஜகோபுரத்தையொட்டி வடபுறமுள்ள மண்டபம் செப்பனிடப் பட்டது. சமீபத்தில் மருந்து சார்த்திக் கும்பாபிஷேகம் செய்யப்பட்டது.

## 25. திருவிடைமருதூர் பிச்சக்கட்டளை:

வருஷ வருமானம் சுமார் ரூ. 17,000/ இக்கட்டளைக்குச் சொந்தமான வீடு பழுதுபார்க்கப் பெற்றுள்ளது. சுவாமி சந்நிதியில் திருவாசி விளக்குகள் புதிதாகச் செய்து நல்ல திட்டத்தில் திருவிளக்குகள் போடப்பட்டு வருகின்றன. நந்தவனம் கோவிலில் வைத்து பராமரிக்கப்படுகிறது. திட்டப்படி கட்டளை காரியங்கள் நடந்து வருகின்றன.

## 26. திருச்சி மலைக்கோட்டை மௌனமடம்கட்டளை:

வருஷ வருமானம் சுமார் ரூ. 15,000/ ஸ்ரீ தாயுமானவர் ஆலயத்தில் அறுபத்துமூவர் சந்நிதி, சகஸ்ரலிங்கம் கோயில் திருப்பணி வேலைகள் செய்யப்பட்டன. நந்தவனத்துக்குக் கதவு போடப்பட்டு நன்ருகப் பராமரிக்கப்படுகிறது. ஆண்டு தோறும் திருவெம்பாவை மாநாடுகள், சைவ சித்தாந்த விரிவுரைகள், பெரியபுராண விரிவுரைகள் நடத்தப்பட்டு வருகின்றன. திட்டப்படி கட்டளை காரியங்கள் நடந்து வருகின்றன.

## 27. தருமபுரம் ஸ்ரீ தருமபுரீசுவரசுவாமி ஆலயம்:

வருஷ வருமானம் சுமார் ரூ. 700/ வெளிப்பிராகாரங்கள் உட்பிராகாரங்கள் தளவரிசையிடப்பெற்றும் பழுதுபட்டிருந்த கோயில் பகுதிகளைத் திருத்தியும் திருப் பணி செய்யப்பெற்றுள்ளது.

ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலக்ஷ்மி துர்க்காதேவி திருக்கோயில் நூதனப் பிரதிஷ்டை செய்யப்பெற்றுள்ளது. ஸ்ரீ மகாலக்ஷ்மி துர்க்காதேவிக்கு ஆண்டு தோறும் நவராத்திரி நாட்களில் சகஸ்ரசண்டி யக்ஞம் முதலியன நடத்தப்பெறு கின்றன. மூன்று கோடி அர்ச்சனைகள் நிறைவு பெற்று நான்காவது கோடி அர்ச்சனையும் சமீபத்தில் தொடங்கி இருக்கிறது. ஸ்ரீ அம்பாளுக்கு வெள்ளியினுலும் தங்கத்தினுலும் திருவாபரணங்கள் செய்விக்கப் பெற்றுள்ளன. ரூ. 20,000 மதிப்பில் காசுமாலை, வைரப் பொட்டு, பதக்கம், கிரீடம் முதலியன தங்கத்தால் செய்விக்கப் பெற்றுள்ளன. விசேஷ நாட்களில் லட்சார்ச்சனைகள், நவசக்தி அர்ச்சனைகள் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கின்றன. இதுவரை 12 சதசண்டி யக்ஞம் நடை பெற்றுள்ளது.

ஸ்ரீ அம்பாள் சந்நிதிக்கு எதிரே இராஜகோபுரம் நுழைவாயில் மிக அழகிய வேலைப்பாடுகளுடன் அமைக்கப் பெற்றுள்ளது. பல ஊர்களிலிருந்தும் அன்பர்கள் வந்து தரிசித்துச் செல்கின்றனர்.

## திருத்தருமையாதீன ஆலயங்கள்

ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயில் இராஜகோபுரம், சுவாமி, அம்பாள் விமானங்கள் முதலியன புதிதாகச் சுதை சிற்பங்கள் அமைத்துத் தங்கக் கலசங்கள் பொருத்திக் கும்பாபிஷேகம் செய்விக்கப்பெற்றது. சந்தானகுரவர் பிரதிஷ்டை செய்விக்கப்பட்டிருக்கிறது. பிராகாரங்கள் தளவரிசை இடப்பட்டிருக்கின்றன. சுவாமிக்கு வெள்ளி அங்கி பார்வைத் தகடு முதலியன செய்விக்கப்பெற்றன. வாகனங்கள் புதுப்பிக்கப்பெற்றன. தேர்கள் புதிதாகச் செய்யப்பெற்றன.

இவ்வாறு எல்லாவகையாலும் பூரணமான திருப்பணிகள் ஆதீனக்கோயில்கள் அனைத்திலும் செய்யப்பட்டு வருகின்றன.

## முடிவுரை :

திருத்தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருக்கோயில்கள் இவ்வாறு, ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் அருளாட்சியில் பெற்றிருக்கும் ஏற்றங்கள் பல; அடைந்திருக்கும் திருப்பணிகள் பல. தமிழ்நாட்டின் சிற்பச் சிறப்புக்களுக்கும், கலைச் சிறப்புக்களுக்கும், புண்ணியச் சிறப்புக்களுக்கும் உரிய இவ் ஆதீன ஆலயங்கள் நன்கு நிருவாகம் செய்யப்பெற்றுவருவதை நாடறியும். "ஆலயம் தொழுவது சாலவு நன்று" என்றபடி, ஆலய வழிபாட்டை உயிர்கள் மேற்கொண்டு உய்திபெறுதல் வேண்டும் என்பதே நம் தோத்திர சாத்திரங்களின் துணிவாகும். அத்துணிவுணர்ந்து நெறிநின்று இருமைப் பயன்களையும் உலகு எய்தி இன்புறுமாக!



பராசக்தியை வழிபடுதல் வேண்டும். வழிபட்டால் என்ன தருவாள்? தனம் தரும். பொருள் இருந்தால் போதுமா? அறிவோடு அதனைப் போற்றவேண்டாமா? அதற்காகக் கல்வி தரும். அது போதுமா? அதனோடு மனம் கோழையாக இருந்தால் பயன்படுமா? ஒருநாளும் தளர்வறியா மனம் தரும். இவை எல்லாம் இருந்தாலும் ஒரு நல்ல தோற்றம் வேண்டாமா? தெய்வ வடிவும் தரும். இவ்வளவுமிருந்தும் நல்ல இனம் வேண்டாமா? நெஞ்சில் வஞ்சமில்லா இனம் தரும். இப்படியே ஒன்று ஒன்றாகச் சொல்வானேன். நல்லன எல்லாம் தரும். அபிராமி பட்டரின் அருள்மொழி இது.

— கயிலைக் குருமணி.



ஸ்ரீ கம்பகரேஸ்வரர் விமானத்தின்
சிற்பக்கலைக் காட்சி



ஸ்ரீ கம்பகரேஸ்வரசுவாமி விமான கும்பாபிஷேகக் காட்சி.



ஸ்ரீ கம்பகரேஸ்வரர் ஸ்ரீ சோமாஸ்கந்தர்
விமானங்களின் கும்பாபிஷேகக் காட்சி.



துவஜஸ்தம்ப விநாயகர் விமான
கும்பாபிஷேகக் காட்சி.



புதிதாக நிர்மாணிக்கப்பட்ட விநாயகர்
விமான கும்பாபிஷேகக் காட்சி



மூகபத்ர யாக வேதிகையின் தோற்றம்



ஸ்ரீ தர்மசம்வர்த்தனி அம்பாள் ( நாகபணீந்திராப்ஜினி)
யாக வேதிகை.



ஸ்ரீ சரபேஸ்வரர் ( முகபத்ரம் ) யாக வேதிகை.



ஸ்ரீ கம்பகரேஸ்வரர் ( பஞ்சாசன ) யாக வேதிகை.



நாகபணீந்திராப்ஜினி யாக வேதிகையின்
தோற்றம்.



யாகசாலையில் பூர்ணாகுதி வழிபாடு



யாகசாலையில் இருந்து பிரதான கடங்களை எழுந்தருளுவித்தல்



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் யாகசாலையிலிருந்து பரிவார கும்பாபிஷேகத்திற்குக் கடங்களை எழுந்தருளுவித்தல்



யாகசாலையில் பூர்ணாகுதிக்குப்பின்னர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்கள் அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்குதல்.



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம்
அவர்கள் பன்னிருதிருமுறை மாநாட்டைத்
தொடங்கி வைத்தல்



திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார்
பி. ஏ பி. எல். அவர்கள் சிற்பஓவியக் கலைக்
காட்சிக்கூடத் திறப்புவிழாவிற்குச் செல்லுதல்.



சென்னை மாநில அறநிலையத்துறை ஆணையர்
திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார்
பி. ஏ.. பி. எல். அவர்கள்
கலைக் கூடத் திறப்புரை யாற்றுதல்.



சென்னை மாநில அறநிலையத்துறை ஆணையர்
திரு. எம். எஸ். சாரங்கபாணி முதலியார்
பி. ஏ. பி. எல். அவர்கள்
கலைக் கூடத்தைத் திறந்து வைத்தல்.



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் திருப்பனந்தாள்
ஸ்ரீ காசிமடம் இளவரசு வித்துவான் ஸ்ரீமத் முத்துக்குமாரசாமித்
தம்பிரான் சுவாமிகள் அவர்கட்கும்
அறநிலையத்துறை ஆணையர் திரு. M. S. சாரங்கபாணி
முதலியார் B. A. B. L. அவர்கட்கும் கும்பாபிஷேக தரிசனத்
திற்குப் பின்னர் பொன்னுடை போர்த்தியருளல்



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
கலைக் கூடத்திறப்பு விழாவில் சென்னை மாநில
அறநிலையத்துறை ஆணையர்
திரு. M. S சாரங்கபாணி முதலியார் B. A. B. L.
அவர்களுக்கும், துணை ஆணையர்
திரு. K. சோமசுந்தரதேசிகர் அவர்கட்கும்
பொன்னுடை போர்த்தியருளல்



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களும், திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் இளவரசு வித்துவான் ஸ்ரீமத் முத்துக்குமாரசுவாமிகள் அவர்களும் கட்டளை மடத்திற்கு எழுந்தருளல்.



தமிழ்நாடு அறநிலையத்துறை அமைச்சர்
கனம் திரு. எம். பக்தவத்சலம் பி. ஏ. பி. எல். அவர்கள்
கோயில் மரியாதைகளுடன் தரிசனத்திற்குச் செல்லுதல்



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
மதுரை ஆதீனம்
ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கட்குப் பொன்னுடை போர்த்துதல்



ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமகாசந்நிதானம் அவர்கள்
கனம். திரு. எம். பக்தவத்சலம் பி. ஏ. பி. எல்.
அவர்களுக்குப் பொன்னுடை போர்த்தியருளல்



கட்டளை மடத்தில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்திற்குப்
பொன்னாடை போர்த்துதல்.



லக்ஷார்ச்சனை பூர்த்தி தரிசனத்திற்குப் பின்னர்
ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்திற்கும். மதுரையாதீனம்
ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்த்ற்கும். பிரசாதம் பார்த்தல்





உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமையாதீனத்துக்குச் சொந்தமான
திருபுவனம் ஸ்ரீ கம்பஹரேஸ்வரசுவாமி தேவஸ்தானம்
ஸ்ரீ அறம்வளர்த்தநாயகி அம்பாள் சமேத ஸ்ரீ கம்பஹரேஸ்வர சுவாமிக்கு
விநாயகர் முதலிய பரிவாரங்களுடன் ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன

# மகாகும்பாபிஷேகப் பத்திரிகை

துங்கநகத் தாலன்றித் தொலையா வென்றித்
தொகுதிறலவ் இரணியனை ஆகங்கீண்ட
அங்கனகத் திருமாலும் அயனும் தேடும்
ஆரழலை அனங்கனுடல் பொடியாய் வீழ்ந்து
மங்கநகத் தான்வல்ல மருந்து தன்னை
வண்கயிலை மாமலைமேல் மன்னி நின்ற
செங்கனகத் திரள்தோளெஞ் செல்வன் தன்னைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே.

— திருநாவுக்கரசர்.

செஞ்சொற் பண்பெற் றிடுகுட மாமலை
கும்பத் தந்திக்குவடெனவாலிய
தெந்தப் பந்தித் தரளம தாமென விடராவி
சிந்திக்கந்தித் திடுகளையாமுன
தங்கத்தம் பொற்பெதுவென வோதுவ
திண்டுப்புந்தித் திடுகனி தானுமுன் இகழாமோ

மஞ்சொக்குங் கொத்தளகமெனுமிடை
கஞ்சத்தின் புற்றிடு திருவேயிள
வஞ்சிக் கொம்பொப்பெனு மயிலேயென முறையேய
வந்தித்திந்தப் படிமடவாரொடு
கொஞ்சிக் கெஞ்சித்தினமவர் தாடொழு
மந்தப்புத்திக்கசடனெ நாளுனது அடிசேர்வேன்
நஞ்சைக் கண்டத்திடுபவராரொடு
திங்கட் பிஞ்சக்கரவணிவேணியர்
நம்பர்ச் செம்பொற்பெயரசு ரேசனை யுகிராலே
நந்தக் கொந்திச் சொரிகுடல் சோர்வர
நந்திக்கம்பத் தெழுநர கேசரி
நஞ்சக் குண்டைக் கொருவழியேதென மிகநாடி
வெஞ்சச் சிம்புட்சொருபம தானவர்
பங்கிற் பெண்கற்புடையபெ ணுயகி
விந்தைச் செங்கைப் பொலிசுதவேடுவர் புனமிதே
வெண்டித் தங்கித் திரிகிழவா அதி
துங்கத்துங்கக் கிரி அருணபுரி
வெங்கட் சிங்கத் தடிமயிலேறிய பெருமாளே

— அருணகிரிநாதர்.

அங்கு இங்கு எனுதபடி எங்கும் நிறைந்து உண்மை அறிவு இன்பமாய் ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்று இன்றி நிற்கும் இறைவன் உயிர்களை உய்விக்க வேண்டும் என்ற பெருங்கருணையினலே அளவற்ற உருவமும் பெயருங்கொண்டு எழுந்தருளியிருந்து அவ்வுயிர்கள் செய்யும் நித்திய நைமித்திக வழிபாடுகளை ஏற்று இம்மை மறுமை வீடு என்னும் நலங்களை அருளுகின்ற அருள்நிலைத் தானங்களே திருக்கோயில்கள். இது நம் முன்னேர்கள் கண்ட அரிய உண்மை. "ஆலயம் தொழுவது சாலவும்நன்று" என்று ஔவை மூதாட்டி குறிப்பிட்ட நன்மை தனி மனிதன் நன்மைமட்டுமன்றி நாட்டின் பொது நன்மையும் குறித்தேயாகும். "திருக் கோயில் இல்லாததிருவில் ஊரும்" என்னும் திருமுறைத் திருமொழியும், "கோயில் இல்லா ஊரில் குடியிருக்கவேண்டா" என்னும் மூதுரையும், திருக்கோயிலின் இன்றி யமையாமையைத் தெளிவுபடுத்தும். இவற்ருல் சிற்றூராயினும், பெரிய நகரமாயினும் அதற்கு இருதயஸ்தானமாக விளங்குவது திருக்கோயிலே என்பது விளங்கும்.

உடல் உயிர் பெற்று விளங்குவதற்கு அதன்கண் உள்ள இருதயத்தின் நலம் முதன்மையானது; அதுபோல நாடு நலம்பெற அதன்கண் உள்ள திருக்கோயில்கள் செம்மையுற்றுத் திகழ்தல் முதன்மையானதாகும். நாட்டில் சிற்பம், ஓவியம், இசை முதலிய கலைகள் செழித்து வளர்தற்குத் திருக்கோயிலே முதலிடமாகும். மக்கள் அமைதியுடனும் மேன்மையுடனும் வாழ, திருக்கோயில்களில் நித்திய நைமித்திக பூஜைகள் தவருது நடைபெறவேண்டும். திருமதில்கள், கோபுரங்கள், விமானங்கள் முதலியவற்றிற்கு அவ்வப்பொழுது திருப்பணிகள் செய்து பெருஞ்சாந்தியும் பெரு விழாக்களும் சிறப்புற நடத்துதல்வேண்டும். திருவுருவங்களின் பிரதிஷ்டை நிலை சிறிதும் மாறுபடாமலிருப்பதற்கு அவ்வப்பொழுதும் பன்னிரண்டாண்டுகளுக்கு ஒரு

முறையேனும் அஷ்டபந்தனம் சாத்திச் சாந்திசெய்தல் இன்றியமையாது வேண்டும். தமிழரசர்கள் தாங்கள் வாழும் அரண்மனை, அரசாட்சி மண்டபம் இவைகளைவிடத் திருக்கோயில்களையே என்றும் அழியாதவகையில் அமைத்து அவைகளில் பூஜையும் விழாக்களும் செம்மையுற நடத்திவந்தனர். இவ்வாறு எந்தெந்த ஊரில் திருக் கோயில்கள் செம்மையாகப் பரிபாலிக்கப்படுகின்றனவோ அந்த ஊர்களே திரு ஆம் ஊர்களாகும்.

திருபுவனம் சிவபரத்துவம் விளக்கி, முழுமுதற்கடவுள் 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதி' யாகிய சிவபரம்பொருள் ஒன்றே என்பதை எல்லா உலகும் உணர நிறுவிய உயர்பெருந்தலம். 'இடுக்கண் பட்டிருக்கினும் இரந்து யாரையும் விடுக்கிற் பிரான் என்று வினவுவோம் அல்லோம்; அடுக்கற்கீழ்க் கிடக்கினும் அருளின் நாமுற்ற நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சிவாயவே' என்று அப்பர் சுவாமிகள் கூறியவாறே நடுக்கத்தை (கம்பத்தை) நீக்கும் நம்பிரான் (கம்பஹரேஸ்வரர்) வீற்றிருக்கும் நற்றலம் இது. திருபுவனவீரபுரம் என்ற பழம் பெயரை உடையது. அசுவக்ரீவன், விருஷபக்ரீவன், வியாளக்ரீவன், பிரமன் முதலிய பெருந்தேவர்கள், இலக்குமி, வருணன், விஷ்ணு, சித்ரரதன், சுகோஷன், மாந்தாதா, நாரதர், வரகுணர் முதலியோர் வழிபட்ட பெருமை உடையது. நடுக்கம் தீர்த்த பெருமான் கம்பஹரேஸ்வரர் என்ற திருப்பெயருடனும் அறம்வளர்த்த நாயகி தர்ம சம்வர்த்தனி என்ற பெயருடனும் அருள் வழங்கும் சிறப்புடையது. இரணியனுடைய குருதியைப் பருகிய நரசிம்மம் அறிவு மயங்கி வையகம் எல்லாவற்றையும் அழிக்கத் தொடங்கியபோது இத்தலத்துப் பெருமான் சரபப் பறவை உருக்கொண்டு அதன் கொடுமையை அடக்கியதால் சரபேஸ்வரர் என்ற பெயருடன் தனி மூர்த்தியாகவும் விளங்கும் சிறப்பும் உடையது.

மூன்றும் குலோத்துங்கன் வடநாடு சென்று பெற்ற வெற்றிப் பொருள்களைக் கொண்டு தாராசுரத்திலும் திருபுவனத்திலும் கோயில் கட்டினுன் என்பது இத் திருக் கோயிற் கல்வெட்டிலிருந்து அறியப்படும் செய்தியாகும். இப்பேரரசனுடைய ஞான குருவாகிய சித்தாந்த இரத்தினகர ஆசிரியர் ஸ்ரீ ஸ்கந்தசம்புவினுடைய மகனர் ஈஸ்வர சிவனுல் ஆவாகனம் செய்யப்பட்டது இத்திருக்கோயில் என்பதும் கல்வெட்டுச் செய்தி. இவ்வாறு பலவகையாலும் சிறப்புற்ற இத்திருத்தலம் தருமை ஆதீனத்தின் இருபத் தேழு தேவஸ்தானங்களுள் ஒன்ருய் விளங்குவது. இவ்வாலய பரம்பரைத் தரும கருத்தர் தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் உயர்ந்த சிற்பங்களனைத்தையும் பாதுகாத்துச் சுதை வேலைகளினல் மீண்டும் கலைவண்ணம் காட்டி, கிலமாக இருந்த இராஜகோபுரத்தைத் திருத்தி இரண்டாங்கோபுரம், சுவாமி விமானம், அர்த்த மண்டபம், மகாமண்டபம், அம்பிகையின் ஆலயம், சுற்றுக்கோயில்கள் ஸ்ரீ சரபமூர்த்தி யின் கோயில், திருச்சுற்றுக்கள், திருமாளிகைப்பத்திகள், மண்டபங்கள் முதலிய அனைத்திடங்களையும் பழுதுபார்த்தும் புதுக்கியும் செய்தருளியிருக்கிருர்கள்.

இவ்வாறு எல்லாத் திருப்பணிகளையும் முற்ற முடித்து, நிகழும் சோபகிருது ஆண்டு ஆவணித்திங்கள் 21 ஆம் நாள் (6—9—1963) வெள்ளிக்கிழமை காலை 5 மணிக்குமேல் 6-53 மணிக்குள் சிம்ம லக்னத்தில் மகாகும்பாபிஷேகம் நிகழ்த்தத்

திருவுளங்கொண்டுள்ளார்கள். தமிழ் நாட்டிற்கே சிறப்புத் தருவதாகிய இப் புண்ணியத் திருக்கோயிலின் பெருவிழாவாகிய இம்மகாகும்பாபிஷேகத்தைக் கண்டு களித்து அன்பர்கள் இருமைப் பயன்களும் எய்தி இறைவன் திருவருளும் பெற்றுய் வார்களாக. இம்மகாகும்பாபிஷேகத்தை ஒட்டி மிகச்சிறப்புடன் திருமுறை மகாநாடும் சமயப்பேரவையும் அகண்ட திருமுறைப் பாராயணங்களும் நிகழும்.

## நிகழ்ச்சிநிரல்

| தமிழ் ௵ ௴ ௳ | ஆங்கிலம் ௳ ௴ ௵ | வாரம் | விபரம் |
|---|---|---|---|
| சோபகிருது ௵ ஆவணி ௴ 16௳ | 1—9—63 | பானுவாரம் | திருவோண நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் இரவு மணி 7-30 க்குமேல் 9 க்குள் மீன லக்னத்தில் தனபூஜை, அனுக்ஞை, விக்னேஸ்வர பூஜை, பிரசன்ன விக்னேஸ்வரபூஜை. |
| 17௳ | 2—9—63 | சோமவாரம் | வாஸ்துசாந்தி, மிருத்ஸங்கிரஹணம். |
| 18௳ | 3—9—63 | மங்களவாரம் | அங்குரார்ப்பணம், ரக்ஷாபந்தனம், கும்பாலங்காரம். இரவு மணி 7-30 க்குமேல் 9 க்குள் கலாகர்ஷணம், யாகசாலாப்ரவேசம், யாக பூஜை காலம் 1. |
| 19௳ | 4—9—63 | புதவாரம் | காலை, மாலை யாகபூஜை. காலம் 2. |
| 20௳ | 5—9—63 | குருவாரம் | காலை, மாலை யாகபூஜை. காலம் 2. |
| 21௳ | 6—9—63 | சுக்கிரவாரம் | யாகபூஜை காலம் 1. ரேவதி நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் காலை மணி 5 க்குமேல் 6-53 க்குள் மகாகும்பாபிஷேகம். காலை மணி 8 க்குள் மகாபிஷேகம். காலை மணி 9-30 க்குள் லக்ஷார்ச்சனை. மாலை மணி 6 க்கு விசேஷ சாயரக்ஷை தீபாராதனை. இரவு பஞ்சமூர்த்திகளின் திருவீதி உலாக் காட்சி. |

திருக்கயிலாய பரம்பரைத்
திருத்தருமையாதீனத்துக்குச் சொந்தமான திருபுவனம்
ஸ்ரீ கம்பஹரேஸ்வரசுவாமி தேவஸ்தானம்
டிரஸ்டி ஸ்தானீகம்,

ஸ்ரீ கம்பஹரேஸ்வரசுவாமி தேவஸ்தானம்,
திருபுவனம். 31—7—63.

வித்துவான். இராமலிங்கத்தம்பிரான்.

# மகாகும்பாபிஷேக நிகழ்ச்சிகள்

**திருப்பணி :**

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் திருபுவனம் திருக்கோயில் மகாகும்பாபிஷேகத்தைப் பெரும்பொருட் செலவில் நல்லமுறையில் செய்யத் திருவுளம் கொண்டார்கள். அத்திருவுளப்படியே திருப்பணி உரிய காலத்தில் தொடங்கப் பெற்றது. தமிழ்நாட்டின் சிற்பக்கலை நுணுக்கம் தெரிந்த பல சிற்பிகள் பணியில் ஈடுபட்டார்கள். மிகுந்த பக்திசிரத்தையுடன் சிவப்பணியில் கலந்துகொண்டு தங்கள் உடலுழைப்பை நாட்டின் உயரிய கலைச்சிறப்புக்கு ஆட்படுத்தினர்கள்; சிற்பிகளில் சிதம்பரம் திரு. கோவிந்தராஜன் தலைமை நிலையில் இருந்து கலைவிளக்கம் கண்டு ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணியவர்களின் திருவருளுக்குப் பாத்திரரானர். வண்ணப்பூச்சு, புதிய சுதையமைப்பு, சிற்பநிர்மாணம், புனருத்தாரணம் ஆகிய எல்லா நிலைகளிலும் திருப்பணி உருவாகி இராஜகோபுரங்கள், மண்டபங்கள், விமானங்கள், முதலியன புத்தழகுடன் பொலியலாயின. கருங்கல் தளவரிசை புது அழகுடன் விளங்கலாயிற்று. புதிய சிமெண்ட் மேல்தளக் கொட்டகைகள் எழுந்தன. கண்கவர் வண்ணத்துடன் திருப்பணி நிறைவேறியது. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள், ஆதீன தேவஸ்தானங்களின் பிரதம சூப்பரெண்டெண்ட் திரு. B. முத்துக்குமாரசாமி முதலியாரவர்களும், சூப்பரெண்டெண்ட் திரு. A. கல்யாணசுந்தரதேசிகரவர்களும், ஆதீனம் மடம் ஷராப் திரு. S. சுப்பையா முதலியாரவர்களும், ஆதீன மடம் & தேவஸ்தானம் மானேஜர் இருவரும் ஆகிய அனைவருடன் அவ்வப்போது பார்வையிட்டும், கருத்துக்கள் தெரிவித்தும், நலம் பாராட்டியும், தொழிலாளர்களை ஊக்குவித்தும் திருப்பணியை நிறைவேறச் செய்தருளினர்கள். அதன்படி கும்பாபிஷேகத்திற்கான முன்னேற்பாடுகள் மிகச் சிறந்த முறையில் நிகழ்ந்தன.

**விழாப்பந்தல்கள் :**

கட்டளைமடத்திலிருந்து இராஜகோபுரம் வரை விழாப்பந்தல் அமைக்கப்பட்டது. பந்தலின் முகப்புவேலைகள் மிக அழகாக, தஞ்சைமாவட்டத்திற்கே உரிய தனிச்சிறப்புடன் செய்யப்பட்டிருந்தன. கோயிலின் வெளிப்பிராகாரத்தில் இரண்டாம் கோபுரம்வரையிலும், யாகசாலைக்கு எதிரிலும் பந்தல்கள் போடப்பட்டிருந்தன இப்பந்தல்கள் கும்பாபிஷேக தரிசனத்திற்கு வரும் பல்லாயிரக் கணக்கான மக்கள் வெயில் நேரத்தில் இளைப்பாறுதற்கும் வசதியாக அமைந்திருந்தன. பன்னிரு திருமுறை மாநாட்டிற்கு என்று தனியே இராஜகோபுரத்திற்கும் வடபாகத்தில் ஒரு கொட்டகை போடப்பட்டிருந்தது. ஐயாயிரத்திற்கும் மேற்பட்ட மக்கள் ஒருசேர அமர்ந்திருந்து மாநாட்டு நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள வாய்ப்பாக அமைந்திருந்தது அக்கொட்டகை. இவையல்லாமல் காவல்நிலையத்தவர் (போலீஸ்) முதலிய பலர் தங்குவதற்கும் உணவு உண்ணுவதற்குமாக ஆங்காங்குக் கொட்டகைகள் அமைக்கப்பட்டிருந்தன.

பந்தல்களில் மேற்கட்டிகளும், தோரணங்களுமாகக் (தொம்பைகளும்) கட்டப்பட்டிருந்தவை அழகுக்கழகு செய்வதாய் அமைந்திருந்தன.

மின்விளக்குகள் :

இறைவனைச் சோதி வடிவமாகக் கண்டு வழிபடுவது நமது வழக்கு. அதற்கேற்ப லௌகிகநிலையிலும், வைதிகநிலையிலும் வைத்து எண்ணும்படி சந்நிதிகள் தோறும் எண்ணற்ற எண்ணெய் விளக்குகளும் கொட்டகைகள், கோபுரங்கள், யாகசாலை மண்டபங்கள் முதலிய இடங்கள்தோறும் ஒளி தந்தன. பல மைல் தூரம் தூரத்திலிருந்து பார்ப்பவர்க்கும் பஸ் மார்க்கத்தில் வருகின்ற பிரயாணிகளுக்கும் ஸ்தூலலிங்க தரிசனம் கிடைப்பதற்கு வாய்ப்பாக கோபுரங்களெல்லாம் பற்பல வர்ண வரிசைகளாலான மின்விளக்குகளால் அலங்கரிப்பட்டிருந்தன. யாகசாலையின் மின் விளக்கொளி மிகப் பேரொளியாய் விளங்கிற்று.

யாகசாலை :

யாகசாலை கோயிலின் மேற்குப் பிராகாரத்தில் ஸ்ரீ சுப்பிரமணியர் திருக்கோயிலுக்கு வடபுறமாக அமைந்திருந்தது. மிக உயரமான பகுதியில் யாகசாலை அமைப்பு இருந்ததால் பூர்ணாகுதி முதலிய தீபாராதனைகளை வந்திருந்தோரனைவரும் பார்த்து தரிசிக்க வாய்ப்பாக இருந்தது. யாகசாலைக்கு என்று புதிதாக ஒரு கட்டிடம் கட்டியது போன்று மண்டப அமைப்பில் மிக அழகிய சிறந்த வேலைப்பாட்டுடன் யாகசாலை விளங்கியது. ஸ்ரீ சரபர், ஸ்ரீ கம்பகரேசுவரர், ஸ்ரீ அறம்வளர்த்தநாயகி, முதலிய முக்கிய மூர்த்திகளின் சந்நிதிகள் ஒருசேர எல்லோரும் கண்டு வழிபடத்தக்கதாக அமைந்திருந்தமை குறிப்பிடத்தக்கது. கடங்கள் எழுந்தருளச் செய்யப்பெற்ற விமானங்களை அழகிய வேலைப்பாட்டுடன் செய்திருந்தனர். ஸ்ரீ சரபேஸ்வரருக்கு முகபத்திரவேதிகையும், ஸ்ரீ கம்பகரேஸ்வரருக்கு பஞ்சாஸன வேதிகையும், ஸ்ரீ தரும சம்வர்த்தனி அம்பாளுக்கு நாகபணீந்திராப்ஜினீ வேதிகையும் அமைந்திருந்தது கண்கொள்ளாக்காட்சியை அளித்தது. யாகசாலையின் வாயில்களில் சிறந்த ஓவியம் தீட்டப்பெற்ற திரைச்சீலைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. மற்றும் பல சிறந்த வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. யாகசாலை காரியங்களில் ஈடுபட பல மாவட்டங்களிலிருந்தும் சிவாகம வித்பன்னர்களாகிய சிவாசாரியப் பெருமக்கள் நூற்றுக்கு மேற்பட்டவர் வந்திருந்தனர். அவர்கள் காலங்களை முறைப்படி நிகழ்த்தினர். யாகசாலை நவகுண்ட பக்ஷமாக அமைந்திருந்தது குறிப்பிடத்தக்கது. நவகுண்ட பக்ஷத்தில் ஒவ்வொரு குண்டங்களிலும் சமித், அன்னம், ஆஜ்யம் இவைகளை முறைப்படி ஹோமம் செய்யவும் அந்தஅந்த குண்டங்களில் விளங்கும் மூர்த்தி மூர்த்தீசுவரர்களை எளிதில் யாவரும் அறிவதற்கும் நவகுண்ட யாகவிளக்கம் அச்சிட்டு வழங்கப்பட்டதுடன் அதன்படி காலம்தோறும் ஹோமம் செய்யப்பட்டது. இம்முறை எங்கும் காண்பது அரிது.

சோபகிருது ஆண்டு ஆவணித்திங்கள் 16-ஆம் நாள் (1—9—63) ஞாயிற்றுக் கிழமை இரவு கனபூஜை, அனுக்ஞை, விக்னேஸ்வர பூஜை, பிரசன்னவிக்னேஸ்வர பூஜை முதலியன நிகழ்ந்தன. 2—9—63 திங்கட்கிழமை வாஸ்துசாந்தி. மிருத் சங்கிரகணம் முதலியனவும் 3—9—63 செவ்வாய்க்கிழமை அங்குரார்ப்பணம்,

ரக்ஷாபந்தனம், கும்பாலங்காரம் முதலியனவும் நிகழ்ந்தன. பின்னர், அன்று இரவு மணி 7·30 க்குமேல் 9 க்குள் கலாகர்ஷணமும், யாகசாலாப்ரவேசமும் நடைபெற்றன. அன்று யாகசாலையில் முதற்கால பூஜை நிகழ்ந்தது.

4—9—63 புதன்கிழமை காலையிலும் மாலையிலுமாக இரண்டு காலபூஜைகள் நடைபெற்றன. 5—9—63 வியாழக்கிழமையன்றும் காலை மாலை இருவேளைகளிலும் இரண்டு காலபூஜைகள் நிகழ்ந்தன. அன்று காலை பரிவார கும்பாபிஷேகமும் சிறப்புற நடைபெற்றது.

6—9—63 வெள்ளிக்கிழமை இரவு இரண்டு மணி முதலே சிவாசாரியப் பெருமக்கள் யாககாரியங்களில் ஈடுபட்டனர். அன்று மகாகும்பாபிஷேக தினம். ஆதலால் சரியாக 4·30 மணி அளவில் பூர்ணாகுதி தீபாராதனைக்குத் தயாரானார்கள் ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி அவர்களும் 4·30 மணிக்கே எழுந்தருளினார்கள். யாகசாலை முதற்காலபூஜை முதல் நாள்தோறும் தொடர்ந்து நடைபெற்று வந்தபடியே ஒரு பக்கம் வேதபாராயணம், மற்றொரு பக்கம் சிவாகமபாராயணம், ஒரு பக்கம் தேவார பாராயணம், மற்றொரு பக்கம் நாதஸ்வர இன்னிசை. ஒரு பக்கம் அரகர முழக்கம். இப்படியாகப் பல இன்னிசைக் கருவிகள் முதலிய இன்னிசை முழக்கங்களோடு அதிர்வேட்டுக்களின் முழக்கமும் வானைப்பிளக்க யாகசாலைப் பூர்ணாகுதி தீபாராதனைகள் நடைபெற்றன.

**கடம் எழுந்தருளுதல் :**

பின்னர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களும் அருகில் இருந்து கடங்களை எழுந்தருளச் செய்தார்கள். பிரதான கடங்களைத்தவிர பிற கடங்கள் முன்னரே அங்கங்கே கொண்டுபோய் வைக்கப்பெற்றன. பின்னர் பிரதான கடங்கள் எழுந்தருளியாகியது, நாதஸ்வர இன்னிசைவாணர்களின் நாதஸ்வர இன்னிசை முழக்கத்துடன் கடங்கள் வலமாகக் கொணரப்பெற்றன. திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் இளவரசு வித்துவான், ஸ்ரீமத். முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும் வந்து கலந்துக்கொண்டார்கள். நிழற்படம் எடுப்போர் தங்கள் வேலையில் முனைந்தனர். அடிக்கடி மின்னொளி போன்ற ஒளி எழுந்தவண்ணமிருந்தன. கடங்கள் அங்கங்கே போய்ச்சேர்ந்தன.

**மகாகும்பாபிஷேகம் :**

ஸ்ரீ கம்பகரேஸ்வரர் விமானத்திற்குரிய கடம் மேல்தளத்தை அடைந்தது. விமானம் மிக உயரமானது. அங்கு எப்படி கடம் போய்ச்சேர முடியும். ஒருவரே எடுத்துச் செல்லமுடியாது. இவ்வளவு வேலைகள் நிகழ்ந்தது வியப்பிற்குரியதல்ல. இந்நிகழ்ச்சிதான் மிக முக்கியமானது என்று பலர் தங்களுக்குள் பேசிய வண்ணமிருந்தனர். பலர் எப்படி இவ்வளவு உயரமான விமானத்துக்குக் கடம் போகிறது என்று வேடிக்கை பார்த்த வண்ணமிருந்தனர். சிவாசாரியப் பெருமக்களுக்குரிய கடினமான இப்பணியை எண்ணிச் சிந்திந்த வண்ணமிருந்தனர் சிலர்.

கடம் விமானத்தின்மேல் போய்ச்சேருவதற்காக சாரம் கட்டியிருந்தது. சாரத்தின் படிக்கட்டுகளைப் பல பிரிவாகப் பிரித்து இடை இடையே ஒவ்வொரு தளம்

அமைத்துக் கட்டியிருந்தனர். இதனால் சாரம் கட்டியவர்களின் அனுபவமும் நுண்ணறிவும் புலப்பட்டது. சிவாசாரியர் கடத்தை எழுந்தருளச் செய்துகொண்டு படிக்கட்டின் வழியாக மேலேசெல்லும் பொழுது அத்தளத்தில் சிறிது நின்று இளைப் பாறிச் சென்றனர். அதைக் கண்ட பலர் தருமையாதீனக்கோயில் கும்பாபிஷேகம் என்றால் அதற்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. சிறு செயல்களைக்கூட மிக நுட்பமாக எண்ணித் துணிந்து முன்னேற்பாட்டுடன் செய்யப்படும் என்றனர் சிலர். வேறு சிலர் பல கும்பாபிஷேகம் நடத்தியதால் ஏற்பட்ட அனுபவம் என்றனர். எல்லா விமானங்களிலும் ஒருசேர அபிஷேகம் ஆவதையும் தீபாராதனை ஆவதையும் இங்கு பார்க்கமுடியும் என்றனர். வேறு சிலர் கும்பாபிஷேகம் குறிப்பிட்ட லக்னத்தில் (காலத்தில்) நிகழ்வதைப் பாருங்கள் என்றெல்லாம் பலர் கும்பாபிஷேகத்தைப்பற்றிப் பேசியவண்ணமிருந்தனர்.

யாகசாலையில் பூர்ணாகுதி நடக்கத் தொடங்கியதுமுதல் ஆதீனம் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர்கள் கும்பாபிஷேக நிகழ்ச்சிகளையும், கோயில் வரலாற்றையும், பெருமைகளையும் ஒலிபெருக்கிமூலம் கூறிய வண்ணமிருந்தனர். ஒலிபெருக்கி மூலம் ஒலிபெருக்கியவை மிக்க பயனுடையதாக இருந்தது.

சூரியோதய நேரத்தில் - கதிரவனின் கதிர்க்கற்றைகள் பொன்னொளிவீசி விமானங்களை அழகுசெய்யும் நேரத்தில் மங்கள இன்னிசைகள் முழங்க அரகர முழக்கத்துடன் மகாகும்பாபிஷேகம் நிகழ்ந்தது.

### மகாபிஷேகமும் லக்ஷார்ச்சனைத் தொடக்கமும் :

கோபுர, விமான கும்பாபிஷேக தரிசனத்திற்குப் பின்னர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் மூர்த்திகள் கும்பாபிஷேகத்துக்கும் எழுந்தருளினார்கள். விநாயகர், ஸ்ரீ கம்பகரேசுவரர், ஸ்ரீ சுப்பிரமணியர், ஸ்ரீ தர்மசம்வர்த்தனியம்பாள், ஸ்ரீ சரபர் முதலிய மூர்த்திகளுக்கு முறையே கும்பாபிஷேகம் நிகழ்ந்தது. பின்னர் ஸ்ரீ கம்பகரேசுவரர், ஸ்ரீ தர்மசம்வர்த்தனியம்பாள், ஸ்ரீ சரபர் ஆகிய மூர்த்திகளுக்கு மகாஅபிஷேகம் நடத்துவித்து உடன் ஏகதின லக்ஷார்ச்சனையும் தொடங்கப்பெற்றது. ஸ்ரீ சரபர் சந்நிதியில் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் இளவரசு வித்துவான் ஸ்ரீமத். முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கட்கும் சென்னை மாநில அறநிலைய ஆணையர் உயர்திரு. M.S. சாரங்கபாணிமுதலியார் B.A., B.L., அவர்கட்கும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் பொன்னாடை போர்த்தி ஆசி வழங்கினார்கள். அன்பர்கள் எல்லோருக்கும் மகாகும்பாபிஷேக பிரசாதங்கள் அடங்கிய துணிப் பைகளை வழங்கியபின்னர் கோயில் மரியாதைகளுடன் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்கள் கட்டளைமடத்திற்கு எழுந்தருளினார்கள்.

### கொலுக் காட்சி :

கட்டளைமடத்தில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி யதும் அன்பர்கள் வேண்டுகோட்கிணங்க கொலுக்காட்சி வழங்கியருளினார்கள். நாதஸ்வரம் முதலிய இன்னிசைக் கருவிகள் முழங்கின. திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம்

இளவரசு வித்துவான். ஸ்ரீமத். முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் பூசனையியற்றி வழிபாடு செய்தார்கள். பின்னர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் திருநீற்றுப் பிரசாதம் வழங்கியருளினூர்கள்.

லக்ஷார்ச்சனைப் பூர்த்திவிழா:

இரவு 9 மணி இருக்கும். திருக்கோயில் முழுவதும் மக்கள் கூட்டம் நிரம்பி யிருந்தது. காலையில் கும்பாபிஷேக தரிசனத்திற்கு வந்திருந்த மக்கள் எல்லோருமே வந்து கூடியிருக்கின்றூர்களோ என்று எண்ணும்படியாக மக்கள் கூடியிருந்தனர். மக்கள் கூடியதற்குக் காரணம் இரண்டு கூறலாம். ஒன்று இரவு பஞ்சமூர்த்திகளின் திருவீதியுலாக்காக்ஷி. அதிலும் சிறப்பாக மூன்று முத்துப்பல்லக்குகளை ஒருசேரப் பார்க்கும் வாய்ப்பு. மற்றென்று மூன்று ஏகதின லக்ஷார்ச்சனை, இவ்விரண்டுமே எங்கும் நிகழாதது; எங்கும் காணமுடியாதது என்றே கூறலாம். பல்லக்குக் காட்சி யாவது ஒருசில இடங்களில் பார்க்கமுடியும். ஒரேநாளில் நடக்கும் மூன்று லக்ஷார்ச் சனைகளைக் காண்பது அரிது. எங்கும் காணமுடியாத அற்புதக்காட்சி இங்கு நிகழ்ந் தது. முதலில் கும்பாபிஷேகம், அடுத்து மகாபிஷேகம் அடுத்து லக்ஷார்ச்சனை· இக்காட்சியைக் காணும் பேறுபெற்றேரே கண்பெற்ற பயனைப் பெற்றவர்கள் என்று கூறலாம். லக்ஷார்ச்சனை பூர்த்தி சுமார் பத்துமணி அளவில் நிகழ்ந்தேறியது ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றினூர்கள்.

மதுரை ஆதீனம் மகாசந்நிதானம்:

இவ்வழிபாட்டில் மதுரை ஸ்ரீ திருஞானசம்பந்தர் ஆதீனம் மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களும் கலந்து கொண்டார் கள். ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் மதுரை ஆதீனம் மகா சந்நிதானம் அவர்கட்குப் பொன்னுடை போர்த்தி சிறப்பித்தார்கள்.

குன்றக்குடி மகாசந்நிதானம்:

திருவண்ணமலை ஆதீனம் குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணுசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் பின்னர் எழுந்தருளினூர்கள். ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் குன்றக்குடி ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கட்குப் பொன்னுடை போர்த்திச் சிறப்பித்தார்கள். பின்னர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்கள் தருமைக்கு எழுந்தருளினூர்கள்.

திருவீதியுலா:

இரவு பஞ்சமூர்த்திகளின் திருவீதியுலாவிற்காக முத்துப்பல்லக்குகள் தயாரா யின. முத்துப்பல்லக்குக் கட்டுவதில் கைதேர்ந்தவர்கள் பல இடங்களிலிருந்தும் வந்து அவ்வேலையில் முனைந்தனர். ஸ்ரீ சரபர், ஸ்ரீ பஞ்சமூர்த்திகள் ஆகிய மூர்த்தி களின் திருவீதியுலா இரவு பத்து மணிக்குமேல் தொடங்கிற்று. சிறந்த நாதஸ்வர இன்னிசைக் கச்சேரிகள், பேண்ட் வாத்திய முழக்கம், திருமுறைப் பாராயணம்,

வேத சிவாகம பாராயணம் முதலியனவும் நிகழ்ந்தன. பொய்க்கால் குதிரையாட்டம், வாணவேடிக்கை முதலியனவும் நடைபெற்றன. பலதிறப்பட்ட மக்களுக்கும் விருந்தாக அமைந்தன இந்நிகழ்ச்சிகள். மக்கள் திரளாக நின்று வழிபட்டுய்ந்தனர். 'இங்கு நம் இல்லங்கள்தோறும் எழுந்தருளிச் செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகன்' என்ற திருவாசகத்தின் உண்மைக் காட்சியாக இது இருந்தது.

திருமுறைப் பாராயணம் :

திருமுறைப் பாராயணத்திற்காகத் தமிழ் நாட்டின் பல இடங்களிலுமுள்ள சிறந்த பண்ணிசைவாணர்கள் வந்துசேர்ந்தனர். அதில் ஆதீன தேவஸ்தானங்களிலுள்ள ஓதுவாமூர்த்திகளும், ஆதீனம் தேவார பாடசாலை ஆசிரியரும் மாணவர்களும் கலந்துகொண்டனர். தக்கபக்கவாத்தியங்களும் வரவழைக்கப்பட்டிருந்தன. திருமுறைப் பாராயணத்திற்கு என்று ஒரு தனியான இடம் அமைக்கப்பட்டிருந்தது. அவ்விடம் திருமுறை இன்னிசையைக் கேட்க விரும்புவோர் பலர் ஒருசேர இருந்து கேட்டும் வாய்ப்புடைய இடமாக இருந்தது. கோயிலின் உள்சுற்றில் மேல் பிராகாரத்தில் யாக சாலைக்குத் தென்புறமாக மிக உயரமான இடத்தில் அமைந்திருந்தது இவ்விடம். பண்ணிசைவாணர்கள் இசைக்கும் பண்ணிசையை எதிரே இருந்து கேட்பவர் அல்லாமல் ஆங்காங்கு இருந்து கேட்க விரும்புகின்றவர்களும் கேட்டு மகிழும் வண்ணம் ஒலிபெருக்கிகள் அமைக்கப்பட்டிருந்தன. திருமுறைப்பாராயணம் அகண்ட பாராயணமாக நிகழ்ந்தது குறிப்பிடத்தக்கது. இரவும் பகலும் இடைவிடாமல் யாக சாலை தொடங்கிய நாள்முதல் கும்பாபிஷேகம் முடியும்வரை இப்பாராயணம் நிகழ்த்தப் பெற்றது. கும்பாபிஷேக விழா நாட்களில் ஆதீன தேவஸ்தானங்களில் திருமுறைப் பாராயணம் அகண்ட பாராயணமாக நிகழ்ந்துவருவது கண்கூடு. இந்நிகழ்ச்சிகள் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களின் திருமுறைப்பற்றையும், திருமுறைகளில் தோய்ந்த திருவுள்ளத்தையும் நமக்குத் தெள்ளத்தெளியக் காட்டுவனவாகும். திருமுறைகளை இடைவிடாது பாராயணம் புரியும் அகண்ட பாராயணம் திருபுவனம் மகாகும்பாபிஷேகத்திற்குப் பக்திமெருகு ஊட்டி அனைவரையும் தெய்விகவெள்ளத்தில் திளைக்கச்செய்ததென்றால் அது மிகையாகாது.

வேதசிவாகம பாராயணம் :

ருக், யஜுர், சாம, அதர்வண வேதங்களில் கரைகடந்தவர்களாகிய அந்தணர்களாலும், சிவாகம வித்துவான்களாலுமாகப் பலர் வேத சிவாகம பாரயணத்திற்காக வந்து குழுமினர். யாகசாலை தொடங்கியது முதலே வேதபாராயணம், சிவாகம பாராயணம் முதலியன சிறப்பாக நிகழ்ந்தன. மேலும் பூர்ணாகுதி காலங்களில் தீபாராதனைக்குப் பின்னரும் வேதபாராயணம் முதலியன நிகழ்ந்தன.

கலைக்கூடத் திறப்பு விழா :

5—9—63 வியாழக்கிழமை மாலை 7 மணி அளவில் கலைக்கூடத் திறப்புவிழா நிகழ்ந்தது. திருக்கோயிலின் உள்சுற்றில் தெற்குப்புறமாயுள்ள திருமாளிகைப்பத்தி மண்டபத்தில் கலைக்கூடம் அமைக்கப்பட்டிருக்கிறது. திருபுவனம் திருக்கோயிலி

லுள்ள அழகிய சிற்பங்கள் முதலியன இக்கலைக்கூடத்தில் முதலிடம் பெற்றுள்ளன. அச்சிற்பங்கள் சிறந்த ஓவியரைக்கொண்டு ஓவியந்தீட்டி வைக்கப்பட்டிருக்கின்றன. அவை அக்கோயிலின் மேன்மையையும் - சோழர்காலக் கலைத்திறனையும் நமக்குத் தெளிய விளக்குகின்றன. கலைக்கூடத்தை சென்னை மாநில அறநிலையத்துறை ஆணையர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார் அவர்கள் திறந்துவைத்தார்கள், சென்னை சமயப்பிரசார நிலையம் வித்துவான். ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் திறப்பு விழாவிற்கு வந்த அனைவரையும் வரவேற்றார்கள். ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் திரு. அறநிலையத்துறை ஆணையர் அவர்கட்கும், தஞ்சை அறநிலையத்துறை துணை ஆணையர் திரு. K. சோமசுந்தர தேசிகர் அவர்கட்கும் பொன்னாடை போர்த்தருளினார்கள். பின்னர் திரு. ஆணையர் அவர்கள் திறப்புரையாற்றினார்கள். சோழர்காலக் கலைகளின் மேன்மையையும் தொன்மையையும் எடுத்து விளக்கும் அரிய ஆராய்ச்சியுரையாக ஆணையர் அவர்களின் உரை அமைந்திருந்தது.

மலர் வெளியீட்டு விழா :

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் திருபுவனம் மகாகும்பாபிஷேகத்தை உலகிற்கு ஓர் எடுத்துக்காட்டாக நிகழ்த்தவேண்டுமெனத் திருவுளம் பற்றினார்கள். அதன்படி பல துறைகளிலும் பற்பல ஆக்கவேலைகளைச் செய்வித்தருளினார்கள். அவற்றில் ஒன்று கும்பாபிஷேக மலர் வெளியீடு. கும்பாபிஷேக மலர்க்காக அறிஞர்கள் பலருக்கும் பல புதுவிதமான தலைப்புக்களில் கட்டுரைகள் அனுப்புமாறு செய்திகள் அனுப்பப்பட்டன. அவரவர்களும் அதில் மிக்க ஆர்வம் காட்டி நல்லமுறையில் சிறந்த செய்திகளைக் கட்டுரையாக்கியனுப்பினர். அக் கட்டுரைகளின் தொகுப்பே கும்பாபிஷேக மலர். மேலும் அம்மலரில் திருபுவனம் திருக்கோயிலின் கலைகளெல்லாம் படமாக்கிப் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன. சிறந்த மூர்த்திகள் அழகிய சிற்பங்கள் சிறந்த வரலாறுகள் முதலியன அப்படங்களில் இடம் பெற்றுள்ளன. இவையடங்கிய இச்சிறப்பு மலரைச் சென்னை மாநில அறநிலையத் துறை அமைச்சர் ( முதலமைச்சர் ) " நல்லறங்காவலர் " திரு. கனம். M. பக்தவத்சலம் B. A., B. L., அவர்கள் வெளியிட்டு வெளியிட்டுரையாற்றினார்கள். கனம். அமைச்சரவர்களை வித்துவான். ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் வரவேற்றார்கள். வரவேற்புரைக்குப் பின்னர் செந்தமிழ்ச்செல்வர். வித்துவான். திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் திருபுவனம் திருக்கோயில் சிறப்புப்பற்றி ஓர் சிறப்புரையாற்றினார்கள்.

பன்னிருதிருமுறை மாநாடு :

தருமையாதீனத் திருக்கோயில்களில் மகாகும்பாபிஷேக நிகழ்ச்சியையொட்டி நிகழும் மாநாடு தனிச்சிறப்புடையதாய் அமைவது இயல்பு. அம்முறையில் இத்திருக்கோயில் கும்பாபிஷேக விழாவில் அமைந்த மாநாட்டினைத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் தலைமையேற்று அருளாசி வழங்கித் தொடக்கவுரையாற்றினார்கள். ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் ஹஸ்த விசேஷத்தால் மாநாடு மூன்று நாட்களிலும் சிறப்பாக நடைபெற்றது. அறிஞர்கள் பலர் கலந்துகொண்டு சிறப்புறையாற்றினர்.

திருவண்ணமலையாதினம் குன்றக்குடி மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களும், மதுரை திருஞானசம்பந்தர் ஆதினம் மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களும், தமிழ்நாடு முதலமைச்சர் நல்லறங்காவலர் கனம் திரு. M. பக்தவத்சலம் B. A., B. L., அவர்களும், சென்னை மாநில இந்து சமய அறநிலயத்துறை ஆணையர் திரு. M. S. சாரங்கபாணிமுதலியார் B. A., B. L., அவர்களும், அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் பல்கலைச்செல்வர். திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர் M. A., B. L., M. O. L. அவர்களும், கோவை நிர்மலா கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் செந்தமிழ்ச்செல்வி. வித்துவான். திருமதி. சி. ந. குழந்தையம்மாள் M. L. A. அவர்களும், சென்னைப் பல்கலைக்கழகத் துணைத் தமிழ்ப் பேராசிரியர், சைவ இலக்கியப் பேரறிஞர். டாக்டர். திரு. மா. இராசமாணிக்கனுர் M. A. M. O. L. Ph. D. அவர்களும், சென்னை கலைமகள் ஆசிரியர், செந்தமிழ்ச்செல்வர். வித்துவான். திரு. கி. வா. ஜகந்நாதன் M. A., அவர்களும் மற்றும் பல அறிஞர்களும் கலந்துகொண்டு சிறப்பித்தனர். (மாநாட்டு நிகழ்ச்சி தனியே வெளியிடப்படுகிறது.)

கும்பாபிஷேக விளம்பரங்களும், முன்னேற்பாடுகளும்:

கும்பாபிஷேகத்திற்குப் பல இடங்களிலிருந்தும் அன்பர்கள் வந்து தரிசிப்ப தற்கு ஏற்ப ஒரு மாத காலத்திற்கு முன்பே விளம்பரம் செய்ய முன்னேற்பாடாக கும்பாபிஷேக நாள் குறித்து தலச்சிறப்புடன் கும்பாபிஷேகப் பத்திரிகை அச்சிட்டு அன்பர்களுக்கு வழங்கப்பட்டது. தினப்பத்திரிகை முதலியவற்றிற்கும் அனுப்பி நல்ல விளம்பரம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டது. தமிழ்த் தினத்தாள்களும். ஆங்கிலத் தினத்தாள்களும், மற்றும் வார, மாத இதழ்களும் நல்ல முறையில் சிறப்பிடந்தந்து விளம்பரஞ் செய்திருந்தன. அன்பர்கள் திருபுவனம்பற்றிய வரலாற்றுச் செய்திகளைக் கட்டுரை அமைப்பில் எழுதிப் பத்திரிகைகளில் வெளிவரச் செய்திருந்தனர். பல வண்ணங்களுடன்கூடிய வால்போஸ்டர் (சுவரொட்டி) மூலமாக வும் விளம்பரம் செய்திருந்தது. தட்டிகளில் ஒட்டியும் பல முக்கிய நகரங்களில் (கும்பகோணம், மாயூரம்) வைக்கப்பட்டிருந்தது.

பத்திரிகைகள் மூலமாகவும், வேறு பலவகையாலும் செய்யப்பட்ட விளம் பரங்கள் நல்ல பலனையளித்தன. மக்கள் திரண்டு வந்து தரிசித்தனர். கூட்டம் மிகுதியாயிருந்ததால் கும்பாபிஷேகநாளில் சில விதிமுறைகள் அமைத்துக்கொள்ள வேண்டியது இன்றியமையாததாயிற்று. கூட்டத்தைக் கட்டுப்படுத்த நுழைவுச் சீட்டுகள் அச்சிட்டு வழங்கப்பட்டன. நுழைவுச் சீட்டுகள்: பிராகாரம், திருமாளிகைப்பத்தி, விமானம் மேல்தளம் ஆகிய ஒவ்வொரு பிரிவுக்குமாகத் தனித்தனியாக வழங்கப் பட்டன. ஸ்ரீ சரபர் திருவுருவ அமைப்புடைய பிளாஸ்டிக் வில்லைகள் வைத்துள்ள அடையாளம் உள்ளவர்கள் எங்கும் போக அனுமதிக்கப்பட்டனர். இவ்வேற்பாடு எதிர்பாராது நிகழ்கின்ற சில அசம்பாவிதங்களையும், கடம் எழுந்தருளியாகும் காலத்திலும், மகாபிஷேககாலத்திலும், கும்பாபிஷேக தரிசனத்திற்குப் பின்னர் ஒரு சேர எல்லோரும் வெளியில்வரமுயலும்போது ஏற்படும் நெரிசலையும் தவிர்க்க ஏதுவா யிற்று. இவ்வளவு முன்னேற்பாடுகள் இருந்தும் குழந்தைகளைத் தவறவிட்ட தாய் தந்தையர்கள் பலர். காவல்துறையினர் (போலிஸ்) காணுமற்போன குழந்தைகளை

அவர்களின் பெற்ருேர்களிடம் ஒப்படைத்தும் போக்குவரவில் ஏற்படும் நெறிசல்களைத் தவிர்த்தும் நல்ல முறையில் பணியாற்றினர். இவ்வாறு தமிழ்நாட்டுப் பத்திரிகைகள் பலவற்றின் ஒத்துழைப்பும், காவல்துறையினர் ஒத்துழைப்பும் பெரும் பலனை விளைத்தன. பஸ் அதிபர்களின் ஒத்துழைப்பும் பெருவாரியாகக் கிடைத்தமை குறிப்பிடத்தக்கது. கும்பகோணத்திற்கும் திருபுவனத்திற்கும் பஸ்கள் விடப்பட்டமை பக்தர்களுக்கு மிகவும் வசதியாக இருந்தது.

**வேலை நியமனங்கள் :**

மகாகும்பாபிஷேக விழா நிகழ்ச்சிகள் குறித்தகாலத்தில் திறம்பட நிகழ்வதற்காக திருத்தருமையாதீன திருக்கூட்டத்து அடியவர்களும், மடம் உயர் அலுவலர்களும் எழுத்தர் முதலிய பணியாளர்களும், ஆதீனத்துக்குச் சொந்தமான எல்லாத் தேவஸ்தானங்களிலும் பணியாற்றிவரும் அநுபவமிக்க அலுவலகர்களும் ஆக வேலை நியமன ஜாபிதா தயாரிக்கப்பட்டது. யார் யார் எந்தெந்த வேலைகளில் ஈடுபட வேண்டும் என்று குறித்து அவரவர்களுக்கும் இட்ட வேலைகளும் திறம்பட நிகழ ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இவ்வாறு முன்கூட்டியே செய்யப்படும் ஏற்பாடுகளே திருத்தருமையாதீன நிர்வாகம் சிறப்புற நிகழக் காரணமாகின்றன. அவரவர்க்கிட்ட பணியை அவரவர் அறியும் வண்ணம் வேலை நியமனத் திட்டம் அவரவர்க்கும் அறிவிக்கப்பட்டு எல்லோர் பார்வைக்குமாக மடாலயத்தின் நடுஹாலில் பலநாட்களுக்கு முன்னரே வைக்கப்பட்டிருந்தது.

**அன்னம்பாலிப்பு :**

மகாகும்பாபிஷேக விழாவைத் தரிசிக்கவருவோர்க்கும், மகாகும்பாபிஷேக விழா வேலைகளில் பங்குபற்றுவோருக்குமாக உணவு வசதிகள் செய்யப்பட்டன, மேலும் யாககாரியங்களில் ஈடுபடுவோர், திருமுறைப் பாராயணம் நிகழ்த்துவோர், காவல்துறையினர், மாநாட்டு நிகழ்ச்சிகளில் கலந்துகொள்வோர், நாதஸ்வரம். இன்னிசை, வாணவேடிக்கை முதலிய பலவற்றிற்குமாக வந்திருப்போர் ஆகிய அனைவருக்கும் தனித்தனியாக இடவசதிகள் உணவு வசதிகள் செய்து காலத்தில் உணவுகிடைக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தது குறிப்பிடத்தக்கது.



உள்ளத்தில் கடவுளுணர்ச்சி மலர்கின்ற பொழுதுதான் மக்கள் மக்களாக வாழ்கிருர்கள். இஃது இந்தியநாட்டுப் பண்பாடு. இதன் அடிப்படையில்தான் இந்நாட்டுச் சமய வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது.

* * *

கலை, மக்கள் வாழ்க்கை - இவற்றினூடே பிணைந்திருக்கும் கடவுளுணர்ச்சியை எந்த விஞ்ஞானியும் பிரிக்கமுடியாது.

— கயிலைக் குருமணி.

## பன்னிருதிருமுறை மாநாட்டினைத்

திருத்தருமையாதீனம் 25ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

தொடங்கி வழங்கியருளிய

# வாழ்த்துரை

" அண்ணல் ஆலவாய் நண்ணி னுன்றனை
எண்ணி யேதொழத் திண்ணம் இன்பமே "

உலகில் உரைசேரும் எண்பத்து நான்கு நூருயிரமாம் யோனி பேதங்களை யுடைய அளவற்ற உயிர்களையெல்லாம் நிரைசேரப்படைத்துஅவற்றின்உயிர்க்குயிராய் எங்கும் நிறைந்து நிற்பவன் இறைவன். அவனை அறிந்து வழிபடுவதே உண்மையில் உயிர்கள் இம்மை மறுமை நலங்களை அடைதற்குரிய வழியாகும். இதனை, 'அவரவர் செய்த பூஜாபலம்' என்று உலகில் வழங்கும் வழக்கத்தாலும் நன்குணரலாம்.

மக்களேயன்றி மால், அயன், இந்திரன் முதலிய கடவுளர்கள் தம் தம் பெரும் பதவிகளில் இன்புற்று வாழ்வதும் இறைவன் வழிபாட்டின் பயனே என்பதை,

" வண்டுளருந் தண்துழாய் மாயோன் இறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தேள் இறுமாப்பும்
அண்டர்தொழ வாழ்உன் இறுமாப்பும் ஆலாலம்
உண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால் "

என்னும் பகுதியால் தெரிவிக்கின்றது திருவிளையாடற் புராணம்.

" வானம் ஏத்தயான் வைகுந்த வாழ்வுபெற் றதுவும்
ஞான நான்முகன் சத்திய உலகம்நண் ணியதும்
ஏனை விண்ணவர் தத்தம வாழ்க்கைஎய் தியதும்
ஆனு யர்த்தவன் அருட்குறி அருச்சனைப் பயனல் "

— காஞ்சிப் புராணம்

எனச் சிவனடியார்களுள் முதலடியாராக வைத்து எண்ணப் பெறும் திருமால் சிவபரம் பொருளை வழிபடும் பயனைத் தெரிவிக்கிருர்.

இங்ஙனம் எல்லா இன்பங்களையும் எய்துதற்கு இறைவனை எவ்வாறு வழிபடுவது? இறைவன் எங்கும் நிறைந்துள்ளவன்; ஆனல், ஒரு நாமம் ஓர் உருவம் இல்லாதவன்: குணங் குறிகள் அற்றவன்; காண்டற்கரியவன், அவனை நாம் எவ்வாறு கண்டு வழிபடுவது? பால், பசுவின் உடம்பெங்கும் நிறைந்துள்ளதாயினும் அதனை

நாம் பெறுதற் குரிய இடம் பசுவின் மடியே அல்லவா? அதுபோல, இறைவன் எங்கும் நிறைந்திருப்பவனுயினும், அவனை நாம்கண்டு வழிபடுதற்குரிய இடம் திருக் கோயிலே யாகும்.

" மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம்
ஆனிடத் தைந்து மாடு மரன்பணிக் காக வன்றே
வானிடத் தவரு மண்மேல் வந்தரன் றனையர்ச் சிப்பர்
ஊனெடுத் துழலு மூம ரொன்றையு முணரா ரந்தோ "

என்று சிவஞானசித்தியாரில் கூறியபடி, வானுலகத்தில் உள்ளவர்களும் இம் மண்ணுலகில் வந்து திருக்கோயில் வழிபாட்டினைச் செய்து அளவற்ற பெரும் பயன் களை அடைந்தனர் என்பது புராணங்களில் பலவிடத்தும் காணப்படுவது.

விண்ணுலகில் இறைவனை அபிஷேகித்து ஆராதனை செய்யும் கிரியை முறைகள் இல்லை. எனவே திருமால் பிரமன் முதலிய தேவர்யாவரும் மண்ணுலகிற்கு வந்து வழிபட்டு இறையருள் பெறவிழைவதைத் திருமுறைகளும் தலபுராணங்களும் தெரிவிக்கின்றன,

" கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போதும் முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போடு மலர்தூவி ஐம்புலனும் அகத்தடக்கி
எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேனே " — அப்பர்.

" புவனியில் போய்ப்பிற வாமையில் நாள்நாம்
போக்குகின்றோம் அவமே இந்தப்பூமி
சிவன் உய்யக் கொள்கின்ற வாறென்றுநோக்கி
............திருமாலாம் அவன் விருப்பெய்தவும்
மலரவன் ஆசைப்படவும்............ " — திருவாசகம்

எனவே, நன்மை தீமைகளைப் பகுத் துணர்ந்து, தீமையை நீக்கி நன்மையை அடையும் மக்களுலகில் முதலிடம் பெறுவன திருக்கோயில்களே என்பது சொல்லத் தேவை இல்லை.

'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டா' 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்பன நம்நாட்டு முதுமொழிகள். " திருக்கோயில், இல்லாத திருவிலூர் " என்பது அப்பர் பெருமான் திருமொழி.

ஆசாரியர்களின் அருள்மொழிப்படியே நம் தமிழ் வேந்தர்கள் திருக்கோயில் களையே முதன்மையாகக் கருதினர். தங்கள் அரண்மனைகளை விடக் கோயில்களையே மிகச் சிறப்பாகவும், அழியாதனவாகவும் ஆக்கினர். தங்கள் வெற்றிச் சின்னங்களையும், கலை அழகுகளையும் அவர்கள் தங்கள் அரண்மனை முதலிய இடங்களில் கண்டு மகிழாமல் திருக்கோயில்களிலேயே கண்டு களித்தனர்.

முதல் இராசராச சோழன் தனது செல்வச் சிறப்பு, வெற்றிகளின் அறிகுறி. கலைஆர்வம் முதலிய எல்லாவற்றின் கருவூலமாகவும் தஞ்சைப் பெருங்கோயிலை அமைத்து மகிழ்ந்தான்; அவன் மகன் கங்கைகொண்ட சோழன் தான் வடநாட்டு அரசர்களை வென்று பெற்ற வெற்றியின் நினைவாக அவ்வெற்றியில் பெற்ற பெயராலேயே கங்கைகொண்ட சோழேச்சரத்தைச் சிற்பக்கலையின் சீர்ததும்பக் கட்டினன். அவன் பெயரனாகிய மூன்றாம் குலோத்துங்கசோழனும் தான் வடநாடு சென்று பெற்ற வெற்றியால் கிடைத்த பொருள்களைக்கொண்டு திரிபுவன வீரேச்சுரமாகிய இத் திருபுவனத் திருக்கோயிலைச் சிற்பக் கலைக்குச் சிறந்த இலக்கியமாகக் கட்டினன். அம்மன்னனுக்குத் திரிபுவனச் சக்கரவர்த்தி என்ற பெயரும் இருத்தல் பற்றி. அப் பெயரால் இங்குள்ள இத்திருக்கோயிலை அமைத்தான். இம்மன்னர்களது திருப்பணி களாலும் பிறவற்றாலும். ஆன்மீகத் துறையில் முதலிடம் வாய்ந்த நம் இந்திய நாட்டில் தமிழகம் திருக்கோயிலுக்குப் பெயர் பெற்று விளங்குகின்றது. இன்றைய அரசாங்கமும் தமிழ்நாட்டின் தனிப்பெருஞ் சின்னமாகத் திருக்கோயிலையே கொண்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

நம் பழம்பெரும் பொருள்களாகிய திருக்கோயில்களை நாம் கண்டு பாராட்டுவது மட்டும் போதுவதன்று. அவைகளில் நித்திய நைமித்திக வழிபாடுகளும் திருவிழாக்களும் குறைவின்றி நடைபெறச் செய்யவேண்டும். கோயில்களில் நித்திய வழிபாடு முட்டின்றி நடைபெற்றால்தான் நமது அன்றாட வாழ்க்கை செவ்வனே நடைபெறும். கோயில்களில் நைமித்திக விழாக்கள் சிறப்புற நிகழ்ந்தால்தான் நமது சிறப்பு நலங்கள் நம் உள்ளத்திற்கு நிறைவை அளிக்கும் வகையில் இனிது நிகழும். மேலும் கோயில் களின் அன்றாட வழிபாடும், சிறப்பு நிகழ்ச்சிகளும் தனிப்பட்டவர் நலத்திற்கு மட்டும் அன்று; நாட்டின் நலத்திற்கும், அமைதிக்கும், வெற்றிக்கும் அவைகளே மூல காரணங்களாய் அமைகின்றன.

திருக்கோயிலின் அமைப்பை உற்று நோக்கின் அது நமது உடம்பின் அமைப்பையே ஒத்திருப்பதைக் காணலாம். கர்ப்பக்கிருகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம், ஸ்நபன மண்டபம், அலங்கார மண்டபம், சபாமண்டபம் என்னும் ஆறும் முறையே மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம் அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களாகும். இவ்வமைப்பு இத்திருக்கோயிலில் உள்ளது. மூன்று ஆவரணங்கள், தூல, சூக்கும, காரணங்கள் என்னும் மூன்று சரீரங்களாகவும், பஞ்ச ஆவரணங்கள் அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞான மயகோசம், ஆனந்தமய கோசம் என்னும் பஞ்ச கோசங்களாகவும், சப்தாவரணங்கள் சப்த தாதுக்களாகவும், சொல்லப்படும். கதவுகள் ஆணவம்; துவஜஸ்தம் பத்தில் உள்ள கயிறு கன்மம்; அதில் கட்டப்படும் இடபக் கொடியை ஏற்றியும் இறக்கியும் இறைவன் திருவிழாக் கொண்டருளுதல், உயிர்களை வினையின் வழி இயக்கி ஐந் தொழில் செய்து அவைகளை விடுபேறு அடையச் செய்வ தாகும்.

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானர்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலன்ஐந்தும் காளா மணி விளக்கே"

என்னும் திருமந்திரத்தாலும்,

" காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனம்மணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனுர்க்குப் போற்றவிக் காட்டினோமே "

என்னும் அப்பர் தேவாரத்தாலும் திருக்கோயில்கள் நம் உடம்பின் அமைப்பையே பெற்றுள்ளமை விளங்கும். ஒவ்வோர், உயிருக்கும் ஒவ்வோர் உடம்பு உள்ளது. ஆனல், நாட்டின் உடம்பாகத் திருக்கோயில் இருக்க, அதனுள், நாட்டின் உயிராக இறைவன் இருக்கின்ருன் என்பதே திருக்கோயிலின் உண்மை.

எனவே, இத்தகைய திருக்கோயில்களில் நைமித்திக வழிபாடுகள் சிறப்புற நடத்தல் நாட்டின் நலத்திற்கும், வெற்றிக்கும் இன்றியமையாததாகும். திருக்கோயிலில் இவைகள் செவ்வனே நடைபெருது முட்டுப்படுமாயின் நாட்டின் நலம்கெடும்.

" முன்னவனர் கோயில் பூசைகள் முட்டிடில்
மன்னர்க்குத் தீங்குள வாரிவளங் குன்றும் "

என்பது திருமந்திரம்.

இனி, திருக்கோயில்களில் நித்திய நைமித்திகங்கள் செவ்வனே நடைபெறச் செய்வதோடு அவை பழுதடையாமல் அவ்வப்பொழுது திருப்பணிகள் பல செய்தும், மூர்த்திகட்கு அஷ்டபந்தனம் சாத்தியும், கும்பாபிஷேகங்கள் செய்வித்தல் வேண்டும். அப்பொழுதுதான் கோயில்கள் புத்தம் புதியனவாய் இறைவன் திருவருட் பொலிவை உடையனவாகி விளங்கும். பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறையேனும் தவருது கோயில்களில் மூர்த்திகளுக்கு மருந்துசாத்திக் கும்பாபிஷேகம் செய்வித்தல் வேண்டும் என்பது சிவாகம விதி.

கும்பாபிஷேகம் என்பது எல்லாவகையான குறைபாடுகளும் நீங்கி இறைவன் திருவருள் விளக்கம் மேம்பட்டுத் தோன்றுமாறு செய்யும் பெருஞ் சாந்தியாகும். இது திருக்கோயில்களில் உரிய காலங்களில் நடத்தப்பெறவேண்டுவது இன்றியமையாதது. மகாகும்பாபிஷேகத்தைச் செய்விப்பவரும், தரிசித்தவரும் எல்லாவகையான குற்றங்களினும் நீங்கி இறைவன் திருவருளுக்குப் பாத்திரராவார்கள். இது பற்றியே ஞானசம்பந்தரும், எலும்பைப் பெண்ணுக்கி எழச்செய்த அற்புதத் திருப்பதிகத்தில்,

" கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரம் அமர்ந்தான்
பெருஞ்சாந்தி காணுதே போதியோ பூம்பாவாய் "

என்று அருளினர்.

யந்த்ர மந்த்ர உபாசன மார்க்கங்களால், வேறு எங்கும் காணுத அற்புத தெய்வீக சக்தியை அனுபவத்தில் கண்டு களித்த நாடு நம் பாரதநாடு. அவ்வகையிலே நம் வேதாகமோக்த வைதிக சைவ நெறியில் மந்திர பூர்வமான உபாசனைகளால் இறைவனது அற்புத ஆற்றலைக் காணும் முறைகள் சிவாகமங்களிலே விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. அம் முறைகளில் சிவாலயங்களில் செய்யப்படும் மகாகும்பா பிஷேகம் மிகப் பெரியதொன்று. இதில் அமைந்துள்ள முறை ஒவ்வொன்றும் ஒவ்வொரு தத்துவ உண்மையை அடிப்படையாகக் கொண்டது.

தெய்வத் திருவுருவங்களை அப்படியே வைத்து வழி படாமல் மந்திர ரூபமாக வைத்து வழிபடுவதாலேயே விசேட பலன் உண்டாவதாகும். அதற்குக் காரணம் மந்திரங்களிலே தெய்வ சாந்நித்தியம் மிகுந்திருப்பதே. ஆகவே, தெய்வ வழிபாட்டில் மந்திரம் முதன்மையானதாகவும், அதனை அடுத்து அதற்குரிய பாவனையும் கிரியையும் உடன் நிகழவேண்டுவனவாகவும், அவற்றால் வழிபடும் இடங்களைக் கும்பம் விம்பம் தம்பம் என மூன்றாகவும் வைதிக சமயங்கள் கூறும். மூன்று வகையில் கும்பத்தில் சிறப்பாக வழிபட்டு அதில் தெய்விக சக்தி விளங்கப் பெற்ற நீரை விம்ப தம்பங்களுக்கு அபிஷேகித்தலே கும்பாபிஷேகமாகும். இதன் முக்கிய அங்கம் இறைவனை யாகத்தில் வழிபடும் அக்கினிகாரியமாகும்.

ஆலயத்தின் அமைப்பைப் போலவே கும்பத்தின் அமைப்பும் பல தத்துவங்களை உடையது. கும்பம் சிவனது திருமேனியாகவும், அவனது அளவற்றசக்திகளின் சொரூப மாகவும், முப்பத்தாறு தத்துவங்களின் வடிவமாகவும், எல்லாத் தேவர்களின் சொரூபமாகவும், சர்வதீர்த்தங்களின் ரூபமாகவும் அமைகின்றது. யாகசாலையும், யாக குண்டங்கள் முதலியனவும், யாக அக்கினியும் அவ்வாறே பல தேவர்களின சொரூப மாகவும், தேவதேவரான சிவபெருமானது அருள் வடிவமாகவும், மற்றும் பலவாறாகவும் அமைகின்றன. அவைகளைத் தக்கஆகம சீலர்களால் முறைப்படி அமைத்து, வேத சிவாகம அத்தியயனம், திருமுறைப் பாராயணம், சிவனடியார் தோத்திரங்கள் முதலியவற்றோடு செய்து கும்பத்திலுள்ள நீரை ஸ்தூலலிங்கமாகிய இராஜகோபுரத்திலும் கோயில் விமானத்தின் உச்சியிலும், சூக்குமலிங்க மாகிய மூலஸ்தான மூர்த்தியின் மேலும் அபிஷேகிப்பதால் தூய்மைபெற்று அவ்விடங்களில் சிவசாந்நித்தியம் மிகுந்து விளங்கி, உலகத்தின் பொருட்டாகவும், அவரவர்கள் பொருட்டாகவும் திருக்கோயிலில் செய்யப்படும் நித்திய நைமித்திக காமிய வழிபாடுகளுக்கு விசேட பலன்கள் சித்திக்கின்றன. அவைகளை அனுபவத்தில் உணர்ந்தே பெரிய அரசர் முதலான நம் முன்னோர்கள் கும்பாபிஷேகத்தை முதன்மையாகக் கருதிச் செய்துவந்தனர்; செய்தும் வருகின்றார்கள். இத்தகைய சிறந்த மகாகும்பாபிஷேகச் சிறப்பு இப்பொழுது இத் திருக்கோயிலில் வாய்த்துள்ளது

இத் திருபுவனத் திருக்கோயில், ' திரிபுவனச் சக்கரவர்த்தி ' என்னும் சிறப்புப் பெயருடைய மூன்றாம் குலோத்துங்கனால் (கி. பி. 1178—1218) எடுக்கப்பெற்றது என்பது முன்னமே குறிக்கப்பட்டது. இப்பேரரசனுடைய ஞானகுரு சித்தாந்த ரத்னாகர ஆசிரியர் ஸ்ரீ ஸ்கந்த சம்புவினுடைய திருமகனார் ஈஸ்வரசிவன் என்பவரால் சிவசாந்நித்திய ஆவாகனம் செய்யப்பெற்றது. இங்குத் தெய்விகச் சிற்பக்கலை ஈடும் எடுப்பும் அற்ற முறையில் விளங்குவதை இதனை நேரில் காண்கின்ற அன்பர்களாகிய நீங்கள் நன்கு உணர்கின்றீர்கள். கலைக்கூடம் ஒன்றும் இத்திருக்கோயிலில் திறக்கப்படுகிறது ஆகையால், அதுபற்றி நாம் மேலே ஒன்றும் சொல்லவேண்டுவது இல்லை.

இனி இங்குச் சிறப்பாக விளங்குபவர் சரபமூர்த்தி. இவரது பெருமை சரபோபநிஷதம் முதலியவற்றில் நன்கு விளக்கப்படுகின்றது. திருமால் நரசிங்க மூர்த்தியாய்த் தோன்றி இரணியனை அழித்த பொழுது அவனது உதிரத்தை முற்றிலும் குடித்த காரணத்தால் மதிமயங்கிச் செருக்குற்றுத் தாமே உலகத்தை அழிக்கத் தொடங்கினார், தேவர்களும், பிரமதேவனும், திருமகளும், பிரகலாதனும் திருமாலைத் துதித்து

இனிய முறையில் வேண்டிக்கொண்ட வேண்டுகோள்களும் அவரது செவியில் நுழைந்தில. அதனுல் அமரர் அனைவரும் சிவபிரானைச் சரணடைந்து வேண்டிக் கொள்ள 'சரபம்' என்னும் எண்காற்புள்ளின் வடிவங்கொண்டு சென்று நரசிங்கத்தை அழித்துத் திருமாலை முன்போலவே உலகைக் காப்பவராக ஆக்கினுர்.

அவ்வாறு செய்த அப்பெருமானே இத் திருத்தலத்தில் எழுந்தருளியிருக் கின்ருர். தேவர் முதலியோர்க்கு நரசிங்கத்தினுல் உண்டாகிய கம்பத்தை (நடுக்கத்தை) நீக்கியருளின காரணம் பற்றியே இவர், 'கம்பஹரேசுரர்' (நடுக்கம் தவிர்த்த பெருமான்) என்னும் திருப்பெயரோடு விளங்குகிருர். வரகுணனைப் பற்றியிருந்த பிரமஹத்தி திருவிடைமருதூரில் நீங்கியிருப்பினும் அதனுல் அவனுக்கு இருந்த நடுக்கத்தை இப்பெருமானே நீக்கியருளினுர். இதனுலும் இப்பெயர் பொருந்து வதாகிறது. சிவபிரான் காஞ்சிபுரத்தில் கம்பாநதியைப் பெருக்கெடுத்து வரச்செய்து உமாதேவிக்குக் கம்பத்தை (நடுக்கத்தை) உண்டாக்கிக் கம்பன் எனப்பெயர் பெற்ருன். இங்குத் தேவர் முதலானவரது கம்பத்தை நீக்கி, கம்பஹரனுய் விளங்குகின்ருன்; காஞ்சியில் இறைவன் உமாதேவிக்கு நடுக்கம் உண்டாக்கியதை, சுந்தரமூர்த்தி சுவாமிகள்,

"எள்க லின்றி இமையவர் கோனை
ஈசனை வழி பாடுசெய் வாள்போல்
உள்ளத் துள்கி உகந்துமை நங்கை
வழிப டச்சென்று நின்றவா கண்டு
வெள்ளங் காட்டி வெருட்டிடவஞ்சி
வெருவி யோடித் தழுவ வெளிப்பட்ட
கள்ளக் கம்பனை எங்கள் பிரானைக்
காணக்கண் அடியேன் பெற்ற வாறே"

என்று பாடியருளுகின்ருர்கள்.

சிவபிரானுக்குப் போக வடிவம், யோக வடிவம், வேகவடிவம் என்னும் மூவகை வடிவங்களில் சரபமூர்த்தம் வேகவடிவம். வேகவடிவங்கள் எல்லாம் உயிர்களது துன்பத்தையும் பகையையும் போக்கி, இன்பத்தையும் வெற்றியையும் அளிப்பன ஆதலின், சரப வடிவமும் அத்தகையதே. இது துன்பத்தை நீக்கவல்லது என்பதை,

"சிம்புளாய் மடங்கல் எறுழ்வலி கவர்ந்த
திறலும்முப் புரஞ்சுடு விறலும்
அம்புயா தனத்தன் முடிகளைந் திட்ட
அடலும்ஏத் தினர்க்கிட ருளதோ"

என்ற சோணசைலமாலைச் செய்யுளாலும் அறியலாம்.

சரபோபநிஷதத்தில் சரபரைப் பற்றிய தோத்திரங்கள் உள்ளன. மற்றும் இவருக்குரிய யந்த்ர மந்த்ரங்களும் உள்ளன. அவைகளின் வழியே சரபரை உபாசித்து பற்பல பயன்களைப் பெற்றுவருதல் அனுபவ மானது.

இச் சரபமூர்த்தியின், கம்பஹரேசுரரின் ஆலய மகாகும்பாபிஷேகப் பெரு விழாவில் இப் பன்னிரு திருமுறை மாநாடு நடைபெற வேண்டுவது மிக மிக இன்றியமையாததாகும். சிவபெருமானது போக வடிவம், யோக வடிவம், வேக வடிவங்களைப் பற்றியும், அவைகளால் அடையும் பயன்களைப் பற்றியும் நமக்கு நன்கு விளக்குகின்ற நூல்கள் பன்னிரு திருமுறைகளைவிட வேறு எவை இருக்கின்றன ?

திருமுறைகளைத் தில்லைச்சிற்றம்பலத்திலிருந்து வெளிப்படுத்தியவன் ஒரு சோழமன்னன். அவனுக்குத் திருமுறைகண்ட சோழன் என்ற சிறப்புப் பெயரும் இதனால் ஏற்பட்டது. அம்மன்னன் வேண்டுகோளின்படித் திருமுறைகளை அடைவு செய்தருளியவர் நம்பியாண்டார் நம்பிகள். மூவர் பாடிய தேவாரத் திருமுறைகள் சப்தகோடி மகாமந்திரங்களாக விளங்குதலின் இவற்றை முதல் ஏழு திருமுறை களாகவும் ஏகாதச மந்திரங்களாக ஏனைய திருமுறைகள் விளங்குதலின் அவற்றைப் பின்னுள்ள நான்கு திருமுறைகளாகவும் வகுத்தருளினர் என்று திருமுறை கண்ட புராணம் கூறுகிறது.

" மந்திரங்கள் எழுகோடி ஆதலினல் மன்னுமவர்
இந்தவகை திருமுறைகள் ஏழாக எடுத்தமைத்துப்
பந்தமுறு மந்திரங்கள் பதினென்றும் ஆதலினல்
அந்தமுறை நான்கினெடு முறைபதினென் ருக்கினர். "

இத் திருமுறைகளைக் கேட்பதிலேயே சிவபிரானுக்கு விருப்பம் மிகுதி. அவ்விருப் பத்தினலேயே அவன் தொடியுலாம் முன்கைமட மாதர்பால் தூது செல்லல், மண் சுமந்து கூலி கொண்டு பிரம்படி படுதல் முதலியவற்றைச் செய்தான். அவனது திருவருள் ஆற்றலால் பற்பல அரிய அற்புதச் செயல்களை உலகில் விளைத்தனவும் திருமுறைகளே, இத் திருமுறைகளின் சிறப்பை,

" அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத் தேடும்
அதுபோல் அன்று இது என்றும் உளதாம் உண்மைப்
பரபதமும் தற்பரமும் பரனே யன்றிப்
பலரில்லை என்றெழுதும் பனுவல் பாரில்
எரியிடை வேவாது ஆற்று எதிரேயோடும்
என்புக்கும் உயிர்கொடுக்கும் இடும்நஞ் சாற்றும்
கரியை வளைவிக்குங்கல் மிதக்கப் பண்ணும்
கராமதலை கரையிலுறக் காற்றுங்காணே "

என விளக்குகின்றது திருமுறைகண்டபுராணம்.

இத் திருக்கோயிலின் மகாகும்பாபிஷேகக் காட்சியும், வேத சிவாகம அத்தியயனங்களோடு திருமுறை மாநாடு, திருமுறைப் பாராயணம் இவற்றின் கேள்வியும் அன்பர்களுக்குக் கண் பெற்ற பயனகவும். செவி பெற்ற பயனகவும் அமைகின்றன. இச்சிவபுண்ணிய நிகழ்ச்சிகளில் ஈடுபட்டு அன்பர்கள் இருமைப் பயனும் பெற்று இன்புறுவார்களாக.

# பன்னிரு திருமுறை மாநாடு

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருபுவனம் ஸ்ரீ கம்பஹரேஸ்வரசுவாமி தேவஸ்தான மகாகும்பாபிஷேகத்தை ஒட்டி செப்டம்பர் 4, 5, 6 தேதிகளில் திருக்கோயில் வெளிச்சுற்றில் அமைக்கப்பெற்றிருந்த மாபெரும் மாநாட்டுப் பந்தலில் பன்னிரு திருமுறை மாநாடு மூன்று தினங்கள் மிகச் சிறப்பாக நிகழ்ந்தேறியது. காலை மாலை இருவேளையும் மாநாடு நிகழ்ந்தது. ஒவ்வொரு நாளும் காலை 9 மணிக்கும், மாலை 6 மணிக்கும் மாநாடு தொடங்கப்பெற்றது. அறிஞர்கள் பலர் சொற்பொழிவாற்றினர். கலைநிகழ்ச்சிகளும், இன்னிசைக் கச்சேரிகளும், கதாகாலட்சேபமும் நடந்தன. பக்தர்கள் திரளாகக்கூடிக் கேட்டின்புற்றுத் திருவருளுக்குப் பாத்திரராயினர்.

## 4—9—63 புதன்கிழமை காலை நிகழ்ச்சிகள் :

பன்னிரு திருமுறை மாநாட்டின் முதல்நாள் காலைநிகழ்ச்சிகள் 9 மணியளவில் தொடங்கலாயிற்று. திருமுறை ஓதியபின் வித்துவான். ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள். அவ்வுரையில் :-

" சோழர்காலக் கோயில்கள் தமிழ்நாட்டில் பலவுண்டு. பெரும்பாலான பாடல்பெற்றவை. பழமைமிக்க அவற்றைத் திருத்தியமைத்தல் அவசியம். கடமையைப் போதிக்கும் பல்கலைக் கழகம் திருக்கோயில்களே! பண்டு அரசர்கள் கட்டிய இத்தகு மாபெரும் கோயில்களை சைவ ஆதீனங்கள் தக்கவகையில் பேணிப் பாதுகாக்கின்றன.

இத்திருக்கோயில் எடுப்பித்தவன் மூன்றும் குலோத்துங்கசோழனுவான். அரசர்கள் தங்களுக்குக் கட்டிய அரண்மனைகள் அழிய, இறைவனுக்குக் கட்டிய திருக்கோயில்கள் மட்டுமே எஞ்சிநின்று அவர்கள் புகழ் பாடுகின்றன. வெற்றியின் அறிகுறியே அவர்களது கோயிற் பணிகள். அப்பர் சுவாமிகளைப்போல் முதல் இராசராசன், அவனது தமக்கை குந்தவைப்பிராட்டியால் திருத்தப்பட்டவன். போர் வெறிநீங்கி அருள்வழிநின்ருன் அவன். பின்னரே இராசராசேச்சுவரம் எடுப்பித்தான். தஞ்சையில் அவன் வழிவந்த மூன்றும் குலோத்துங்கள் தன் வெற்றிக்கறிகுறியாக இக்கோயிலை எடுப்பித்தான். 6—9—63இல் நிகழும் கும்பாபிஷேகத்தையொட்டி எங்கும் காணுவகையில் இன்று நம் திருக்கோவிலுள் 'நவகுண்டபட்சம்' மிகச் சிறப்பாக நிகழ்கிறது! இத்தகு யாகங்கள் மழைக்குக் காரணம்! பண்டைக் கோவில்களை ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் புதுப்பித்து வருவதை சைவ உலகு நன்கறியும்! அதனை ஒட்டியே இன்று திருமுறை மாநாடு நிகழ்கிறது. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் இம்மாநாட்டைத் தொடங்கிவைப்பது மிகச் சிறப்பாகும்" என்று குறிப்பிட்டார்கள்.

பின்னர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் மாநாட்டைத் தொடங்கிவைத்து வாழ்த்துரை வழங்கியருளினார்கள். (வாழ்த்துரை இம்மலரில் தனியே வந்துள்ளது.)

அடுத்து திருக்கோயில் ஆசிரியர் திரு. N. R. முருகவேள் அவர்கள் 'சம்பந்தர் அகப்பொருட் காட்சி' என்ற பொருளில் பேசியதன் சுருக்கம்:- இன்று ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்களின் அருளுரையைக் கேட்ட நான் சிவபெருமானே குருவாக வந்து திருவருளை உபதேசித்ததாகவே கருதுகிறேன்! 'அகப்பொருள்' என்ற உடன் தலைவன் தலைவியைப்பற்றிய நினைவு எழுதல் இயற்கை. என்றாலும் யான் கொள்ளும் பொருள் ஈண்டு வேறுபடும். அஃதாவது நம் அகத்தின் உள்ளே நீங்காது கோயில்கொண்டு உறையும் இறைவனே அகப்பொருள் என்பதே என்புத் துரையாகும்.

ஞானசம்பந்தர் கண்ட அகப்பொருட்காட்சிக்கு 'தோடுடைய செவியன்' என்ற பாட்டே முதற்சான்றாகும். 'உள்ளம் கவர்கள்வன்' என்ற சொற்றொடரை உன்னுக! இத்தொடர் இருபொருள்பட்டு காதலனுக்கும், இறைவனுக்கும் பொருந்தும்! உள்ளத்தை இறைவனது பள்ளியறையாகக் கொண்டனர் பண்டைச் சான்றோர்! உள்ளத்தை இறைவன்பால் ஈடுபடுத்தும் நிலை ஞான நிலையில்தான் வரும்!

தில்லைக்காட்சிபற்றிக் குறிப்பிடுகையில் சேக்கிழாரடிகள் 'அண்ணலார் தமக் களித்த' ஞானக்காட்சி என்கிறார்! தில்லைத் திருநடனத்தை ஞான ஆனந்த தாண்டவ மாகக் கண்டார்.

திருமயிலையில் பூம்பாவை உயிர்பெறக்கண்ட ஆளுடையபிள்ளையாரைப்பற்றிக் குறிப்பிடுகையில் 'கண்ணுதல் கருணை வெள்ளமாகக் கண்டார்' என்கிறார் சேக்கிழார்!

ஞானசம்பந்தர் முதன்முதல் பிரமதீர்த்தக் கரையில் தோணியப்பரைக் கண்டார்; அம்மையப்பரை ஆட்கொண்ட காட்சியே அவருக்கு எல்லாப் பொருள் களிலும் தோன்றிற்று. இதுவே சம்பந்தர் கண்ட அகப்பொருட்காட்சி.

4—9—63 மாலை நிகழ்ச்சிகள் :

முதற்கண் பேசிய திருப்பனந்தாள் செந்தமிழ்க்கல்லூரி முதல்வர் வித்துவான். திரு. K. M. வேங்கடராமையா அவர்கள் 'சோழர்காலச் சமய நிலை' என்ற தலைப்பின் கீழ் ஆற்றிய உரைச்சுருக்கம் வருமாறு:- சோழர்கால நிலையான அரசியல் சமயம் சைவமே. சமயப் பற்றுடைய அரசு சோழர்கால அரசு. அரசுக்குப் பிற சமயக் காழ்ப்பிருந்ததில்லை. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்களின் மேற்பார்வையில் உள்ள திருக்கோவில்களைப்போல் - அக்காலத்துச் சைவ - சமயம் சிறப்புற்றிருந்தது! சோழர் கள் தம் சைவப்பற்றைத் திருக்கோவில்கள் மூலம் வெளிக்காட்டவுஞ் செய்தனர். இராஜராஜன் தன்னைச் சிவபாதஹிருதயன் என்று கூறிக்கொள்கிறான். இரண்டாம் குலோத்துங்கனை இறைவன் 'நம் தோழன்' என்றழைத்ததாகத் திருவாரூர் கல் வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

அக்கால மக்கள் தோப்புத்துரவுகளுக்கும், குழந்தைகளுக்கும் இறைவனது திருநாமத்தையே சூட்டி மகிழ்ந்தனர். சைவ சமய மேன்மையில் அரசன், தலைவர்கள், அரசமாதேவியார்கள் அனைவரும் ஒருமுகமாகப் பாடுபட்டனர்.

பொய்கைநாடுகிழான் என்பான் செய்த அறப்பணிகள் பல. தந்திசக்தி விடங்கி என்ற இராசராசன் மாதேவி ஐயாற்றில் 'லோகமாதேவீச்சுரம்' என்ற திருக் கோயிலை எடுப்பித்தாள். செம்பியன்மாதேவி செய்த அறப்பணிகளும் மிகப்பலவாம்!

பெரிய குந்தவைப்பிராட்டி குந்தவை விண்ணகரம் என்ற வைணவக் கோவிலையும் எடுப்பித்துத் தனது சமயப் பொதுநோக்கை அறிவிக்கலானாள்! மேலும் இராசராசன் முதல் இத்திருக்கோவிலை நிர்மாணித்த மூன்றாம் குலோத்துங்கன் வரை சோணாட்டில் திருக்கோவில் எடுக்காத அரசர்களே இல்லை! சைவமே சோழர்கால சமயமாம்".

இரண்டாவதாகப் பேசிய கயப்பாக்கம் திரு. சோமசுந்தரஞ் செட்டியார் அவர்கள் 'மாணிக்கவாசகரின் அற்புதங்கள்' என்ற தலைப்பில் பேசுகையில்:- 'பண்டு நிகழ்ந்ததாகக் கூறப்படும் பல அற்புதங்களை இக்காலத்து நிகழும் சில நிகழ்ச்சிகள் நமக்கு மெய்ப்பித்து நமதையம் அகற்றக் காண்கிறோம்! மாணிக்கவாசகர் பொருட்டு ஆலவாய் அழகன் செய்த அற்புதங்கள் பலவாகும்! மாணிக்கவாசகரைப்பற்றித் திருவிளையாடற்புராணம் 6 படலங்களாக விரித்துக் கூறுகிறது!" என்று கூறி மாணிக்கவாசகரது வாழ்க்கை வரலாற்றையும் சுருக்கமாக விவரித்தார்கள்.

அடுத்து சிறப்புரை ஆற்றிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் பல்கலைச்செல்வர். திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் பேசியதாவது:- எங்கு பார்த்தாலும் இடைவிடாது நடப்பதை நோக்குழி இவ்விருபதாம் நூற்றாண்டிற்கு ஒரு சிறப்பிருப்பதை உணருகிறேன். இந்நூற்றாண்டில் வாழ்வதில் பெருமை கொள்கிறேன். அமைதி நிலவிய காலத்தில் சோழமன்னர்கள் இத்தகு கோவில்களைக் கட்டினர். தமிழன் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தையே கட்டி ஆண்டமை புராணக்கதையன்று. அவர் தம் வெற்றிகட்குச் சான்றுகள் அவர்கள் நிறுவிய திருக்கோவில்களேயாம்!

களப்பிரர் காலத்தில் ஏற்பட்டிருந்த சைவ-சமய வீழ்ச்சிக்குப் பின் சில பெரியவர்கள் தோன்றி சைவ-சமயத்திற்கும் புத்துயிர் அளித்தார்கள். அவர்களே நாயன்மார்கள்! இறைவன் எங்கும் இருக்கிறான்; எல்லார் உள்ளத்திலும் தாண்டவமாடுகிறான் எனப் புகன்றனர் அவர்கள். சமண சமயக் கொள்கைகள் விழ சைவ-சமயம் ஓங்கலாயிற்று!

உறங்குகின்றவன் மூடிய கைக்குள் வைத்திருந்த பாக்கு இயல்பாய் நழுவி விழுவதுபோல இல்லறம் இயல்பாய் நழுவுதல்வேண்டும்; துறவுநிலை மேன்மையுற வள்ளுவனைப் பின்பற்றவேண்டும்! ஒப்புரவு என்றநிலை இல்வாழ்வாரிடம் இயல்பாக அமைதல்வேண்டும்.

ஆண்டவனுக்கும் நமக்குமுள்ள உறவு காதலன் - காதலி உறவுபோன்ற தாகும்! இறைவனைத் 'திருடனுக்குத் திருடன்' என வேதம் குறிப்பிடுகிறது. அதை ஞானசம்பந்தப் பெருந்தகையார் மிக அழகாக 'என் உள்ளங் கவர்கள்வன்' என அச்சொற்றொடர்க்குப் பொருள் விரிப்பாரைப்ப விளக்கிச்சென்றார்.

அடுத்து கும்பகோணம் நகராண்மைக் கழக உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. S. சுந்தரேசஞ் செட்டியார் அவர்கள் 'அப்பர் அருள்மொழி' என்ற தலைப்பில் அப்பரடிகளின் குறிக்கோள் ஆண்டவனைப் பாடுதலே! மேலும் தொண்டு செய்தலையும் அவர் தம் தொழிலாகக்கொண்டு உழவாரப்பணி செய்தும் வந்தார். அப்பர் அருள்மொழிகளாகிய தேவாரப்பாசுரங்களைக் கேட்டு அதனைப் பிறர்க்கும் நாம் எடுத்துரைத்தலே நமக்கு உரிய கடமையாகும் என்று பேசினர்.

பின்னர் தருமையாதீனத் தேவார பாடசாலை ஆசிரியர், திரு. ஆர். வேலாயுத ஓதுவாமூர்த்திகள் குழுவினரால் 'திருநீலகண்டர்' என்ற தலைப்பில் இன்னிசைச் சொற்பொழிவு நிகழ்த்தப்பெற்றது.

இரண்டாம்நாள் திருமுறை மாநாட்டு நிகழ்ச்சிகள் :

5—9—63 வியாழக்கிழமை காலை 9 மணி அளவில் பன்னிருதிருமுறை மாநாடு இரண்டாம்நாள் நிகழ்ச்சியாகத் தொடங்கியது. புதுவை திரு. சென்னியப்பமுதலியார் அவர்கள் சிறப்புரை ஆற்றினர்கள். அன்னர் தம் சிறப்புரையில்,

நாம் மனிதர்களாய்ப் பிறந்தோம். நாம் ஏன் பிறந்தோம்? நாம் பிறந்ததன் குறிக்கோள் என்ன என்பதை நன்கு சிந்திக்கவேண்டும். இம்மனிதப் பிறவியை இறைவன் ஏன் நமக்குத் தந்தான்? இறைவன் உயிர்கள்மாட்டு அளவில்லா அருளுடையவன். இடையருது தொடர்ந்து வருகின்ற பிறவியை ஒழிக்கவே அருள் மிக்க இறைவன் நமக்குப் பிறவியைத் தந்தான். எனவே இப்பிறவியின் பயன் நாம் இறைவன்மீதும் மற்றவரிடமும் அன்பு செலுத்தவேண்டும். குழந்தைப் பருவத்தில் பெற்றோர்களிடமும், பள்ளிப் பருவத்தில் ஆசிரியர்களிடமும் உடன் பயிலும் நண்பர் களிடமும், திருமணப் பருவத்தில் மனைவியிடமும், வயோதிகப் பருவத்தில் மனைவி மக்களிடமும் அன்பு செலுத்துகிறோம். இங்ஙனம் பல பருவங்களிலும் எல்லோரிடமும் அன்பு செலுத்தும் வாய்ப்பினை இறைவன் நமக்குத் தந்திருக்கிறன். இறைவன் எல்லோருடைய பாதகங்களையும் தான் ஏற்றுக்கொள்ளுகிறன். இதுவே இறைவன் கையில் திருவோட்டை வைத்திருக்கும் அடையாளம் என்று குறிப்பிட்டார்கள்.

அடுத்து அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித்துறைத் துணைப் பேராசிரியர் வித்துவான். திரு. க. வெள்ளைவாரணனுர் அவர்கள் 'திருக்கோவையார்' என்னும் பொருள்பற்றி உரையாற்றுகையில்:-

குழந்தை முதலிய பல பருவங்களில் அன்பினை வளர்க்க இறைவன் நமக்குப் பல வாய்ப்புக்கள் தந்துள்ளான். அன்பினைப்பற்றியே மாணிக்கவாசகர் "திருக் கோவையாரில்" கூறுகின்றார். அன்பிற்கு இலக்கியமே திருக்கோவையார். மணிவாச கரின் கருவி கரணங்கள் இறைவனுக்குரியவை. அவை இறைவன் புகழைப்

பாடுவதற்கும், சொல்லுதற்கும், நினைத்தற்குமுரிய செம்புலன்கள். நம் புலன்கள் அறிவான உயிர்க்கும் அறிவற்ற உடம்பிற்கும் இறைவன் தொடர்புண்டாக்கியது அன்பினைவளர்த்தற்காம். இதனைத் திருவள்ளுவரும் விளக்கிக் கூறுகிறார்.

திருக்கோவையார் அறிவனூற்பொருளும் உலக நூற்பொருளுமென இரு பொருளையுமுணர்த்துகிறது என்கிறார் பேராசிரியர் என்று குறிப்பிட்டதுடன் திருக் கோவையாரின் நயங்களையும் விளங்கக் கூறினார்.

திருச்சி மத்திய கூட்டுறவு பாங்க் செயலாளர், திருக்குறள்வேள். திரு G. வரதராசப் பிள்ளை B. A., அவர்கள் 'திருப்பல்லாண்டு' என்னும் பொருள்பற்றி உரையாற்றினார்கள். அன்னார் தம் உரையில் அன்பு உயிர்கள்மாட்டுச் செய்ய வேண்டும், பக்தி இறைவன்மாட்டுச் செய்யவேண்டும். இறைவன் என்றுமுள்ளவன், அவனுக்குத் திருப்பல்லாண்டு ஏன்? இறைவன் பொருள்சேர் புகழை வாழ்த்தின் இருள்சேர் இருவினையும் உயிர்களைச் சாரா. வைராக்கியச் சித்தத்தால் செய்யும் அறச் செயல்களையும் புண்ணியமாக இறைவன் ஏற்றுக்கொள்கிறான் என்று குறிப்பிட்டு திருப்பல்லாண்டில் ஆண்டவன் அருட்செயல்களைக் கூறி விளக்கினார்.

மாலை நிகழ்ச்சிகள் :

அன்று மாலை 5 மணியளவில் மீண்டும் மாநாடு திருமுறை இன்னிசையுடன் துவங்கியது.

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர் திருநெறிச்செம்மல், வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் அவர்கள் "திருமந்திரம்" என்னும் பொருள்பற்றி உரையாற்றுகையில் :-

" யோகப் பயிற்சியைத் திருமூலர் நன்கு விளக்குகிறார்! அதனாலேயே மூப்பை விரட்டி மூவாயிரம் பாடல்களை இவரால் பாட முடிந்தது. நம் உடலில் கடவுள் தன்மையை ஆறு இடங்களில் காணலாம் எனக் குறிப்பிடுகிறார் திருமூலர்!

திருமந்திரம் ஒன்பது தந்திரங்களும் மூவாயிரம் பாடல்களும் உடைய பெருநூல்! சிவனடியார்களை நடமாடும் கோயில் எனக் குறிப்பிடுகிறார் அவர்! பூசலார் நாயனார் திருக்கோயில் எடுப்பித்த செய்தியை நோக்க அது சிவாலயத்தின் அமைப்பாய் நம் உடம்பை ஒத்துள்ளது என்பதைக் காட்டுகிறது! என்று கூறிப் பல சிறந்த கருத்துக்களை மேற்கோள்களுடன் எடுத்து விளக்கினார்கள்.

அடுத்து தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி சித்தாந்தப் பேராசிரியர், சித்தாந்தக்கலைமணி. வித்துவான். திரு. சி. அருணைவடிவேலு முதலியார் அவர்கள் 'திருவாசகத்தேன்' என்னும் பொருள்பற்றி உரையாற்றினார்கள். அன்னார்தம் உரையில் பண்டு பக்திப் பாடல்களுக்குத் திருவாசகம் தவிர வேறு இல்லை. சமயா சாரியர்கள் நால்வரும் வினைப்பயனால் பிறக்கவில்லை; இறைவனால் அனுப்பப்பட்ட அவதார புருஷர்கள் ஆவர். உலகில் பக்தியைப் பரவச்செய்யவும், அடியார்களின் துயரை நீக்கவும் இறைவன் மணிவாசகரைத் தோற்றுவித்தான். தேன் உண்ண விருப்பம் கொடுக்கும்; உண்ணும்போது இனிக்கும். உண்டபின் மருந்தாய் நோய் நீக்கி வலிமைதரும். திருவாசகத்தேன் படிக்க விருப்பம் உண்டாக்கும்; படிக்கும்

போது சொற்சுவை தரும். படித்தபின் ஆன்மாவைத் தூய்மையாக்கி அதற்கு வலிமை தரும். எனவேதான் சான்றோர்கள் திருவாசகத்தைத் தேன் என்றனர் என்று குறிப்பிட்டு இறைவன் அருள்நிலையைக் குறைவிலா நிறைவே என்ற சொற்றொடர் கொண்டு விளங்க உரைத்தனர்.

அடுத்து சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பேராசிரியர், டாக்டர். திரு. மா. இராசமாணிக்கனார் M. A., M. O. L. Ph. D. அவர்கள் பல்லவர்காலச் சமய நிலை என்னும் பொருள்பற்றி உரையாற்றினார்கள். அன்னார் தம் உரையில் 'திருபுவனத்தின் சிறப்பை விளங்கக் கூறினார். இக்கோயிலைக் கட்டிய மூன்றாம் குலோத்துங்கன் தன் கலைப்புலமை முழுதும் பயன்படுத்தி இதனைக் கட்டினான். அழியா இறைவனுக்கு அழியாக்கல்லினால் முதன்முதலில் கோயில் கட்டியவர் பல்லவர்கள். இதற்கு முதன் முதல் வழிகோலியவன் மகேந்திரவர்மன். இவனைத் தொடர்ந்தே நரசிம்மவர்மன், இராசசிம்மன், பரமேசுரவர்மன் முதலியோர் கற்களினால் சிறந்த கோயில்கள் அமைத்தனர். இங்ஙனம் அவர்கள் அமைக்கக் காரணம் நாயன்மார்களேயாவர். சைவம் செழிப்புற பல்லவர் பெருந்துணை செய்தனர். சமய வேறுபாடுகளை அரசியலில் அவர்கள் காட்டவில்லை. பரமேசுரவர்மன் சிவலிங்க வடிவில் தன்முடிவைச் செய்து கொண்டான். இராசசிம்மன் சித்தாந்தத்தில் வல்லவன்' என்று பல்லவர்காலச் சமய நிலையையும், சோழர்காலச் சமய நிலையையும் விளக்கிக் கூறினார்கள்.

அடுத்து, 'கலைமகள்' ஆசிரியர், செந்தமிழ்ச்செல்வர், வித்துவான். திரு. கி. வா. ஜகந்நாதன் M. A, அவர்கள் 'சங்கப்புலவர் பிரபந்தங்கள்' என்ற தலைப்பில் பேசியபோது, சங்கத்தொகை நூல்கள் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் ஆகும். இடைக்காலத்தே சங்கநூல்கள் வெளிப்படாமல் கிடந்தன. சங்கப்புலவருள் ஒருவரான நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படை மட்டும் மக்களிடம் வழக்கில் இருந்தது. காரணம் அது பாராயண நூலாக மக்கள் மத்தியிலே எழுச்சியுற்றிருந்தமையேயாம்! பத்துப்பாட்டுள் முதல் பாட்டாகச் சேர்க்கப்பட்டுள்ள திருமுருகாற்றுப்படை இறைமைத் தொடர்புடைய நூல்களின் மேன்மைக்குச் சான்று! அவரே பாடிய மற்றொரு பாட்டு அதே தொகையுள் ஏழாவதாக வைக்கப்பட்டிருப்பதை நோக்குக.

திருமுருகாற்றுப்படை சைவ - சமய நூல்களாகிய பன்னிருதிருமுறைகளுள் பதினொன்றாம் திருமுறையுள் இடம்பெறும். எனவே, திருமுருகாற்றுப்படை சங்க காலங்களுக்கும், திருமுறைகளுக்கும் ஒரு இணைப்பை ஏற்படுத்துகின்றன. இன்னும் நக்கீரர் பாடியதாகப் பல நூல்கள் திருமுறைகளுள் உள. அவை 'கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி, கோபப்பிரசாதம்' போல்வன. நக்கீரர் அழலினால் வெதும்பிப் பின் இறைவன் குணத்திறத்தால் உய்திபெற்றபின் பாடியன இவை; என்று குறிப்பிட்டு மேலும் பல புலவர்களின் பாடல்களையும் எடுத்து விரிவுரையாற்றினார்கள்.

சிதம்பரம் திருமதி. இராஜேஸ்வரியம்மையார் அவர்கள் 'பெரியபுராணத்தில் பெண்மணிகள்' என்ற தலைப்பில் பேசியதன் சுருக்கம் :- மனிதப்பிறவி முத்தி நெறியை அடைய வழிகோலுவதே சைவ - சித்தாந்தத்தின் நோக்கம். பெண்களுக்கு நாயகர் இருவர். ஒருவர் உடல்நாயகன். மற்றவர் உளநாயகன். முன்னவனோடு

வாழ்வது சில நாளே! உயிர்நாயகனை என்றும் பிரியோம்! தனியாக எடுத்துப் பாடப்பெற்ற பெண்மணிகள் மட்டுமன்றி பெரியபுராணத்தில் எத்தனையோ பிற பெண்மணிகளும் பேசப்படுகிறார்கள். சில நாயன்மார்களின் உயர்வுக்கு அன்னார் மனைவியர்களே முக்கிய காரணம்.

சிதம்பரம் இராமசாமிச் செட்டியார் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர், திரு. பு. ர. சுவாமிநாதன் M. A., L. T., அவர்கள் பெரியபுராணத்தில் 'குருலிங்க சங்கம பக்தி' என்ற தலைப்பில் ஆற்றிய உரைச் சுருக்கம்:- "சேக்கிழார் கல்வெட்டுகளின் ஆதாரங்களோடும், செவிவழிச் செய்திகளோடும் பெரியபுராணம் பாடினார். குரு பக்திக்கு நாவரசு அடிகளையும், அப்பூதி அடிகளையும் கூறலாம். லிங்க பக்திக்குக் கண்ணப்பரைத்தவிர வேறுயாருளர். சங்கம பக்திக்கு சிறுத்தொண்டரைக் கூறலாம். பெரியபுராண வரலாறுகளை இவ்வாறு மூவகையாகப் பிரித்துக் கூறலாம்" என்றருளினார்கள்.

கலைக்கூடத் திறப்புவிழா மாலை 7 மணிக்குமேல் நிகழ்ந்தது. சென்னை மாநில அறநிலையத்துறை ஆணையர். திரு. M. S. சாரங்கபாணி முதலியார் B. A., B. L., அவர்களை வித்துவான், ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் வரவேற்றார்கள். சுவாமிகள் தமது வரவேற்புரையில், திருபுவனம் திருக்கோயில் கலைகளுக்கு இருப்பிடம். பண்டைக்காலக் கலை வளர்ச்சியை நமக்கு எடுத்து விளக்கும் கலைக்கோயில். அத்தகைய திருக்கோயிலின் கலைத்திறனைத் திருக்கோயிலுக்கு வருவோர் கண்டு உணர வாய்ப்பில்லாமல் இருக்கிறது. அந்த அளவிற்கு தரிசனத்திற்கு வருவோர் நுணுகி ஆராய்ந்து பார்ப்பதில்லை. தரிசனத்திற்கு வருவோர் அனைவரும் கண்டு உணரவேண்டும் என்ற திருவுள்ளத்தால் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் கலைக்கூடம் ஒன்றுவைக்க ஆவனபுரிந்தார்கள். அதைத் திறந்து வைப்பதற்கு ஏற்றவர்கள் நமது ஆணையர் அவர்களே. கடவுட்பற்றும், நல்ல பண்பும், செயல்திறமும்உடைய ஆணையர் அவர்கள் இக்கலைக்கூடத்தைத் திறந்துவைப்பது குறித்துப் பெருமகிழ்வெய்துகிறோம். திரு. ஆணையர் அவர்கள் இத்திருக்கோயில் திருப்பணியில் மிக்க ஈடுபாடுடையவர்களாய் விளங்கித் திருப்பணிக்கு வேண்டிய பல உதவிகளையும் செய்தார்கள். திருக்கோயில்கள் எல்லாம் திருப்பணி செய்யப்பட்டு தெய்விகத்தோடு விளங்கவேண்டுமென்ற எண்ணம் உடையவர்கள். அண்மையில் நிகழ்ந்த திருவாரூர்க் கும்பாபிஷேகம் பலவகையாலும் சிறப்புற நிகழ ஆவன புரிந்தார்கள். அறநிலையத்திலிருந்து பெரும் பொருளளித்தும் உதவி செய்தார்கள். இப்படிச் செய்யும் இவர்கள் தமது சொந்த ஊரில் உள்ள திருக்கோயிற்திருப்பணிக்கு ஏற்பாடு செய்யாது இருந்துவிட்டார்கள். அதுபற்றி யான் குறிப்பிட்டபொழுது யாரேனும் முன்வந்தால் செய்யலாம் என்றும். தன்னுடைய ஊரில் உள்ள திருக்கோயிலாக இருப்பதால் தானே முயன்று செய்யவியலாது இருக்கின்றது என்றும் குறிப்பிட்டார்கள். பின்னர் அவ்வூரிலுள்ள ஒருவர் முன்வந்து செய்வதாக ஒப்புக்கொண்டார். அத்திருக்கோயிலிலும் திருப்பணி தொடங்கிக் கும்பாபிஷேகம் நிகழவிருக்கிறது. இவ்வாறு தன்னலமில்லாது திருக்கோயில் நலத்தையே பேணிவரும் திரு. ஆணையர் அவர்கள் இக்கலைக்கூடத்தைத் திறந்துவைத்தல் மிகவும் பொருத்தமானதே என்று கூறி திரு. ஆணையர் அவர்களைக் கலைக்கூடத்தைத் திறந்துவைக்குமாறு கேட்டுக் கொண்டார்கள். திரு. ஆணையர் அவர்கள் கலைக்கூடத்தைத் திறந்துவைத்துத்

திறப்புரையாற்றுகையில் :- "திருபுவனம் திருக்கோயில் ஒரு கலைக்கோயில். கலைக் கோயிலிலுள்ள கலைகளை வளர்க்கவேண்டியது மிகமிக இன்றியமையாதது. இக் கோயிலைக்கட்டிய மூன்றும்குலோத்துங்கன் கலைகளை வளர்க்க எவ்வளவு பாடுபட்டிருக் கிறன் என்பதை நாம் உணர்கிறோம். அக்காலச் சிற்பிகளின் கலைத்திறனை யெல்லாம் காட்டச்செய்திருக்கிறன். அக்கலைகளைக் காப்பது நமது பொறுப்பாகிறது. அவ் வகையில்தான் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் கலையழகு கெடாமல் திருப்பணி செய்ய ஏற்பாடு செய்திருக்கிறார்கள். தரிசனத்திற்கு வருவோர் இக்கோயி லின் கலை யழகையெல்லாம் கண்டு செல்ல வசதியாக கலைக்கூடம் ஏற்பாடு செய்திருக் கிறார்கள். இது மிக்க பயனுடைய செயல் எனக் கருதுகிறேன். இக்கலைக்கூடத்தில் இக்கோயிலிலுள்ள மூர்த்திகளையும், கலைச் சிற்பங்களையும் நல்ல ஓவியரைக்கொண்டு ஓவியமாகத்தீட்டிப் பார்வைக்குவைத்திருப்பது குறிப்பிடத்தக்கது. இக்கலைக்கூடத்தைப் பயன்படுத்தி மக்கள் உய்யவேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன்" என்று குறிப் பிட்டார்கள்.

அன்றிரவு சென்னை திருமதி. குமாரி கௌரி - பானுமதி குழுவினரால் 'மீனுட்சி திருமணம்' என்ற பொருளில் இன்னிசைச் சொற்பொழிவு நிகழ்த்தப்பெற்றது.

மூன்றும்நாள் விழா :

6—9—63 வெள்ளிக்கிழமை காலை சென்னைமாநில அறநிலைய அமைச்சர், நல்லறங்காவலர், கனம். திரு. M. பக்தவத்சலம் B. A., B. L., அவர்கள் தலைமையில் மாநாடு தொடங்கிற்று. வித்துவான், ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தமது வரவேற்புரையில் :- நல்லறங்காவலர், கனம். திரு. M. பக்தவத்சலம் B. A., B. L., அவர்கள் தெய்வபக்தியும், உயர்குடிப்பிறப்பும், நல்ல அனுபவமும், தேசியப்பற்றும், நிர்வாகத்திறமும் உடையவர்கள். அரசியலில் உள்ள அனுபவம் போலவே அமைச்சியல் துறையிலும பல ஆண்டுகளாக அமைச்சராக இருந்து அனுபவம் பெற்றவர்கள். இவர்கள் அறநிலையத்துறை அமைச்சராகப் பணிபுரியத் தொடங்கியதிலிருந்து அறநிலையங்கள் நல்ல முன்னேற்றமடைந்துள்ளன. நாட்டில் சமயஎழுச்சி உண்டாயிற்று என்று கூறலாம். அறநிலையத்துறையிலுள்ள இவரது பணி இவரை ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் அருளால் நல்லறங்காவலராக ஆக்கிற்று. இத்தகைய சிறந்த பல நற்குணங்கள் பொருந்திய அமைச்சரவர்கள் விரைவில் தமிழ்நாட்டின் முதலமைச்சராக ஸ்ரீ கம்பகரேசுவரர் அருளால் வரவிருக் கிறார் என நம்புகிறோம். அமைச்சர் அவர்களை இக்கும்பாபிஷேக விழா மலரை வெளியிடுமாறுகேட்டுக்கொண்டு மாநாட்டில் பங்குபற்ற வந்திருப்பவர்களையும், கேட்டு மகிழ வந்திருப்பவர்களையும் வருக வருகவென வரவேற்றார்கள்.

செந்தமிழ்ச்செல்வர், வித்துவான், திரு. கி. வா. ஜகந்நாதன் M. A., அவர்கள் கும்பாபிஷேக விழா மலரைப்பற்றியும், திருபுவனம் திருக்கோயில் தோற்றம்பற்றியும் சிறிது நேரம் ஓர் விரிவுரையாற்றினார்கள். அடுத்துச் சொற்பொழிவாற்றிய சென்னை திரு. S. சச்சிதானந்தம் பிள்ளை B. A, L. T., அவர்கள் தமதுரையில் :- "சன்மார்க்கம், சத்புத்திரமார்க்கம், தாசமார்க்கம், சகமார்க்கம் என கடவுளை அடையும் மார்க்கங்கள்

நான்காகும். மூலபஞ்சாட்சரம் என்ற தீட்சையைப் பெற்று அன்னுடம் வழிபட வேண்டும். உயிர்கள் பரிசுத்தநிலையை அடையவே அவற்றை இறைவன் படைக்கிறான். ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களையும் நாம் நீக்கவேண்டும். இறைவனை வழிபட மனத்தூய்மை வேண்டும். உடலுள் ஆன்மாவும், ஆன்மாவுள் பரமாத்மாவாகிய இறைவனும் உள்ளான்'' என்பதை, 'ஆலய வழிபாடு' என்ற தலைப்பில் சுருக்கமாகப் பேசினார். அடுத்து, கும்பாபிஷேக நினைவு மலரை வெளியிட்டு உரை நிகழ்த்திய அமைச்சர் கனம். திரு. M. பக்தவத்சலம் B. A., B. L., அவர்களின் உரைச்சுருக்கம் வருமாறு :-

ஆத்திகமும், நாத்திகமும் உடன்பிறந்தவை. தற்காலத்து நாத்திகர்கள்கூட 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பதை ஒப்புக்கொள்ளுகிறார்கள். இத்தகு பெருங்கூட்டங்கள் தமிழக பக்திவெள்ளத்திற்குச் சான்றாகின்றன.

இத்திருக்கோயிலில் நடுக்கந்தீர்த்தான் எழுந்தருளியுள்ளான். அச்சத்தை நீக்கி வாழவேண்டுமென்பது முன்னோர் வாக்கு. 'அஞ்சுவதி யாதொன்றுமில்லை', 'அச்சம் தவிர்'. 'அச்சமில்லை அச்சமில்லை' என்ற வரிகளை நோக்கவேண்டும். எனவே உயிர்களுக்கேற்படும் அச்சத்தை நீக்குபவன் இவ்விறைவன் என்னலாம்.

இக்கோயிலை இறைவனுக்காகக் கட்டினேன் என்பது அகங்கார ஆணவம் கலந்த பேச்சாகும். கோயில் மக்களுக்காகவே கட்டப்பட்டது. சுமார் எண்ணூறு ஆண்டுகட்குப்பின் இதைப் புதுப்பிக்கவேண்டும் எனத் திருவுளம் பற்றிய ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களது நல் உள்ளத்தைப் பாராட்டுகிறேன். கோயில் தொண்டு செய்வது நல்லது! உழவாரப் பணியாக நாவரசர் இதனைத்தான் செய்தார். நமது சமயம், கலை, இலக்கியம், புராணம் எல்லாம் இறைவனால்தான் வளர்ந்தது. சித்திரம் வரைய சுவர் வேண்டுவதுபோல, இறைவழிபாட்டிற்குக் கோயில் இன்றியமையாததாகிறது. இக்கோயில் கல்வெட்டுக்கள் சரித்திர ஆய்வுக்குப் பயன்படுவதாகக் கேள்வியுற்றேன்! பல கல்வெட்டுக்கள் உரிய முறையில் வெளிவரவில்லை. அவற்றை வெளியிடவேண்டி ஒரு குழு அமைத்து என்னிடம் கூறினார்கள். நானும் ஆவன செய்ய முயல்கிறேன்.

இங்கே சிற்பங்கள் பாதுகாக்கப்படும் மேன்மையைக்கண்டு வியந்தேன். அதனைப் பாராட்டுகிறேன். இக்கோயில் பழமை கலந்த புதுமையுடன் மிளிர்வது பாராட்டுக்குரியது. இத்தகு விழாவினை ஏற்பாடு செய்தவர்களுக்கும், நல்ல விழா மலரை வெளியிட்டவர்களுக்கும் என் நன்றியையும் மகிழ்ச்சியையும் உரியதாக்குகிறேன் என்று கூறி விழா மலரை வெளியிட்டார்கள்.

வித்துவான். ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் நன்றியுரையோடு காலை நிகழ்ச்சிகள் முடிவுற்றன.

**மாலை நிகழ்ச்சிகள் :**

மாலை நிகழ்ச்சிகள் சரியாக ஐந்துமுப்பது மணிக்குத் தொடங்கப்பெற்றன

முதற்கண் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர், சிரோமணி, வித்துவான். திரு. வி. சபேசன் அவர்கள் 'அப்பர் பழமொழிகள்' என்ற தலைப்பில்

அப்பர் தேவாரத்தில் காணப்படும் பல பழமொழிகளை விதந்துகூறி அவற்றைப் பல கோணங்களிற் பொருத்திக்காட்டிப் பழமொழிகளுக்கென்றே ஒரு தனித் திருப்பதிகம் வைத்து அதில் பல பழமொழிகளைக் கூறியுள்ளார் என்றும் மற்ற திருப்பதிகங்களிலும் பழமொழிகளைக் காணலாம் என்றும் கூறி சில மேற்கோள்களை எடுத்துக்காட்டிப் பேசினார்கள்.

அடுத்து, தருமையாதீனப்பல்கலைக்கல்லூரி முதல்வர், செஞ்சொற்கொண்டல், வித்துவான். திரு. சொ. சிங்காரவேலன் M. A., அவர்கள் 'பன்னிரு திருமுறைப் பயன்' என்ற தலைப்பில் பேசுகையில் :- "பன்னிரு திருமுறைகளும் சைவர்களின் தனிச் சொத்து; இதனை இடையிடின்றி ஓதுக! அதனை நன்கு அறிக! அத்திரு முறைகளின் நெறி செல்க! செல்ல, வாழ்வு வளம் பெறும். திருமுறையைக் கற்க முடியாதவர்கள், அதனைக் கேட்டாவது இன்புறவேண்டும்" என்று கூறினர்.

வித்துவான். திரு. ச. சேதுசுப்பிரமணியப்பிள்ளை அவர்கள் 'திருமுறைகண்ட புராணம்' என்ற தலைப்பிற் பேசுகையில்:- திருமுறைகண்ட புராணம் உமாபதி சிவாசாரியாரால் பாடப்பட்டதென்றும், அத்திருமுறைகளை சிவபாதசேகரன் தொகுத் தனன் என்றும், திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையார் அருள்பெற்ற நம்பியாண்டார் நம்பிகள் இப்பணியில் ஈடுபட்டனர் என்றும் இத்திருமுறைகளை ஓதி உய்வதே வாழ்வின்பயன் என்றும் குறிப்பிட்டார்.

இதன்பிறகு சென்னை சமயப் பிரசார நிலையம் வித்துவான். ஸ்ரீமத். சோம சுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள், மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீனம் மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களையும், திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடி மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களையும் வரவேற்றுப் பேசினர்கள்.

மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீனம் மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் பேசியருளுகையில்:- "இந்நாடு தெய்வமணம் கமழும் திருநாடு. இதன்கண்விளங்கும் தேவாலயங்களும், மடாலயங்களும் இத்தெய்வ மணத்தைக் காத்துவருகின்றன. ஆலயங்களே மனஒருமைப்பாட்டுக்குரிய அருள் நிலையங்கள். ஆலயவழிபாடுஇன்றிஉய்யமுடியாது. சிவலிங்கத்திருமேனியின்தத்துவம் அறிந்து வழிபடவேண்டும். இத் திருபுவனத்தில் பெருமான் கம்பகரேசனாக விளங்கு கின்றான். இப்பெருமானுடைய மகாகும்பாபிஷேகத்தில் சிவலிங்கம், திருக்கோயில் முதலிய தத்துவங்களை யறிந்து, திருவருள் தவயோகந் தலைப்பட்டு முத்தி எய்துதல் ஆன்மாக்களின் கடமை. ஆன்மாக்களின் பரிபாகம் அறிந்து அருள்வழங்கி பேரின்பம் வழங்கியருள்பவன் இறைவன். இறை, உயிர், தளை என்ற முப்பொருள் உண்மையை முறையறிந்து உணர்ந்து, மகாகும்பாபிஷேக தரிசனத்தால் இருமைப் பயன்களும் எய்தி சமய உலகம் நீடுவாழ்க" என்று குறிப்பிட்டார்கள்.

திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடி மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ தெய்வ சிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் பேசுகையில் :- "தமிழ் நாட்டில் தெய்வத் தமிழை நாயன்மார்களும், ஆழ்வாராதிகளும் வளர்த்தருளினர்கள்

நாயன்மார்கள் காலத்தில் சைவமும், தமிழும் தழைத்தினிதோங்கின. வழிபாடு முதலிய அனைத்திலும் தமிழ் உரிய தகுதிபெற்றிருந்தது. 'ஞாலமளந்த மேன்மைத் தெய்வத் தமிழ்' என்பது சேக்கிழார் செம்மொழி. 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்' என்று பெரியோர் பாடினர். தமிழில் வழிபாடும், அர்ச்சனையும் இன்றியமையாதவை. 'அர்ச்சனை பாட்டேயாகும் ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக' என்று சேக்கிழார் பாடுவர். தெய்வத்தன்மை குறையாப் பாடல் பெற்ற பதிகள்தோறும் மக்கள் வழிபட்டனர். இத்திருபுவனம் திருக்கோயில் சோழர் கால வரலாற்றுச் சிறப்புக்கு எடுத்துக்காட்டாய் விளங்குகின்றது. இச்சிற்பச் சிறப்பு, புராணச் சிறப்புத் தலச் சிறப்புக்களை உணர்ந்து வாழவேண்டும். சமய உலகும், தமிழ் உலகும் வழிபாட்டில் தூய்மைகொண்டு இருமைப்பயன்களும் எய்தி உயர்க" என்று குறிப்பிட்டார்கள்.

வித்துவான். ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் நன்றியுரைக்குப் பின்னர், திருமுறை இன்னிசைவாணர்களின் தேவார பாராயணத் துடன் பன்னிரு திருமுறை மாநாடு இனிது நிறைவு பெற்றது.

மாநாட்டு நிகழ்ச்சிகளின் இறுதியில் தருமையாதீன வித்துவான், கீர்த்தன குலசேகர, சங்கீத சாகித்ய வல்லப, கதாரஸாஸ்வாதக, பாகவதர், எம்பார், பிர்மஸ்ரீ. விஜயராகவாச்சாரியார் குழுவினரால் "சரபமாகாத்மியம்" என்ற பொருள்பற்றிய இன்னிசைச் சொற்பொழிவு நிகழ்த்தப்பெற்றது. அன்பர்கள்பலர்கேட்டு மகிழ்ந்தனர்.



மதஸ்தாபனங்களும் ஆலயங்களும் சமய வளர்ச்சிக்காகவே ஏற்பட்டவை. ஆனால் அவை சமய வளர்ச்சிக்கு மட்டுமல்லாமல் மொழி வளர்ச்சிக்கும், சமூக வளர்ச்சிக்குமாகப் பயன்பட்டு வருதலை உணரவேண்டும். ஆலயங்கள் பொதுமக்களின் சேமிப்பு நிலையம். எத்தனையோ நூற்றுக்கணக்கான மக்கள் அதைப் பயன்படுத்திக் கொண்டு வாழ்கின்றனர். கோயிலின் வருமானமோ நிலமோ தனி ஒருவனுடைய நலத்திற்குப் பயன்படவில்லை. ஆனால் அதேநேரத் திலே அந்தச் சொத்து தனிப்பட்ட ஒரு மனிதனுடையதாக இருக்கு மானால் அஃது அவனது சுயநலத்திற்கு மட்டுந்தான் பயன்படும் என்பதை அன்பர்கள் உணர்தல் வேண்டும்.

— கயிலைக் குருமணி.

# பத்திரிகைச் செய்திகள்

## திருபுவனம் குடமுழுக்கு

தருமையாதீனம் கயிலைக் குருமகாசந்நிதானத்தின் அருளாட்சிக்குட்பட்ட திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவரர் ஆலய நூதன குடமுழுக்கு விழா வருகிற ஆவணி 21வ வெகு சிறப்பாக நடக்கவிருக்கிறது. நான்கு லட்சம் ரூபாய் செலவில் திருப்பணி நடக்கும் இவ்வாலயம் மிகப் பெரியது. ராஜகோபுரம் திருப்பணி கண்ணைக்கவருவதுடன், தெய்வசாந்நித்யம் கொண்டதாகவும் அமையவேண்டும் என்ற கயிலைக் குருமணியின் திருஉள்ளப்பாங்கின்படியே அமைந்துள்ளது.

— தினமணி 24—7—63.

## சோழர் காலத்து சிற்பக் கலைக்கு ஒரு ஞாபகச் சின்னம்

தருமை ஆதீனத்திற்குச் சொந்தமான திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி கோயில் மகாகும்பாபிஷேகம் ஆவணி 21-ம் திகதி (6—9—63)ல் நடக்கவிருக்கிறது. தருமை ஆதீனகர்த்தரால் ஐந்தரைலட்சரூபாய் செலவில் திருப்பணி செய்யப் பட்டுள்ள இக்கோயில் சோழர் காலத்திய சிற்பக்கலைக்கும், நாகரிகத்திற்கும் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. இக்கோயில்பற்றிய வரலாற்றையும், அதிலுள்ள சிற்பங்களின் நேர்த்தியையும், சிற்பிகளின் திறமையையும் இக்கட்டுரை விளக்குகின்றது.

திருபுவனம் என்னும் சிற்றூர் தஞ்சைமாவட்டத்தில் கும்பகோணம் தாலுக்காவில் உளது. இந்நாட்டில் சோழமன்னர்கள் கட்டிய கற்றளிகள் பல. அவற்றுள் தஞ்சை ஸ்ரீ பிரகதீஸ்வரர் கோயில், கங்கைகொண்டசோழபுரம் ஸ்ரீ பிரகதீஸ்வரர் கோயில், தாராசுரம் ஸ்ரீ ஐராவதீசுவரர் கோயில், திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவரர் கோயில் என்பன மிகவும் சிறந்தவை. இவை சோழமன்னர்களின் அன்பின் பெருக்கத்திற்கும், அறிவின் ஆற்றலுக்கும், புகழின் பரப்பிற்கும் பெரிய எடுத்துக்காட்டாக அமைந்துள்ளன. அவைகளின்பெருமைகளை நாம் கல்வெட்டுக்கள் மூலம் அறிகின்றோம்.

### புராணத்தில் உள்ள பெயர்கள்

திருபுவனத்தை கல்வெட்டுகள் திருபுவனவீரபுரம் என்று அழைக்கின்றன. புராணத்தில் வில்வவனம், திருபுரவனம், தேவக்ஷேத்திரம், நிம்மாரண்யக்ஷேத்திரம் என்று பல பெயர்கள் காணப்படுகின்றன. தற்போது திருபுவனம் என்றே சிறப்பாக அழைக்கப்படுகிறது.

திருபுவனத்தில் ஊரின் நடுவில் இப்பெரியகோயில் கிழக்குநோக்கி அமைந்திருக்கின்றது. மூன்று கோபுரங்கள் அணியணியாக அழகுசெய்கின்றன. பெரிய புராணத்தில் கண்டதுபோல் இக்கோயில் நமக்கு இன்று நேரில் காட்சியளிக்கின்றது.

முன்கோபுரமாகிய தோரணத் திருவாயில் ஏழடுக்கு மாடங்களையுடையது. இதனை இப்போது மிகுந்த பொருட்செலவில் திருப்பணிசெய்து வர்ணம் தீட்டியுள்ளார்கள். இரண்டாம்கோபுரமாகிய திருமாளிகைத்திருவாயில் மூன்றடுக்குநிலையங்களையுடையது.

## அழகான வேலைப்பாடு

இக்கோயிலுக்கு இரண்டு பிராகாரங்கள் இருக்கின்றன. கோயில் மிக அழகான வேலைப்பாடுகள் கொண்டது. மண்டபத்தின் எதிரே நடுக்கம் தீர்த்த பெருமான் எழுந்தருளியிருக்கின்றார். இவருக்குக் கம்பகரேசுவரர் என்றும் பெயர். மூலஸ்தானகர்ப்பக்கிரகம், விமானம் முதலியன கங்கைகொண்டசோழேச்சுவரத்தையும் தஞ்சை இராஜராஜேச்சரத்தையும் ஒத்திருக்கின்றன. இதற்குச் சச்சிதானந்த விமானம் என்று இவ்வூர் தல புராணம் கூறுகின்றது. முதல் பிராகாரத்தின் வடபகுதியில் அம்மையார்கோயில் அமைந்துள்ளது. அதன் கீழ்பால் இருப்பது சரபேசுவரர் ஆலயம். இரண்டாம் பிராகாரத்தில் திருக்கல்யாண மண்டபமும், யாகசாலையும் இருக்கின்றன.

மூலஸ்தானத்தின் மூர்த்திபெயர் கம்பகரேசுவரர்; நடுக்கம்தீர்த்தபெருமான் என்று அழைக்கப்படுகின்றார். பிரகலாதன், திருமால் முதலியோருக்கு ஏற்பட்ட நடுக்கத்தைப் போக்கியதால் இப்பெயர் பெற்றார். அம்மை அறம்வளர்த்தநாயகி; தர்மசம்வர்த்தனி என்றும் அழைக்கப்படுகிறாள். கம்பத்தினை (நடுக்கத்தை) நீக்கி அருளியதால் கம்பகரேசுவரர் என்று பெயர் பெற்றார்.

## சிற்பங்களும் மண்டபங்களும்

இக்கோயில் மூன்றாம் குலோத்துங்க சோழனால் கட்டப்பட்டதாக கூறப்படுவதால் இற்றைக்கு சுமார் எழுநூற்று எழுபத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன. சிற்பக் கலைக்கு இது எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. கோயில் கோபுரம் மிகப்பெரியது. கல்லால் ஆனது. வெளிச் சுவர்களில் அற்புதமான சிற்பங்களைக் காணலாம். இராமாயணம் சிறப்பாக சித்திரிக்கப்பட்டிருக்கிறது. மனுநீதிச்சோழன் வரலாறும் அழகாக அமைந்துள்ளது. தேர்க்காலில் பாலகனைப்போட்டு நீதி வழங்கிய காட்சி அற்புதமாக உளது. மற்றும் ஹிரண்ய நரசிம்ம யுத்தம், யோக நரசிம்ம உருவம் அழகாக அமைந்துள்ளன. நாட்டிய மங்கைகள் பல கோணங்களில் ஆடுகின்றனர். யானைகள் வரிசை வரிசையாக செல்கின்றன. யானைகளின்மீது பெண்கள் நர்த்தனம் புரிகின்றனர். யானை பிரசவத்தைத் தத்ரூபமாக ஓர் சிற்பம் விளக்குகின்றது. படிகளின் பக்கத்தில் பலவிதமான சிற்பங்கள் காட்சியளிக்கின்றன. கோயிலின் உட்புறத்தில் மிக அழகான வேலைப்பாடுகள்கொண்ட பிரமாண்டமான தூண்கள் உள. இவைகளின் மீது மெச்சத்தகுந்த சிற்பங்கள் மிகச் சிறிய அளவில் உள்ளன. சிற்பிகள் உளியைக்கொண்டு அவ்வளவு சிறிய சிற்பங்கள் செதுக்கியிருப்பது அக்காலத்திய சோழ சிற்பக் கலைக்கு எடுத்துக்காட்டு. சரபர் சந்நிதியின் இருபக்கத்திலும் இரண்டு அழகான கொடிப்பெண்கள் நிற்கின்றனர். கருப்புக்கல்லில் வழவழப்பாக செய்யப்பட்ட இந்த உருவங்கள் மனதைக் கவருகின்றன. சிலர் இவர்களை ஸ்ரீதேவி, பூதேவி என்றும் கூறுகின்றனர். ஒரு உருவம் காலை மடித்துக்கொண்டுள்ளது. மற்றொன்று

சாதாரணமாக நிற்கின்றது. கருபக்கிரகம் அடிமுதல் ஸ்தூபிவரையில் கருங்கல்லால் ஆனது. அதில் விளங்குகின்ற சிற்பங்களும் அத்தகையனவே. இவையெல்லாம் குலோத்துங்கனின் ஞாபகச் சின்னமாக விளங்குகின்றன.

## மூன்றும் குலோத்துங்கன்

இக்கோயிலில் ஏழு கல்வெட்டுகள் உள்ளன. மூன்றும் குலோத்துங்கன் வடநாட்டில் பெரும் வெற்றி பெற்று அங்குக்கிடைத்த பெரும் பொருள்களைக்கொண்டு திருபுவனத்திலும், தாராசுரத்திலும் கோயில்கள் கட்டினுன் என்று அறிகின்ருேம். தன் முன்னேர்கள் கட்டியது போலவே தஞ்சை, கங்கைகொண்டசோழபுரம் கோயில் களை ஒத்ததாகவே கட்டினுன். குலோத்துங்கனின் ஞானகுரு சித்தாந்தரத்னகரத்தின் ஆசிரியராகிய ஸ்ரீ ஸ்கந்தசம்புவினுடைய மகன் ஈஸ்வரசிவனுகும். அவரால் இக் கோயில் ஆவாகனம் செய்யப்பட்டதால் அங்குள்ள இறைவனின் பெயர் திருபுவன ஈஸ்வரமுடையமகாதேவன். மன்னனுக்கு திருபுவனவீரதேவன் என்ற பட்டப்பெயர் உண்டு. அதனுல் இவ்வூருக்கு திருபுவனவீரபுரம் என்று பெயர் வழங்கலாயிற்று.

இத்தலத்திற்குத் தேவாரப் பாடல்கள் ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. வடமொழியில் ஒரு தல புராணம் உள்ளதாக கூறப்படுகிறது.

திருபுரர்களாகிய அச்சுவக்கிரிவன், விருஷபக்கிரிவன், வியாளக்கிரிவன் என்ற மூன்று அசுரர்கள் பகவானை தியானித்து பொன், வெள்ளி, இரும்பு ஆகிய மூன்று கோட்டைகளை எங்கு வேண்டுமாயினும் உலவித்திரியும்படி அடைந்தனர். அருள் பெற்றவுடன் தேவர்களையும் மற்றவர்களையும் துன்புறுத்த தலைப்பட்டனர், சிவபெருமான் அவர்களை அழித்தார். திருபுரர்கள் தங்கி தவம்கிடந்து வரம் பெற்ற இடமாதலால் இத்தலம் திருபுரவனம் என்று பெயர் பெற்றது.

இக்கோயிலில் 6 தீர்த்தங்கள் உள. சரபதீர்த்தம், தேவதீர்த்தம், ஞான தீர்த்தம், வியாசதீர்த்தம், பிருகுதீர்த்தம், சித்ததீர்த்தம் முதலியன. தல விருட்சம் வில்வம். இது சுவாமிகோயில் வடக்குப் பிராகாரத்தில் இருக்கின்றது.

இக்கோயிலுக்கு முன்பு ஒரு முறை 1941 இல் சுவாமிகோயில், கருப்பக்கிரகம். விமானம் பழுதுபார்த்து வர்ணம் தீட்டி கும்பாபிஷேகம் செய்விக்கப்பட்டு கோயில் பூராவும் செப்பஞ்செய்யப்பட்டது. தற்போது மிகச் சிறப்பாக முன் இராஜகோபுரம் திருப்பணி செய்யப்பட்டுள்ளது. 1½ லக்ஷரூபாய் செலவில் மூலஸ்தானவிமானம் 1லக்ஷ ரூபாய் செலவில் திருப்பணி செய்யப்பட்டிருக்கிறது.

இக்கோயிலில் வசந்தமண்டபம் அழகான வேலைப்பாடுகள் உள்ளதாகக் காணப்படுகிறது. நாற்புறங்களிலும் இரதத்திற்கு உள்ளதுபோல் கருங்கல்லால் ஆகிய சக்கரங்கள் அமைந்திருக்கின்றன.

## வரகுணபாண்டியன்

"வரகுணதேவன் என்னும் பாண்டிய அரசன் பிரம்மஹத்தி தோஷத்தால் பிடிக்கப்பட்டு மிகவும் துன்பப்பட்டான். பிரம்மஹத்தி அரசனை துறத்திவருகையில்

திருவிடைமருதூர் என்னும் தலத்தில் பிரமஹத்தி பிரம்மதோஷம் நீங்கியது. ஆனாலும் அரசனுக்கு பிரமஹத்தியால் ஏற்பட்ட நடுக்கம் தீரவில்லை. திருவிடைமருதூரை விட்டுத் திருபுவனம் செல்லவும் அவனுக்கு நடுக்கம் தீர்ந்தது. தன் நடுக்கம்தீர்த்த பெருமான் இவரே எனத் தெரிந்து இங்குத் தங்கி பணிகள் பல புரிந்து சென்றான்.

மேலும் சுகோஷன் என்பாள் கர்மடன் என்னும் பிராமணனைத் துரத்திச் சென்றான். சிவனடியார்களையும், சிவச்சின்னங்களையும் நிந்தித்தான். அதனால் க்ஷயரோகம் பிடிக்கும்படி அந்தணன் சபித்தான். பின்பு கம்பஹரேச்சுவரரை வழிபட்டு மறுபிறப்பில் அரசனாகப் பிறந்து இவன் அடியார்களுக்குப் பணிகள் பலபுரிந்தான்.

திருபுவனத்தில் உள்ள இக்கோவில் தற்போது தருமபுர ஆதீனத்தின் நிர்வாகத்தின் கீழ் உள்ளது. ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் அவ்வப்போது இக்கோயிலுக்கு விஜயம் செய்து திருப்பணி வேலைகளைக் கவனித்து வருவதுடன் நித்திய வழிபாடுகளையும் செவ்வனே செய்து வரும்படி செய்கின்றார்கள்.

இத்தலம் தஞ்சாவூர் மாவட்டம் கும்பகோணம் தாலுகாவில் கும்பகோணத் திற்கும் திருவிடைமருதூருக்கும் இடையில் உளது. பஸ் வசதி உண்டு. திருவிடைமருதூர் ரெயில்நிலையத்திலிருந்து மேற்கில் 1 கல் தொலைவிலுள்ளது.

— வீரகேசரி 1—9—63.

## எழில்மிகு திருபுவனம்

ஸ்ரீ நரசிம்மரின் உக்ரத்தைச் சாந்தப்படுத்த சிவபெருமான் சரபமூர்த்தியாக எழுந்தருளியுள்ள திவ்விய க்ஷேத்திரம் தஞ்சை ஜில்லாவில் கும்பகோணத்துக்கும் திருவிடைமருதூருக்கும் இடையில் உள்ளது திருபுவனம். தருமையாதீனத்துக்குச் சொந்தமான இத்திருக்கோயில் சுமார் ஐந்தரைலட்சம் ரூபாய் செலவில் சிறப்பாகத் திருப்பணி செய்யப்பட்டு 6—9—63 அன்று கும்பாபிஷேகம் நடக்கப்போகிறது.

திருபுரர்கள் தவமிருந்து வரம் பெற்ற காரணத்தால், இத்தலம் திருபுவனம் எனப் பெயர்பெற்றது. புராணங்களில் இதற்கு வில்வவனம், தேவ க்ஷேத்திரம், நிம்மாரண்ய க்ஷேத்திரம் என்று பல பெயர்கள் காணப்படுகின்றன. கல்வெட்டுக் களில் காணும் பெயர் திருபுவன வீரபுரம்.

மூலஸ்தானத்தில் ஸ்ரீ தர்மசம்வர்த்தனி சமேதராய் ஸ்ரீ கம்பகரேசுவரர் கோயில்கொண்டுள்ளார். கம்பகரேசுவரர் என்றால் நடுக்கம் தீர்த்த பெருமான் என்று பொருள். பிரகலாதன், திருமால், பிரமன் முதலிய தேவர்களுக்கு ஏற்பட்ட நடுக் கத்தைப் போக்கிய காரணத்தால் இப்பெயர் வரலாயிற்று. திருவிடைமருதூரில் பிரம்மகத்தி தோஷம் நீங்கப்பெற்றும் அதனால் ஏற்பட்ட நடுக்கத்தை வரகுண பாண்டியன் முதலானோர் இங்குதான் நீங்கப்பெற்றனர்.

இந்த ஸ்தலத்தின் பிரசித்தமான மூர்த்தி ஸ்ரீ சரபேசர். ஹிரண்யனது உதிரத்தை உண்ட நரசிம்மர், மதிமயங்கி உலகையே அழிக்கத் தொடங்கிவிட்டாராம்.

பத்திரிகைச்

அப்போது சிவபெருமான் சரபப்பறவை வடிவம் கொண்டு தன் வலிமையைக் காட்டி நரசிம்மரை சாந்தமடையச் செய்ததாக புராண வரலாறு. இந்த மூர்த்தியின் உருவம் பறவைபோலும், மிருகம்போலும் விசித்திரமாக அமைந்து உள்ளது. சரபமூர்த்தி நரசிம்மரைவிட மிக உக்ரமாகக் காணப்படுகிறுர்.

இக்கோயிலில் சரப தீர்த்தம், தேவ தீர்த்தம், ஞான தீர்த்தம், வியாச தீர்த்தம், பிருகு தீர்த்தம், சித்த தீர்த்தம் என்று ஆறு தீர்த்தங்கள் உள்ளன. ஸ்தல விருக்ஷம் வில்வம்.

மூலஸ்தான கர்ப்பக்கிரகமும், விமானமும் கங்கைகொண்டசோழபுரத்தையும், தஞ்சை ராஜராஜேசுவரத்தையும் ஒத்திருக்கின்றன. மூலஸ்தான விமானத்துக்கு சச்சிதானந்த விமானம் எனப் பெயர். கர்ப்பக்கிரகம் அடி முதல் ஸ்தூபி வரையில் கருங்கல்லால் ஆனது.

சோழர் காலத்திய சிற்பக்கலைச் சிறப்புக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் திருக்கோயில்களில் திருபுவனமும் ஒன்று. இக்கோயிலில் ஏழு கல்வெட்டுக்கள் உள்ளன. மூன்றும் குலோத்துங்கன் வடநாட்டில் பெரும் வெற்றி பெற்று, அங்கு கிடைத்த பொருள்களைக் கொண்டு, தன் முன்னேர்கள் தஞ்சையிலும், கங்கைகொண்ட சோழபுரத்திலும் கட்டிய கோயில்களை ஒத்ததாக திருபுவனத்திலும், தாராசுரத்திலும் கோயில்கள் கட்டினுனென்று இக்கல்வெட்டுக்களிலிருந்து அறிகிறேம்.

இக்கோயில் கோபுரம் மிகப் பெரியது. கல்லால் ஆனது. முன் கோபுரமாகிய தோரணத் திருவாயில் ஏழடுக்கு மாடங்களுடையது. இரண்டாம் கோபுரமாகிய திருமாளிகைத் திருவாயில் மூன்றடுக்கு நிலையங்களுடையது. வெளிச் சுவர்களில் அற்புதமான சிற்பங்களைக் காணலாம். ராமாயணம் சிறப்பாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. மனுநீதிச்சோழன் வரலாறும் அழகாக அமைந்துள்ளது. தேர்க்காலில் பாலகனைப் போட்டு நீதி வழங்கிய காட்சி அற்புதம். ஹிரணிய நரசிம்மர் யுத்தமும், யோக நரசிம்மர் உருவமும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. பலவகை நடனத் தோற்றங்கள், வரிசை வரிசையாகப் பவனிசெல்லும் யானைகள், யாளிமீது பெண்கள் நர்த்தனம் - இம்மாதிரி எத்தனையோ எழில்மிகு சிற்பங்களை இங்குக் காணலாம். ஒரு சிற்பத்தில் கஜப் பிரசவம் தத்ரூபமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது.

கோயிலின் உட்புறத்தில் அழகிய வேலைப்பாடுடன் கூடிய பிரம்மாண்டமான தூண்கள் உள. சிற்பிகள் உளியைக்கொண்டு அவ்வளவு சின்னஞ்சிறிய சிற்பங்களை எப்படித்தான் செதுக்கினர்களோ என்று அதிசயிக்கத் தோன்றும். சரபர் சந்நிதியின் இருபுறமும் இரண்டு அழகான கொடிப் பெண்கள் நிற்கின்றனர். கருப்புக் கல்லில் வழவழப்பாகச் செய்யப்பட்டுள்ள இவ்வுருவங்கள் கண்ணேயும். கருத்தையும் கவர்ந்துவிடும். இவர்களை ஸ்ரீதேவி, பூதேவி என்றும் கூறுகின்றனர். வசந்த மண்டபத்தில் அழகு கொழிக்கும் வேலைப்பாடுகளைக் காணலாம். ஒரு ரதம்போல் நாற்புறமும் கருங்கல்லால் ஆன சக்கரங்கள் அமைந்திருக்கின்றன.

பயத்தாலும், பகையாலும் வருந்தினேர் பலர் இத்தலத்தை வழிபட்டு இன்பமடைந்துள்ளனர்.

— தினமணி சுடர் 1—9—63.

# திருபுவனத் திருக்கோயில்

'என்னூர்'

தஞ்சை மாவட்டத்தில் சோழ மன்னர்கள் கட்டிய கற்றளிகள் பல. அவற்றுள் தஞ்சை ஸ்ரீ பிரகதீசுவரர் கோயில், கங்கைகொண்டசோழபுரம் ஸ்ரீ பிரகதீசுவரர் கோயில், தாராசுரம் ஸ்ரீ ஐராவதேசுவரர் கோயில் ஆகியவற்றைப் போலவே திருபுவனத்திலுள்ள ஸ்ரீ கம்பகரேசுவரர் கோயிலும் மிகச் சிறந்ததாகும். கும்பகோணத்திற்கும், திருவிடைமருதூருக்கும் இடையிலுள்ள இந்தத் திருபுவனத்தைக் கல்வெட்டுக்கள் திருபுவன வீரபுரம் என்று அழைக்கின்றன. புராணத்தில் வில்வவனம், திருபுவன தேவ க்ஷேத்திரம், நிம்மாரண்ய க்ஷேத்திரம் என்று பலபெயர்கள் காணப்படுகின்றன.

இவ்வாறு புராணப் பிரசித்திபெற்ற இவ்வூரின் நடுவில் இப்பெரிய கோயில் கிழக்கு நோக்கி அமைந்திருக்கின்றது. மூன்று கோபுரங்கள் அணி அணியாக அழகு செய்கின்றன. பெரியபுராணத்தில் கண்டதுபோலவே இன்றும் இக்கோயில் நமக்குக் காட்சி அளிக்கின்றது. முன் கோபுரமாகிய தோரணத் திருவாயில் ஏழடுக்கு மாடங்களை உடையது. இரண்டாம் கோபுரமாகிய திருமாளிகைத் திருவாயில் மூன்றடுக்கு நிலையங்களை யுடையது. இக்கோயிலுக்கு இரண்டு பிரகாரங்கள் இருக்கின்றன. மண்டபத்தின் எதிரே 'நடுக்கம் தீர்த்த பெருமான்' எழுந்தருளியிருக்கிறார். இவரே வடமொழியில் கம்பகரேசுவரர் என்று அழைக்கப்படுகிறார். மூலஸ்தான கர்ப்பக்கிரகம், விமானம் முதலியன கங்கைகொண்டசோழேச்சரத்தையும், தஞ்சை ராஜராஜேச்சரத்தையும் ஒத்திருக்கின்றன. இவ்விமானத்தை சச்சிதானந்த விமானம் என்று ஸ்தல புராணம் அழைக்கின்றது. முதல் பிராகாரத்தின் வட பகுதியில் அம்மையார் கோயில் அமைந்துள்ளது. அதன் கீழ்பால் இருப்பது சரபேசர் ஆலயம். இரண்டாம் பிராகாரத்தில் திருக்கல்யாண மண்டபமும், யாகசாலையும் உள்ளன.

திருமால், பிரமன், பிரகலாதன் ஆகியோருக்கும், வரகுண பாண்டியன் போன்ற மன்னர்கள் முதலியோருக்கு ஏற்பட்ட நடுக்கத்தைப் போக்கியதாலேயே 'கம்பகரேசுவர்' என்ற பெயரை மூலஸ்தான மூர்த்தி பெற்றார். அம்மை அறம் வளர்த்த நாயகி (தர்மசம்வர்த்தினி) என்று அழைக்கப்படுகின்றாள். ஆனால் இத்தலத்தின் சிறந்த மூர்த்தி சரபேசரே ஆவார். ஹிரண்யனின் உதிரத்தை உண்ட நரசிம்மர், மதிமயங்கி உலகத்தை அழிக்கத்தொடங்கினார். அப்போது இறைவன் சரபப் பறவையாக வடிவம்கொண்டு அதன் வலிமையைக் காட்டினார். எனவே இந்த மூர்த்தியின் உருவம் பறவைபோலும், மிருகம்போலும் அமைந்துள்ளது. நரசிம்மரை விட மிக உக்ரமாக அமைந்துள்ள இம்மூர்த்தியின் உற்சவ விக்ரகமும் மிகச் சிறப்பானதாகும்.

இத்தலம் மிகப் பெருமை வாய்ந்ததாக அந்த நாளில் இருந்திருக்கிறது. சமஸ்கிருதமும், தமிழும், திருப்பதிகங்களும் ஓத விரிவான பல்கலைக் கழகங்கள் இருந்ததாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன.

## சிற்பங்களும் மண்டபங்களும்

இக்கோயில் மூன்றும் குலோத்துங்கசோழனல் கட்டப்பட்டதாகக் கூறப்படுவதால் இன்றைக்குச் சுமார் எழுநூற்றெழுபத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன. சிற்பக் கலைக்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ள இக்கோயிலின் கோபுரம் மிகப் பெரிது. கல்லால் ஆன இதன் வெளிச்சுவர்களில் அற்புதமான சிற்பங்களைக் காணலாம். ராமாயணம் சிறப்பாகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. மனுநீதிச்சோழன் வரலாறும் அழகாக அமைந்துள்ளது. மற்றும் ஹிரண்ய - நரசிம்ம யுத்தம், யோக நரசிம்மர் உருவம் ஆகியவையும் நேர்த்தியானவை. நாட்டிய மங்கைகள் பல கோணங்களில் ஆடுகின்றனர். யானைகள் வரிசை வரிசையாகச் செல்கின்றன. அந்த யானைகளின் மீதும் பெண்கள் நர்த்தனம் புரிகின்றனர். மற்றொரு சிற்பம், ஒரு யானையின் பிரசவத்தைத் தத்ரூபமாக காட்டுகிறது. படிகளின் பக்கத்திலும் பலவிதமான சிற்பங்கள் காட்சி அளிக்கின்றன. கோயிலின் உள்புறத்திலோ மிக அழகான வேலைப்பாடுகள் கொண்ட பிரம்மாண்டமான தூண்கள் உள்ளன. இவற்றிலும் மெச்சத் தகுந்த சிற்பங்கள் மிகச் சிறிய அளவில் இருக்கின்றன. சரபர் சந்நிதியின் இரு பக்கத்திலும் இரண்டு அழகான கொடிப் பெண்கள் நிற்கின்றனர். கருப்புக் கல்லில் வழவழப்பாகச் செய்யப்பட்ட இந்த உருவங்கள் எவர் மனத்தையும் கவரும். சிலர் இவற்றை ஸ்ரீதேவி, பூதேவியின் உருவங்கள் என்று கூறுகின்றனர். ஒரு உருவம் காலை மடித்துக்கொண்டுள்ளது. மற்றொன்று, சாதாரணமாக நிற்கிறது. கர்ப்பக்கிரகம் அடி முதல் ஸ்தூபி வரையில் கருங்கல்லால் ஆனது. அதில் விளங்கும் சிற்பங்களும் நேர்த்தியானவையே இக்கோயிலின் வசந்தமண்டபமும் அழகான வேலைப்பாடுகள் கொண்டது. ரதத்தைப் போல நான்கு புறங்களிலும் கருங்கல்லாலான சக்கரங்களுடன் கூடியது இந்த மண்டபம். வெளிப் பிராகாரத்தில் உயரத்திலுள்ள சந்நிதியில் அமர்ந்துள்ள தட்சிணமூர்த்தியின் உருவமும் மிகச் சிறப்பாகச் செய்யப்பட்டுள்ளது. கர்ப்பக்கிரகத்தில் சுவாமிக்கு நேராக உள்ள மேல் தளத்தில் பெரியநாயகர் கோயில் அமைந்துள்ளது. அதிலுள்ள உருவமும் கருங்கல்லால் ஆனதே.

இக்கோயிலில் மொத்தம் ஏழு கல்வெட்டுகள் உள்ளன. மூன்றும் குலோத்துங்கன் வட நாட்டில் பெரும் வெற்றிபெற்று அங்குக் கிடைத்த பொருளைக்கொண்டு திருபுவனத்திலும், தாராசுரத்திலும் கோயில்கள் கட்டினன் என்று அவற்றிலிருந்து அறிகிறோம். தன் முன்னோர் கட்டியதுபோலவே தஞ்சை, கங்கைகொண்டசோழபுரம் கோயில்களை அவன் கட்டினன். அவனுடைய ஞான குருவும், சித்தாந்த ரத்னகரத்தின் ஆசிரியருமான ஸ்ரீ ஸ்கந்தசம்புவினுடைய மகனரான ஈஸ்வரசிவனல் இக்கோயில் ஆவாகனம் செய்யப்பட்டதாகும். ஆகவே இங்குள்ள இறைவனுக்கு திருபுவன ஈஸ்வரமுடைய மகாதேவன் என்று பெயரிடப்பட்டது. மன்னனுக்கும் திருபுவன வீரதேவன் என்ற பட்டப்பெயர் உண்டு. அதனல் இவ்வூருக்குத் திருபுவன வீரபுரம் என்று பெயர் வழங்கலாயிற்று.

திரிபுரர்களாகிய அசுவக்கிரீவன், விருஷபக்கிரீவன், வியாளக்கிரீவன் என்ற மூன்று அசுரர்கள் பகவானைத் தியானித்துப் பொன், வெள்ளி, இரும்பு ஆகிய மூன்று கோட்டைகளை எங்குவேண்டுமாயினும் உலவித் திரியும்படி அடைந்தனர். அருள்

பெற்றவுடன் தேவர்களையும், மற்றவர்களையும் துன்புறுத்தத் தலைப்பட்டனர். சிவ பெருமான் அவர்களை அழித்தார். திரிபுரர்கள் தங்கித் தவம்கிடந்து வரம்பெற்ற இடமாதலாலும் இத்தலம் திருபுவனம் என்று பெயர்பெற்றது என்பர். வரகுண தேவன் என்னும் பாண்டிய அரசன் பிரம்மகத்தி தோஷத்தால் பீடிக்கப்பட்டு மிகவும் துன்பப்பட்டான். பிரம்மகத்தி அரசனைத் துரத்திவருகையில் திருவிடைமருதூர் என்னும் தலத்தில் பிரம்மகத்திதோஷம் நீங்கியது. ஆனாலும் அரசனுக்குப் பிரம்மகத்தி யால் ஏற்பட்ட நடுக்கம் தீரவில்லை. திருவிடைமருதூரை விட்டுத் திருபுவனம் செல்லவும் அவனுக்கு நடுக்கம் தீர்ந்தது. தன் நடுக்கம் தீர்த்த பெருமான் இவரே எனத் தெரிந்து இங்குத் தங்கிப் பணிகள் பல புரிந்து சென்றான் என்கிறது வரலாறு. இவ்வாறே சுகோஷன் என்பான் கர்மடன் என்னும் அந்தணனைத் துரத்திச்சென்றான். அதனால் கொடிய க்ஷயரோகம் அடையும்படி அந்தணன் சபித்தான். பின்பு கம்பக ரேசுவரரை வழிபட்டு மறுபிறப்பில் அரசனாகப் பிறந்து சிவனடியார்க்குப் பணிகள் பல புரிந்தான் என்பர்.

சுவாமி கோயிலின் கர்ப்பக்கிரகமும், விமானமும் முன் ஒருமுறை 1941ல் பழுதுபார்த்து வர்ணம்தீட்டிக் கும்பாபிஷேகம் செய்யப்பட்டுள்ளது. கோயில் பூராவும் செப்பம் செய்யப்பட்டது. இப்போது சுமார் ஐந்தரைலட்சரூபாய் செலவில் முன்ராஜகோபுரம் உள்படப் பல திருப்பணிகள் மிகச்சிறப்பாகச் செய்யப்பட்டுள்ளன. செப்டம்பர் 6-ம் தேதி மகாகும்பாபிஷேகம் நடக்கவிருக்கும் இது தருமபுர ஆதீனத் தின் நிர்வாகத்தில் உள்ளது. ஆதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் அவ்வப்போது இக்கோயிலுக்கு விஜயம் செய்து திருப்பணி வேலைகளைக் கவனித்து வந்திருப்பதுடன் நித்தியப்படி வழிபாடுகளையும் செவ்வனே செய்து வரும்படிச் செய்கின்றார்கள்.

— மித்திரன் ஞாயிறு மலர் 31—8—63.

## திரிபுவனம்

### என். ராமகிருஷ்ண

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான திரிபுவனம் ஸ்ரீகம்பஹரேசுவர சுவாமி கோயில் மகாகும்பாபிஷேகம் ஆவணி 21-ஆம் தேதி, 6—9—1963 அன்று மிகவும் சிறப்பாக நடைபெற இருக்கிறது. இந்தக் கோயில், சோழர் காலத்துச் சிற்பக் கலைக்கும் நாகரிகத்துக்கும் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

திரிபுவனம் என்னும் சிற்றூர் தஞ்சை தாலூகாவில் உள்ளது. இந்த நாட்டில் சோழ மன்னர்கள் கட்டியிருக்கும் கற்றளிகள் பல. அவற்றுள் தஞ்சை ஸ்ரீ பிருகதீசு வரர் கோயில், கங்கைகொண்ட சோழபுரம் கோயில், தாராசுரம் ஸ்ரீ ஐராவதேசுவரர் கோயில், திரிபுவனம் ஸ்ரீ கம்பஹரேசுவரர் கோயில் என்பவை மிகவும் சிறந்தவை. இவை சோழ மன்னர்களின் அன்பின் பெருக்கத்துக்கும், அறிவின் ஆற்றலுக்கும், புகழின் பரப்புக்கும் பெரிய எடுத்துக்காட்டுக்களாக அமைந்திருக்கின்றன.

திரிபுவனத்தைக் கல்வெட்டுகள் திரிபுவன வீரபுரம் என்று வழங்குகின்றன. புராணத்தில் வில்வவனம், திரிபுரவனம், தேவ க்ஷேத்திரம், நிம்பாரண்ய க்ஷேத்திரம்

பத்திரிகைச்

என்று பல பெயர்கள் காண்கின்றன. இப்போது திரிபுவனம் என்றே அழைக்கப் படுகிறது.

திரிபுவனத்தில், ஊரின் நடுவில் இந்தப் பெரிய கோயில் கிழக்கு நோக்கி அமைந்திருக்கிறது. மூன்று கோபுரங்கள் அணியணியாக அழகு செய்கின்றன, முன் கோபுரமாகிய தோரணத் திருவாயில் ஏழு அடுக்கு மாடங்களை உடையது. இரண்டாம் கோபுரமாகிய திருமாளிகைத் திருவாயில் மூன்று அடுக்குகளை உடையது.

இந்தக் கோயிலுக்கு இரண்டு பிராகாரங்கள் உள்ளன. கோயில் மிகவும் அழகான வேலைப்பாடுகள் கொண்டது. மண்டபத்தின் எதிரே மூலஸ்தானத்தில் நடுக்கம் தீர்த்த பெருமான் எழுந்தருளியிருக்கிறார். இவர் திருநாமம் வடமொழியில் கம்பஹரேசுவரர் என்று வழங்கும், (கம்பம் - நடுக்கம்.) மூலஸ்தானம், கருப்பக்கிருகம். விமானம் முதலியன கங்கைகொண்ட சோளேச்சரத்தையும், தஞ்சை இராஜராஜேச் சரத்தையும் ஒத்திருக்கின்றன. விமானத்தைச் சச்சிதானந்த விமானம் என்று இந்த ஊர்த் தலபுராணம் கூறுகிறது.

முதல் பிராகாரத்தின் வடபகுதியில் அம்பிகை கோயில் அமைந்துள்ளது. அதன் கீழ்பால் இருப்பது சரபேசர் ஆலயம். இரண்டாம் பிராகாரத்தில் திருக் கல்யாண மண்டபமும் யாகசாலையும் இருக்கின்றன.

மூலஸ்தானத்தின் மூர்த்தியாகிய நடுக்கம் தீர்த்த பெருமான், பிரகலாதன், திருமால் முதலியோருக்கு ஏற்பட்ட நடுக்கத்தைப் போக்கியதனால் இந்தப் பெயர் பெற்றார். அம்மை அறம்வளர்த்த நாயகி, தர்மசம்வர்த்தனி என்பது வடமொழி நாமம்.

ஆனால் இந்தத் தலத்தின் சிறந்த மூர்த்தி சரபேசர். இரணியனது உதிரத்தை உண்ட நரசிம்மர் மதிமயங்கி உலகத்தை அழிக்கத் தொடங்கினார். இறைவன் சரபப் பறவையாக வடிவம் கொண்டு நரசிங்கத்தின் மிடுக்கை அடக்கினான். இந்த மூர்த்தி யின் உருவம் பறவை போலவும், மிருகம் போலவும் அமைந்துள்ளது. நரசிம்மரைவிட உக்கிரமாகக் காணப்படுகிறது. சரபரை உபாசித்துப் பல நன்மைகளைப் பலர் அடைந் திருக்கிறார்கள். இந்த மூர்த்தியின் மூலஸ்தான விக்கிரகம் மிகச் சிறப்பாக அமைந் திருக்கிறது. உற்சவரும் அழகாக உள்ளார்.

அசுவக்கிரீவன், பிரமன் முதலான தேவர்களுக்கும், வரகுண பாண்டியன் முதலிய மன்னர்களுக்கும் நடுக்கத்தைப் போக்கிய தலம் இது. சுகோஷன், வருணன் முதலியவர்கள் வழிபட்ட இடம்.

அசுவக்கிரீவன், விருஷபக்கிரீவன், வியாளக்கிரீவன் என்ற மூன்று அசுரர்கள் பகவானைத் தியானித்துப் பொன், வெள்ளி, இரும்பு ஆகிய மூன்று கோட்டைகளை எங்கே வேண்டுமாயினும் உலவித் திரியும்படி அடைந்தனர். அவைகளே திரிபுரங்கள். அருள் பெற்றவுடன் தேவர்களையும் மற்றவர்களையும் துன்புறுத்தத் தலைப்பட்டனர். சிவபெருமான் திரிபுரங்களை அழித்தார். திரிபுரத்தில் இருந்த அசுரர்கள் தவம்கிடந்து வரம் பெற்ற இடமாதலால், இந்தத் தலம் திரிபுரவனம் என்ற பெயர் பெற்றது.

இரணியனை நரசிம்மர் அவதாரம் செய்து கொன்று, பிரகலாதனுக்கு அருள் வழங்கினர். பிறகு மிடுக்குற்று உலகை அழிக்கத் தலைப்படவே, சிவபிரான் சரபப் பறவை உருவம் கொண்டு அவரைச் சாந்தப்படுத்திய தலம் இது.

## சிற்பங்களும் மண்டபங்களும்

இந்தக் கோயில் மூன்றும் குலோத்துங்க சோழன் கட்டுவித்தது என்பர். எனவே, இன்றைக்குச் சுமார் 775 ஆண்டுகள் முன்பு தோன்றியது இது. சிற்பக் கலைக்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. கோயில் விமானம் பெரியது ; கல்லால் ஆனது. வெளிச்சுவர்களில் அற்புதமான சிற்பங்களைக் காணலாம். இராமாயணம் சிறப்பாகச் சித்திரிக்கப் பட்டிருக்கிறது. மனுநீதிச் சோழன் தேர்க்காலில் பாலகனைப் போட்டு நீதி வழங்கிய காட்சி நன்கு அமைந்துள்ளது. ஹிரண்ய நரசிம்ம யுத்தமும், யோக நரசிம்மர் உருவமும் சிற்பங்களாக உள்ளன. நாட்டிய மங்கைகள் பல கோணங்களில் ஆடுகின்றனர். யானைகள் வரிசை வரிசையாகச் செல்கின்றன. யானை களின் மீது பெண்கள் நர்த்தனம புரிகின்றனர். யானையின் பிரசவத்தைத் தத்ரூபமாக ஒரு சிற்பம் விளக்குகிறது.

கோயிலின் உட்புறத்தில் மிகவும் அழகான வேலைப்பாடுகளும் சிற்பங்களும் கொண்ட தூண்கள் இருக்கின்றன. இவற்றின்மீது சிற்பங்கள் உளியைக்கொண்டு அவ்வளவு சிறிய சிற்பங்கள் செதுக்கியிருப்பது அக்காலத்திய சோழச் சிற்பக்கலைக்கு எடுத்துக்காட்டு. சரபர் சந்நிதியின் இரண்டு பக்கத்திலும் இரண்டு அழகான கொடிப் பெண்கள் நிற்கின்றனர். கறுப்புக் கல்லில் வழுவழுப்பாகச் செதுக்கிய இவ்வுருவங்கள் மனத்தைக் கவருகின்றன. சிலர் இவர்களை ஸ்ரீதேவி, பூதேவி என்று கூறுகின்றனர் ! ஓர் உருவம் காலை மடித்துக்கொண்டு நிற்கிறது; மற்றென்று சாதாரணமாக நிற்கிறது. கர்ப்பக்கிருகத்தின் அடிமுதல் ஸ்தூபி வரையில் கருங்கல்லால் ஆனது. கர்ப்பக் கிருகத்தில் சுவாமிக்கு நேராக உள்ள மேல்தளத்தில் பெரியநாயகர் கோயில் அமைந் திருக்கிறது. அதிலுள்ள உருவமும் கருங்கல்லால் ஆனது.

தட்சிணாமூர்த்தியின் உருவம் மிகச் சிறப்பாக அமைந்திருக்கிறது. வெளிப் பிராகாரத்தில் இவர் சந்நிதியும் உயரத்தில் அமைந்துள்ளது. இவை எல்லாம் குலோத்துங்கனின் ஞாபகச்சின்னமாக விளங்குகின்றன. இந்தக் கோயிலில் உள்ள உற்சவ விக்கிரகங்களில் மிகச் சிறந்தவை போகசக்தி அம்மன், பிக்ஷாடனர், நடராஜர், சிவகாமி முதலியன. உற்சவராகிய சரபமூர்த்தியின் உருவம் போல எங்குமே பார்க்க முடியாது.

இந்தக் கோயிலில் ஏழு கல்வெட்டுகள் உள்ளன. மூன்றும் குலோத்துங்கன் வடநாட்டில் பெருவெற்றிபெற்று அங்குக் கிடைத்த பொருள்களைக்கொண்டு திரிபுவனத்திலும் தாராசுரத்திலும் கோயில்களைக் கட்டினன் என்று அவற்றுல் அறிகிறோம். தன் முன்னோர்கள் கட்டிய தஞ்சை, கங்கைகொண்ட சோழபுரம் கோயில் களை ஒத்ததாகவே இதைக் கட்டினன். குலோத்துங்கனின் ஞானகுரு, சித்தாந்த ரத்நாகரத்தின் ஆசிரியராகிய ஸ்ரீ ஸ்கந்தசம்புவினுடைய மகன் ஈசுவர சிவனாகும். அவர் இந்தக் கோயிலை ஆவாகனம் செய்ததனல், இங்குள்ள இறைவன் திரிபுவன ஈசுவரமுடைய மகாதேவன் ஆனான். மன்னனுக்குத் திரிபுவன வீரதேவன் என்ற

பத்திரிகைச்

பட்டப் பெயர் உண்டு. அதனுல் இவ்வூருக்குத் திரிபுவன விரபுரம் என்ற பெயர் வழங்கலாயிற்று.

இந்தத் தலத்துக்கு வடமொழியில் ஒரு தலபுராணம் இருப்பதாகக் கூறுகின்றனர். இந்தத் தலத்தில் ஆறு தீர்த்தங்கள் இருக்கின்றன ; சரப தீர்த்தம், தேவ தீர்த்தம், ஞானதீர்த்தம், வியாச தீர்த்தம், பிருகு தீர்த்தம், சித்த தீர்த்தம் ஆகியவை. தலவிருக்ஷம் வில்வம்.

இந்தக் கோயிலில் வசந்த மண்டபம் அழகியது. நாற்புறங்களிலும் இரதத்துக்கு உள்ளவை போல் கருங்கல்லால் ஆகிய சக்கரங்கள் அமைந்திருக்கின்றன.

வரகுணதேவன் என்னும் பாண்டிய அரசன் பிரமஹத்தி தோஷத்தால் பிடிக்கப்பட்டு மிகவும் துன்புற்ருன். பிரமஹத்தி அரசனைத் துரத்தி வருகையில், திருவிடைமருதூரில் பிரமஹத்தி தோஷம் நீங்கியது. ஆயினும் அரசனுக்குப் பழைய நடுக்கம் தணியவில்லை. திருவிடைமருதூரை விட்டுத் திரிபுவனம் வரவே அவன் நடுக்கம் தீர்ந்த அரசன் இங்கே தங்கிப் பணிகள் பல புரிந்து சென்ருன்.

சுகோஷன் என்பவன் கர்மடன் என்னும் அந்தணனைத் தூரத்திச் சென்ருன். சிவனடியார்களையும், சிவச் சின்னங்களையும் நிந்தித்தான். அதனுல் க்ஷயரோகம் அடையும்படி அந்தணன் சபித்தான். பின்பு கம்பஹரேசுவரரை வழிபட்டு, வேடனுக இருந்தவன் மறுபிறப்பில் அரசனுகப் பிறந்து அடியார்களுக்குப் பணிகள் பல புரிந்தான்.

இந்தத் தலம் தஞ்சை மாவட்டம் கும்பகோணம் தாலுகாவில், கும்பகோணத்துக்கும் திருவிடைமருதூருக்கும் இடையில் இருக்கிறது. பஸ் வசதி உண்டு. திருவிடைமருதூர் ரயில் நிலையத்திலிருந்து மேற்கே ஒரு கல் தொலைவிலுள்ளது.

1941-ஆம் ஆண்டில் இந்தக் கோயிலுக்கு ஒரு கும்பாபிஷேகம் நடைபெற்றது. மறுபடியும் 1963-இல் நடைபெறுகிறது. தருமை ஆதீனகர்த்தர் சுமார் 5½ லட்ச ரூபாய் செலவில் இப்பொழுது இந்தக் கோயிலுக்குத் திருப்பணிகள் செய்திருக்கிருர். ராஜகோபுரத்தின் வெளிப்புறமும் உட்புறமும் முழுவதும் பழுது பார்த்து ரூ. 1,07,700 செலவில் உயர்ந்த தைல வர்ணம் தீட்டியிருக்கிருர்கள், சுவாமி, அம்பாள், சரபர் விமானங்களுக்கு ரூ. 61,000மும், மற்ற விமானங்களுக்கு ரூ. 82,000மும் ஆகியிருக்கின்றன. கருங்கல் தளவரிசை, இருப்புக் கிராதிகள், யாத்திரிகர் விடுதி, குடியிருப்பு விடுகள், குடிதண்ணீர் வசதி முதலியவற்றுக்கு ரூ. 1,44,000; வெள்ளிக்கவசம், வாகனங்கள், மஞ்சம், வெள்ளிரதம், பாத்திரங்கள், திருவாபரணம் முதலியவற்றுக்கு ரூ. 1,00,000; யாகசாலைக் கொட்டகை நிர்மாணமும் அலங்காரமும் ரூ. 10,000; மகாகும்பாபிஷேகத் திட்டம் ரூ. 65,000; இப்படி ஐந்தரை லட்சத்துக்குமேல் செலவிட்டிருக்கிருர்கள். தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் 65 சிவாசாரியார்கள் வருகிருர்கள். பழமையான இந்தக் கோயில், என்றுமில்லாத புதுமைபெற்று, நீண்ட காலத்துக்குத் தெய்வ ஒளியுடன் விளங்கும் என்பது திண்ணம்.

— கலைமகள் செப்டம்பர், 63.

## திருபுவனம் ஆலய கும்பாபிஷேகம்

### திருமுறை மாநாடு, கலைக்கூட ஏற்பாடு

தமிழ் நாட்டில் சிறப்பு மிகுந்ததும், தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமானது மான திருபுவனம் ஸ்ரீ கம்பஹரேஸ்வர சுவாமி தேவஸ்தானம் ஸ்ரீ அறம்வளர்த்த நாயகி சமேத ஸ்ரீ கம்பஹரேஸ்வர சுவாமி விநாயகர் முதலிய பரிவாரங்கள் ஜீர்ணோத் தாரண அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் 6-ந் தேதி காலை 5 மணிக்குமேல் 6-53க்குள் வெகுசிறப்பாக நடைபெற ஆதீன கர்த்தர் நேரில் விஜயம் செய்து பெரும் பொருட்செலவில் விரிவான ஏற்பாடுகள் செய்து வருகிறார். மகா கும்பாபிஷேகச் சிறப்பு மலர் வெளியிட்டு விழாவினை அறநிலைய அமைச்சர் ஸ்ரீ பக்தவத்சலம் காலையில் தொடங்கி வைப்பார்; மாலை மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீனகர்த்தர் சிறப்புரை யாற்றுவார். மூன்று நாளைய பன்னிரு திருமுறை மாநாடும் நிகழும். அழகுற அமைக்கப்பெறும் கலைக்கூடமொன்றை அறநிலையத்துறை ஆணையாளர் ஸ்ரீ எம். எஸ். சாரங்கபாணி முதலியார் திறந்து வைப்பார்; இன்னிசை, சொற்பொழிவுகள் முதலியன நிகழ்ச்சிகளில் இடம் பெற்றுள்ளன.

— சுதேசமித்திரன், செப்டம்பர் 5. 63.

# TIRUBHUVANAM TEMPLE, STANDING MONUMENT TO CHOLA ART

### TEXT & PHOTOS By N. RAMAKRISHNA

That the great Chola kings were wise administrators and brave warriors who carried their swords even across the seas may be of interest to students of history but they are better remembered by the vast masses as builders of massive temples.

The Big Temple at Tanjore and the one at Gangaikondachola-puram speak volumes of the Kings' religious fervour. True to the traditions of his family, Kulothunga Chola III is said to have built 800 years ago an artistic, colourful and very attractive temple at Thirubhuvanam, a village about five miles from Kumbakonam.

This temple of Sri Kampahareswarar has been renovated and the Maha Kumbhabhishegam is to take place on Sept. 6.

The Kshetram is described as Thirubhuvana Veerapuram in the inscriptions, but nowadays it is known as Thirubhuvanam. It is on the Kumbakonam - Mayuram bus route and it is about a mile from

the Tiruvidamarudur Railway Station. The temple is in the centre of the village, now growing into a town. There are two prakarams, besides the sanctum sanctorum, with three main gateways to the temple.

The presiding deity of the temple is Sri Kampahareswarar - Nadukkam Theertha Peruman, meaning one who wards off people's fears. The Goddess is Dharmasamvardhani - Aram Valartha Nayaki. The Lingam in the sanctum senctorum, though small compared to the one at Tanjore and Gangaikondacholapuram, is fine and attractive. It is made of two stones and the area around it is spacious and aliry.

## SARABHAMURTHY

There is a separate shrine for Sarabhar in the same compound. After the samharam or the killing of Hiranya, Narasimhamurthy was so ferocious that those around Him shuddered. In response to their prayers, Lord Siva came in the form of Sarabhar and subdued the ferocity of Narasimha.

Sarabhar is a unique figure being neither human, nor animal nor bird, but a combination of all the three forms. Sarabhamurthy appears to be more ferocious than Narasimha himself and one could easily imagine his form. The idol of Sarabhamurthy in the sanctum sanctorum is an excellent piece of art in stone.

The bronze image of Sarabhamurthy, installed in the adjoining apartment, is a fine specimen of intricate workmanship. It is taken in procession during festivals.

On either side of the sannidhi of Sarabhar at the moolasthanam, there are two beautifully carved female images with creepers twining around them and these are called Sala Panchikas (some call these Sri Devi and Bhu Devi). Dakshinamurthy in this temple is fine.

## STONE CARVINGS

The tower is full of stone carvings depicting various episodes from puranas. All round the temple can be seen giant-sized images such as Lingothbhavar. Vishnu, Brahma, Durga etc. On the sides of the temple walls are panels from Ramayana, Manu Neethi Chola story,

Siruthondar Puranam, and Sundarar and Seraman Perumal, two inseparable friends. At the entrance to the temple one sees Sundarar going to Mount Kailas on a White Elephant and Seraman following him on his horse. There are immortal stone figures and innumerable dance panels probably explaining and relating to a particular song in praise of the Lord or the king.

Elephants and yalis are seen in plenty, and over their backs ladies dance to the tune of music. Intricate workmanship highlights the rows of decorations - 6 one over the other such as the elephant, yali, Lotus, boothams, flowers and chains.

The figures of Hiranya and Narasimha have been carved out nicely. The temple has excellent stone pillars of delicate work both inside and outside and some of them have the Pallava touch.

## DELICATE WORKMANSHIP

The Vasantha Mantapam has been built like a chariot and has some delicate workmanship on its sides and walls. The wheels are not seen there, but adjoining the place one finds the wheels with fine carvings over them. The border strips are also there. The Rajagopuram too has excellent stone figures. Mohini on the northern side in a remote corner in a stately pose with flowing hair, is a beauty.

On the terrace of the sanctum sanctrum there is the temple dedicated to Peria Nayakar with a stone image of the deity. The Sthala Vriksham is Bhilva, in the northern prakaram. There are six theerthams dedicated to this place.

Some beautiful, but mutilated figures in stone adorn the corridors of the outer prakarams. The figures of Sala-Panchika resembling the one at Sarabhar sannathi, the Goddess in fine proportions, a huge Vigneswora carved out of a single stone to mention a few, are captivating.

From some of the inscriptions in this temple it is learnt Kulothunga Chola amassed a huge fortune in his victories over his enemies, and utilised the amount for building the shrines at Thirubhuvanam and Darasuram.

